# திருக்குறள் நீதி இலக்கியம்

க. த. திருநாவுக்கரசு

சென்னைப் பல்கலைக் கழகம்

1977

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி
வெளியீடு—2.

திருக்குறள் ஆராய்ச்சி : 2

# திருக்குறள் நீதி இலக்கியம்

பொதுப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனர்
தமிழ்த்துறைத் தலைவர்
சென்னைப் பல்கலைக் கழகம்

சென்னைப் பல்கலைக் கழகம்
1977

# TIRUKKURAL : A DIDACTIC LITERATURE

K. D. THIRUNAVUKKARASU
Lecturer in Tamil
Tirukkural Endowment Research Centre
University of Madras

UNIVERSITY OF MADRAS
1977

திருக்குறள் ஆராய்ச்சி : 2

# திருக்குறள் நீதி இலக்கியம்

ஆசிரியர் :

க. த. திருநாவுக்கரசு

தமிழ் விரிவுரையாளர்

திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி

சென்னைப் பல்கலைக் கழகம்




சென்னைப் பல்கலைக் கழகம்

1977

# துணைவேந்தரின் அணிந்துரை

திருக்குறள் தமிழில் மலர்ந்தது; பல மொழிகளில் பெயர்ந்தது; உலகம் முழுவதும் மணம் பரப்பி வருவது. இது தமிழ் மறை; உலகப் பொது மறை.

காலஞ்சென்ற டாக்டர் ஆல்பர்ட் சுவைட்சர் உலகப் பெருந் தொண்டர்களில் ஒருவர்; மாந்தர் தொண்டிற்குத் தம் வாழ்வைப் படைத்த நல்லார்; நுண்மாண் நுழைபுலமிக்க அறிஞர்; சிறந்த சிந்தனையாளர். அப்பெரியார்,

> "ஒழுக்கமே மனிதனுடைய உயர்ந்த குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதை மிகுந்த உறுதியோடு வள்ளுவர் கூறியிருக்கிறார். ஒவ்வொருவனும் தனக்குத் தானே செய்ய வேண்டிய கடமை என்ன? மற்றவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன? என்பனவற்றையெல்லாம் சிறந்த பண்பாட்டோடும் மதிநுட்பத்தோடும் வள்ளுவர் பேசுகிறார். உலக இலக்கியத்தில், இத்தகைய மாண்புமிக்க மெய்யறிவு வேறு எந்நூலிலும் இத்துணைச் சிறப்பாகப் பொலிவுறவில்லை என்று சொல்லலாம்"

என்று போற்றியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

இத்தகைய சிறப்புவாய்ந்த திருக்குறள் தோண்டத் தோண்டத் துலங்கும் மணிச் சுரங்கமாய் விளங்குகிறது. அவ்வக் காலத்திற் கேற்ற அறிவொளியை வழங்கி, எக்காலத்திற்கும் எல்லார்க்கும் உரிய வாழ்க்கை இலக்கியமாய் விளங்குவதே திருக்குறளுக்குரிய சிறப்பாகும். திருக்குறளுக்கு இது வரையில் எத்தனையோ ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்துள்ளன.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் திருக்குறள் ஆராய்ச்சி வெளியீட்டு வரிசையில் இரண்டாவது நூலாக இடம் பெறும் இந்நூலை திரு. க. த. திருநாவுக்கரசு அவர்கள் அரிதின் ஆராய்ந்து இயற்றியுள்ளார். 'திருக்குறள் - நீதி இலக்கியம்' என்னும் இந்நூல் ஒரு புதிய முயற்சி. நீதி இலக்கியம் என்ற நோக்கில் திருக்குறளை ஆராய்ந்து எழுதப்பெற்ற முழுமையான முதல் நூல் இது.

நீதி இலக்கியத்தின் இயல்புகளும், இலக்கிய உலகில் நீதி இலக்கியத்திற்குரிய இடத்தையும், திருக்குறள் நீதி இலக்கியமாக விளங்கும் திறத்தையும் இந்நூலாசிரியர் நன்கு தெளிவுபடுத்தியுள்ளார். மற்றும் உலகச் செம்மொழிகளுள் தலைசிறந்து விளங்கும் நீதி இலக்கியங்களோடு திருக்குறளை ஒப்பிட்டு ஆராய்ந்

துள்ள பகுதி, திருக்குறளின் அருமை பெருமைகளை உலகிற்கு உணர்த்துவதாகும்.

இந்நூல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராக இருந்த டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் மேற்பார்வையில் திரு. க. த. திருநாவுக்கரசு நடத்திய ஆராய்ச்சியின் பயனாக வெளி வரும் ஆய்வுரையாகும்.

இத்தகைய விழுமிய ஆராய்ச்சி நூல்கள் திருக்குறளைப்பற்றி இயற்றப் பெறுவதற்குக் காரணமாக இருப்பது, தமிழக அரசு இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின்போது மனமுவந்து நிறுவிய திருக்குறள் ஆராய்ச்சி அறக்கட்டளையே ஆகும். தமிழக அரசின் பொருளுதவி கிடைத்திராவிட்டால் இத்தகைய ஆராய்ச்சி யும், இதன் விளைவான அரிய நூல்களும் ஊமையன் கண்ட கனவாகி யிருக்கும். தமிழக அரசு காலத்தினாற் செய்த இப்பேருதவி, தமிழை வளர்க்கும் ஈரம். இவ்வறக் கட்டளையை நிறுவிய தமிழக அரசுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் பெரிதும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது. தமிழ் தழைக்கத் துணை நிற்பதன்றித் தமிழக அரசுக்கு வேறு என்ன கைம்மாறு செய்ய வல்லோம்?

தமிழ்ப் பொதுமறை மக்கள் நெறியாகுக! அன்பும் அருளும் அறனும் பொதுவாகுக! அவற்றிற்கு இத்தகைய நூல்கள் துணை ஆகுக!

**நெ. து. சுந்தரவடிவேலு**

14—4—71

(தமிழ்ப் புத்தாண்டு நாள்)

# முன்னுரை

தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு இன்றுவரை திருக்குறள் எல்லாராலும் சிறப்புமிக்க நூலாகப் போற்றப் பெற்று வருகிறது. தமிழ்ப் பண்பாட்டின் நிலைக்களனாகவும், தமிழருடைய சிந்தனைத் திறனிற்கு ஓர் உரைகல்லாகவும் அது விளங்குகிறது. இத்தகைய ஏற்றமிகு நூலினைத் திட்டமிட்டு முறையாக ஆராயவேண்டும் என்ற எண்ணம் அறிஞரிடையே நெடுங்காலமாக இருந்து வருகிறது. மக்கள் வாழ்க்கையை எவ்வாறு திருக்குறள் திருத்தி அமைத்துள்ளது என்பதையும், இன்றைய மக்களுடைய வாழ்க்கை சிறப்புற்று விளங்க அது எவ்வாறு உதவ முடியும் என்பதையும் அறிஞர் பலர் ஆராய்ந்தறிய விரும்பினர். மேலும், உலக இலக்கிய அரங்கில் திருக்குறளுக்குரிய இடத்தை ஆராய்ந்து மதிப்பிடவேண்டும் என்றும் அவர்கள் கூறிவந்தனர்.

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டையொட்டி, அன்றைய முதலமைச்சர் மாண்புமிகு அறிஞர் அண்ணா அக்கருத்திற்குச் சிறப்புமிக்கதோர் வடிவத்தை கொடுக்க முன் வந்தார். அதன் பயனாகத் தமிழகத்தில் மூன்று பல்கலைக் கழகங்களிலும் திருக்குறளை ஆராய்வதற்கு அறக்கட்டளைகள் நிறுவப்பெற்றன. அதனால் திட்டமிட்டு முறையாகத் திருக்குறளை ஆராய்வதற்குரிய வாய்ப்பும் வசதியும், நல்லதொரு சூழ்நிலையும் அமைந்தன. அத்திட்டத்தின் கீழ், சென்னைப் பல்கலைக் கழகம் திருக்குறளின் இலக்கிய இயல்புகளையும், சங்க இலக்கியத்தையும் ஆராய்வதென்று முடிவு செய்யப் பெற்றது. அதற்கிணங்கத் 'திருக்குறளின் இலக்கிய இயல்புகளைப்'பற்றிய ஆராய்ச்சியைச் சென்னைப் பல்கலைக் கழகம் மேற்கொண்டுள்ளது.

அவ்வாராய்ச்சியின் பயனாகத் 'திருக்குறள் நீதி இலக்கியம்,' 'திருக்குறள் யாப்பு அமைதியும் பாடவேறுபாடும்,' 'திருக்குறள் அணிநலம்' என்ற மூன்று நூல்கள் இப்பொழுது வெளிவருகின்றன. இலக்கியங்களில் அறநெறிக் கருத்துக்கள் பெறுமிடத்தைச் சீர்தூக்கி ஆராய்வதன் மூலம், திருக்குறள் நீதி இலக்கியமாக விளங்கும் திறத்தைச் சுட்டிக்காட்டுவதே, 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் இந்நூலின் நோக்கமாகும்.

சங்க இலக்கியத்துள் 'அறம்' என்ற சொல்லே வழங்கப் பெற்றுள்ளது. கி. பி. ஆறும் நூற்றாண்டு அளவில் 'நீதி' என்ற வடமொழிச்சொல் தமிழில் வழங்கத் தலைப்பட்டுள்ளது. அறத்தின் பொருள் மிகவும் விரிந்தது; ஆழமானது; வாழ்க்கையின் பல்வேறு நிலைகளையும் இயல்புகளையும் சுட்டுவது. அறத்திற்குரிய

பல்வேறு பொருள்களுள் 'ஒழுகலாறு' என்பதொன்று. அப்பொருளை உணர்த்துவதற்குத் தேவார காலம் முதல் 'நீதி' என்ற வடசொல்லைத் தமிழில் நாம் வழங்கி வருகிறோம். அறத்தின் ஒரு பகுதியாகிய 'ஒழுக்க நெறியை' அது சுட்டுகிறது.

இலக்கியம் இன்புறுத்துவதோடு, அறிவுறுத்துவதாகவும் அமையவேண்டும் என்பது நம் நாட்டு இலக்கியக் கொள்கையாகும். பண்டைக் காலத்தில் மேனாட்டவரும் இக்கொள்கையில் ஈடுபாடுடையவர்களாக இருந்து வந்தனர். இன்புறுத்துவதே இலக்கியத்தின் தலையாய நோக்கம் என்ற கருத்தை வலியுறுத்துவோர் மேனாடுகளில் இன்று பெருகியுள்ளனர். இன்புறுத்துவதும், அறிவுறுத்துவதும் இலக்கியத்தின் இயல்புகள் என்ற கருத்தினை அடிப்படையாகக் கொண்டே, 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் இந்நூல் எழுதப் பெற்றுள்ளது. இவ்விருவகை இலக்கியப் பண்புகளுள் அறிவுறுத்தும் இயல்பு மிகுதியாக விளங்கும் நூல்களையே 'நீதி இலக்கியங்களாக' அறிஞர்கள் போற்றுகின்றனர். நம் நாட்டு இலக்கியக் கொள்கைகளையும் மேனாட்டு இலக்கியக் கொள்கைகளையும் ஒப்பிட்டு ஆராய்வதன் மூலம், திருக்குறள் இலக்கிய உலகில் பெறும் இடத்தை மதிப்பிடும் பணியை இந்நூல் மேற்கொண்டுள்ளது.

'திருக்குறள் நீதி இலக்கியம்' என்ற இந்நூலில் ஆறு இயல்கள் உள்ளன. நீதி இலக்கியத்தின் இயல்புகளையும் வகைகளையும் விளக்கும் வகையில் முதல் இயல் அமைக்கப் பெற்றுள்ளது. நீதிக்கும் அறத்திற்கும் இடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை இரண்டாம் இயல் விரிவாக எடுத்துரைக்கிறது. நீதி இலக்கியத்தின் பல்வேறு இயல்புகளைப்பற்றிய விளக்கம் மூன்றாவது இயலில் தரப்பெற்றுள்ளது.

நீதி நூல்களின் இலக்கிய இயல்புகள் நான்காம் இயலில் ஆராயப் பெற்றுள்ளன. 'கலை கலைக்காகவே' என்பதைப் போன்று, 'கவிதை கவிதைக்காகவே' என்று முழக்கமிடுவோரின் கொள்கைகளும், நேர்வழிக் கவிதையைப்பற்றிய கருத்துக்களும் இவ்வியலில் மதிப்பிடப் பெற்றுள்ளன. இலக்கியத்தில் சமூக இயல்புகள் இணைந்தும் இழைந்தும் காணப்பெறுவதால், அறநெறிக் கருத்துக்கள் முனைப்பான இடத்தை இலக்கியத்தில் பெறவேண்டிய இன்றியமையாமை உண்டாகிறது. அதன் பயனாக நீதி இலக்கியங்கள் தோன்றுகின்றன என்ற கருத்து விளக்கப் பெற்றுள்ளது. இவ்வியலின் இறுதியில் திருக்குறளை நீதி இலக்கியமாகக் கொள்ளுவதற்குரிய காரணங்கள் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளன.

உலகச் செம்மொழிகளுள் கிரேக்க, இலத்தீன், சீன, சமஸ்கிருத மொழிகளில் சிறப்புற்று விளங்கும் நீதி இலக்கியங்களோடு திருக்குறளை ஒப்பிட்டுக் காணும் ஆராய்ச்சி ஐந்தாம் இயலில் இடம்

பெற்றுள்ளது. வேறுபட்ட வாழ்க்கை முறையும் பண்பாடும் கொண்ட கிரேக்க, ரோமானிய மக்களிடையே வள்ளுவரைப் போன்ற மாபெருஞ் சான்றோர்—சிறப்புமிக்க சிந்தனையாளர் ஒரு சிலர் தோன்றியுள்ளனர். ஆனால், அவர்கள் வள்ளுவரைப் போன்று கலையுணர்வு மிக்க கவிஞராக விளங்கவில்லை என்ற உண்மை இவ்வாராய்ச்சியினால் தெரியவருகிறது. இதைப் போன்றே சீனாவின் சிறப்பு மிக்க சான்றோரான கன்பூசியஸ், பலவகையில் வள்ளுவரைப் போன்று பொன்றாப் புகழ்பெற்ற மெய்யுணர்வாளராவர். எனினும் அவருடைய பார்வை பரந்துபட்டதாக — உலகளாவியதாக — அனைத்துலக நோக்குடையதாக அமையவில்லை என்று நாம் கூறினால், அது தவறாகாது. மேலும், அவர் 'அருள் நெறியின்' அருமை பெருமைகளை அறியாதவர் என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

பண்டை இந்திய மொழிகளுள் ஒன்றான வடமொழியில் தரும சாத்திரங்களே மிகுதியாக உள்ளன. அவற்றிற்கு அடுத்த நிலையில் மெய்ப்பொருள் ஆராய்ச்சி நூல்கள் அறத்தின் ஆற்றலை அறிவுறுத்துவனவாக அமைந்துள்ளன. 'நீதி இலக்கியம்' என்று சுட்டிக் கூறத்தக்க சிறப்புடையன பர்த்ருஹரியின் மூன்று சதகங்களேயாகும். அவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பர். அவர் இயற்றிய சதகங்களுள் 'வைராக்கிய சதகம்' நிலையாமைப் பண்பினை மட்டும் சிறப்பித்துரைக்கும் தத்துவசார்புடைய நூலாகும். மற்ற இரு சதகங்களும் அறத்தின் பல்வேறு நிலைகளை உணர்த்துகின்றன. தமிழ் மொழியில் இயற்றப் பெற்றுள்ள நீதி இலக்கியங்களுள், அமைப்பாலும் கருத்துக்களை உணர்த்தும் முறையாலும் திருக்குறள் ஒன்றே தன்னிகரற்றது என்பதைத் 'தமிழ் மொழியில் நீதி இலக்கியம்' என்ற பகுதி உணர்த்துகிறது.

ஒப்பியல் ஆராய்ச்சியின் முடிவுரையாக 'உலக நீதி இலக்கியத்துள் திருக்குறள்' என்ற பகுதி அமைக்கப் பெற்றிருக்கிறது. உலகச் செம்மொழிகளில் உள்ள நீதி இலக்கியங்களோடு திருக்குறளை ஒப்பிட்டுச் சீர்தூக்கி ஆராயும் பணி இப்பகுதியில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது. அதன் பயனாக, உலக நீதி இலக்கியத்துள் திருந்திய வடிவமும், நேர்த்திமிகு கலையழகும், செஞ்சொல் கவியின்பமும் வாய்ந்த ஒப்புயர்வற்ற நீதி இலக்கியமாகத் திருக்குறள் விளங்கும் பான்மை இனிது புலனாகின்றது.

இலக்கிய உலகில் திருக்குறள் பெறுமிடத்தைப் பற்றி ஆய்வு இந்நூலின் இறுதியில் இடம் பெற்றிருக்கிறது. இவ்வியலின் முதற் பகுதியில் தமிழ் இலக்கியத்துள் திருக்குறள் பெற்றுள்ள இடத்தைப் பற்றிய மதிப்பீட்டைக் காணலாம். அடுத்து இலக்கிய உலகில் திருக்குறள் சிறப்புமிக்க நீதி இலக்கியமாக விளங்குந்திறன் தெளிவுறுத்தப் பெற்றுள்ளது.

எடுத்துக்கொண்ட பொருளினை இனிது விளக்குவதற்காகவும், குறிப்பிட்ட ஒரு கருத்தினைச் சான்றுதந்து நிறுவுவதற்காகவும் இந் நூலுள் இரண்டொரு கருத்துக்கள் திரும்பவும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. எனவே, அவை 'கூறியது கூறல்' என்ற வழுவின் பாற்பட்டனவாகா; விளக்கம் கருதி மீண்டும் கூறப்பட்டனவேயாகும். இந்நூலுள் கூறப்பெற்றுள்ள கருத்துக்கள் அனைத்தும் முடிந்த முடிபுகள் அல்ல; கிடைத்த சில சான்றுகளைக் கொண்டு நடுவுநிலை பிறழாத ஆராய்ச்சியினால் கொள்ளப்பட்ட முடிவுகளாகும்.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கியவரும் இன்று மதுரைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்த ராக திகழ்பவரும் என்னுடைய மதிப்பிற்குரிய பேராசிரியருமான டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் இவ்வாராய்ச்சிப் பணிக்குரிய திட்டத்தை வகுத்துக் கொடுத்ததோடு, ஆராய்ச்சி முறையில் எங்களை நெறிப்படுத்தியும், கண்காணித்தும் வந்துள்ளார். இன்றைய தமிழ்த் துறைத் தலைவரான டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் எங்கள் பணிக்குப் பல்லாற்றானும் பேருதவி புரிந்து வருகிறார். திருக்குறள் ஆராய்ச்சித் துறையினரின் சார்பிலும், என்னுடைய சார்பிலும் இவர்கள் இருவருக்கும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன். திருக்குறள் ஆராய்ச்சி விரிவுரையாளர் வித்துவான் திரு. மு. சண்முகம் பிள்ளை அவர்கள் இந்நூலினை நல்ல முறையில் பதிப்பிப்பதற்குப் பலவகையில் உதவி புரிந்துள்ளார். திருக்குறள் ஆராய்ச்சித் துறையைச் சேர்ந்த ஆராய்ச்சி உதவியாளர் திரு. இ. சுந்தரமூர்த்தி அவர்களும் இந் நூலினை வெளியிடுவதற்கு உற்ற துணையாக இருந்துவந்துள்ளார். இவர்கள் எல்லாருக்கும் என்னுடைய அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

திருக்குறள் ஆராய்ச்சித் துறையில் பணிபுரியும் வாய்ப்பை அளித்து, இக்குறுகிய காலத்தில் எழுதப்பெற்ற ஆய்வுரையை நூல்வடிவில் வெளியிடுவதற்கு மகிழ்ச்சியுடன் முன்வந்த பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினருக்கு என்னுடைய வணக்கத்தையும் நன்றி யையும் உரித்தாக்குகிறேன்.

இந்நூலிற்கு அணிந்துரை வழங்கிய தாமரைத் திருவினர் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலினை நன் முறையில் அச்சிட்டுதவிய அவ்வை அச்சுக் கூடத்தினருக்கு எனது நன்றி உரித்தாகுக.

சென்னை-5
23—4—'71

க. த. திருநாவுக்கரசு.

# உள்ளுறை

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

அகம்.—அகநானூறு
அற. சா.—அறநெறிச்சாரம்
இளம்.—இளம்பூரணர்
இன்னா.—இன்னா நாற்பது
உ. பா.—உழவுப் பாட்டு
ஐங்குறு.—ஐங்குறு நூறு
கம்ப.—கம்பராமாயணம்
கலி.—கலித்தொகை
கா.—காதை
கிரே. பா. தொ.—கிரேக்கப் பாடல் தொகுதி
குறள்—திருக்குறள்
குறுந்.—குறுந்தொகை
சிலப்.—சிலப்பதிகாரம்
சிருங். ச.—சிருங்கார சதகம்
சீவக.—சீவக சிந்தாமணி
சூடா. நிக.—சூடாமணி நிகண்டு
செய்.—செய்யுளியல்
சொல்.—சொல்லதிகாரம்
திருமந்.—திருமந்திரம்
திரு. மா.—திருவள்ளுவ மாலை
திவ். பிர.—திவ்வியப் பிரபந்தம்
திருவா.—திருவாசகம்
தேவா.—தேவாரம்
தொல்.—தொல்காப்பியம்
நச்சி.—நச்சினார்க்கினியர்
நடு.—நடுவழிக் கோட்பாடு
நற்றி.—நற்றிணை
நன்.—நன்னூல்
நாலடி.—நாலடியார்
நான்.—நான்மணிக்கடிகை
நீதி.—நீதி இயல், நீதி வெண்பா
நீதி. ச.—நீதி சதகம்
நீதி. வி.—நீதிநெறி விளக்கம்
பட்டி.—பட்டினப்பாலை
பத்து.—பத்துப்பாட்டு
பரி.—பரிபாடல்
பரி. உரை.—பரிமேலழகர் உரை
பழ.—பழமொழி
பன். பா.—பன்னிரு பாட்டியல்
பா. கவி.—பாரதியார் கவிதைகள்
பிங்க. நிக.—பிங்கல நிகண்டு
புறப். வெ. மாலை.—புறப்பொருள் வெண்பா மாலை
புறம்.—புறநானூறு
பெரிய.—பெரிய புராணம்
பெருங்.—பெருங்கதை
பேரா.—பேராசிரியர்
பொ. இ.—பொருள்களின் இயற்கை
பொரு.—பொருநராற்றுப்படை
பொருள்.—பொருளதிகாரம்
மணி.—மணிமேகலை
மதுரை.—மதுரைக்காஞ்சி
முது.—முதுமொழி
முதுமொழி.—முதுமொழிக் காஞ்சி
மெ.—மென்ஷியஸ்
மொ. பெ.—மொழி பெயர்ப்பு
வா.—வானவியல்
வா. நெறி.—வாழ்க்கை நெறி
வே. நா.—வேலையும் நாள்களும்
வை. ச.—வைராக்கிய சதகம்

# 1. நீதி இலக்கியம்

தமிழ் மொழியிலுள்ள இலக்கியங்களைச் சங்க இலக்கியம், சமய இலக்கியம், நீதி இலக்கியம், சிற்றிலக்கியம், புதுமைத் தமிழிலக்கியம் என்று பல வகையாகப் பாகுபாடு செய்யலாம். சங்க இலக்கியத்திற்கு அடுத்த நிலையில் சிறப்புடையனவாகப் போற்றப்படுவன நீதி இலக்கியமும் சமய இலக்கியமுமாகும். சங்க காலத்திற்குப் பின்னர், நீதி நூல்கள் பல தமிழில் தோன்றியுள்ளன. இந் நீதி நூல்களுக்கெல்லாம் முன்னோடியாகவும் முடிமணியாகவும் திருக்குறள் விளங்குகிறது. சமய மலர்ச்சிக் காலத்திற்கு முன்னரும் பின்னரும் இயற்றப்பட்டுள்ள நீதி நூல்களெல்லாம் திருக்குறளை அடியொற்றி எழுதப் பட்டனவாகும்.

மக்களுடைய வாழ்க்கையை அகம், புறமென்று பாகுபாடு செய்து, அதன் பல்வேறு இயல்புகளை நுட்பமாக ஆராய்ந்த சங்க காலத்தை யொட்டிப், புறப்பொருளின் ஒரு பகுதியாகிய ' அறத்தின் ' சிறப்பினை எடுத்துரைக்கும் அறநூல்கள் பல இயற்றப்பட்டன. அவை அமைப்பு முறையாலும், அறிவுறுத்தும் கருத்துக்களாலும் தனிப் பட்டதோர் இலக்கிய வகையாகச் சிறப்புற்று விளங்குகின்றன, அவற்றைப் பிற்காலத்துச் சான்றோர்கள் ' நீதி நூல்கள் ' என்னும் பெயரால் அழைக்கலாயினர்.

நீதிகளை அறிவுறுத்தும் நூல்களை 'நீதி நூல்கள்' என்று நாம் போற்றுகிறோம். 'நீதி நூல்கள்' என்று குறிப்பிடும் வழக்கே தேவார காலத்தில் தோன்றியதாகும். இதற்கு முற்பட்ட காலத்தில் 'அறம்' என்ற சொல்லையே,

பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் 'அறநூல்' என்ற பொருளில் கையாண்டுள்ளனர். 'அறம் பாடிற்றே யாயிழை கணவ' (புறம்-34), 'அறங் கூறும் ஆக்கந்தரும்' (குறள்-183) என்னுமிடங்களில், 'அறம்' என்னும் சொல் ஆகுபெயராய், அறத்தை உணர்த்தும் நூல்களையே குறிப் பிடுவதாக உரையாசிரியர்கள் கருதுகின்றனர்.

சமண சமயத்தின் செல்வாக்குத் தமிழகத்தில் பெருகிய காலத்தில்தான் 'நீதி' என்ற சொல்லாட்சி தமிழ் மொழியில் வழங்கத் தொடங்கியது எனலாம். சமண சமயத்தைத் தமிழகத்தில் பரப்ப முயன்ற சமண சமயத் துறவிகளாலேயே பெரிதும் நீதி நூல்கள் இயற்றப் பட்டுள்ளன. அவர்கள் தமிழகத்தில் சமண சமயத்தைப் பரப்புவதற்குப் பயன்படுத்திய முறைகள் பல. அவற்றுள் முதன்மையானது அவர்கள் மேற்கொண்ட இலக்கியப் பணியாகும். அவர்களுடைய இலக்கியப் பணியில் மூவகைப் போக்குகளை நாம் காணமுடிகிறது. தமிழைக் கற்பார்க்குப் பயன்படும் இலக்கண நூல்களை எழுத முன் வந்தமை ஒரு வகை. கற்போர் உள்ளத்தைக் கவரும் வகையில் கதைகள் வாயிலாகச் சமண சமய தத்துவங் களையும், கொள்கைகளையும் எடுத்து விளக்கியமை மற் றொரு முறையாகும். தங்கள் சமயக் கொள்கைகளின் அடிப்படையாக உள்ள அறத்தைச் சமண சமயத்தவர்க் கேயுரிய சிறப்பு வகையிலும், எல்லார்க்கும் பயன் படத்தக்க பொதுவகையிலும் எடுத்தியம்பியமை அவர்கள் செய்த மூன்றாவது வகை இலக்கியப் பணியாகும். இவ்வகையில் அறத்தின் ஆற்றலை உணர்த்த முன்வந்த சமண சமயச் சான்றோர்கள் நீதிநூல்கள் பலவற்றைத் தமிழில் இயற்றினர்.

### மூதுரை (Gnomic Literature)

மனித வாழ்க்கையின் பல்வேறு துறைகளைப் பற்றி, அறிவிலும் அனுபவத்திலும் முதிர்ந்த பெரியோர்கள்கண்ட உண்மைகளைத் திட்பநுட்பமாகக் கேட்போர் உள்ளத்தில் பதியுமாறு சுருங்கச் சொல்லி விளங்கவைப்பன மூது ரைகள்.

நாட்டிலே பன்னெடுங் காலமாக வழக்கில் இருந்து வந்த முதுமொழிகள் பலவற்றைத் திரட்டிய சான்றோர்கள், அவற்றோடு தங்கள் சமயக்கொள்கைகளைக் குழைத்து அவற்றிற்கு ஓர் இலக்கிய வடிவம் கொடுத்துப் போற்றினர். "மூதுரை என்பது பொதுவாக ஒரு கருத்தை அறிவிக்கும் தொடராகும். அக்கருத்து குறிப்பிட்ட ஒரு பொருளோடு நேரடியாகத் தொடர்பற்றதாய், அனைத்துலகப் பண்புடன் விளங்கும்; பெரிதும் மனித வாழ்க்கையின் செயல்களைப் பற்றியதாக இருக்கும். நம்முடைய செயல்களில் கொள்ளத் தக்கவை எவை, விடுக்கத் தக்கவை எவை யென்பதை அறிவிப்பதாக அது அமையும்"[1] என்பது கிரேக்க நாட்டு மெய்யுணர்வாளர் அரிஸ்டாட்டிலின் கருத்தாகும்.

இம் மூதுரைகள் இரண்டு வகைப்படும். மனித இனத்தின் செயல் முறைகளைப்பற்றியது முதல்வகையைச் சேர்ந்தது. இதில் மனிதனுடைய துணிவாற்றல் அல்லது விருப்பத்திற்கேற்ப அவன் சிறந்ததெனப் போற்றும் செயல்களைப் பற்றிய செய்திகள் சிறப்பித்துப் பேசப்படும். அவை பெரிதும் பழமொழிகளோடு தொடர்புடையனவாக இருக்கும். எனினும், அவற்றில் அறிவுறுத்தும் பண்பே முதன்மையான இடத்தைப் பெற்றிருக்கும். மனித வாழ்க்கையோடு தொடர்புடைய தொழில்கள், தெய்வ வழிபாடு, மாய வித்தைகள் முதலியனவும் இம்மூதுரைகளில் இடம் பெற்றுள்ளன.

இரண்டாவதுவகையான மூதுரைகள் மக்களினத்தைப் பற்றி மட்டுமல்லாமல் பிற உயிர்களைப் பற்றியும், இயற்கைப் பொருள்களின் இயல்புகளைப் பற்றியும் வழங்குவதாகும். இவை மதி நுட்பம் உடையோரால் கூர்ந்து நோக்கிக் கண்டறிந்த உண்மைகளாக இருக்கும். இவற்றைப் பழமொழிகளாகவோ, நீதிவாசகங்களாகவோ நாம் எளிதில் மாற்றியமைக்க முடியாது. இவற்றை நாம் மூன்று வகைகளாகப் பாகுபடுத்திக் கூறலாம்:

1. மனிதனுடைய துணிவாற்றல் அல்லது விருப்பத்திற்குட்படாத செயல்முறைகள்.

2. ஊழ்வினை, தெய்வங்கள் ஆகியவற்றால் உண்டாகும் நிகழ்ச்சிகள்.
3. மனித இனத்தைச் சேராத பிற உயிரினங்களின் செயல்கள்.

முற்கூறிய இருவகை மூதுரைகளும் கவிதையின் வரலாற்றில் மிகவும் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன. முதல் வகை மூதுரைகள் அறநூல்களுக்கு முன்னோடியாக அமைந்துள்ளன. இரண்டாம் வகை மூதுரைகள் அறிவியல் நூல்களுக்குத் தொடக்கமாகத் தோன்றுகின்றன. இவற்றுள் நாம் முதலில் கண்ட மூதுரை மரபே பொதுவாக இந்தியாவிலும், சிறப்பாகத் தமிழகத்திலும் போற்றிப் பின்பற்றப்பட்டு வருவதாகும். இரண்டாம் வகையில் இடம் பெறும் ஊழைப் பற்றிய செய்திகளை முதல் வகையில் இணைத்துரைப்பது நம் நாட்டு வழக்கமாக இருந்து வருகிறது.

காலப்போக்கில் படிப்படியாக உண்டான அறிவு வளர்ச்சியின் பயனாக, மூதுரையினும் வேறுபட்டதும் சிறந்ததும் செறிவு மிக்கதுமான அறநூல்கள் பல தோன்றியுள்ளன.

மூதுரைக்கும், அறநூல்களுக்கும் இடையே அடிப்படையில் வேற்றுமை காணப்படுகிறது. ஆயினும், அவற்றிற்கு இடையேயுள்ள வேற்றுமை மிகவும் நுட்பமானது; கூர்ந்து நோக்குவார்க்கல்லாமல் அது எளிதில் புலனாகாது. அறநூல்கள் உவமை நயமும், சுவையுணர்வும் மிக்குடையன. இதனால் கற்பவருடைய உள்ளத்தைக் கவரும் இயல்புடையனவாக அவை அமைந்துள்ளன. இவ்விருவகை நூல்களின் இயல்புகளை ஒருங்கே பெற்ற அறநூல்களும் தமிழில் இயற்றப்பட்டுள்ளன. இத்தகைய நூல்களை 'நீதி நூல்கள்' என்ற பொதுப் பெயரால் சுட்டும் வழக்கு சங்ககாலத்திற்குப் பின்னர் உண்டாயிற்று.

மூதுரைகளுக்கும் பழமொழிகளுக்கும்[2] இடையே வேறுபாடு உண்டு. பொது மக்களின் இதழ்களிலே தவழ்ந்து விளையாடுவன பழமொழிகள். ஆனால், மூதுரைகள் பொது மக்களின் பேச்சாகாமல், அறிஞர்களுடைய

கட்டுரையாகிக் கற்பவர் உள்ளங்களைத் தொடுவனவாக இயற்றப்படுவன. எனினும், அவற்றுள் பல, நாட்டிலே வழங்கிவரும் பழமொழிகள் பலவற்றையொட்டி எழுந்தனவாக இருக்கலாம். அப்பழமொழிகள் புது மெருகிடப் பெற்றுக் கலைநயம் வாய்ந்த கருத்துக் கருவூலங்களாக வெளிப்படுகின்ற பொழுது மூதுரைகளாகின்றன. மூதுரை, முதுமொழி என்பன ஒரு பொருளைக் குறிக்கும் இருசொற்களாகும். தொல்காப்பியர் 'முதுமொழிக்கு' வகுத்துள்ள இலக்கணம், நாம் குறிப்பிடும் 'மூதுரைகளுக்குப்' பல வகையிலும் பொருத்தமுடையதாய் உள்ளமை,

> நுண்மையும் சுருக்கமு மொளியுடை மையும்
> எண்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக்
> குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
> ஏது நுதலிய முதுமொழி யென்ப
>
> (தொல். செய். 177)

என்பதனல் அறியப்படுகிறது. இந்நூற்பாவிற்கு உரை விளக்கம் தந்த பேராசிரியர், "கூரியதாய்ச் சுருங்கி விழுமிதா யெளிதாகி இயற்றப்பட்டுக் குறித்த பொருளொன்றனை முடித்தற்கு வருமாயின், அங்ஙனம் வந்ததனைப் பொருண் முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதுவது முதுமொழி யென்ப புலவர்"[3] என்று கூறுவர்.

எளிமை, தெளிவு, நுட்பம், சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் ஆகிய பண்புகளோடு, கருதிய பொருளைத் தெளிவுறுத்துவதற்குக் காட்டப்படும் காரணமாக அமையும் கருத்தினை 'முதுமொழி' என்று போற்றுவது தொல்காப்பியருடைய காலத்திற்கு முன்பிருந்து மாற்றருஞ் சிறப்புடை மரபாக இருந்து வருகிறது.

தொல்காப்பியர் காட்டிய முதுமொழியின் இலக்கணத்தைப் பின்பற்றிச் செய்யப்பட்டதே 'பழமொழி' போன்ற நீதி நூல்களாகும் என்பது நச்சினர்க்கினியரின் கருத்து.[4] இம்மூதுரைகள் புலவர் பெருமக்களின் கைவண்ணத்தைப் பெற்றமையால் பொருட்பொலிவும், சொல்நயமும் பெற்றுச் சிறப்புற்றுள்ளன.

மேற்கண்ட கருத்துக்களைத் தொகுத்து நோக்குகின்ற பொழுது, "முதுசொல், முதுமொழி, மூதுரை, பழமொழி என்பன ஒரு பொருள் குறித்த பல சொற்களாகும். சென்ற காலத்திற் புகழுடன் வாழ்ந்த பெருமக்களிடத் தமைந்த நுண்ணறிவு, சொல்வன்மை, உயர்ந்த நோக்கம், நல்வாழ்க்கை முறையில் அன்னோர் பெற்றிருந்த சிறந்த அனுபவங்கள் ஆகியவை யெல்லாவற்றையும் திரட்டித் தருதல் இம்முதுமொழியின் இயல்பென்பது, முதுமொழி யென்னும் செய்யுள் வகைபற்றிய இவ்விலக்கணத்தால் இனிது விளங்குவதை நாம் காணலாம்."[5]

திருக்குறளுக்குப் பன்னெடுங்காலமாக வழங்கிவரும் பலபெயர்களுள் 'முதுமொழி' என்பதும் ஒன்று. திருக் குறளைப் பிற்பகுதியில் வைத்து இயற்றப்பட்ட வெண்பா நூல்களில் 'முதுமொழி மேல் வைப்பு', 'சோமேசர் முது மொழி வெண்பா' என்னும் இரண்டு நூல்களின் பெயர் களிலும் உள்ள முதுமொழி என்பது திருக்குறளைக் குறித்து நிற்கின்றது. இதைப் போன்றே 'பழமொழி' என்ற பெயராலும் திருக்குறள் அழைக்கப்படுகிறது. பழமையானதாக உள்ளமையாலும் திருக்குறளைப் 'பழ மொழி'யென்ற பெயரால் குறிப்பிடும் வழக்கும் தோன்றிய தெனலாம். பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருண கிரி நாதர்,

திருவள்ளுவ தேவர் வாய்மையென் கின்ற
பழமொழியை ஓதி யேயுணர்ந்து

(திருப்புகழ் : திருச்செந்தூர் 48)

என்று வள்ளுவர் தந்த வான்மமையைப் 'பழமொழி' யென்றே பாராட்டியுள்ளார். 'சிவசிவ வெண்பா' என்ற நூலின் ஆசிரியர், தம்முடைய அவையடக்கத்தில் (செ. 3) குறள் வெண்பாவாலாகிய திருக்குறளுக்குத் தம், சிவசிவ வெண்பா மிகவும் தரம் குறைந்தது எனும் கருத்தமைய,

—கவிஞர் இயற்
பண்பால் உரைத்த பழமொழிமுன் ஈதுமொரு
வெண்பா வெனவிளங்க வே

என்று மொழிந்துள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்க தாகும்,

முதுமொழி, பழமொழி போன்ற நீதிகளை யுணர்த்தும் மற்ருெரு வகையான செய்யுள் வகைக்கு 'வாயுறை வாழ்த்து' என்னும் பெயர் வழங்கி வந்திருக்கிறது. தொல் காப்பியரே, அதனை,

வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குத லின்றி வழிநனி பயக்குமென்(று)
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே

(தொல். பொருள். 424)

என்று தெளிவுறுத்தியுள்ளார்.

இதனுல், மக்களுக்கு உறுதிப் பொருளைப் பயக்கின்ற சீரிய கருத்துக்களைக் கேட்போர் உள்ளங் கொள்ளு மாறு நயமாக எடுத்துரைப்பது 'வாயுறை வாழ்த்' தென் பது புலனுகின்றது. 'வாயுறை' என்பதற்குச் 'சொல் லாகிய மருந்து' என்பது பொருள். வேம்பும் கடுவும் (கடுக்காய்) போன்ற சொற்களைச் சொல்லாமல், பின்னர் நல்ல பயனளிக்க வேண்டும் என்ற கருத்துடன், கசப்பான உண்மைகளையும் அறிவுரைகளையும் இனிய, தீஞ்சுவை மிக்க சொற்களால் மறைத்துப் பாதுகாப்போடு மெய் யாக அறிவுறுத்தும் சொற்கள் 'வாயுறை வாழ்த்து'[6] எனப்படும்.

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனூர் என்ற புலவர், வள்ளுவர் தந்த தமிழ் மறையை 'வாயுறை வாழ்த்து' என்று போற்றுகிருர். சிறப்புமிக்க திருவள்ளு வர் இன்பமும், துன்பமும் என்று சொல்லப்பட்ட இவற்றி னுடைய இருவகைக் காரணங்களையும் ஆராய்ந்து அறிய வும், தம்மேல் அன்பு நீங்காமல் மக்கள் சமுதாயம் மன மகிழ்ச்சியுடன் போற்றிப் புகழவும் வாயுறை வாழ்த் தாகத் திருக்குறளை உரைத்தாரெனும் கருத்தமைய அவர்,

இன்பமும் துன்பமும் என்னுமிவை இரண்டும்
மன்பதைக் கெல்லாம் மனம்மகிழ—அன்பொழியா(து)
உள்ளிஉணர உரைத்தாரே ஓதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து

(திரு. மா. 35)

என்று பாராட்டியுள்ளார்.

வாழ்க்கை நெறிக் கொள்கைகளை முழுமையாக விளக்கும் அறநூல்கள் தோன்றுவதற்கு முன்னர், உலகின் பல்வேறு பகுதிகளில் வழக்காற்று ஒழுக்க நெறியைச் (Customary Morality) சிறப்பாக விளக்கும் மூதுரைகளும், முதுமொழிகளும், பழமொழிகளும் தோன்றிப் படிப்படியாக வளர்ந்துள்ளன. இதைப் போன்றே நம் தமிழகத்திலும் ஒப்புயர்வற்ற அறநூலாகிய திருக்குறள் தோன்றுவதற்கு முன்பு முதுமொழி, பழமொழி, வாயுறை வாழ்த்துப் போன்ற அறநெறியுணர்த்தும் செய்யுள் வகைகள் தோன்றியிருக்கவேண்டும். அவற்றின் வழிவந்த திருக்குறளையும் ஒழுக்க நெறியை விரித்துரைக்கும் நூல் என்ற வகையில் முதுமொழி, பழமொழி, வாயுறை வாழ்த்து என்று பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் போற்றியுள்ளனர். இனிப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே, 'முதுமொழிக் காஞ்சி' என்னும் நூலொன்று இருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அது உலகியல் உண்மைகளையும் ஒழுக லாறுகளையும் பத்துப் பத்துக்களாக மேகலை போன்ற கோவையாக்கித் தொகுத்துக் கூறுவதனுல் அப்பெயர் பெற்றது என்பர்.

### அற நூல்கள்

இவற்றிலிருந்து சொல்லாலும் பொருளாலும், கருத்தை உணர்த்தும் முறையாலும் சிறிது வேறுபட்டது அற நூல்கள். அறத்தின் அருமை பெருமைகளை அவை அறிவுறுத்துவன. அவற்றில் உணர்த்தப்படும் கருத்திற்கே முதலிடம் தரப்படும். அற நூல்களுக்கு உயிராக இருப்பது கருத்து. அக் கருத்தை வெளியிடும் பாட்டின் வடிவமே அவற்றின் உடலாக விளங்குகிறது. செய்யுளுக்குரிய எண் வகை வனப்புக்களை விளக்குமிடத்துத் தொல்காப்பியர் அறநூலிற்குரிய இலக்கணத்தைச் சுட்டிச் சொல்கிருர். அவற்றுள் 'அம்மை' என்பது சிலவாய, மெல்லியவாய சொற்களால் தொடுக்கப்பட்ட அடிநிமிர்வு இல்லாத செய்யுள் என்று கூறுவார் :

*வனப்பியல் தானே வகுக்குங் காலைச்*
*சின்மென் மொழியால் தாய பனுவலோ(டு)*
*அம்மை தானே அடிநிமிர் பின்றே*

(தொல். செய். 235)

'அம்மை என்பது குணப்பெயர்: அமைதிப்பட்டு நிற்ற லின் அம்மை யென்ருயிற்று' என்பர் பேராசிரியர். அடி நிமிராமை - ஆறடியின் மேற்படாமையாகும். சிலவாதல் சுருங்கிய, கருத்துச் செறிவு மிக்கதாகிய சில சொற்களால் இயற்றப்படுதல். மெல்லிய வாதல், சிலவாகிய அச்சொற் களும் பல எழுத்துக்களாலியன்று விரிந்தனவாகாமல் சில வெழுத்துக்களால் அமைந்து சுருங்கி நிற்றல். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணங் கூறுவன போன்றும், அன்ருகியும் இடையிட்டு நிற்கும் இயல்பினது என்பார் 'தாய பனுவல்' என்ருர். தாவுதல்-இடையீடு படுதல். இதனை, "தாய பனுவ லோடென்றது, அறம்பொருளின்ப மென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப (போன்று) வேறிடையிடை அவையன்றியுந் தாய்ச் செல்வ தென்றவாறு. அஃதாவது பதினெண்கீழ்க் கணக்கென வுணர்க"[7] என்னும் பேராசிரியரின் உரை யால் அறியலாம்.

'அம்மை' என்னும் இவ்வனப்பிற்கு,

அறிவினு ளாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போல் போற்ருக் கடை (குறள் 315)

என்ற திருக்குறளை எடுத்துக் காட்டாகக் காட்டினர் இளம் பூரணர்.[8] "அங்ஙனம் வந்தது பதினெண்கீழ்க் கணக்கு. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் சிறு பான்மை ஆறடியானும் ஒரே செய்யுள் வந்தவாறும், அறம் பொருளின்பத்திலக்கணங் கூறிய பாட்டுக்களும் பயின்று வந்தவாறும் இடையிடையே கார் நாற்பது, கள வழிநாற்பது முதலியன வந்தவாறும் காண்க"[9] என்று நச்சினர்க்கினியர் விளக்குதலால், நாலடியார் முதலிய கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டும் அம்மை யென்னும் வனப்பமைந்த இலக்கியங்களென்பது நன்கு புலனு கின்றது.

இதனுல், கீழ்க்கணக்கு நூல்கள் என்பன அறம், பொருள், இன்பங்களை எடுத்துரைக்கும் நீதி இலக்கியங்கள்

என்பது பெறப்படுகிறது. இவ்வறநூல் இலக்கணத்தைப் பிற்கால இலக்கண நூலார் நன்கு தெளிவு படுத்தி யுள்ளனர்.

அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
அறம் பொருள் இன்பம் அடுக்கியவ் வகைத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்

(பன்னிரு பாட். 542)

என்பதனுல் 'முழுவதும் ஒரே வகையான யாப்பு நடை யுடையதாய் அறம், பொருள், இன்பமாகிய உறுதிப் பொருள்களைத் திறம்பட எடுத்துரைக்கும் செய்யுள் தொகுதி கீழ்க்கணக்கு' என்று கருதப் பட்டமை அறியப் படுகிறது. நூல் முழுவதும் ஒரேவகையான யாப்பு நடை யுடையதாய் வரவேண்டும் என்னும் கருத்தினை அவ்விலக் கண நூலார்,

வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே

(பன்னிரு பாட். 544)

என்னும் நூற்பாவில், அறநூல்களாகிய கீழ்க்கணக்கு நூல்கள் வெண்பா யாப்பினுல் இயற்றப்படுதல் வேண்டும் என்று எடுத்தியம்புகிறுர். இதனுல் அக் கருத்துக்களைத் தெளிவாகவுரைப்பதற்கும், கேட்போர் உள்ளத்தில் ஆழப் பதியுமாறு அறிவுறுத்துவதற்கும் செப்பல் ஓசையுடைய 'வெண்பா' வெனும் பாவகையே சாலவும் சிறந்தது என்பது தெளிவாகிறது. இதைக் கருத்தில் கொண்டே வள்ளுவர் தம்முடைய தெய்வத்திருமறையை வெண்பா யாப்பினில் இயற்றி இருக்கலாம்.

தமிழ் மொழியில் உள்ள மிகச் சுருங்கிய வெண்பா யாப்பிற்குக் 'குறள் வெண்பா' (குறுகிய வடிவினை யுடைய வெண்பா) என்பது பெயர். இது எழு சீரான் வந்த இரண் டடிகளை யுடையது. எழுசீரான் வரும் குறள் வெண்பா வினைத் தொல்காப்பியனுர் 'குறுவெண்பாட்டு' (தொல். செய். 159) என்பர். இதைவிடச் சிறிய செய்யுள் தமிழில் இல்லை. தெய்வப் புலமைத் திருவள்ளுவனுர் தம் கருத் தினை விளக்குவதற்கு மிகச் சுருங்கிய இவ்வெண்பா யாப் பினைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். அறநூல் இயற்றும்

ஆசிரியர்கள் தாம் கூறவந்த அரிய கருத்துக்களை எளிய முறையில் மக்கள் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதிய வைக்க விரும்பினர். திருவள்ளுவரும் இம் மரபைப் பின்பற்றிக் கேட்போருடைய கருத்தைக் கவரும் செப்பல் ஓசையுடைய குறள் வெண்பாவின் மூலம் திருக்குறளை இயற்றியருளினர்.

அவருக்குப் பின்னர் வந்த அறநூலாசிரியர்கள், 'நெடு வெண்பாட்டு' எனப்படும் வெண்பாவிலேயே, தங்கள் நூல்களை இயற்றியுள்ளனர். அவற்றில் உள்ள செய்யுட் களுள் பல, நம்மை நேரே நோக்கி விளித்துக் கூறுவனவாக அமைந்துள்ளன. இம்முறை நம்முடைய கருத்தை ஈர்ப் பதற்குக் கையாளப்படும் ஒருவகை இலக்கியத் திறனாகும். மேலும், அறநூல்களின் உயிராக விளங்கும் கருத்துக்களைத் தாங்கி நிற்கும் உடலாகிய செய்யுளுக்குச் செய்யப்படும் அலங்காரமே சொல்லழகும், உவமை நயமும், சுவை யுணர்வுகளுமாகும். இவ்வகையில் அறநூல்கள் மூதுரையி லிருந்து வேறுபடுகின்றன. மூதுரையின் யாப்புநடை பெரிதும் சொல் சுருக்கமும் பொருள் செறிவும் உடைய 'சூத்திர' அமைப்பாகும்.

காலப்போக்கில் உண்டான கருத்துக் குழப்பத்தால் அறநூல்களையும், மூதுரைகளையும் வெவ்வேருகப் பிரித் துணரும் நிலை நம் நாட்டில் மாறியது. இதனால், மூதுரைக் கும் அறநூலுக்கும் இடையே இருந்த நுட்பமான வேறு பாடு மறைந்தது: இத்தகைய நிலைமாறுபாட்டுக் காலம் மூதுரைகளையும், அறநூல்களையும், 'நீதி நூல்கள்' என் னும் பொதுப் பெயரால் வழங்கத் தலைப்பட்டனர் என்று நாம் கூறலாம்.

## தமிழில் நீதி நூல்கள்

கொங்குவேளிர் என்ற புலவரே முதன்முதலாக "நீதிப் பெருமை நூலோதியு மேராய்" என்று தாம் இயற்றிய பெருங்கதையில் (2 : 1 : 26), நீதி என்ற சொல்லைக் கையாண்டுள்ளார். கங்கப் பேரரசனை துர்விநீதன்

(கி. பி. 540-600) வாழ்ந்த காலத்திலோ, அதற்குப் பின்னரோ அவர் வாழ்ந்திருக்கவேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[10]

இந்நூலாசிரியருக்குப் பிறகு 'நீதி நூல்' என்னும் வழக்குத் தமிழில் மெல்ல வளர்ந்து பெருகியது எனலாம். தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய பேராசிரியர்,

> இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு
> வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்
>
> (தொல். பொருள். 506)

என்னும் செய்யுளியல் சூத்திரவுரையில், நீதிநூலைக் குறிப்பிடுகிறார் :

> "இடைச் சுரத்து உடன்போக்கிய கிழத்தியொடும் கிழவன் நீதிநூல் வகையாற் கிளத்தற்கு முரியன்.
>
> நீதிநூல்வகையாற் கிளத்தலென்பது கிழத்தி தன் தமர் இடைச் சுரத்துக் கண்ணுறின் அவர் கேட்பத் தலைவிக்குச் சொல்லுவானாய் வழக்கியல் கூறுவது முரியவென்பது. 'வழக்கியலாணையென்றதனன் நீதிநூல்விதி பிறழக் கூறின் அஃது இராக்கதம் போன்று காட்டுமென்பது."[11]

இங்கு 'வழக்கியலாணை' என்பதை '**நீதி நூலின் விதி**' யென்று கொள்ளுகின்றார் பேராசிரியர். அவருடைய காலம் கி. பி. பதினன்காம் நூற்றாண்டாகும்.

திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர், பொருட்பாலில் 'நீதி நூல்' என்ற தொடரைப் பதினன்கு இடங்களில்[12] பயன்படுத்தியுள்ளார். ஓரிடத்தில் திருக்குறளின் ஆசிரியரை "இந்நீதி நூல் உடையார்" என்றும் (குறள்-533 உரை) அவர் குறிப்பிட்டுள்ளார். இவ்விடங்களிலெல்லாம் அவர் அரசநீதியைக் கூறும் நூலையும், நூலாசிரியரையுமே அவ்வாறு குறிப்பிட்டுள்ளார் என்பது அவருடைய உரை விளக்கங்களைக் கூர்ந்து நோக்குவார்க்குப் புலனுகாமல் போகாது. இவர் அறநூலையும் நீதிநூலையும் (அருத்த சாத்திரம்) தனித்தனியாகக் கல்வி என்ற அதிகாரத்தின் தோற்றுவாயில் கூறுவதால், அறத்தைக் கூறும் நூலை, 'நீதி நூல்' என்று அழைக்கும் கருத்தை உடன்

படாது, பண்டைச் சான்ருேர் போற்றிய மரபினையே இவர் பின்பற்றியுள்ளார் என்பது தெளிவாகிறது.

இதனுல் பரிமேலழகர் வடமொழி மரபினைப் பின்பற்றி 'அரச நீதியை' உணர்த்தும் நூல்களையே 'நீதி நூல்கள்' என்று போற்றினமையும், பேராசிரியர் போன்ற உரையாசிரியர்கள் வழக்காற்று அறநெறியை எடுத்துரைக்கும் நூல்களை 'நீதி நூல்கள்' என்று அழைத்தமையும் அறியப் படுகின்றன.

## குறிப்புகள்

1. Aristotle: Rhetoric, II, 21.

2. 'பழமொழி' என்ற சொல் சங்க இலக்கியத்துள் 'பழமையான அனுபவ மொழிகள்' என்ற பொருளில் சில இடங்களில் கையாளப் பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது. பின்வரும் அகநானூற்று அடிகள் இதற்குத் தக்க சான்ருகும்:

இம்மை யுலகத்து இசையொடும் விளங்கி
மறுமை யுலகமு மறுவின்(று) எய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்.

(அகம். 66, 1-5)

மூதுரை என்பது ஔவையார் என்னும் தமிழ் மூதாட்டியார் அருளிய நீதிநூல்களுள் சிறந்தது. தமிழகத்தில் தொன்று தொட்டுச் சான்ருேர்கள் அனுபவத்தில் கண்ட உண்மைகளைத் திரட்டி அவற்றிற்கு இலக்கிய வடிவத்தை அவர் கொடுத்துள்ளார்.

சிற்றம்பல பண்டாரம் என்பவர் இயற்றிய மகாபுராணத்தில் மூதுரை, 'பழமொழி' எனும் பொருளில் கையாளப்பட்டுள்ளது:

முத்தியின் மானமேற் பொலிவா மூதுரைப்
பத்தியின் தானமே பலிக்க வேண்டுமால்

(மகாபுராணம். 27)

3. தொல். பொருள். பேராசிரியம், சூ. 489 உரை. கழகப் பதிப்பு, சென்னை, 1951. இளம்பூரணர், "நுண்மை விளக்கவுஞ் சுருக்கம் விளங்கவும் ஒளியுடைமை விளங்கவும் தோன்றிக் கருதின

பொருளை முடித்தற்கு வரும் ஏதுவைக் குறித்தன முதுமொழி யென்று சொல்லுவர்'' என்று கூறியுள்ளதைக் காண்க.

—தொல். பொருள். இளம்பூரணம்
சூ. 479 உரை. கழகப் பதிப்பு, சென்னை, (1953)

4. "கூர்மையும் சொற்சுருங்கி இருத்தலும், விழுப்பமும், எளிதில் பொருள் தெரிதலும் என்ற இந்நான்கும் விளங்கத் தோன்றி, அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றனுள் ஒன்றை முடித்தற்கு வருமாயின், அங்ஙனம் வந்ததனை அப்பொருள் முடித் தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதிவரும் முதுமொழியென் பர் புலவர்......பழமொழி இவ்விலக்கணம் பற்றிச் செய்தது''

—தொல். பொருள். செய். சூ. 177 உரை
நச்சி. உரை ; கழகம், சென்னை, 1966.

5. க. வெள்ளைவாரணன் : தொல்காப்பியம், பக். 236ன் அடிக் குறிப்பு. இதனைப் பின்வரும் இலக்கியச் சான்றுகள் தெளிவுறுத்து கின்றன :

முதுமொழி கூற முதல்வன் கேட்டு
—மணி. கா. 25 ; வ. 119.

செவி செறுவாக முதுமொழி நீரா—கலி. 68.

மூழையுப்பறியாத தென்னு மூதுரையு மிலனே
—திவ். பிர. பெரிய. 3 : 7 : 4.

'முது மொழி' என்பது இங்குப் பழமொழி என்ற பொருளிலும், பண்டைச் சான்றோர் இயற்றிய பாக்கள் என்ற பொருளிலும் வழங்கப் பட்டுள்ளன. "முன்னை மரபின் முதுமொழி முதல்வா'' (பரி. 3 : 47) போன்ற ஒருசில இடங்களில் 'வேதம்' என்ற பொருளி லும் இச்சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. 'மூதுரை' என்ற சொல் பழமொழி என்ற பொருளில் பயன்படுத்தப் பட்டுள்ளதை நாம் திவ்வியப் பிரபந்தத்தால் அறிகிறோம். இவற்றிலிருந்து, நம் முடைய முன்னோர்கள் இச் சொற்களைச் சற்றேறக் குறைய ஒரே வகையான பொருளிலேயே வழங்கியுள்ளனர் என்பது புலனா கின்றது.

6. "வாயுறை வாழ்த்தை விளங்க ஆராயின் வேம்பினையும் கடுவினையும் போல வெஞ்சொ லடக்காது பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாவற் கிளவியானே மெய்யறிவித்தல் என்றவாறு.''

—தொல். பொருள். சூ. 417 உரை இளம்.

"முற்பருவத்துக் கைத்தும் கடுத்தும் பிற்பருவத்துக்கு உறுதி பயக்கும் வேம்பும் கடுவும் போல வெய்ய சொல்லினை ஒரு தடை

யின்றிப் பிறப்பயக்குமெனக் கருதிப் பாதுகாத்த சொல்லினானே மெய்யாக உறுத்துவது வாயுறை வாழ்த்தாம்."

—தொல். பொருள். செய். சூ. 112. நச்சி. உரை.

7. தொல். பொருள். சூ. 547 பேரா. உரை.

8. தொல். பொருள். சூ. 536 இளம். உரை.

9. தொல். பொருள். செய். சூ. 235 நச்சி. உரை.

10. இராமச்சந்திரன் செட்டியார், C. M: கொங்குவேளிர், பக். 99-100

11. தொல். பொருள். சூ. 506 பேரா. உரை.

12. பார்க்க : திருக்குறள் பரிமேலழகரின் உரை, குறள் 388, 533, 570, 581, 641, 683, 686, 825, 865, 870, 871, 872.

## 2. நீதியும் அறமும்

### நீதி : சொல்லும் பொருளும்

'நீதி' என்பது தமிழ்ச் சொல் அன்று. அது வடமொழிக் குரிய சொல்லாகும். கி. பி. ஆரும் நூற்றுண்டு அள விலேயே இச் சொல் தமிழ் மொழியில் இடம் பெற்றிருக் கிறது. இச் சொல் 'நீ' என்னும் வினைச் சொல்லடியாகத் தோன்றியது. 'நீ' என்னும் அவ்வேர்ச் சொல்லிற்கு, அழைத்துச்செல் (Lead), கொண்டு செல் (Convey), நடத்து (Conduct), வழிகாட்டு (Guide), 'ஆட்சி செய்' (Govern), இயக்கு (Direct) என்னும் பல்வேறு பொருள்கள் வட மொழியில் வழங்கி வருகின்றன. இவ்வேர்ச் சொல்லடி யாக அமையும் 'நீதி' எனும் பெயர்ச் சொல் இயக்குதல், வழிகாட்டுதல், செயலாட்சி, நடத்தை, தகுதி, மரபொழுங்கு என்ற பல பொருள்களை உணர்த்துகிறது. மேலும், செய லின் நிகழ்நிலை, கொள்கை முறை, முன்னுணர்மதி, அரசியல் அறிவுத்திறன், அரசியல் சூழ்ச்சித்திறன் என் னும் வேறு பல பொருள்களையும் அச்சொல் குறிக்கிறது.[1]

இதனுல் 'நீதி' எனும் சொல் வடமொழியில் முதன் முதலில் நடத்துதல், செலுத்துதல், இயக்குதல் என்ற பொருள்களில் கையாளப் பட்டிருக்க வேண்டும் என்றும், பின்னர் உண்டான கருத்து வளர்ச்சிக்கேற்ப அச்சொல் லின் பொருள் காலப்போக்கில் விரிந்தும், பரந்தும் வளர்ந் திருக்க வேண்டுமென்றும் தோன்றுகிறது. அவ்வாறு வளர்ச்சியுற்ற காலத்தில் 'நீதி' என்பதுசிறப்பாக 'இராச நீதியை'க் குறிக்கும் சொல்லாகக் கருதப்படலாயிற்று. தண்டநீதியை உணர்த்தும் அருத்த சாத்திரத்தின் சிறப்புப் பெயராக அது வடமொழியில் பெருவாழ்வு பெற்றதென

லாம். இக்காரணத்தால் ‘ நீதி சாத்திரம் ’ என்னும் சொல் ‘அருத்த சாத்திரத்தை’க் குறிக்கும் மரபு அம் மொழியில் நிலைத்து விட்டது.[2]

நீதி என்னும் சொல் பழந்தமிழ் இலக்கியத்தில் பயன் படுத்தப்படவில்லை. திருக்குறளிலும் நீதி என்ற சொல் இடம் பெறவில்லை. ஆனால், அப்பொருளை உணர்த்து வதற்கு ‘நயன்’ என்ற சொல்லைத் திருவள்ளுவர் வழங்கி யுள்ளதாகப் பரிமேலழகர் கருதுகிறார். பழைய தமிழ் இலக் கியத்தில் நன்று, நன்றி, நன்மை, நல்லது என்ற சொற்கள் ‘அறம்’ என்ற பொருளில் பல இடங்களில் பயன்படுத்தப் பட்டுள்ளன.[3] அவற்றைப் போன்று ‘நயம்’ என்னும் சொல், ‘நீதி’ என்ற பொருளில் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பது பரிமேலழகரின் கருத்தாகும். அதற்கு ‘நீதி’ என்று அவர் பொருள் கூறினாலும், ‘ அறம் ’ என்ற பொருளையே அதனால் சுட்டுகிறார் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல். (குறள் 97)

இக்குறட்பாவினை, “ ஒருவனுக்கு இம்மைக்கு நீதியையும் உண்டாக்கி மறுமைக்கு அறத்தையும் பயக்கும், பொரு ளால் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து இனிமைப் பண் பின் நீங்காத சொல் ” என்று விளக்கிய பரிமேலழகர், நீதி யாவது “உலகத்தோடு பொருந்துதல்”[4] என்று அச் சொல் லிற்குச் சிறப்புரையும் வரைந்துள்ளார். ‘ உலகத்தோடு பொருந்துதல் ’ என்பதற்கு ‘வழக்காற்று ஒழுக்க நெறியில் ஒழுகுதல்’ எனப் பொருள் கூறலாம் அறநெறிக் கொள்கை வளர்ச்சியின் பல்வேறு படிநிலைகளுள் ‘ வழக்காற்று ஒழுக்க நெறி’ முதற்படியாகக் கருதப்படுகிறது. எனவே, ‘நயன்’ என்னும் சொல் ‘ நீதி ’ என்ற பொருளில் அறத்தை யுணர்த்துவதாகவே அமைகிறது எனலாம்.

இதைப் போன்றே கீழ்க்காணும் குறட்பாக்களில் ‘நயன்’ என்னும் சொல் ஒழுகலாற்றைக் குறிப்பதாகக் கருதும் பரிமேலழகர், அவ்விடங்களிலும் ‘நயன்’ என்னும் சொல்லிற்கு ‘நீதி’ என்ற பொருளையே கொண்டுள்ளார்.

நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை. (குறள் 193)

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து. (குறள் 194)

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. (குறள் 197)

இகலானு மின்னாத வெல்லா நகலானும்
நன்னய மென்னுஞ் செருக்கு. (குறள் 860)

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு. (குறள் 994)

ஆயினும், பரிமேலழகர் 'நீதி' என்னும் சொல் இராச நீதியைக் குறிப்பதாகத் தம்முடைய உரையில் சில இடங்களில் குறிப்பிட்டுள்ளார். பொருட்பாலில் அரசியலுக்கு விளக்கம் தருமிடத்தில் "அரச நீதியாவது காவலை நடாத்தும் முறைமை"[5] என்று இவ்வுரையாசிரியர் குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது. 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன்' (குறள் 388) என்னும் தொடருக்குச் சிறப்புரை கூறுமிடத்து, அவர், "முறையாவது அறநூலும் நீதி நூலும் சொல்லும் நெறி"[6] என்று விளக்கம் தந்துள்ளார். இங்கு 'நீதி' என்பது அரச நீதியையே சுட்டுகிறது.[7] மேலும், 'நீதிநூல்' என்ற சொல்லினை 'அருத்த சாத்திரம்' என்ற பொருளில் அவர் எட்டு இடங்களில் கையாண்டுள்ளதை நாம் முன்னர்க் கண்டோம்.[8] பொருட் பாலில் 'நூல்' என்ற சொல் வழங்கப்பட்டுள்ள பதினன்கு இடங்களுள், ஐந்து இடங்களில் வள்ளுவர் பொருள் நூலைக் குறிப்பிடுவதாகப் பரிமேலழகர் கருதுகிறார்.[9]

இப்பொருள் நூலைத் திருவள்ளுவர்,

பிறன்பொருளால் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல் (குறள் 141)

என்னும் குறளில் குறிப்பிட்டுள்ளார். இங்கு 'அறம் பொருள்' என்பன ஆகுபெயராக அமைந்து, அறநூலையும் பொருள் நூலையும்' சுட்டுகின்றன. எனவே, திருவள்ளுவர் அரசநீதியைப் பற்றி விரித்துரைக்கும் 'பொருள் நூலைக்' குறிப்பிட்ட போதிலும், அப்பொருளைக் குறிக்கும் நீதி என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை என்பது புலனு

கின்றது. எனினும், அவர் 'முறை' என்னும் சொல்லால் அரசநீதியைப் பலஇடங்களில் குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது. "யாரிடத்திலும் குற்றம் இன்னதென்று ஆராய்ந்து, கண்ணேட்டம் செய்யாமல், நடுவு நிலைமையில் நின்று, செய்யத் தக்கதை ஆராய்ந்து செய்வதே நீதி முறையாகும்" என்பதனை :

ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை (குறள் 541)

என்னும் குறட்பா எடுத்துரைக்கிறது. இப்பொருளிலேயே 'முறை' என்னும் சொல் பின்வரும் குறட்பாக்களில் பயன் படுத்தப்பட்டுள்ளதை நாம் காணலாம் :

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும். (குறள் 388

இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். (குறள் 547)

எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தால் தானே கெடும். (குறள் 548)

நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும் (குறள் 553)

இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். (குறள் 558)

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். (குறள் 559)

இவற்றால் 'நீதி' எனும் சொல்லின் பொருளினைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் 'அறம்', 'நயன்', 'முறை" என்னும் சொற்களால் சிறப்பு வகையான் குறித்து வந்தனர் என்பது தெளிவாகிறது.

### தமிழிலக்கியத்தில் 'நீதி'

அறநூல் அறுத்தவாற்றால் "செய்வதும் தவிர்வதும் பெறுவதும் உறுவதும் உய்வதும்"[10] அறிந்து ஒழுகுதல் நீதி என்பது சான்றோர்கள் கருத்தாகும். இதனை நாம் பொதுவகையாகக் கூறும் பொருளென்றே கொள்ளுதல்

வேண்டும். சிறப்பு வகையான 'நீதி' என்னும் சொல்லிற்குத் தமிழ் இலக்கியத்தில் பதினெரு வகையான பொருள்கள் வழங்கப்பட்டு வருகின்றன.

**நீதியும் ஒழுக்கமும்**

மனித இனத்திற்கே யுரிய தனிப்பண்புகள் பல. அவற்றுள் ஒழுக்கம் முதன்மையானதாகப் போற்றப் படுகிறது. 'ஒழுக்கம்' என்னும் சொல் 'ஒழுகு' என்னும் வேர்ச்சொல்லடியாகப் .பிறந்ததாகும். 'ஒழுகு' என்னும் சொல்லிற்கு 'இடையருது கடைப்பிடித்தல்' என்பது பொருள். இடையருது நீர் ஒழுகுவதை 'ஒழுக்கு' என்று கூறுவதைப் போல, வாழ்க்கையில் உயர்ந்தவையெனக் கருதப்படும் நெறிமுறைகளை எக்காலத்தும், எவ்விடத்தும் இடையருது மேற்கொண்டொழுகுவதையே 'ஒழுக்கம்' என்பர்.

ஒழுகு என்னும் அடிச்சொல்லிற்கு 'நட' என்னும் பொருளும் உண்டு. இதனல், 'ஒழுக்கம்' என்பது 'நடக்கை' எனவும் பொருள்படும். நமது மொழி மரபுப்படி 'நடக்கை' என்பது நன்னடக்கையையே குறிப்பதாகும். நன்னடக்கை யாகிய ஒழுக்கம் என்ற பொருளை 'நீதி' எனும் சொல் உணர்த்தும். இடைக்கால இலக்கியங்களில் அச்சொல் பெரிதும் இப்பொருளிலேயே பயன்படுத்தப் பட்டுள்ள தெனலாம். '**நீதிப்** பெருமை நூலோதியுமோராய்' (பெருங். 2 : 1. : 26) என்றும், 'நிலைமைக் கொத்த **நீதியாய்**' (பெருங். 1 : 39 : 327) என்றும் கொங்கு வேளிர் குறிப்பிட்டுள்ளார். மேலும் '**நீதி** பேணுவீர்' (தேவர். I. 96. 3) என்றும், '**நீதி** நின்னையல்லால் நெறியாது நினைந்தறியேன்' (தேவா III : 55 : 6) என்றும் திருஞான சம்பந்தர் மொழிந்துள்ளார். '**நீதியிலேன்**' (திருவா. 602) என்று மாணிக்கவாசகரும், '**நீதி**யான கேள்வியார்' எனத் திவ்வியப் பிரபந்தமும் (760) தெரிவிப்பதிலிருந்தும் 'நீதி' எனும் சொல் 'ஒழுக்கம்' என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளதை நாம் அறிகிரும்[11].

**நீதியும் நியாயமும்**

நீதி என்ற சொல்லிற்கு 'நியாயம்' என்ற பொருள் தமிழில் வழங்கப்பட்டு வருகிறது. நேர்மை, வாய்மை,

நன்னெறி, கட்டுப்பாடு என்பன இதற்குரிய பொருள் களாகும். கொங்கு வேளிர் '**நீதியென்று** நெறியுணர் வோர்க்கென' (பெருங். 1 : 44 : 68) என்று குறிப்பிடுகிறார். இப்பொருளில் '**நீதியறியா** தாரமண் கையர்' (தேவா. 1 : 16 : 10) என்று திருஞான சம்பந்தரும், **நீதியால்** வாழ மாட்டேன்' என்று திருநாவுக்கரசரும் (தேவா. IV : 26 : 3) '**நீதியாவனயாவையும்** நினைக்கிலேன்' (திருவா. 26 : 2) என்று மாணிக்கவாசகரும் வழங்கியுள்ளனர். வேறு பல புலவர்களும் இப்பொருளில் 'நீதி' என்ற சொல்லைக் கையாண்டுள்ளனர்.[12]

## நீதியும் முறைமையும்

'நீதி' என்ற சொல்லிற்கு 'முறைமை' என்ற பொருளும் உரியதாகும். 'ஏதமின்மையும் **நீதியும்** வினைய்' (பெருங். 3 : 18 : 60) என்றும், **நீதியிற்** காட்ட நெடுந் தகை' (பெருங். 3 : 10 : 41) என்றும், **நீதியால்** தொழு வார்கள் தலைவனை' (தேவா. V : 57-58) என்றும், **நீதி யான** பண்டமாம்' (திவ். பிர. 2042-8) என்றும் 'கட்டமை **நீதி** தன்மேற் காப்பமைந்து' (சீவக. 1145) என்றும் இயம்பப்பட்டுள்ள தொடர்களில் 'நீதி' என்னும் சொல் 'முறைமை' என்ற பொருளில் (நெறிமுறை) வழங்கப்பட்டுள்ளதை நாம் காணலாம்.[13]

## நீதியும் அறநூலும்

மேலும், 'அறநூல்' என்னும் பொருளில் இச்சொல் தமிழில் வழங்கப்படுவது இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

> **நீதி**யீருக நிறுத்தினென் (திருமந். 190)
>
> **நீதியும்** பிறவு மோதிய வெல்லாம் (பெருங். 1 : 36 : 360)
>
> உணர்ந்தாய் மறைநான்கு மோதினாய் **நீதி**
> (திவ். பிர. 2048-1)
>
> நயத்துறை நூலினீதி நாம்துறந் தமைதல்
> (கம்ப. யுத்த. அங்க. 8)

இவை அல்லாமல் இச்சொல்லிற்கு இயல்பு,[14] உபாயம்[15] அரசியல் நீதி சாத்திரம்,[16] மெய்,[17] உலகத்தோடு ஒட்ட

வொழுகல்,[18] நடத்துவது[19] போன்ற வேறுபல பொருள் களும் அருகிய வழக்காக வழங்கி வந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். மேற்கண்ட ஆய்விலிருந்து 'நீதி' என்னும் சொல் தமிழில் ஒழுக்கம், நியாயம், முறைமை, அறநூல் என்ற நால்வகைப் பொருளிலேயே பெருவழக் காக வழங்கப்பட்டு வருவது அறியப்படுகிறது.

இதைக் கருத்தில் கொண்டே பிங்கல முனிவரும்,

'நெறியும் நியாயமும் தருமமும் நீதி' (பிங்கல. நிக. 1816)

என்று நீதிக்கு விளக்கம் தந்துள்ளார். பிற்காலத்தில் சூடாமணி நிகண்டின் ஆசிரியரான மண்டல புருடர்,

'மயலறு நெறி நியாய மரியாதை நீதி' (சூடா. நிக. 8-44)

என்று வரையறுத்துள்ளார். இவற்றைக் கூர்ந்து நோக்கு வார்க்கு ஓர் உண்மை புலனாகும்.

வடமொழியாளர் 'நீதி' என்ற சொல்லிற்குச் சிறப் பாக வழங்கிய 'அரசநீதி' எனும் பொருள் தமிழில் முதன்மையிடம் பெறவில்லை என்பதே அவ்வுண்மை யாகும். அதற்கு மாறாக, 'ஒழுக்கநெறி' என்ற பரந்துபட்ட பொருளில், பண்டைத் தமிழ்ச்சான்றோர்கள் 'நீதி' என்ற சொல்லைப் பெரிதும் போற்றி வழங்கியுள்ளனர் என்பது தெரிகிறது. இளைஞர் முதற்கொண்டு முதியோர்கள் வரை யில் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகவேண்டிய நெறி முறைகளை எடுத்துரைக்கும் நீதிநூல்கள் நம் தமிழ் மொழியில் மிகப்பலவாக உள்ளன. 'நீதி' என்ற பெய ரினைக் கொண்ட நூல்கள் தமிழில் இயற்றப்பட்டுள்ளமை மேற்கண்ட கருத்தினை அரண் செய்கிறது எனலாம். உலகநீதி, நீதிசாரம், நீதிவெண்பா, நீதிநெறி விளக்கம், நீதிநூல் என்பன இங்குக் குறிப்பிடத்தக்கன. வடமொழி யில் ஒழுக்க நெறியைப் போதிக்கும் நீதி நூல்கள், 'நீதி சதகங்கள்' என்ற பெயரால் கி. பி. ஏழாம் நூற்றாண்டு அளவிலேயே தோன்றலாயின. இவற்றால் நீதி என்னும் சொல்லிற்குரிய பொருள் தமிழ் மொழி வழக்கில் தனிப் பட்டதொரு கருத்தாழம் மிக்கதாக வழங்கப்பட்டு வரு கிறது.

இந்நிலையில் கி. பி. ஆறும் நூற்றுண்டிற்குப் பின்னர் நம் தமிழ் மொழியில் வழங்கத் தலைப்பட்ட 'நீதி' என்ற சொல்லிற்கும், பழைய தமிழ்ச் சொல்லான 'அறம்' என்பதற்கும் இடையே உள்ள வேறுபாட்டை நாம் கண்டறிதல் வேண்டும். இந்நுட்பமான வேற்றுமையை அறிய வேண்டுமானுல், நாம் முதலில் "'அறம்' என்ருல் என்ன?" "அதனுடைய பொருள் யாது?" "அறத்திற்கும் நீதிக்கும் உள்ள இயைபு யாது?" என்பனவற்றைப் போன்ற பல வினுக்களுக்கு விடை கண்டாக வேண்டும்.

**அறம்—விளக்கம்**

அறத்தைப் பற்றிப் பேசும் தமிழ் நூல்கள் மிகப் பலவாக உள்ளன. எனினும், 'அறம் என்ருல் என்ன?" என்ற வினுவினை எழுப்பினுல், அதற்கு விடை காண்பது மிகவும் கடினமான செயலாகிறது. 'அறம்' என்னும் சொல் பொருளில் மிகவும் நெகிழ்ச்சியுடையது. அதைப் பகுத்துப் பொருள் காணுதல் எளிதன்று. அச்சொல்லின் பொருளை வரையறுத்து விளக்குகின்றபொழுது பல சிக்கல்கள் தோன்றுகின்றன. 'அறம்' என்னும் சொல் காலப்போக்கில் பல்வேறு பொருள்களை உணர்த்தும் பொருள் செறிவு வாய்ந்த சொல்லாகச் சிறப்புற்று விளங்குகிறது.

'அறு' என்னும் வினைச்சொல் அடியாகப் பிறந்ததே 'அறம்' என்னும் சொல்லாகும். 'அறு' என்னும் அடிச்சொல்லிற்கு 'அறுத்துச் செல்', 'வழியை உண்டாக்கு', 'உருவாக்கு', 'துண்டி', 'வேறுபடுத்து' என்ற பல வகைப் பொருள்கள் வழங்கிவருகின்றன. 'அம்' எனும் தொழிற் பெயர் விகுதி அறுத்தலாகிய தொழிலை உணர்த்துகிறது. இத்தகைய சொல்லமைப்பியல் ஆராய்ச்சியின் அடிப்படையில் 'அறம் என்னும் சொல்லிற்குப் பின் வரும் விளக்கம் தரப்படுகின்றது. மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் தொகுதியே—முழுநிறைவடிவமே—அறம் என்று கூறுவர். பிறவிதோறும் மனிதனைப் பற்றிக்கொண்டு வரும் தீவினையின் பயனுகிய அறியாமையை அறுத்தெறிவதே 'அறம்' என்று ஆன்மீக வண்ணம் குழைத்த மற்ருெரு விளக்கமும் இதற்குத் தரப்படுவதுண்டு.[20]

பண்டைத் தமிழ் மக்கள் தனிமனிதனையும் சமுதாயத்தையும் போற்றி வளர்க்கும் ஒழுக்க நெறியாக அறத்தைக் கருதினர். மறுமைப் பேற்றை அளித்தாலும், அளிக்காவிட்டாலும், இவ்வுலக வாழ்க்கையில் தனி மனிதனும் சமுதாயமும் நலமாக வாழ்வதற்கும், முன்னேற்றத்தை அடைவதற்கும் அறவாழ்வு இன்றியமையாதது என்னும் நம்பிக்கை நம் முன்னோர்களிடம் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது. பொதுவாக மனித இனம் பலதிறப்பட்ட விழைவுகளையும், முரண்பட்ட தேவைகளையும் உடையதாக இருந்துவருகிறது. மக்களினம் உருவாக்கும் சிக்கலான நிலையங்களும், அமைப்புகளும் வளர்ச்சியுறுகின்ற பொழுது அவற்றிடையே முரணான இயல்புகளும் பண்புகளும்தோன்றுகின்றன ; வளர்ச்சியும் மாற்றமும் அடைகின்றன. இத்தகைய பல திறப்பட்ட விருப்புகளையும் வெறுப்புகளையும், தேவைகளையும், முரண்பட்ட எண்ணங்களையும் கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு, அவற்றிற்குச் செம்மையான முழுவடிவம் கொடுக்கும் பணியைச் செய்வதே தமிழன் கண்ட அறத்தின் உள்ளார்ந்த பண்பாக இருந்து வருகிறது.

'அறம்' என்னும் சொல்லிற்குத் தமிழில் எட்டு வகையான பொருள்கள் வழங்கி வருகின்றன. பொதுவாக அது நற்பண்பு அல்லது ஒழுக்கம் என்னும் பொருளிலேயே பெரும்பாலும் தமிழ் இலக்கியங்களில் வழங்கப் பெற்றிருப்பதை நாம்காணுகின்றோம். அறம் உணர்த்தும் இப்பொருள் அறவியல் சொற்பொருள் வகையைச் சேர்ந்ததாகும் இப்பொருளில் மட்டுமல்லாமல் வழக்கம், நீதி, கடமை, புண்ணியம், ஈகை, அறக்கடவுள், சமயம் என்ற பல்வேறு பொருள்களிலும் அறம் என்னும் சொல் வழங்கப்பட்டு வருகிறது.

### அறமும் ஒழுக்கமும்

நம்முடைய முன்னோர்கள் 'அறம்' என்னும் சொல்லிற்குத் தந்துள்ள விளக்கத்தோடு, 'எதிக்ஸ்' (Ethics) என்னும் ஆங்கிலச் சொல்லிற்குத் தரப்படும் பொருள் விளக்கம் மிகவும் பொருந்துவதாக இருக்கிறது. நல்ல அல்லது தீய செயல்களின் மூலம், தானே வெளிப்படும் மக்களுடைய நடத்தை

யைப் பற்றிய ஆய்வியல் கலையே 'எதிக்ஸ்' என்பதாகும். இதைத் தமிழில் 'அறவியல்' எனலாம். 'அறவியல்' என்பது 'சமுதாயத்தில் வாழும் மனிதர்களின் நடத்தையைப் பற்றி ஆராயும் கலை' என்று நாம் வரையறுத்துக் கூறலாம்.

'எதிக்ஸ்' என்னும் சொல் கிரேக்க மொழிச் சொல்லாகும். 'எதோசு' (Ethos) என்னும் வேர்ச் சொல்லடியாகத் தோன்றியது அது. முதன் முதலில் இவ்வடிச் சொல், பழகிப்போன நடத்தை, வழக்கம், மரபு என்னும் பொருள்களையே உணர்த்தி வந்தது. பின்னர், அவற்றுள் 'நடத்தை' என்னும் பொருளே, 'எதோசு' என்னும் சொல்லிற்குரிய சிறப்புமிக்க பொருளாகப் போற்றப்படலாயிற்று. நாளடைவில், அவ்வேர்ச் சொல்லடியாகத் தோன்றிய 'எதிக்ஸ்' என்பது 'ஒழுக்கத்தைப் பற்றிய அறவியல் கலை' என்று போற்றப்படும் நிலையை அடைந்துள்ளது.

ஒழுக்கத்தைக் குறிப்பிடும் 'மாரல்' (Moral) என்னும் ஆங்கிலச் சொல் இலத்தீன் மொழியில் காணப்படும் 'மோர்சு' (Mores) என்ற சொல்லின் திரிபாகும். இதற்கும் 'பழக்க வழக்கம்' என்பதே பொருளாகும். இதனால், மனித நடத்தையைப்பற்றி, குறிப்பிட்டஒரு சமுதாயத்தில் வாழும் மக்கள், வழக்கமாகக் கொள்ளும் முடிவையே ஒழுக்கமாகக் (Morality) கொண்டனர் என்பது புலனாகின்றது. தனி மனிதர்களாகிய சான்றோர்கள் தத்தம் வாழ்க்கையில் கடைபிடித்து ஒழுகிய பழக்கங்களை, அவர்களோடு நெருங்கிப் பழகியவர்கள் முதன்முதல் பின்பற்றி நடக்கலாயினர். நாளடைவில் அச்சான்றோர்களின் பழக்கங்கள், அவர்கள் வாழ்ந்த சமூகத்தினரால் சிறப்புடையனவாகப் போற்றப்பட்டன. அச்சமூகத்தைச் சார்ந்த பெரும்பான்மையான மக்களுடைய உள்ளத்தை அவை கவர்ந்தன. அத்தனி மனிதர்களின் பழக்கங்களே அவர்கள் வாழ்ந்த மக்கள் சமுதாயத்தின் வழக்கங்களாகப் போற்றப்படும் தகுதியையும் சிறப்பையும் அடைந்தன. இவ்வாறு படிப்படியாகத் தனிமனிதனின் பழக்கமாக அரும்பிய நடத்தை, பெரும்பாலோரால் பின்பற்றப்பட்டபொழுது தனிச்சிறப்பு

வாய்ந்த 'ஒழுக்க'மெனும் பண்பாக மலர்ந்து, பொன்றுப் புகழ்வாய்ந்த 'வாழ்க்கை நெறியாக' மாண்புற்றது என லாம்.

மனிதன் நன்னெறியில் இடையருது ஒழுகுவதே ஒழுக்கம் என்று போற்றப்படுகிறது. திருக்குறளிற்கு உரை வகுத்த பரிமேலழகர், "அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவ் வவற்றிற்கு ஓதிய அறங்களில் வழுவாது ஒழுகுதல்"[21] என்று விளக்கியுள்ளார். இதில் கூறப்பட்டுள்ள சாதி பற்றிய செய்திகளை நாம் புறத்தே ஒதுக்கி விட்டுப் பார்ப் போமானல், மனிதன் நலமாக வாழ்வதற்கும், அந்நல்வாழ் வின் பயனுகிய இன்பத்தை அடைவதற்கும் அவன் கடைப் பிடித்து ஒழுகவேண்டிய நல்ல பழக்க வழக்கங்களையும், தீயவை என்று கடிந்து ஒதுக்கவேண்டிய செயல்முறை களையும் அறிந்து, நல்லனவற்றை மட்டும் பின்பற்றி ஒழுகு வதே அறமெனப் போற்றப்படுவது புலனுகும்.

இதனுல், அறம் என்பது யாது? அது செயலா? சொல்லா? எண்ணமா? என்ற ஐயம் எழலாம். ஒழுக லாருகிய செயலுக்கு அடிப்படையாக இருப்பது எண்ண மாகும். எண்ணம் தூய்மையாக இருந்தால்தான் சொல் லும் செயலும் தூய்மையாக அமையமுடியும். எனவே எண்ணம் தூய்மையாக இருக்கவேண்டுமானல், எண்ணத் தின் எழுச்சிக்கு நிலைக்களனுக உள்ள மனம் மாசு இல்லாத தாக இருக்கவேண்டும். மனம் மாசற்றுத் தூய்மையாக இருக்கும் நிலையே அறம் எனப்படும்; மனத்தில் மாசு நிறைந்து கிடக்கும் நிலையில் செய்யும் செயலும், உரைக்கும் உரையும் வீண் ஆரவாரமானவை; அவை அறம் ஆகா. மனத்தின் மாசைப் போக்குவதற்கு முயலுவதே அற மாகும். அதற்கு மனத்தில் பொருமையுணர்வு, அவா, வெகுளி ஆகிய தீய உணர்ச்சிகள் தோன்றுமல் பார்த்துக் கொள்வதோடு, அவ்வுணர்ச்சிகளின் உந்துதலால் கடுமை யான சொற்கள் தோன்றுமல் காத்து ஒருவன் நடப்பதே அறமாகும் என்பது வள்ளுவரின் உள்ளக்கருத்தாகும்.

*மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்;*
*ஆகுல நீர பிற.* (குறள் 34)

*அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்றது அறம்.* (குறள் 35)

இவ்வடிப்படையில் நோக்குவோமானால், அறம் என்பது எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றும் சேர்ந்த ஒன்றாகவே காட்சி தருகிறது. அறம் என்பதை ஒரு முப்பட்டைக் கண்ணாடியாகக் கூறினால், அதன் மூன்று பக்கங்களாக எண்ணம், சொல், செயல் விளங்குகின்றன எனலாம். எண்ணம் அறத்தின் நிலையமைதி (Static) ஆற்றலாகும்; சொல் இயக்கநிலை (Kinetic) ஆற்றலாகும்; செயல் இயங்கும்நிலை (Dynamic) ஆற்றலாகும். இம்மூவகை ஆற்றலும் உள்ளார்ந்த பண்பாக உறங்கிக் கொண்டிருக்கின்றபொழுது அறம் என்பது கருத்துப் பொருளாகவே கருதப்படுகிறது. அது காட்சிப் பொருளாக வெளிப்படுவதற்குக் கருவியாக இருப்பது செயல். இச் செயல் நிலையையே 'ஒழுக்கமென' உலகம் போற்றிவருகிறது. அவ்வொழுக்கம் மக்கள் உயிர்க்கு உறுதி பயக்கும் சிறப்புடையது என்றும், அத்தகைய சிறப்புடைய ஒழுக்கமே அறம் எனப் போற்றப்படுகிறது என்றும் நம்முடைய முன்னோர்கள் கருதினர்.[22]

திருக்குறளின் முதற் பகுதியாகிய அறத்துப்பாலில், திருவள்ளுவர் தனி மனிதனுக்குரிய ஒழுக்கநெறியின் பல திறப்பட்ட பகுதிகளையும் இயல்புகளையும் மிக நுட்பமாக எடுத்துரைத்துள்ளார். இதனைப் பரிமேலழகர் "அது (ஒழுக்கம்) தான் நால்வகை நிலைத்தாய், வருணந்தோறும் வேறுபாடு உடைமையின், சிறுபான்மை ஆகிய அச்சிறப்பியல்புகள் ஒழித்து, எல்லார்க்கும் ஒத்தலின் பெரும்பான்மை ஆகிய பொது இயல்பு பற்றி 'இல்லறம், 'துறவறம்' என இருவகை நிலையால் கூறப்பட்டது."[23] என்று சுட்டிக்காட்டுவதனால் நாம் நன்குணரலாம். "இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கண் நின்று, அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடும் செய்யப்படுவது இல்லறம்." அவ்வில்லற நெறிக்கண் நின்றார்

போற்றி ஒழுகத் தக்க நெறிமுறைகளுள் ஒன்ருக 'ஒழுக்க முடைமையை' வள்ளுவர் வற்புறுத்தியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

"ஒழுக்கம் உடைமையாவது தான் (கடைப்) பிடித்த நன்னெறியை மறவாமல் மரணுந்த மட்டும் கொண்டு ஒழுகுதல்" என்று பரிதியார்[24] தந்துள்ள விளக்கம் இங்கு நினைவுகூர்தற்குரியதாகும். ஒழுக்கத்தின் சிறப்பை

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (குறள் 131)

என்று வள்ளுவர் பாராட்டுவதோடு அமையாமல், துறவற இயலில், 'யான்' என்ற அகப்பற்றையும், 'எனது' என்ற புறப்பற்றையும் துறந்து வாழ விரும்பும் துறவிகளுக்கு அறிவுரை கூறும் வகையில் 'கூடாவொழுக்கம்' என்ருேர் அதிகாரத்தையும் அமைத்துள்ளார். இவ்வதிகாரத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் அனைத்தும் 'நல்லொழுக்கமே சிறந்த அறம்' என்னும் கொள்கையை நிலைநாட்டுகின்றன.

பொருட்பாலில் தனிமனிதன் பிறரோடு கூடி வாழுகின்ற பொழுது கடைபிடிக்க வேண்டிய சமுதாய ஒழுகலாற்றினை வள்ளுவர் விரிவாக விளக்கியுள்ளார். அதனுடைய இறுதிப்பகுதியாகிய 'ஒழிபியல்' எனப்படும் 'குடியியல்' பகுதியில், தனி மனிதர்கள் பலர் ஒன்ருகக் கூடிச் சமுதாயமாக வாழ்வதற்கு, அவர்களிடத்து இயல்பாக அமைய வேண்டிய நற்பண்புகளை எடுத்துரைத்து, அவற்றை அவர்கள் எவ்வாறு போற்றி வளர்க்கவேண்டும் என்பதையும் திருவள்ளுவர் தெளிவுறுத்தியுள்ளார். நல்ல சமுதாயத்தில் இருக்கக் கூடாத தீமைகளாக அவர் வரைவின் மகளிரையும், கள்ளுண்ணுதலையும், சூதாடுதலையும் கடிந்தொதுக்கிருர். நாட்டினை நலிவுறச் செய்யும் கொடிய கேடுகளாக 'இருமனப் பெண்டி'ரையும், 'கள்ளை'யும், 'கவற்றை'யும் அவர் குறிப்பிடுவதிலிருந்து நாட்டின் செழிப்பிற்கும், சிறப்பிற்கும், அந்நாட்டில் வாழும் மக்களுடைய நல்வாழ்விற்கும் ஒழுக்கம் இன்றியமையாதது என்பது தெளிவாகிறது.

இல்லறத்தை இனிது நடத்துவதற்குரிய ஒருவனும் ஒருத்தியும், திருமணத்திற்கு முன்பு கண்டு காதலித்துக்

கூடி மகிழ்வதையும், திருமணத்திற்குப் பின்னர் காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதால் பெறும் இன்பத்தையும் காமத்துப்பாலில் வள்ளுவர் சொல்லோவியங்களாகத் தீட்டிக்காட்டுகிருர். இவ்வாறு முப்பால் முழுவதிலும் ‘சிறப்புடைய ஒழுக்கமே’ அறமெனப் போற்றப் படுவதை நாம் காணுகின்ருேம்.

பழைய தமிழ் இலக்கியங்களுள் ‘அறம்’ என்னும் சொல், ‘ஒழுக்கம்’ என்ற பொருளில் பல இடங்களில் பயன் படுத்தப் பட்டுள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

| | |
|---|---|
| அறஞ்சாரான் மூப்பே போல் | (கலி. 38) |
| **அறனிலாளன்** | (அகம். 207, 219) |
| அஞ்சுவதஞ்சான் **அறனிலி** | (கலி. 42) |
| **அறனு** மதுகண்டற் ருயின் | (கலி. 62) |
| **அறனு**மார் அது | (ஐங்குறு. 44) |
| உன்றனக்கு ஒல்லும் நெறி **அறம்** | (மணி. கா. 16: 113) |

## அறமும் வழக்கமும்

நமது நாடில் அறவியல் கடமைகளேயும் பழக்க வழக்கங்களேயும் நியதிகளேயும் சமயத்துறை சார்பான கடமைகளிலிருந்தும், பழக்கவழக்கங்களிலிருந்தும் வேறு படுத்தி யுரைக்கும் வழக்கம் இல்லே சமுதாயத்தில் நன்கு நிலேநாட்டப் பட்டுள்ள, சிக்கலான பல்வகை ஒழுகலாற்றுச் செயல்முறைகள் அனேத்தையும் குறிப்பிடுவதற்கு ‘அறம்’ என்ற சொல்லே தமிழில் வழங்கப்பட்டு வருகிறது. இத் தகைய சமுதாய வழக்காற்று மரபினே, மேலே நாட்டு அற வியல் அறிஞர்கள் ‘எதோசு’ (Ethos) என்று அழைப்பர். நன்கு வரையறுக்கப்பட்ட விதிமுறைகளினுல் உருவாக்கப் படும் அறச்சூழ்நிலேயும், ஓரளவிற்கு வழக்கிலுள்ள அற நெறிக்கருத்துக்களேயும், பழக்க வழக்கங்களேயும், பற்றுக் களேயும் விளக்கி யுரைப்பதற்கு ‘எதோசு’ என்ற சொல்லே பயன்படுத்தப்படுகிறது. இவ்வுலகம் முழுவதிலும் செயற் படும் அறவியல் கொள்கையின் வெளிப்பாடேவழக்காற்று நெறிமுறை (Ethos) என்று ஹெகல் (Hegel)[25] விளக்கம் தந்துள்ளார்.

பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் வழக்காற்று நெறி முறைகளை, அன்றைய சமுதாயத்தின் இயல்பிற்கும் மரபிற்கும் ஏற்பப் பாகுபாடு செய்துள்ளனர். 'வழக்கம்' என்பது உலகத்தில் வாழுகின்ற பெரியோர்களின் பழக்கங்களை அடிப்படையாகக் கொண்டது என்று அவர்கள் கருதினர்.

வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாகலான (தொல். பொருள். 647)

என்ற பண்டை இலக்கண நூலாரின் கூற்றால் இதை நாம் நன்குணரலாம்.

"வழக்கென்று சொல்லப்படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கமே; என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின். அவரையே நோக்குதலென்பது அவராணையான் உலக நிகழ்ச்சி செல்கின்றதென்றவாறு"[26] என்னும் பேராசிரியரின் விளக்கவுரை இக்கருத்தினைத் தெளிவுறுத்துகிறது. தொல்காப்பியர் 'வழக்கியலாணை' (தொல். பொருள். 506) என்று இதனை வேறோரிடத்தில் குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத் தக்கது.

அறம் என்னும் சொல், இப்பொருளில் பழந்தமிழ் இலக்கியங்கள் பலவற்றில் வழங்கப்பட்டிருக்கிறது. அவற்றுள் முக்கியமான மூன்றைக் காண்போம்.

அறநெறி இதுவெனத் தெளிந்த (ஐங்குறு. 371)

..............................அறத்தாறு
அன்று எனமொழிந்த தொன்றுபடு கிளவி (அகம். 5)

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மானம் உடைய தரசு. (குறள் 384)

இவ்வழக்காற்று ஒழுக்க நெறியைச் 'சான்றோர் சென்ற செந்நெறி'[27] என்று சிறப்பித்துக் கூறுவது தமிழிலக்கிய மரபாகும்.

### அறமும் நீதியும்

விருப்பு வெறுப்பின்றி, நடுநிலைமையோடு நின்று, வழக்குகளைச் சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல்

ஆராய்ந்து பார்த்துத் தீர்ப்புக்கூறும் நீதி (Justice) நிர்வாக முறையையும், அறம் என்ற சொல் தொன்றுதொட்டு உணர்த்தி வருகிறது. இக்கருத்தமைய 'இயற்கை நீதி' (Natural Justice) அல்லது 'இயற்கைச் சட்டம்' (Natural Law) என மேலைநாட்டு நல்லறிஞர்கள் அறத்தினைச் சுட்டுகின்றனர். அறம் என்பது இயற்கைச் சட்டம்; தெய்விக ஆணை என்று கருதும் மனப்பான்மை நம்முடைய திருவள்ளுவரிடத்தும் கிரேக்க, சீனநாட்டு அறிஞர்களிடத்தும் இருந்து வந்துள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும். ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்பு ரோமாபுரியில் இயற்றப்பட்ட ஜஸ்டீனியன் சட்டத்தொகுப்பில் (Institutes of Justinian) "இயற்கை நெறியாகிய அறம் இறையாற்றலால் தோன்றுவது; எல்லா நாட்டினராலும் பொதுவாகப் போற்றிக் காக்கப்படுவது; என்றும் மாருது நிலைத்திருப்பது"[28] என்று கூறப்பட்டுள்ளமை இக்கருத்தை அரண் செய்கிறது.

அறநெறிச் சட்டத்தை தெய்விக ஆணையாகவும், இயற்கை நீதியாகவும் கருதும் நிலை, மனித இனத்தின் நாகரிக வளர்ச்சியின் தொடக்க காலத்திலிருந்ததாக அறவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். எனினும், மனச்சான்றையே அறநெறிச் சட்டமாகக் கருதுவோரும், உள்ளுணர்விஞல் நல்லன தீயனவற்றை ஆராய்ந்தறியும் மனத்தின் திறனை அடிப்படையாகக் கொண்டு செயல்படுவதே அறநெறிச் சட்டம் என்று கொள்ளுவோரும், பகுத்தறிவுவாதிகளும்கூட, அறநெறிச்சட்டம் இயற்கை நீதியாகக் கருதப்படுவதை மறுத்துரைப்பதில்லை.

இயற்கை நீதியைத் தமிழில் அறம் என்னும் சொல் தொன்றுதொட்டு உணர்த்தி வருகிறது.

**அறக்கவழி** வுடையன பொருட்பயன் படவரின்
(தொல். பொருள். 218)

**அறத்திஞூஉங்(கு)** ஆக்கமும் இல்லை (குறள் 32)

**அறநெறி** முதற்றே அரசின் கொற்றம் (புறம். 55)

**அறம்** நனி சிறக்க (ஐங்குறு. 7)

**அறன்** கடைப்படாஅ வாழ்க்கையும் (அகம். 155

அறனும் அன்றே ; ஆக்கமும் தேய்ம் (நற்றி. 68)

அறத்தினுள் அன்பு நீ ! (பரி. 3)

என்பன போதிய சான்றுகளாகும். பொது நிலையில், அறம் மக்கள் ஒழுகலாற்றினைக் குறிக்கின்றது. அற நெறி மனிதன் மனிதனாக வாழ்வதற்கு வழிகாட்டுகிறது. மனிதன் நன்னெறியிலிருந்து இடறிவிழுகின்ற பொழுது அவனை அவ்வழியில் நெறிப்படுத்துவது நியதி. ஒரு நாட்டின் அரசு செயல்படுத்தும் கொள்கைகளையும் நெறி முறைகளையும் அடிப்படையாகக் கொண்டு இலங்குவதே நீதி. இதனை 'முறை' என்ற சொல்லால் வள்ளுவர் குறிப் பிடுவர்.

நீதி முறைசெய்து குடிமக்களைக் காப்பாற்றும் மன்ன வன், மக்களுக்கு இறைவன் என்று மதிக்கப் படுவான் என்னும் கருத்தமைய,

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும். (குறள் 388)

என்று அவர் கூறுமிடத்து 'முறை' என்ற சொல் 'நீதி' என்ற பொருளில் கையாளப் பட்டுள்ளமை தெளி வாகிறது.

நீதிமுறை என்பது என்ன ? 'யாரிடத்திலும் குற்றம் இன்னதென்று ஆராய்ந்து, தாட்சண்யம் காட்டாமல், நடுவுநிலைமையில் பிறழாமல் செய்யத்தக்கதை ஆராய்ந்து செய்வதே நீதிமுறையாகும்' என்று திருவள்ளுவர் விளக்கி யுள்ளார்.

ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை (குறள் 541)

இவ்வாறு 'நீதிமுறை' என்ற பொருளிலேயே, 'வள்ளுவர்' 'முறை' என்ற சொல்லை ஏழு இடங்களில் கையாண்டுள் ளார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.[29]

பண்டைத் தமிழ்ப் புலவர்கள் 'அறம்' என்ற சொல்லி னாலேயே 'நீதிமுறை' என்னும் பொருளை உணர்த்தி யுள்ளனர் என்பதைப் பின்வரும் காட்டுக்கள் நமக்குத் தெரிவிக்கின்றன :

அறந்துஞ்சு செங்கோலையே (புறம் : 20)

அறம்புரி செங்கோல் மன்னனின் (ஐங்குறு. 290)

அறம்கடைப் பிடித்த செங்கோலுடன் (அகம். 338)

அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்
(பத்து. பொரு. 230)

அரசியல் பிழையாது அறநெறி காட்டி
(பத்து, மதுரை. 192)

அறனறி செங்கோல் (சிலப். கா. 23 : 58)

அறக்கோல் வேந்தன் (மணி. கா. 15 : 47)

அரசனுடைய செங்கோலைக் குறிப்பிடுகின்ற பொழுது 'நீதி முறை பிறழாத செங்கோல்' என்று பாராட்டுவதில் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தனர் என்பது இவற்றால் விளக்கமாகும்.

மேலும், அக்காலத்தில் அறங்கூறும் மன்றங்கள் பல இருந்தன. அவை '**அறமறக் கண்ட நெறிமாண் அவையம்**' என்று (புறம். 224) போற்றப்பட்டன. அவற்றுள் உறையூரிலிருந்த அறங்கூறும் அவை தனிச்சிறப்புப் பெற்றிருந்ததை,

அறந்துஞ்சு உறந்தை (புறம். 58)

அறங்கெழு நல்லவை உறந்தை (அகம். 93)

மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறம்கெட அறியாதாங்கு (நற்றி. 400)

என்ற அடிகளால் நாம் அறிகிறோம்.

மதுரை மாநகரிலும் இத்தகைய அவையம் இருந்ததை 'சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும்' என்று மதுரைக் காஞ்சி (அ. 492) சுட்டுகிறது. இதை இளங்கோவடிகளும் 'அரைசு கோல் கோடினும் அறம்கூறு அவையத்து' (கா. 5 : 135-6) என்று குறிப்பிட்டுள்ளார்.

இவையாவும் பண்டைத் தமிழ் மக்கள் நீதிமுறை வழுவா ஆட்சி நடத்திய அரசர்களைப் பற்றியும், வழக்குகளை

விசாரித்துத் தீர்ப்புக் கூறிய நீதிமன்றங்களைப் பற்றியும் நன்கு அறிந்திருந்தனர் என்பதை நமக்கு எடுத்துரைக்கின்றன. அவற்றை அவர்கள் 'அறம்' என்ற சொல்லினுலேயே குறிப்பிட்டு வந்தனர் என்பது இவ்விலக்கியச் சான்றுகளால் நாம் அறியும் உண்மையாகும்.

### அறமும் கடமையும்

மக்களாகப் பிறந்தவர்கள் நலமாகவும் வளமாகவும் வாழ்வதற்குப் பல உரிமைகளை இயல்பாகப் பெற்றிருக்கின்றனர். அதைப் போன்றே, அவர்கள் சில கடமைகளையும் ஆற்றவேண்டியவர்களாக இருக்கின்றனர். 'கடமை என்பது என்ன?' என்ற வினு, மனிதன் எண்ணத் தெரிந்து, அறிவை வளர்த்து, கருத்து வகையால் முன்னேறத் தொடங்கிய காலம் முதல் எழுதப்பட்டுவரும் முக்கியமான வினுக்களுள் ஒன்ருகும். மனிதர்கள் பலர் ஒன்ருகக்கூடி ஒரு சமுதாயமாக வாழத்தலைப்பட்ட காலம் முதல், மக்கள் தங்கள் நலனுக்கும் நல்வாழ்விற்கும் ஏற்றவையெனச் சில கொள்கைகளையும், நெறிமுறைகளையும் வகுத்துக்கொண்டுள்ளனர். தனி மனிதனின் பழக்கம் பல மனிதர்களால் பின்பற்றப்படுகின்ற பொழுது, அச் சமுதாயத்தின் வழக்கமாக அது மாறிவிடுகிறது என்பதை நாம் முன்பு கண்டோம்.

அவ்வழக்கங்களுள் ஒன்றே கடமை என்பதாகும். தனிமனிதன் ஒருவன் தன்னுடைய நல்வாழ்விற்காகப் பிறருடைய உதவிகளைப் பெறுகின்ருன். அதற்கு மாற்ருக அவனிடமிருந்து சில உதவிகளை, அவன் வாழும் சமுதாயம் எதிர்பார்க்கிறது. அதை அவன் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புடையவனுகின்ருன். இவ்வாறு மனித சமுதாயத்தின் தொடக்ககால வாழ்க்கையில் சமுதாயத்தின் நன்மையைப் பெற்றவன் அச்சமுதாயத்திற்குத் திரும்பத் தான் அளிக்கும் உதவிகளாகத் தோன்றியவை 'கடமை' எனலாம். காலப்போக்கில் அறிவு முதிர்ச்சியும் வாழ்க்கை வளமும் அடைந்து, மனித இனம் நாகரிகத்தில் சிறப்புற்று விளங்கத் தலைப்பட்ட காலத்தில், வழக்காற்று ஒழுக்க நெறியின் அடிப்படையில் 'கடமை' என்பது மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவனும் தான் விரும்பினுலும் விரும்பா

விட்டாலும், தன்னைச் சார்ந்துள்ள உற்றார் உறவினருக்கும் தான் வாழும் சமுதாயத்திற்கும், நாட்டிற்கும், உலகிற்கும் ஆற்றவேண்டிய அரும்பணிகளாகக் கருதப்படலாயின. அவற்றைச் செய்கின்றபொழுது பயன் கருதாது—'குறி யெதிர்ப்பை' நோக்காது—செய்வது சாலவும் சிறந்த தெனச் சான்றோர்கள் போற்றினர். அதனால், அவை ஒப்புயர்வற்றதொரு நிலையினை அடைந்துவிட்டன.

தனிமனிதன் தன் குடும்பத்திற்காகச் செய்யவேண்டிய கடமைகள், சமுதாயத்திற்காகச் செய்யவேண்டிய கடமைகள், என இருவகையாகக் கடமைகளைப் பாகுபடுத்தியுரைக்கும் வழக்கம் நெடுங்காலமாக இருந்து வருகிறது. வடமொழியில் இதனை 'ஸ்வதருமம்' என்றும் 'பரதருமம்' என்றும் கூறுவர். நாம் 'அறம்' என்ற சொல்லாலேயே அவ்விரு கடமைகளையும் குறித்து வருகிறோம்.

'ஒரு மனிதனுக்குரிய கடமைகள் யாவை?' என்ற ஐயம் எழுவது இயற்கை. கடமைகள் ஒரு மனிதன் வாழுகின்ற நாட்டிற்கும், பேசுகின்ற மொழிக்கும், கடைப் பிடித்தொழுகுகின்ற சமயத்திற்கும், வாழுகின்ற காலத்திற்கு மேற்ப வேறுபடுகின்றன. எனினும், அடிப்படையான சில கடமைகள் எக்காலத்திற்கும், எந்நாட்டவருக்கும், எச் சமயத்தவருக்கும் பொதுவானவையாக உள்ளன. தனி மனிதன் ஒருவன் தன் பெற்றோர்க்கும், மனைவி மக்களுக்கும் ஆற்றவேண்டிய அருங்கடமைகள் நிலைபேறானவை என்று அறநூல் அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால், வான் மறை தந்த வள்ளுவரோ 'கடமை இவையென்று அறிந்து சான்றாண்மை மேற்கொண்டு நடப்பவர்க்கு, நல்லவை யெல்லாம் கடமையாகும்' என்னும் பொருளில்,

> கடனென்ப நல்லவை எல்லாம், கடனறிந்து
> சான்றாண்மை மேற்கோள் பவர்க்கு (குறள். 981)

என்று எடுத்தியம்புகிறார்.

இப்பொருளில் 'அறம்' என்னும் சொல் பழந்தமிழ் இலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளமைக்கு,

அறம் பூண்டு...பாரியும் (புறம். 108)

அறம் தெரிந்து நாமுறை தேஎம் (அகம். 281)

அறந்தலைப் பிரியா ஆறுமாற்றதுவே (கலி. 9)

பிறர் நோயுந் தந்நோய் போல் போற்றி அறனறிதல்
(கலி. 139)

என்ற பாடற் பகுதிகள் சான்று பகருகின்றன.

### அறமும் ஈகையும்

ஒரு பொருளும் இல்லாத வறியவர்க்கு ஒரு பொருளைக் கொடுத்துதவுவதே ஈகை எனப்படும். 'இல்லை' என்று வருபவர்க்கு 'இல்லை' என்று கூறுது, அவருக்கு வேண்டிய பொருளைக் கொடுத்துதவும் அறச்செயலே ஈகையாகும்; மற்றவர்க்குக் கொடுப்பதெல்லாம் பயனை எதிர்பார்த்துக் கொடுக்கும் தன்மையுடையது. இதனை நாம்

வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து, (குறள். 221)

ஆற்றுத லென்பதொன் றலர்ந்தவர்க் குதவுதல்[30]
(கலி. 133 : வ : 6)

என்னும் ஆன்ருேர் வாக்கால் அறியலாம். மணிமேகலையின் ஆசிரியரான சாத்தனர், "செல்வம் உடையவர்க்கு ஒரு பொருளைக் கொடுத்துதவுதல் என்பது அறத்தை வாணிக நோக்கொடு விற்பதாகுமேயொழிய, அது உண்மையான அறமாகாது. குருடர், முடவர், செவிடர், ஆதரவற்ருேர், நோயாளிகள் போன்ற எளிய மக்களுக்குச் செய்யப்படுகின்ற உதவியே உண்மையான அறமாகும்" என்ற கருத்தை,

ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர்
ஆற்ரு மாக்கள் அரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
(மணி. கா. 11 : 92-94)

என்றும்,

காணுர் கேளார் கால் முடப்பட்டோர்
பேணுநர் இல்லோர் பிணி நடுக்குற்ருேர்
யாவரும் வருக (மணி. கா. 13 : 111-13)

என்றும் எடுத்துரைத்துள்ளார். மேலும், 'அறம்' என்ருல் அது பிறருக்குச் செய்யும் உதவியாகிய ஈகையே என்ற கருத்தைத் திட்டவட்டமாக அவர்,

> அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்
> மறவாது இதுகேள் ; மன்னுயிர்க் கெல்லாம்
> உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
> கண்டதில் (மணி. கா. 25 : 228-31)

என்றும் அறிவித்துள்ளார். இத்தகைய சிறப்பு வாய்ந்த 'ஈகை' அறச்செயல்களுள் முதன்மையானதாகச் சான்ருேர்களால் போற்றப்படும் பெருமை உடையதாகும். அருள் புரிதல் என்ற பொருளின் அடியாக 'ஈதல்' என்னும் பரந்த பொருளில் 'அறம்' என்னும் சொல் வழங்கி வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது. இதனை,

> அறம் செய்தீமோ அருள் வெய்யோய் (புறம். 145)
>
> அறம் குறித்தன்று பொருள் ஆகுதலின் (புறம். 362)
>
> அறம் தலைப்பிரியா தொழுகலும் (அகம். 173)
>
> திறவோர் செய்வினை அறவதுவாகும் (குறுந். 247)
>
> ஆறு முட்டுருஅது அறம்புரிந் தொழுகும் (பதிற். 6 : 9)
>
> அறம் நிலையிய அகனட்டில் (பத்து. 9 : 42)
>
> இன்சொ லினிதே அறம் (குறள். 93)
>
> அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்
> (சிலப். கா. 30 : 138)

என்பனவற்ருல் அறியலாம்.

### அறமும் புண்ணியமும்

மனிதன் செய்கின்ற செயல்கள் பல திறத்தன. அவற்றை நல்லசெயல்கள் தீயசெயல்களென்று அச்செயல்களினுல் உண்டாகும் பயனைக் கருத்தில் கொண்டு இருவகையாகப் பாகுபாடு செய்யலாம். ஒருமனிதன் செய்கின்ற செயலின் விளைவாக அவனுக்கும், பிறருக்கும் நன்மை உண்டாகுமானுல் அதை நல்லசெயல் என்று கூறுவர். ஆனுல், ஒரு மனிதன் செய்கின்ற குறிப்பிட்ட ஒரு செயலால் அவனுக்கு நன்மையும், பிறருக்கு எவ்வழி

யிலேனும் தீமையும் உண்டாகுமானால், அதை அறச் செயல் என்று உலகம் கொள்ளுவதில்லை. எனவே, எனைத் தானும், எஞ்ஞான்றும், யார்க்கும் நன்மை பயக்கத்தக்க செயல்களையே அறமென்று சான்றோர்கள் கருதுகின்றனர். அத்தகைய நற்செயலைச் செய்வதனால் ஒருவனுக்குப் புகழ் உண்டாகிறது; மறுமைக்கு ஒரு பயனும் விளை கின்றது. அப்பயனைப் 'புண்ணியம்' என்று கூறுவர்.

சமயத் துறையில் அறத்தின் பயன் புண்ணியம் என்று கூறுவது மரபாகும். நற்செயல்களின் விளைவாகக் கிடைக்கும் 'புண்ணியத்தை' அறம் என்று கூறும் வழக்குத் தொன்மையானது என்பதை,

அறனும் அன்றே ; ஆக்கமும் தேய்ம் (நற்றி. 68)

அருளுறச் செய்யின் நுமக்கு அறனு மாரதுவே (கலி. 140)

அறம் பெரிதாற்றி அதன் பயன் கொண்மார் (பரி. 19)

அல்லவை தேய அறம் பெருகும் (குறள் 96)

அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான் (குறள் 163)

அறப்பயன் விளைதலும் (சிலப். கா. 30 : 138)

நல்லறம் செய்வோர் நல்லுலகு அடைதலும் (மணி. கா. 16 : 87)

என்னும் பாடற்பகுதிகளால் நாம் அறிகிறோம்.

### அறமும் அறக்கடவுளும்

அறத்தினைத் தெய்வமாக உருவகப் படுத்திக் கூறுவது உலகின் பல்வேறு நாடுகளிலும் இருந்துவரும் வழக்க மாகும். பண்டைத் தமிழரும் இம்மரபினைப் போற்றி யுள்ளனர். இதனை அறக்கடவுள் என்னும் பொருளில், அற மென்னும் சொல்லை, அவர்கள் பண்டைத்தமிழ் இலக்கியங் களில் பயன்படுத்தியுள்ளமையால் நாம் அறிகிறோம். அத்தெய்வம் நல்வினை செய்தோர்க்கு நன்மைகளையும் தீவினை செய்தோர்க்குத் துன்பங்களையும் தருவதாக நம்பப் படுகிறது. இவ்வகையில் அது ஊழ்வினைத் தெய்வமாகக் கருதப்படுகிறது.

தொல்காப்பியர் காலத்திலேயே தமிழ் மக்கள் இத் தெய்வத்தை நன்கு அறிந்திருந்தனர். அறக்கடவுளைத் தொல்காப்பியர் ஓரிடத்தில் 'வினை' என்றும், மற்றோரிடத்தில் 'பால்' என்றும் குறிப்பிடுகிறார்.[31] எனினும், பொதுவாக 'அறம்' என்ற சொல்லினாலேயே அறக்கடவுளைக் குறிக்கும் வழக்கமும் தொல்காப்பியரிடத்தில் இருந்தமை,

அறன் அழித்துரைத்தல் ஆங்குநெஞ் சழிதல்
(தொல். பொருள். 270)

என்பதனால் தெரிகிறது. இவை அனைத்தும் அறக்கடவுளை பற்றிய பண்டைத் தமிழ்மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையைத் தெரிவிக்கின்றன.

தொல்காப்பியர் காலத்தை யொட்டி இம்மரபு நன்கு வளர்ச்சியுற்று முழுவடிவினைப் பெறலாயிற்று. திருவள்ளுவர் அறக்கடவுளையும், அதனுடைய பணியையும் சிறப்பித்துப் பேசுகிறார். அவ்விடங்களில் அவர் 'அறம்' என்னும் சொல்லால் அக்கடவுளைச் சுட்டுகின்றார்.

"எலும்பு இல்லாத உடலோடு வாழும் புழுவை வெயில் காய்ந்து வருத்துவதைப் போல, அன்பு இல்லாத உயிரை அறக்கடவுள் வருத்தும்" என்று வள்ளுவர் கூறுகின்றார்.

என்பில தனை வெயில் போலக் காயுமே
அன்பி லதனை அறம். (குறள் 77)

மற்றோர் இடத்தில், "சினம் தோன்றாமல் காத்துக் கல்விகற்று, அடக்கமுடையவனாக இருக்க வல்லவனுடைய செவ்வியை அவனுடைய வழியில் சென்று அறக்கடவுள் பார்த்திருக்கும்" என்னும் கருத்தமைய,

கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து (குறள் 130)

என்று அவர் குறிப்பிடுகிறார். மேலும், "பிறனுக்குக் கேட்டைத் தருகின்ற தீய செயல்களை ஒருவன் மறந்தும் எண்ணக்கூடாது. எண்ணினால் அவ்வாறு நினைத்தவனுக்குக் கேடு விளையுமாறு அறக்கடவுள் எண்ணும்' என்று கூறவந்த வள்ளுவர்,

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ் சூழும் சூழ்ந்தவன் கேடு (குறள் 204)

என்று அறிவுறுத்துகிறார்.

புறநானூறு என்னும் பழைய தமிழ் இலக்கியத்தில் அறக்கடவுளைப் பற்றிய குறிப்புகள் இரண்டு காணப்படு கின்றன. ஆலத்தூர் கிழார் என்ற புலவர், கிள்ளிவளவனை அறக்கடவுளைப் போன்று நடுநிலையில் நின்று நீதி வழங்கு மாறு வேண்டுகின்றார்

*அறம் புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து* (புறம். 35)

இத்தொகை நூலில் பெருஞ்சித்திரனார் என்ற புலவர் தம், மனைவியின் அரிய பண்பு நலனைக் குறிப்பிடும் இடத்து, "அவள் வறுமையால் வாடினாலும், தன் துன்பத்திற்குக் காரணம் அறக்கடவுள் என்று கருதி அவனைப் பழிப் பாள்," என்று மொழிந்துள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

*மாசொடு குறைந்த உடுக்கையள் அறம் பழியாத்*
*துவ்வாளாகிய என்வெய் யோளும்* (புறம். 159)

மற்றும் பிற சங்கநூல்களிலும் அறக்கடவுள் 'அறம்' என்ற சொல்லினால் குறிக்கப் படுவதைப் பின்வரும் தொடர்களால் நாம் அறியலாம்.

*அறம் புலந்து பழிக்கும்* (ஐங்குறு. 393)

*அன்பில் அறனும் அருளிற்று மன்ற* (ஐங்குறு. 394)

*அறனோடி விலங்கின் றவராள் வினைத் திறத்தே* (கலி. 16)

*அறம்புணை யாகலு முண்டு* (கலி. 144)

*மறனொடு திரியுங்கோல் மன்னவன் தவறிழைப்ப*
*அறனெனு மடவோயா னவலங்கொண் டழிவலோ*
(சிலப். கா. 18 : 40-41)

*புறம் புதைத்து அறம் பழிப்ப*
(சிலப். கா. 29 : 424)

இக்குறிப்புகளினால், அறக்கடவுளை நடுநிலைமை பிற ழாத சிறந்ததொரு தெய்வமாகப் பண்டைத் தமிழ் மக்கள் போற்றிவந்தனர் என்பது புலனாகிறது. இவ்விடத்தில் பண்டைத் தமிழர் போற்றிய அறக்கடவுள், வைதிக சமயத் தெய்வங்களுள் ஒன்றாகக் கருதப்படும் 'தரும தேவதை'யிலிருந்து வேறுபட்டது என்பது குறிப்பிடத் தக்கதாகும். தருமதேவதையை இறப்புக்குக் காரணமாகக்

கருதப்படும் 'இயமன்' என்ற தெய்வமாகவே பெரிதும் கருதுவது வைதிக சமயத்தவர்களின் வழக்கமாகும். ஆனல், தமிழ்நாட்டவரோ இத்தெய்வங்கள் இரண்டையும் வெவ்வேறு தெய்வங்களாகவே கொண்டுள்ளனர். வள்ளுவர் அறக்கடவுள் வேறு, கூற்றுவன் வேறு என்பதை மிகத் தெளிவாகப் பாகுபாடு செய்துள்ளார்.

கூற்றம் குதித்தலும் கைகூடும் (குறள் 269)

செல்லாது உயிருண்ணுங் கூற்று (குறள் 326)

கூற்றுடன்று மேல்வரினும் கூடியெதிர் நிற்கும் (குறள் 765)

உப்பிற்கும் காடிக்கும் கூற்று (குறள் 1050)

பண்டறியேன் கூற்றென்பதனை (குறள் 1083)

கூற்றமோ கண்ணே பிணையோ (குறள் 1085)

எனவரும் குறட்பாப்பகுதிகளில் இயமனைக் 'கூற்றுவன்' என்ற பெயரால் குறிப்பிடும் திருவள்ளுவர், 'அறக் கடவுளை'ச் சுட்டுகின்ற இடங்களில் 'அறம்' என்ற சொல்லையே பயன்படுத்தியுள்ளதை நாம் முன்னர்க் கண்டோம். எனவே அறக்கடவுளைப் பற்றிய இக் கொள்கை, தமிழகத்தில் தனிப்பட்டவகையில் தோன்றி வளர்ந்த ஒன்ருக இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. பிற் காலத்தில் சமஸ்கிருதப் பண்பாடு செல்வாக்குற்ற பொழுது தமிழ்மக்கள் தங்கள் 'அறக்கடவுளை', 'இயமன்' எனப்படும் இறப்புக்கடவுளோடு ஒன்ருகவைத்துக் கருதும் வழக்கம் தோன்றியிருக்கலாம். சங்க இலக்கியங்களுள் காலத்தால் பிற்பட்டதெனக் கருதப்படும்[22] பரிபாடலில், 'அறம்' என்னும்சொல் 'இயமன்' என்னும் பொருளில் வழங்கத் தலைப்பட்டதை,

ஞாயிறும் திங்களும் **அறனும்** ஐவரும் (பரி. 3)

என்ற குறிப்பினல் அறிகிருேம். சிலப்பதிகாரத்திலும் அறக்கடவுள் கூற்றுவனுக மாறக் கூடிய நிலை சித்திரிக்கப் பட்டுள்ளது. "நூல் ஒழுக்கிற்ருய அரசியலுட் சிறிது

ஒழுக்கம் பிழைப்பினும் அவ்வரசரை அறக்கடவுள் தானே கூற்றுவனாய்க் கொல்லும்" என்னும் கருத்தினை இளங்கோ வடிகள்,

அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற் றுவதூஉம்
(சிலப். பதி. 55)

அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றமாம்
(சிலப். 20 : 1)

என்று எடுத்தியம்புகிறார். இதனால், அறக்கடவுள் வேறு கூற்றுவன் வேறு என்பதும், அறநெறி பிறழும் அரசர்க்கு 'அறக்கடவுளே கூற்றுவனாக, அமைந்துவிடும் என்ற கருத்தும் அறிவுறுத்தப்படுகின்றன. அறக்கடவுளைப் பற்றிய இருவேறு கருத்துக்கள் ஒன்றாகக் கலந்து மயங் கும் நிலையைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது எனலாம்.

## அறமும் சமயமும்

'அறம்' என்பது என்னவென்று வரையறுத்துக் கூறுவது எத்துணைச் சிக்கலான செயலாக இருக்கின்ற தோ, அதைவிடச் 'சமயத்தை' விளக்கியுரைப்பது மிகுந்த இடர்ப்பாடுடையதாக இருக்கிறது. 'சமயம்' என்பதைச் சுட்டுவதற்குரிய சொற்கள் பழைய தமிழில் இல்லை யென்றே நாம் கூறலாம். சங்கம் மருவிய காலத்தில் இயற்றப்பட்டதென்று கருதப்படுகின்ற 'மணிமேகலை' என்னும் காப்பியத்தில்தான், முதன் முதலாகச் 'சமயம்' என்ற சொல் 'ரெலிஜன்' (Religion) என்ற ஆங்கிலச் சொல்லிற்குரிய பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. அந்நூலாசிரியர்,

பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லாம்
(மணி. 10 : 79)

என்று பலவகைப்பட்ட சமயங்களைப்பற்றிச் சொல்லு கின்றார். இதனால், சாத்தனார் காலத்திற்கு முன்பு வாழ்ந்த பண்டைத் தமிழ்மக்களுக்குச் சமய உணர்வு இருந்ததில்லை என்பது பொருளன்று. சமயத்தின் பல்வேறு கூறுகளும் இயல்புகளும் அக்கால இலக்கியங்களில் பொதிந்து கிடக் கின்றன. கடவுள் வழிபாட்டோடு நெருங்கிய தொடர் புடைய வழிபாட்டு மரபுகளும், சமய வழக்குகளும்,

சடங்கு முறைகளும், ஒழுக்க நெறிகளும் வழக்கில் இருந் தமைக்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகருகின்றன. ஆனால், ஒரு சொல்லால் சமயவழிபாட்டு முறைகளைக் குறிக்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்ததாகத் தெரிய வில்லை.

ஒழுக்க நெறி மக்களுக்கு இவ்வுலகில் சிறந்த இன் பத்தை அளிப்பதோடு, சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகிய பேரின்பவாழ்விற்கும் வழிகாட்டியாக அமைகிறது என்பது ஆன்றோர்கள் கண்ட முடிவாகும். "சின்னாள் பல் பிணிச் சிற்றறிவினோராகிய" மக்களுடைய வாழ்க்கையில் அடையத்தக்க உறுதிப்பேறு 'பேரின்பம்' என்பதை உலகிலுள்ள பல்வேறு சமயங்களும் தெரிவிக் கின்றன. அவ்வொழுக்க நெறியும் 'பொய்தீர்' ஒழுக்க நெறியாக இருக்கவேண்டும் என்பதே தெய்வப்புலவரின் உள்ளக் கிடக்கையாகும்.

திருவள்ளுவர் 'பொய்தீர்' என்னும் அடைமொழி யினைக் கொடுத்து, ஒழுக்க நெறியைச் சிறப்பித்தமைக்குக் காரணம் என்ன வென்பதை ஆராய்ந்தறிதல் நம்முடைய கடமையாகும். 'பொய்' என்னும் சொல் குற்றம், தவறு, தீமை, வஞ்சனை, நிலையற்ற தன்மை, உள்ளீடு அற்றது என்னும் பல்வகைப் பொருள்களை உணர்த்துவதாகும். இவை யெல்லாவற்றையும்விட, 'பொய்' என்னும் சொல் உண்மைக்கும், மெய்ம்மைக்கும் மறுதலையானது என்னும் பொருளையே சிறப்பாக உணர்த்துவதைக் காணலாம். இதனால்தான், 'பொய்தீர் ஒழுக்க நெறி' என்பதற்கு 'மெய் யான ஒழுக்க நெறி' என்று பரிமேலழகர் உரை வகுத் துள்ளார்.

'தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்' என்னும் தொல்காப்பிய நூற்பாவினால் (தொல். சொல். 318), 'தீர்' என்பது நீக்கற் பொருளை உணர்த்தும் வேர்ச்சொல் என்பது அறியப்படுகிறது. எனவே, 'பொய் தீர்' என்பது 'பொய்யற்ற', பொய்யில்லாத', பொய்ம்மை நீங்கிய' என்னும் பொருளைத் தருவதால் பரிமேலழகர், பொய்ம் மைக்கு மறுதலையான 'மெய்ம்மையை' இச்சொல் உணர்த்துவதாகக் கொண்டு 'மெய்யான ஒழுக்கநெறி' என்றார்.

அம்மெய்யான ஒழுக்க நெறி எதுவென்பதைத் திருவள்ளுவரே குறிப்பாகக் கூறியுள்ளார்.

பொறிவாயில் ஐந்துவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ் வார் (குறள் 6)

என்னும் குறட்பாவின் மூலம், "ஐம்பொறி வாயிலாகப் பிறக்கும் வேட்கைகளை அவித்த இறைவனுடைய பொய்யற்ற ஒழுக்க நெறியில் நின்றவர் நிலைபெற்ற நல்வாழ்க்கை வாழ்வர்" என்று அவர் தெளிவுறுத்துகிருர். இதனுல், ஒழுக்க நெறிகள் பல உள்ளன என்பதும், அவற்றுள் 'மெய்யான ஒழுக்க நெறி' எதுவென்பதை நன்கு ஆராய்ந்து தெளிந்து, அந்நெறியில் நின்று ஒழுகுதலே சிறப்புடையது என்பதும் பெறப்படுகின்றன.

'மெய்யான ஒழுக்க நெறி' என்பது "ஐம்பொறி வாயிலாகப் பிறக்கும் வேட்கைகளை அவித்த இறைவனுடைய பொய்யற்ற ஒழுக்க நெறி"யெனப் போற்றப்படுகிறது. அதனுல் இறைவனேடு தொடர்புடைய அல்லது இறைவனுல் வகுக்கப் பெற்ற ஒழுக்க நெறியே, 'மெய்யான ஒழுக்கநெறி' என்பது தெரியவருகிறது. இவ்வாறு இறைவனேடு தொடர்புடைய ஒழுக்க நெறியைச் 'சமயம்' என்றும், 'மதம்' என்றும், 'கடவுள் நெறி' என்றும் பெரியோர்கள் அழைக்கின்றனர். 'சமயம்' என்பதற்கு "மனிதனுடைய ஆன்மாவைப் பக்குவப்படுத்தும் நெறி" என்றும், 'மதம்' என்பதற்குக் "கடவுளின் இருப்பில் கொள்ளப்படும் அசைக்க முடியாத நம்பிக்கையாகிய கோட்பாடு" என்றும் சான்ருேர்கள் விளக்கம் தந்துள்ளனர். கடவுளின் இருப்பில் நம்பிக்கை கொண்டு, உலகப் படைப்பின் உட்பொருளை உணர்ந்து ஒழுகும் வாழ்க்கை நெறியைக் 'கடவுள் நெறி' என்று பொதுவாகக் கூறுவது மரபு.

சமயத்தைப்பற்றி வள்ளுவர் உரைத்த கருத்துக்களை நாம் இன்றைய அறிஞர்களுடைய கருத்துக்கள் சிலவற்ருேடு ஒப்பிட்டுப்பார்ப்பின், வள்ளுவருடைய சிந்தனையின் சிறப்பை நன்குணர முடியும். 'பொய்தீர் ஒழுக்க நெறியே' சமயம் என்பதைக் கூருமல் கூறிய வள்ளுவர்,

அவ்வொழுக்க நெறிக்கு 'நல்லவை எல்லாம் கடனென்ப' என்று அறிவுறுத்துகிருர். இக்கருத்தினைச் சிறிது மாற்றி யமைத்ததைப் போன்று, காண்ட் (Kant) என்ற ஜெர் மானிய மெய்யுணர்வாளரின் கருத்து அமைந்திருக்கிறது. அவர், "கடமைகள் அனைத்தையும் தெய்விகக் கட்டளை களாகக் கருதிப் போற்றுவதே சமயம்"[33] என்று தெளி வுறுத்தியுள்ளார். உயர்ந்த அறநெறிக் கொள்கை காண்ட்டின் கருத்தில் இழையோடிச் செல்வதை நாம் காணலாம்.

தனிமனிதன் ஒருவன் தன்னுடைய கடமைகளைத் தவருமல் செய்வதே அறமெனக் கருதப்படுகிறது. அறத் தின் முதற்படி தத்தம் கடமைகளை ஒழுங்காகச் செய்வது என்பதே எல்லாச் சமயங்களும் ஒருமுகமாக ஒப்புக் கொள்ளுகின்ற உண்மையாகும். அக்கடமைகளை ஆர்வத் தோடும், மன ஊற்றத்தோடும் பயபக்தியோடும் செயற் படுத்தும்பொழுது அவை இறைவனின் ஆணைகளாகத் தோன்றுவது மனித மனத்தின் இயல்பாகும். இவ்வான் மிக ஒழுகலாற்று உணர்ச்சியையே 'சமயம்' என்று காண்ட் கூறுவது பொருத்தமாகும். எனினும், இது மனப் பக்குவம் அடைந்த அல்லது மனச்சான்றினை மதித்துப் போற்றுகின்ற பண்பட்ட உள்ளத்தைப் பெற்ற மக்களா லேயே உணர்ந்து போற்றக்கூடிய ஒன்ருகும்.

பிறரால் எளிதில் உணர்ந்து கொள்ளத்தக்க வகையில் 'சமயம் என்பது என்ன?' என்பதற்குரிய விடையைக் காண முயலுவோம். கீழ்த்திசை நாடுகளின் சமயங்களைப் பற்றி ஆராய்ந்த அறிஞர்களுள் ஒருவரான மாக்டொனல் (Macdonell) என்பார், "தெய்விக அல்லது இயற்கை இகந்த ஆற்றல்களிடத்து மனிதன் கொண்டுள்ள நம்பிக்கை களை ஒரு வகையாகச் சமயம் குறிப்பிடுகின்றது; மற்ருெரு வகையாக அவ்வாற்றல்களைச் சார்ந்தே மனிதன் இருக் கிருன் என்பதைத் தொழுகையின் பொழுது ஓதப்படும் மந்திரங்களாலும், செய்யப்படும் சடங்குகளாலும் சமயம் புலப்படுத்துகின்றது."[34] என்று கூறுவர். இக்கருத்து நம்

நாட்டுச் சமயங்களின் நிலையை உணர்த்துவதாகும். இதே வகையான ஒரு கருத்தினை நம்முடைய அருணந்தி சிவா சாரியார்,

ஓதுசம யங்கள் பொருளுணரு நூல்கள்
ஒன்ருேடொன்று ஒவ்வாமல் உளபலவும் இவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினல் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதியா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்
ஆதலினல் இவையெல்லாம் அருமறை ஆகமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்
(சிவஞான சித்தியார், சுபக். 265)

என்று குறிப்பிட்டுள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரிய தாகும்.

இவையனைத்தையும் ஒருங்கு திரட்டி உரைப்பதைப் போன்று ஜூலியன் ஹக்ஸ்லி என்பார், "சமயம் ஒரு வாழ்க்கை நெறி; மனிதனுடைய உணர்ச்சிகளின் பயனுக அவன் சில பொருள்களைப் பெரிதும் உயர்வாகக் கருதிப் போற்றி வருகிறான்; அவற்றைப் புனிதமானவை என்று அவன் கருதுகிறான். அவ்வுணர்ச்சிகளிலிருந்து தானே தோன்றுகின்ற ஒருவகை வாழ்க்கை நெறியே சமயம் எனப்படும். எப்பொருள்கள் சமய உணர்வினுல் புனித மானவையாகக் கருதப்படுகின்றனவோ, அவை ஊழ்வினை யோடும் முதன்மையான தொடர்பு கொள்ளுகின்றன"[35] என்று தந்துள்ள விளக்கம் இங்குக் கருதத்தக்கதாகும்.

வாழ்க்கை நெறிக்குத் தேவைப்படுவது நல்ல பழக்க வழக்கங்களும், நல்ல சிந்தனையுமாகும். இப்பழக்க வழக்கங்களும் நற்சிந்தனையும் சேர்ந்தே ஒரு மனிதனுடைய நடத்தையை - ஒழுக்கத்தை உருவாக்குகின்றன. அவ் வொழுக்கம் வாழ்க்கையின் அடிப்படையாக அமைகின்ற பொழுது, நாம் அதனை ஒழுக்கநெறி என்கிறோம். ஒழுக்க நெறி அறநெறியின் ஒரு பகுதியாகும். அறநெறியின் இலட்சியங்கள் எல்லாம் ஆழ்ந்த பொருள் உடையனவாக இருக்குமாஞல், அவை ஆன்மிக உணர்வு கலந்தனவாக அமையும். அந்நிலையில் அறநெறிக் கொள்கைகளே சமய தத்துவமாக அமைந்துவிடும். இதனை, " அறநெறி என்னும்

ஒளிவிளக்கை நமக்குத் தந்துதவுவது சமயத்தின் தலை சிறந்த பண்பாகும். செம்மையான வழியிலே துறவிகள் செல்லுவதற்குத் தேவையான மனவெழுச்சியையும் ஆர்வத்தையும் அது ஊட்டுகிறது"[36] என்று மாத்தியூ ஆர்னல்டு மொழிந்துள்ளமை இக்கருத்தைத் தெளிவுறுத்துகிறது.

உலகில் தோன்றிய மெய்யுணர்வாளர்கள் 'சமயத்திற்'குத் தந்துள்ள விளக்கங்கள் யாவும், மக்களுடைய ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஒரு பேராற்றல் உண்டு என்பதையும், மக்கள் அப்பேராற்றலின் ஆட்சிக்குட்பட்டு வாழவேண்டியவர்களாக இருக்கின்றார்கள் என்பதையும் உணர்த்துகின்றன. மேலும், அச்சான்றோர்கள் அப்பேராற்றலோடு மக்கள் தொடர்பு கொள்ள முயலும் வாழ்க்கை நெறியே சமயமாகும் என்றும் தெளிவுறுத்தியுள்ளனர்.

மேற்கண்ட கருத்துக்களிலிருந்து ஒழுக்கநெறியோடு ஆன்மிக உணர்வு கலந்த வாழ்க்கை நெறியே சமயம் என்பது பெறப்படுகிறது. இப்பொருளில் நம்முடைய முன்னோர்கள் 'அறம்' என்ற சொல்லைச் சிலவிடங்களில் பயன்படுத்தியுள்ளனர்.

அறுதொழில் அந்தணர் அறம் புரிந்து (புறம். 397)

அறம்புரி அருமறை நவின்ற நாவின் (ஐங்குறு. 387)

அறம்புரி அந்தணர் வழிமொழிந் தொழுகி
(பதிற்று. 3 : 48)

அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்
(சிலப். 14 : 11)

அன்றியு மறனு மொன்றே யரசன் யான் வணிகனீயே
(சீவக. 544)

மக்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழி வகுத்துத் தந்த திருவள்ளுவர், மக்கள் தம்மைவிட உயர்ந்ததும், சிறந்ததும், வலிமை பெற்றதும், தம்மால் முற்றிலும் அறியப்படாததுமான ஓர் உண்மையுடன்-ஆற்றலுடன்-தமக்குள்ள தொடர்பினை அறிவதற்கு உதவும்

வாழ்க்கை நெறியாகிய ஒழுக்கநெறியைப் 'பொய்தீர் ஒழுக்கநெறி' என்னும் தொடரால் குறிப்பிட்டுள்ளதை நாம் முன்னர்க் கண்டோம். 'அறம்' என்னும் சொல்லால் 'பொய்தீர் ஒழுக்க நெறி'யாகிய சமயத்தையும், நம் முன்னோர்கள் குறித்தனர் என்பதை மேற்கண்ட இலக்கியச் சான்றுகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

அறம் என்னும் சொல்லிற்கு ஒழுக்கம், வழக்கம், நீதி, கடமை, ஈகை, புண்ணியம், அறக் கடவுள், சமயம் என்ற எட்டுவகையான பொருள்கள் பெருவழக்காக வழங்கப் பட்டு வருவதோடு, வேறுசில பொருள்களும் அருகிய வழக்காக வழங்கிவருகின்றன. தகுதியானது[37], ஞானம்[38], அறச்சாலை[39], உண்ணு நோன்பு[40], தீப்பயன் உண்டாக்கும் நச்செழுத்துக்களை வைத்துப் பாடுவதை 'அறம் விழப் பாடினன்' என்று கூறல்[41], கற்பு[42], இல்லறம்[43], துற வறம்[44] என்பன போன்ற வேறு சில பொருள்களும் அறத்திற்குரியனவாகத் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. அறம் என்ற சொல்லிற்குரிய பொருள் பல்வேறு வகையாகப் பிற்கால மக்களுடைய மன நிலைக்கும், பழக்க வழக்கங்கட்கும், தேவைகட்கும் ஏற்ற வண்ணம் மாற்றமும் வளர்ச்சியும் அடைந்திருப்பதை இவை அறிவிக்கின்றன.

### அறத்தின் இலக்கணம்

மேற்கண்ட ஆய்விலிருந்து 'அறம்' என்று வழங்கப் படும் சொல், மிகவும் நெகிழ்ச்சிமிக்க பொருளையுடையது என்பது புலனாகிறது. ஒரு மனிதன் ஒரு சமூகத்தைச் சேர்ந்து வாழ்வதற்கும் அல்லது தனியே நின்று தனி மனிதனாக இயங்குவதற்கும், அத்தகைய மனிதனுடைய பண்பு நலனை உருவாக்கி வைக்கும் குறிக்கோள்களுக்கும், நோக்கங்களுக்கும், செல்வாக்குகளுக்கும், நிலையங்களுக் கும் 'அறம்' என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது. நேர்மை யான வாழ்க்கை வாழ்வதற்குரிய சட்டமாக அறம் விளங்கு கிறது. அதை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதன் பயனாக இம்மையில் இன்பமும் மறுமையில் வீடுபேறும் அடைய முடியும் என்று நம் முன்னோர்கள் நம்பினர். அது ஒழுக்க இயல், சமயம் ஆகிய இரண்டும் இணைந்த ஒன்றாகக்

காணப்படுகிறது. தனி மனிதனுடைய உரிமைகளும், கடமைகளும், சமூகப் பிணைப்பும், குடும்ப இணைப்பும், பழக்க வழக்கங்களும், விருப்பு வெறுப்பு என்னும் இயல்பு களுமாகிய அனைத்தும் அறத்தின் கோட்பாட்டினுல் கட்டுப் படுத்தப்பட்டுள்ளன.

அறம் என்பதைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் ஒரு கொள்கையாகவோ, கோட்பாடாகவோ, சமயமாகவோ கருதவில்லை. இதனை அவர்கள் வாழ்க்கை நெறியாகவே கருதிப் போற்றினர். ஒழுக்க நெறிக்குரிய விதி முறை களின் தொகுப்பாகவே அறம் கொள்ளப்பட்டது. அறம் தனிமனிதன் ஒருவனுடைய கடமைகளையும், செயல்முறை களையும் சமுதாயத்தின் ஓர் உறுப்பினன் என்ற முறையில் நெறிப்படுத்துகிறது என்பதும், மனிதனைப் படிப்படியாகப் பண்பட்டு விளங்கச் செய்கிறது என்பதும், மனிதவாழ்க்கை யின் இலட்சியமாகிய 'பேரா இயற்கைப் பெருநிலை' யாகிய வீடுபேற்றை அடைய முயலுமாறு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கிறது என்பதும் நம்முடைய முன்னோர்களின் நம்பிக்கையாகும். காலத்தையும் இடத்தையும் கடந்த நிலையில் இயன்றவகையில் எல்லாம், பிறருக்கு உள்ளத் தாலும், உரையாலும், செயலாலும் நன்மை செய்வதையே அறத்தின் பொதுநிலையெனக் கொண்டு நம் முன்னோர்கள் ஒழுகினர்.

பண்டைத் தமிழ்ச் சான்றோர் கண்ட வாழ்க்கை நெறி யாகிய அறத்தின் வித்து, பழக்கவழக்கங்களேயாகும். அதிலிருந்து நீதியெனும் முளைதோன்றி, கடமையுணர் வெனும் தளிர்விட்டு, ஒழுக்கமெனும் மரமாக வளர்ந்து, ஈகை, கொடையெனும் கிளைகளுடன் தழைத்து, அற மெனும் வண்ணமலர் மலர்ந்துள்ளதை நாம் காணு கின்றோம்.

### நீதியும் அறமும்

அறத்தின் பொருள் மிக விரிந்ததாகவும், ஆழமான தாகவும், வாழ்க்கையின் பல்வேறு நிலைகளையும் இயல்பு களையும் அணைத்துச் செல்வதாகவும் அமைந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது. அறத்தினை நாம் ஒரு முப்பட்டைக்

கண்ணாடிக்கு ஒப்பிடலாம். அதன் ஒருபுறம் ஒழுக்கமாக வும், மற்றொருபுறம் வழக்கமாகவும், பிறிதொருபுறம் இராச நீதியாகவும் காட்சி தருகிறது. அம்முப்பக்கங்களும் இணைந்த முழுநிறை வடிவே அறமெனும் முப்பட்டைக் கண்ணாடி எனலாம்.

நாம் மேலே கண்ட அறத்திற்குரிய பல்வேறு பொருள் களுள் வழக்கம், ஒழுக்கம், கடமை, ஈகை, புண்ணியம், அறக்கடவுள், சமயம் ஆகிய அனைத்தையும் சிறப்புமிக்க அறம் எனப்படும் ஒழுகலாற்று அறநெறியாகிய வழக்கம், ஒழுக்கம் என்ற இரண்டு பட்டைகளுக்குள் அடக்கி விடலாம். எஞ்சியுள்ள 'நீதி' என்னும் பொருளை 'இராச நீதி' என்னும் பட்டையாகக் கொள்ளலாம். எனினும், இம் முப்பட்டைக் கண்ணாடியின் மூன்று பக்கங்களுக்கும் அடிப் படையாக இருப்பது அறமாகும். முப்பட்டைக் கண்ணாடி யில் எப்பக்கத்தின் மூலம் நோக்கினாலும் எவ்வாறு எழு வகை வண்ணங்களைக் காணமுடிகின்றதோ அதைப் போன்று, வழக்கம், ஒழுக்கம், இராச நீதியாகிய மூன்றனுள் எதன் மூலம் நோக்கினாலும் நாம் அறத்தைக் காணலாம் இவ்வாறு அறம் அம்மூவகை நெறிகளோடும் ஒன்றாகக் கலந்து காணப்படுகிறது. இதை வேறு வகை யாகச் சொல்லுவதென்றால், ஒழுக்கம் தனி மனிதனுடைய அறத்தைச் சுட்டுவதாகவும், வழக்கமும் இராசநீதியும் சேர்ந்து சமுதாய அறத்தைச் சுட்டுவதாகவும் நாம் கூறலாம்.

வழக்காற்று ஒழுக்க நெறியும், ஒழுக்கமும், இராசநீதி யும் இணைந்த ஒன்றையே பண்டைத்தமிழர் 'புறப்பொருள்' என்று கூறினர். இவற்றுள் 'இராசநீதி' ஒன்றையே வட மொழிவாணர் 'தண்டநீதி' என்றும், 'அருத்த சாத்திரம்' என்றும் போற்றலாயினர். இவற்றின் முடிந்த பயன் 'இன்பம்' என்றும் அவர்கள் கருதினர். இவற்றைப் பண்டைத் தமிழர் அறம், பொருள், இன்பம் என்ற மூவகைப் பேறுகளாகக் கொண்டனர். இம் மூன்றனுள்ளும் இழையோடிச் செல்வது அறமென்பதில் யாருக்கும் ஐயம் இல்லை.

அறம், பொருள், இன்பம் ஆகிய 'முப்பால்' எனப்படும் மூன்றும் மனித வாழ்க்கையின் மூவேறு நிலைகளாகும். அவை ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து நிற்பன. அவை தனிப்பட்ட—ஒட்டுறவற்ற—பிரிவுகள் அல்ல. வாழ்க்கைநெறியின் உடலாகப் பொருளையும், உயிராக அறத்தையும், உணர்வாக இன்பத்தையும் வள்ளுவர் கொண்டுள்ளார். அவற்றைத் தனித்தனியாகப் பிரித்து விட்டால் வாழ்க்கைநெறி சிதைந்துவிடும். அவை மூன்றும் இணைந்தும், இழைந்தும் இருக்கவேண்டும். அவற்றிற்கு அறமே அடிப்படையாக அமைய வேண்டும். அப்பொழுது தான் மனித வாழ்க்கை மாண்புற முடியும் என்பதைத் திருவள்ளுவர் தம் நூலில் தெளிவுறுத்தியுள்ளார். இதனைப் புறநானூறு என்ற பழைய தமிழிலக்கியம்,

"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல" (புறம். 31)

என்று சிறப்பித்துக் கூறுகிறது.

எனவே, தமிழர் தொன்று தொட்டுப் போற்றிவரும் அறத்திற்கும், வடமொழியாளர் கூறும் நீதிக்கும் பெருத்த வேறுபாடு உள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. வடமொழியில் நீதி நூல்கள் என்று சொல்லப்படுவன பரந்து பட்ட ஒழுக்கவியல் ஒப்புரவுகளை வலியுறுத்தும் அற நூல்கள் அல்ல. அவ்வறத்தின் உட்பிரிவாகிய அரசியற் பகுதி பற்றிய நீதி நூல்களாகப் போற்றப்படுகின்றன.[45] இக்கருத்தினை, "மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படும் வண்ணம் நம் பெரியார் நமக்கு உதவிய நூல்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள்கள் நான்கினையும் பற்றியனவேயாம். இவையெல்லாம் நீதியின் மேல் அமைவன வெனினும், இவற்றுட் பொருட்பகுதி பற்றியெழுந்த நூல்களையே 'நீதி நூல்' எனப் பெரியோர் வழங்குவர்"[46] என்று பண்டிதமணி அவர்கள் கூறியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

'சுக்கிரநீதி' என்ற வடமொழிப் பொருள்நூலில், 'நீதி நூல் மாட்சி' என்னும் முதலாம் இயலில்,

"இந் நீதிநூல் (இராசநீதி) மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாததும், உலக நிலையை வரம்புட்படுத்துவதும், அறம் பொருள் இன்பங்களை யுணர்த்துவதுமாக இருத்தலின், இதனை அரசர்கள் எப்பொழுதும் முயற்சி மேற்கொண்டு பயிலல் வேண்டும்..... மக்களுக்கு உணவின்றி உடல் நிலையாவாறு போல, நீதி நூலானன்றி எல்லா வுலகங்களில் ஒழுக்கங்களும் நிலைபெறா"[47]

என்று கூறப்பட்டுள்ளமை வடமொழியாளர் நீதியைப் பற்றிக் கொண்டுள்ள கருத்தினைத் தெளிவுறுத்துகிறது.

இதனால், அறத்தைப் பற்றித் தமிழர்கள் கொண்டிருந்த கொள்கை மிகவும் பரந்துபட்டது என்பது புலனாகின்றது. இதனோடு வடமொழியாளர் 'தருமத்திற்'குத் தரும் விளக்கம் பேரளவிற்குப் பொருந்திவருகிறது. எனவே, வடமொழியாளர் போற்றும் 'நீதி'யை நாம் அறத்தின் ஒரு பகுதியாகவே கொள்ளவேண்டியவர்களாக இருக்கிறோம். இந்நிலையில் தமிழ்ச் சான்றோர்கள், 'நீதி' என்ற வடசொல்லைத் தமிழில் பயன்படுத்தத் தொடங்கிய பொழுது, அதனுடைய முதற் பொருளிலிருந்து சிறிது மாற்றியும் விரிவுபடுத்தியும், பொதுவான ஒழுக்க இயல்புகளைக் குறிக்கும் சொல்லாகவே அதைக் கையாண்டுமுள்ளனர் என்று நாம் கூறினால், அது தவறாகாது. ஆங்கிலத்தில் 'மொராலிட்டி' (Morality) எனப்படும் சொல்லிற்குரிய பொருளையே, 'நீதி' என்னும் சொல் தமிழில் உணர்த்துகிறது. இப்பொருளிலேயே 'நீதிநூல்' அல்லது 'நீதி இலக்கியம்' என்னும் வழக்குத் தமிழ்மொழியில் கி. பி. ஆறும் நூற்றாண்டை ஒட்டித் தோன்றி வளர்ந்ததாகத் தெரிகிறது.

## குறிப்புகள்

1. Zimmer, Heinrich: Philosophies of India, p. 37, F. N., Routledge & Kegan Paul Ltd., London, 1951.

2. Kane, P. V.: History of Dharmasastras, Vol., III pp. 4-8; Bhandarkar Oriental Research Institute, Poona, 1941.

3. வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல். (குறள் 38)

சான்றோர் செய்த நன்றுண் டாயின் (புறம். 34)

ஊனைக் குறித்த உயிரெல்லா நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு. (குறள் 1013)

நல்லது செய்த லாற்றீ ராயினும் (புறம். 195)

நல்லது வெ∴கி வினைசெய்வார் (பரி. 10 : 88)

மேலும் பார்க்க: திருக்குறள் 97, 108, 110, 111, 117, 138, 652, 908, 932, 994.

4. திருக்குறள், பரிமேலழகர் உரை, பக். 39.
கழகப்பதிப்பு, சென்னை, 1951.

5. திருக்குறள், பரிமேலழகர் உரை, பக். 145.

6. திருக்குறள், பரிமேலழகர் உரை, பக். 149.

7. ‘அறநீதி’ என்ற தொடரைப் பரிமேலழகர் 389, 1025ஆம் குறட்பாக்களின் உரையில் கையாண்டுள்ளார்.

8. பார்க்க: குறள், 523, 581, 662, 683, 686, 825, 829, 857.

9. பார்க்க: குறள், 533, 581, 634, 683, 741.

10. நன்னூல், சங்கர நமச்சிவாயர் உரை, பக். 2; உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு, சென்னை, 1935.

11. மற்றும் இப் பொருளில் மிகப் பல சான்றுகள் காட்டலாம். அவற்றுள் சில:

(அ) நீதியால் வாழ்கிலே நாள் செலா நின்ற
(தேவா. II : 79 : 4)

(ஆ) நீதிவானவர் நித்தல் நியமஞ் செய்
(தேவா. V : 13 : 7)

(இ) நீதி யுணர்ந்து நியமத்த னாமே (திருமந். 555)

(ஈ) நீதியாரொடும் கூடுவதில்லை யான்
(திவ். பிர. 672 : 2)

(உ) நீதிமுறைச் சடங்கு நெறி
(பெரிய. ஞான. 56)

(ஊ) தள்ளரிய பெருநீதி
(கம்ப. பால. குலமுத. 21)

12. (அ) நீதிக் கண்ணாடி நினைவார் மனத்துளன்
(திருமந். 2986)

(ஆ) நீதியே செய்தாய் நினை
(திருமுறை XI : சிவ. திருவ. 79)

(இ) நீதியால் வணங்குவார் தம் (திவ். பிர. 760)

(ஈ) நீதி யாலறுத் தந்நீதி யீட்டுதல் (சீவக. 1920)

(உ) நீதிவழுவா நெறியினராய் (பெரிய. பெருமிழலை. 1)

(ஊ) நீதியாய் முனிந்திடேல் (கம்ப. பால. 1385)

13. (அ) நீதியி லொன்று வழுவேன் (தேவா. VII : 73 : 5)

(ஆ) நீதி அறிகிலள் (திருமுறை IX : சேந். திரு. 2)

(இ) நீதிய தாய் நிற்கும் (திருமந். 2453)

(ஈ) நீதிஎன்றுள் (திருமுறை XI : பொன்வண். 22)

(உ) நீதி வானம் (திவ். பிர. 1131 : 3)

(ஊ) வெம்மை செய்துலக மெல்லாம்
ஆண்டிட விளக்கும் நீதி (சீவ. 755)

(எ) நீதியால் அவர் கள்தம்மைப் பணிந்து (பெரிய. தடுத். 197)

(ஏ) நீதியும் தருமமும் நிறுத்த (கம்ப. அயோ. 948)

14. ஊர்தியில் சேறலும் நீதியாகும் (நம்பியகப். 83)

15. உலக மெல்லாம் ஆண்டிட விளக்கும் நீதி (சீவக. 755)

16. இந்நீதி நூலுடையார் (குறள். 533 : பரிமேலழகர் உரை)

17. நீதி நிலைமை நியாய நிச்சயம்......
வேளாண்மை, பட்டாங்கு மெய்யென உரைப்பர் (பிங்கல. நிக. 1809)

18. நீதி - உலகத்தோடு பொருந்துதல் (குறள். 97. பரிமேலழகர் உரை)

19. சிவஞான போதம் - மாபாடியம், பக். 20.

20. திருக்குறள் - அறத்துப்பால், நாகை.
தண்டபாணி விருத்தியுரை, பக். 42-43.

21. திருக்குறள், பரிமேலழகர் உரை, பக். 1.

22. "இவற்றுள் வழக்கமும் தண்டமும் உலக நெறி நிறுத்துதற் பயத்தவாவது அல்லது, ஒழுக்கம் போல மக்கள் உயிர்க்கு உறுதி பயத்தல் சிறப்பில ஆகலானும், அவை

தாம் நூலானே அன்றி உணர்வு மிகுதியானும் தேய இயற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து, ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவரால் சிறப்புடை ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப்பட்டது."

(திருக்குறள் : அறத்துப்பால் உரைப் பாயிரம், பரி. உரை, பக். 2.)

23. ஷை திருக்குறள், பக். 2.

24. திருக்குறள் உரைவளம் — ச. தண்டபாணி தேசிகர் பதிப்பு : அறத்துப்பால் : பக். 206.

25. Findlay, J. N.: Hegel, A Re-examination, p. 318.

26. தொல். பொருள் : 647, பேரா. உரை. பக். 477.

27. (அ) சான்றோர் சென்ற நெறி (புறம். 134)

(ஆ) பெரியோர் சென்ற அடிவழி

(பத்து. பட்டி. 151)

(இ) ஆன்றோர் செல் நெறி வழாச்
சான்றோன் ஆதல் நற்கு அறிந்தனை தெளியே

(நற்றி. 233)

28. Maine, H. S: Ancient Law, p. 49-50. John Murray, London 1927.

29. பார்க்க : குறள் 388, 541, 547, 548, 553, 558, 559.

30. "வறுமையுற்றவர்களுக்கு ஒன்றைக் கொடுத்துதவுதலே பிறர்க்குக் கொடுத்து உதவும் ஈகையாகும்" என்பது இதன் பொருளாகும்.

31. பால்வரை தெய்வம் வினையே பூதம்

(தொல். சொல். 57)

ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்
ஒன்றியுயர்ந்த பாலதாணையின்

(தொல். பொருள். 92)

32. இராசமாணிக்கனர், மா : தமிழ்மொழி இலக்கிய வரலாறு, பக். 218. பாரி நிலையம் ; சென்னை, 1965.

33. Kant, Immanuel: Religion within the Limits of Pure Reason Alone, p. 142.

34. Macdonell, A. A: Vedic Religion, Ency. of Religion and Ethics, Vol. 12; p. 601.

35. Huxley, Julian: Religion without Revelation, p. 9, Max Parish, London, 1957.

36. Arnold, Mathew: Essays on Criticism, 'Marcus Aurelius' p. 346. Macmillan, London, 1935.

37. அறம் செய் தீமோ (புறம். 145)

"அறம் என்பது தக்கது; தக்கதனைச் சொல்லி நிற்றல் தோழிக்கு உரித்தென்றவாறு."
(இறையனார் களவியல், சூ. 29. உரை, பக். 141)

38. அறத்தின் விருப்புச் சிறப்போடு நுந்த
(ஞானமிர்தம், பாயி. 5)

39. அறத்துக்குப் புறத்தல்
(திருவாங்கூர் தொல்பொருள் ஆய்வுத்துறை:
(தொகுதி I, பக். 9)

தொகைக்கணம் போதரும் அறச்சோற் றட்டில்
(பெருங். 1 : 10 : 132)

40. நலம்புரி நங்கை வையத்து நல்லறங் காக்க
(சீவக. 386)

41. நச்செழுத்துக்களை வைத்துப் பாடுதலை 'எழுத்தானந்தம்' என்பர்; 'இயனெறி திரிந்த எழுத்தானந்தமும்.'
(யாப்பருங்கலம், ஒழிபு. பக். 426)

42. அறந்தலைப் பிரியா ஆறுமற் றதுவே (கலி. 9)

அணிவளைச் செவ்வாய் அறம் காவற் பெண்டிர்
(பரி. திரட்டு : 2)

அறத்தா றன்றியு மாகுவ தாயின்
(பெருங். 1 : 36 : 301)

"பெண்டிர்க்கு அறமென்பது கற்பு; கற்பின்தலை நிற்றல் அறத்தொடு நிற்றலாகும்."
(இறையனார் களவியல், பக். 141;
கழகப்பதிப்பு, சென்னை, 1964)

43. அறுமீன் பயந்த அறம்செய் திங்கள் (நற்றி. 202)

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை (குறள் 49)

அறத்தொடு புணர்ந்த துறைப்புனலாட்டம்
(பெருங். 11. 1. 47)

44. இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூண்டார்
(குறள் 23)

அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்
(சிலப். 14 : 11)

அறம் செய்மாக்கள் (மணி. 20:13)

உறுபொருள் காட்சி யோங்கிய படிவத்து
அறம்புரி தந்தை பள்ளி (பெருங். 2 : 11 : 63-64)

45. வடமொழியில் வாசஸ்பதி மிஸ்ரா இயற்றிய 'நீதி சிந்தா மணியும்', ஜனமேஜயனின் 'நீதிப் பிரகாசிகை'யும் இராச நீதியின் பகுதியாகிய தண்ட நீதியையும், அரசிளங் குமாரர்களையும் பற்றிக் குறிப்பிடுகின்றன. பார்க்க : History of Dharmasastra, Vol. I. pp. 110 and 400.

46. மு. கதிரேசச் செட்டியார் : உரைநடைக் கோவை, பக். 65.

47. சுக்கிரநீதி, பக் 1-2. பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் மொழிபெயர்ப்பு 1926.

# 3. நீதி இலக்கியத்தின் இயல்புகள்

இலக்கியம் என்பது மனித இனத்தின் அனைத்துலக மொழியாகும். அது குறிப்பிட்ட பண்பாட்டு வரையறைகளையும், கட்டுப்பாடுகளையும் கடந்து, அனைத்துலக நோக்கொடு மனிதனுடைய விருப்பு வெறுப்புகளையும், எண்ணங்களையும் எழுச்சிகளையும், வேட்கைகளையும் குறிக்கோள்களையும் பிரதிபலிக்கிறது. வரையறுத்துக்கூற இயலாத வகையில் உள்ளமும் வாழ்க்கையும் சந்திக்கும் இடமாக இலக்கியம் விளங்குகிறது. மொழியைக் கருவியாகக் கொண்டு இலக்கியம் தன்னுடைய வடிவத்தைப் பெறுகிறது. அதன் உட்பொருளை வாழ்க்கை தந்துதவுகிறது. கவிஞன், வாழ்க்கையெனும் மூலப்பொருளோடு கலையழகு என்ற வண்ணத்தைக் கலந்து, கற்பனையெனும் மெருகிட்டு இலக்கியத்தைப் படைக்கின்றான்.

மனிதனுடைய அன்றாட வாழ்க்கைத் தேவைகள் நிறைவடைந்தவுடன், அவன் வாழ்க்கையின் மறைபொருள்களைப் பேரார்வத்தோடு துருவித்துருவி ஆராய்ந்து காண முயலுகிறான். அறிவைத் தேடும் ஆர்வமும், வாழ்க்கையைப் புரிந்து கொள்ளவேண்டும் என்ற வேட்கையும், மனித இயற்கையின் வற்றாத ஊற்றினை உணர்ந்து உலகில் நல்லவண்ணம் இனிது வாழ்வதற்குத் துடிக்கும் துடிப்பும் அவனை வாழ்க்கையின் உட்பொருளைக் காணுமாறு தூண்டுகின்றன. பொருள்களை ஈட்டும் ஆர்வம் மனிதனிடத்து ஓர் இயல்பூக்கமாக இருக்கிறது. அதனுடன் அறிவார்வமாகிய இயல்பூக்கமும் சேர்ந்து காணப்படுகிறது. அவற்றின் பயனாகவே உலகில் அறிவியல் கண்டு பிடிப்புகளும், இலக்கியப் படைப்புகளும், மெய்ப்பொருள்

ஆராய்ச்சியும் தோன்றியுள்ளன. மனித இனம் எண்ணத் தெரிந்து, அறிவை வளர்த்துக் கருத்துவகையில் முன்னேறத் தொடங்கிய காலத்தில்தான், இலக்கியம் தனிப்பட்டதொரு கலையாகத் தழைத்தோங்கியது. அக்காலத்திலேயே இலக்கியத்திலிருந்து பிற கலைகள் பிரிந்து, தனித்து வளரத்தொடங்கின. இலக்கியம் வடிவத்தாலும், உணர்த்தும் பொருளாலும் பல்வேறு வகைப்பட்ட துறைகளையுடைய கலையாகச் செழித்து வளர்ந்திருக்கிறது. அத்துறைகளுள் ஒன்று 'நீதி இலக்கியம்' என்பதாகும். பண்டைக் காலத்தில் இலக்கியங்கள் எல்லாம் பாக்களாக இருந்தமையால், அவற்றை நீதிப்பாக்கள் (Didactic Poetry) அல்லது நீதி இலக்கியம் (Didactic Literature) என்று குறிப்பிடும் வழக்கம் உண்டாயிற்று.

நீதிநூல்கள் தமிழ் இலக்கியத்தில் பெற்றுள்ள இடத்தையும் சிறப்பையும் முதலாம் இயலில் கண்டோம். இவ்வியலில் நீதிநூல்களின் இயல்புகளைக் காண்போம்.

கற்பவரை உணர்ச்சிப் பெருக்கால் கிளர்ச்சி அடையச் செய்யாது சிறந்த கருத்துக்களை அறிவுறுத்தி, அவர்களுடைய வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவதை நோக்கமாகக் கொண்டவை நீதிநூல்கள்; இவை உணர்ச்சியைத் தூண்டாமல் அறிவைத் தூண்டுவன ; இன்புறுத்துவதைக் காட்டிலும் அறிவுறுத்துவதையே குறிக்கோளாகக் கொண்டனவாகும். கலையழகிற்கு முதன்மையிடம் தராமல் கருத்திற்கே இவை முதன்மையிடம் தருகின்றன. சுருங்கச் சொல்லுவதானால் மனிதனின் உணர்ச்சி (Feeling), விருப்பு (Willing), அறிவு (Knowing) ஆகிய மூவகை மனப்பண்புகளுள் அறிவாற்றலைத் தூண்டுவதாக அமைவதே நீதி இலக்கியம் என்று நாம் கூறலாம்.

### உணர்ச்சியைத் தூண்டாமல் அறிவுறுத்துவன

இவற்றுள் முதன்மையானது உணர்ச்சியைத் தூண்டாமல் அறிவுறுத்தும் இயல்பாகும். மனிதன் உணர்ச்சியின் பிண்டமாக இருந்துவருகிறான். அவ்வுணர்ச்சியின் ஊற்றாக இருப்பது மனிதனுடைய உள்ளம். அதில் மூவகைக் கூறுகள் உள்ளன. அவை உணர்ச்சிக் கூறு,

அறிவுக் கூறு, விருப்புக் கூறு என்பன. அதில் உணர்ச்சிக் கூறு அவனை எளிதில் உணர்ச்சிவயப்படச் செய்கிறது. அவனுடைய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி அவனை நெறிப் படுத்துவது அவனுடைய அறிவாகும். அவ்வறிவு நூலறிவு, பட்டறிவு என இருவகைப்படும். கல்வியால் நூலறிவும், கேள்வியாலும் வாழ்க்கை அனுபவத்தாலும் மனிதனுடைய பட்டறிவும் வளர்கின்றன. இவ்வறிவின் பயனாகவே ஒரு வன் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திச் செம்மையான நெறியில் உள்ளத்தைச் செலுத்த முடிகிறது. "மனத்தைச் சென்ற இடத்தில் செல்லவிடாமல், தீமை இடத்துச் செல்லாது தடுத்துக் காத்து, நன்மை இடத்துச் செல்ல விடுவதே அறிவாகும்" என்பதை,

> சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
> நன்றின்பால் உய்ப்ப தறிவு (குறள் 422)

என்று வள்ளுவர் அறிவிக்கின்றார்.

அறிவு வளர்ச்சியில் முன்னேற்றம் காண்பவன் உணர்ச்சியைக் கட்டுப்படுத்தி வாழப் பழகிவிடுவதால், அவனிடத்து உணர்ச்சித் துடிப்பு குறைந்துவிடுகிறது. நாகரிகம் அடையாத பழங்குடி மக்கள் உணர்ச்சி வடிவாக இருப்பதையும், அறிவு வளர்ச்சியும் நாகரிகமும் அடைந்த மக்கள் எளிதில் உணர்ச்சி வயப்படாதவர்களாக இருப் பதையும் இதற்குச் சான்றாகக் கூறலாம். நாகரிகம் என்னும் அரக்கன் அழித்தொழிக்காத அருளுணர்ச்சி யோடு வாழும் கிராமமக்கள், தெருவில் நாய் ஒன்று உந்து வண்டியில் சிக்கி இறந்துவிட்டால், அதைச் சுற்றிக் கூட்டம் கூடிவிடுவர். ஆனால், நாகரிகத்தில் முன்னேறி விட்டதாகச் சொல்லும் நகரத்து மக்கள், தங்கள் கண் ணெதிரே தங்களைப் போன்ற மனிதன் ஒருவன் வண்டியில் மாட்டிக்கொண்டு செத்துவிடுவானானால், பெரும்பாலும் அதைப் பொருட்படுத்தாது தங்கள் அலுவல்களைக் கவனிக்க விரைந்து செல்லுவர். இந்நிலைக்கு அறிவு வளர்ச்சியே முதன்மையான காரணமாகும். வாயளவில் தம் இரக்கத்தைக் காட்டிவிட்டுத் தங்கள் கடமையைச்

செய்வதற்கு விரைந்து செல்லுமாறு அறிவுக்கூறு அவர்களைத் தூண்டுகிறது எனலாம்.

இதைப் போன்றே, இலக்கிய உலகிலும் இருவகைக் கூறுகள் உள்ளன. அவற்றை அறிவு இலக்கியம் (Literature of Knowledge), ஆற்றல் இலக்கியம் (Literature of Power) என்று பாகுபடுத்துவர். "அறிவு இலக்கியம் அறிவுறுத்துவதை நோக்கமாகக் கொண்டது. ஆற்றல் இலக்கியம் மனிதனின் உள்ளத்தை நெகிழச் செய்வது."[1] இவற்றுள் அறிவு இலக்கிய வகையைச் சேர்ந்தது 'நீதி இலக்கியம்' என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

கலைகளிலே சிறந்தது இலக்கியக்கலை. "கலைக்கு இன்றியமையாத பண்புகள் என்று சொல்லப்படுவன உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் என்பனவாகும். இசைக் கலையைத் தவிர மற்றக் கலைகளுக்குக் கருத்து என்பது அடிப்படையாகத் தேவைப்படுகிறது. நீதிநூல்களுக்கும், மக்களை இணங்குமாறு தூண்டும் வகையைச் சேர்ந்த இலக்கியங்களுக்கும் கருத்து மிகமிக முக்கியமானதாகும். ஏனெனில், இவ்வகை இலக்கியங்கள் எல்லாம் எழுதப்பட்டதன் நோக்கத்தை வெளிப்படுத்துவன கருத்துக்களேயாகும்."[2] இந்நால்வகைப் பண்புகளும் ஒருங்கே அமைந்த இலக்கியம் சிறப்புடையதாகப் போற்றப்படும்.

இவற்றுள் உணர்ச்சிக்கு முதலிடம் கொடுக்கும் இலக்கியம், மனிதனுடைய இன்ப துன்பங்களையும், விருப்பு வெறுப்புகளையும் புனைந்துரைக்கிறது. இலக்கியத்தைப் படைக்கும் புலவனின் உணர்ச்சி, அதில்வரும் கற்பனை மாந்தரின் உணர்ச்சி, அதைக் கற்பவர் பெறும் உணர்ச்சி ஆகிய மூவகை உணர்ச்சிகளுக்கும் முக்கியத்துவம் அதில் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு உணர்ச்சிகளுக்குச் சிறப்பிடம் கொடுக்கும் இலக்கியத்தில் கற்பனையும் கலையுணர்வும் கலந்து காணப்படும். கற்பனை உடையவர் தம்முடைய அனுபவத்தோடு மனித உணர்ச்சிகளைப் பெருக்கியும், அவற்றிற்கு நயமிகு கலையழகு என்ற வண்ணத்தைப் பூசியும் கவர்ச்சியுடையதாக எடுத்துரைக்க இயலும். அத்தகைய கலைஞர்கள் படைக்கும் இலக்கியத்தில் அறி

வுக்கும் கருத்துக்கும் முதலிடம் தரப்படுவது இல்லை. உணர்ச்சிக்கே முதலிடம் தரப்படுகிறது. இத்தகைய இலக்கியங்கள் மக்கள் உள்ளத்தை நெகிழ்விக்கும் ஆற்றலும், கவரும் திறனும் உடையனவாகும். அவற்றை 'ஆற்றல் இலக்கியங்கள்' என்பர். அவை கற்பவர் மனத்தை மகிழ்விப்பதையே நோக்கமாகக் கொண்டிருக்கும். ஒரு சில இலக்கியங்கள் இதற்கு விதிவிலக்காக மகிழ்விப்பதோடு, அறிவுறுத்துவனவாகவும் அமையும். அவ்வாறு அமைகின்ற இலக்கியங்களே, உலகில் பொன்றுப் புகழ்பெற்று விளங்குகின்றன.

நீதி நூல்களும் இலக்கியத்தின் ஒரு வகையேயாகும். ஆனல், அவை குறிப்பிட்ட நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்படுகின்றன. மனிதன் மனிதனக வாழ்வதற்கு வழிகாட்டுவதே அவற்றின் குறிக்கோளாகும். நீதிநூல்களை இயற்றும் புலவன் முதிர்ந்த அறிவும், கனிந்த அனுபவமும் உடையவனக இருக்கின்றன். தான் எடுத்துரைக்க விரும்பும் கருத்திற்கே அவன் முதலிடம் தருகின்றன். எதைச் சொன்னலும், அதைத் தெளிவாக, மக்கள் பலரும் புரிந்துகொண்டு வாழ்க்கையில் கடைப்பிடிக்குமாறு அவன் சொல்ல நினைக்கின்றன். இவ்வாறு எண்ணுகின்றபொழுது, அவன் உணர்ச்சி வயப்படாது, காரணகாரியத் தொடர்புபடுத்திக் கருத்துக்களைக் கோவைப்படுத்துகிறன். பின்னர், படிப்பவர் மனத்தில் பதியுமாறு செய்வதற்காக, அவற்றிற்கு அவன் சிறிது கலைமெருகு கொடுக்கின்றன். அத்துடன், அவன் படைப்பு பாதி முடிந்துவிடுகிறது. இப்படைப்புப் பணியில் ஈடுபடும்பொழுது, அவன் கலைகளுக்குரிய உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் என்ற நான்கு பண்புகளுள் இறுதியில் உள்ள இரண்டிலேயே கருத்தைச் செலுத்துகிறன். சான்றக ஔவையாரின் 'ஆத்தி சூடியை' எடுத்துக்கொள்வோம். இதன் முதல்பாட்டு, 'அறஞ் செய விரும்பு' என்பதாகும். இச்செய்யுளில் மூன்று சொற்களே உள்ளன. இதில் உயர்ந்த கருத்தொன்று, மூன்று சொற்களைச் சேர்த்து அமைப்பதன் மூலம் அறிவுறுத்தப்படுகிறது. இதில் உணர்ச்சிக்கோ, கற்பனைக்கோ இட

மில்லை. ஆனல், அறிவுறுத்தும் கருத்திற்கே முதன்மை யிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது.

இனி, நாம் குமரகுருபரர் இயற்றிய 'நீதிநெறி விளக்கத்'தில் உள்ள ஒரு செய்யுளைப் பார்ப்போம்.

> மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
> கருமமே கண்ணயி னர் (நீதி. விள. 53)

இப்பாட்டில், எடுத்துக்கொண்ட செயலை இனிது முடிக்க முயலுவோர், தமக்குண்டாகும் எத்தகைய இடையூறுகளையும் பொருட்படுத்தாமல் பணிபுரிவர் என்னும் கருத்து எடுத்துரைக்கப்படுகிறது. ஆசிரியர் இக்கருத்தினைச் சிறிது கலையுணர்வோடு கூறியிருப்பது கருதத் தக்கது. ஒரு மனிதனுக்கு உண்டாகும் துன்பங்கள், இடையூறுகள் எவையென்பதை ஆராய்ந்து, அவற்றை முறைப்படுத்திக் கூறுவதில் மனித மனத்தில் இயல்புகளைப் படம்பிடித்துக் காட்டுகிருர் ஆசிரியர். உடலுக்குண்டாகும் துன்பத்தைப் பொதுவாக எந்த மனிதனும் வரவேற்கமாட்டான். அதற்கு அடுத்து, பசியால் வாடுவதை எவனும் விரும்பமாட்டான். உடல் வருந்தினுலும் பசி வாட்டினுலும்கூட மனிதன் உறங்காமலிருக்க விரும்பமாட்டான்; இவற்றைவிட யாராகிலும் தனக்குத் தீமை செய்தால், அதைப் பொறுத்துக்கொண்டு தன் வேலையில் ஈடுபடுவது என்பது மனிதனல் பொதுவாகச் செய்ய முடியாத செயல். காலத்தை வீணுக்குவதை யாரும் விரும்பமாட்டார்கள். ஆனல், தான் எடுத்துகொண்ட செயலை இனிது முடிக்கவேண்டும் என்பதற்காக எந்நேரமும் அச்செயலிலேயே ஈடுபடுவது அறிவுள்ள மனிதனின் செயலாகும். இவை யாவற்றையும்விட, பிறர் தனக்குச் செய்யும் அவமதிப்பைக்கண்டு சீற்றம் அடைவது மனித இயற்கை. ஆனல், தன்னுடைய பணியை நல்லமுறையில் முடித்தால் போதும் என்று நினைக்கின்றவர்கள், அவமதிப்பைக்கூட ஒரு பொருட்டாக மதிக்கமாட்டார்கள் என்று குமரகுருபரர் கூறுவதில் வெறும் கருத்துக்கள்மட்டும்

இடம் பெறவில்லை. ஓரளவிற்குக் கலையுணர்வும் அவற்றுடன் கலந்து காணப்படுகிறது.

இந்த நீதிப்பாடலில் கருத்தும் வடிவமும் அமைந்திருப்பதோடு, ஓரளவிற்கு எடுத்துரைக்கும் முறையில் கலையுணர்வோடு கூடிய கற்பனையும் கலந்து கற்பவர் உள்ளத்தைக் கவருகிறது. இது சிறந்த கவிஞர்களுடைய கவிதைகளில் (அறங்கூறும் நூலாக இருந்தாலும்) காணப்படும் சிறப்பாகும்.

கவிஞனுக்குரிய கடமைகள் பல. அவற்றுள் படிப்பவரை இன்புறுத்துவதைவிட, அறிவுரைகூறி அவர்களை நெறிப்படுத்துவது தலையாயது; சிறந்தது. கீழ் நாடுகளிலும், மேனாடுகளிலும் தொன்றுதொட்டு இந்நம்பிக்கை இருந்து வருகிறது.

எனவே,நீதிநூல்கள் 'உணர்ச்சியைத் தூண்டாமல்அறிவுறுத்துவன' என்று கூறுகின்ற பொழுது, நாம் இரண்டு உண்மைகளைக் கருத்தில் இருத்த வேண்டும். மூதுரைகளாகவும், பழமொழிகளாகவும் அமைந்து அறவுரைகளைக்கூறும் நீதிநூல்களில் கருத்துக்கே முதலிடம் தரப்படுகிறது; அவற்றில் கலையுணர்வு—அழகு—இரண்டாமிடத்தைப் பெறுகிறது. இரண்டாவதாக, 'உணர்ச்சி' என்பது இலக்கியத்திற்கு இன்றியமையாத ஒன்பது வகையான சுவையுணர்வுகளைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும். காவியப் புலவன் தன்னுடைய காப்பியத்தில் இன்பச்சுவை, அவலச்சுவை போன்றவற்றைப் பயன்படுத்துவதற்குக் கதையின் போக்கில் வாய்ப்புக்கள் பல கிடைக்கின்றன. அவன் அவ்வாய்ப்புக்களை நழுவ விடாமல் நன்கு பயன்படுத்திக் கொள்ளுகிறான். அதனால் அவனுடைய இலக்கியப் படைப்பு கலையழகு பெற்று மிளிர்கிறது. அறநூல் இயற்றும் புலவனுக்கு அத்தகைய வாய்ப்பே கிடையாது. எனினும், தான் கூறவந்த கருத்துக்களைக் கற்பவருக்குக் கவர்ச்சியாக அமையவேண்டும் என்ற நோக்கத்துடன், தன்னுடைய கருத்துக்களோடு உள்ளத்து உணர்ச்சிகளையும் இயன்றவரையில் அவன் குழைத்துத் தருகிறான். இவ்வாறு அவன் செய்யவில்லையானால், அவனுடைய இலக்கியப் படைப்பு விரைவில் மக்களால் மறக்கப்பட்டுவிடும்.

ஆகவே, 'வாழும் இலக்கியமாக' உள்ள திருக்குறள் போன்ற சிறந்த நீதிநூல்களில் உணர்ச்சிக்கு இடமில்லை என்று சொல்லுவது பொருந்தாது. ஏனெனில், உள்ளத்து உணர்ச்சியின் பொங்கலாக வெளிப்படுவதே கவிதை என்பது திறனாய்வாளரின் கருத்தாகும். ஆனால், ஒன்பான் சுவையுணர்ச்சிகளுக்கு நீதிநூல்களில் இடமில்லை என்பதை விட, அவற்றிற்குச் சிறப்பிடம் தரப்படுவதில்லை என்று நாம் கூறலாம். திருக்குறள் இதற்குக்கூட விதிவிலக்காக இருக்கிறது என்பதை, ஒரு முறை அந்நூல் முழுவதையும் படித்தால் நாம் எளிதில் உணரலாம். வள்ளுவர் வீரச் சுவையையும், அவலச்சுவையையும், இன்பச்சுவையையும் சிறப்பாகப் பயன்படுத்தியுள்ளார். 'படைச் செருக்கு' என்ற அதிகாரத்தில்,

> என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
> முன்நின்று கல்நின் றவர். (குறள் 771)
>
> கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
> மெய்வேல் பறியா நகும். (குறள் 774)
>
> விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
> வைக்கும்தன் நாளை எடுத்து (குறள் 776)

என்பன போன்ற குறட்பாக்களில் வள்ளுவர் வீரச்சுவை மலிந்த சொல்லோவியங்களைத் தீட்டிக்காட்டியுள்ளார்.

இனி, 'நல்குரவு' என்ற அதிகாரத்தில் அவலச்சுவை சிறப்பிடம் பெற்றுள்ளதை நாம் காணலாம்.

> இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
> கொன்றது போலும் நிரப்பு (குறள் 1048)

என்ற குறட்பாவில் வறுமையால் வாடி அல்லற்பட்டு, ஆற்றாது, அழுது, கண்ணீர் வடிக்கும் மனித இனத்தின் இதயக்குமுறல் அல்லவா எதிரொலிக்கிறது? இதைவிடச் சிறப்பாக வேறு யாரால் அவலச்சுவையைச் சித்திரிக்க முடியும்?

திருக்குறளின் மூன்றாவது பகுதியாகிய 'காமத்துப் பால்' இன்பச்சுவையை இனிது படம்பிடித்துக் காட்டும் எழிலோவியம் என்று சொன்னால் அது தவறாகாது.

எனவே, 'நீதிநூல்கள் உணர்ச்சியைத் தூண்டாமல் அறிவுறுத்துவன' எனப் பொதுவாகக் கூறப்படும் கருத்து எல்லா நீதிநூல்களுக்கும் ஓரளவிற்குத்தான் பொருந்திவரக்கூடியதாகும். திருக்குறள் போன்ற தனிச்சிறப்புமிக்க நீதிஇலக்கியம் இதற்கு விதிவிலக்கு. அதில் கருத்துக்களுக்கு முதலிடம் தரப்படுவதோடு, உள்ளத்து உணர்ச்சிகளுக்கும் தேவையான அளவிற்குச் சிறப்பிடம் தரப்பட்டுள்ளதை நாம் உணர்ந்து போற்ருமல் இருக்க இயலாது. இக்காரணங்களால் திருக்குறள் கருத்துக் குவியலாக அமையாது, கலையழகுவாய்ந்த நீதிப்பெட்டகமாக விளங்குகிறது என்று நாம் பெருமிதத்தோடு கூறலாம்.

## மகிழ்விப்பதைக் காட்டிலும் அறிவிப்பதே மிகுதி

இலக்கியம் இன்பம் தருவது என்று கருத்து தொன்றுதொட்டே இருந்துவருவதாகும். இன்பம் தருவதற்காக—மகிழ்விப்பதற்காக—இலக்கியம் படைக்கப்படுகிறது என்ற கொள்கை பழமையானது. இலக்கிய வளர்ச்சியின் முதன் நிலையாகிய 'பாணர் பாடினியர் காலத்தில்' மக்கள் பாணர்களுடைய பாடல்களைக் கேட்டு இன்புறுவதையே பேருகக் கருதினர். அதனுல், அவர்கள் பாணர்களை எங்குக் கண்டாலும் மகிழ்ச்சியுடன் வரவேற்றுப் போற்றினர். நாகரிகம் வளர்ச்சியுற்ற காலத்தில் மனிதனுக்கு இன்பம் தருகின்ற பொருள்களுள் ஒன்ருக இலக்கியம் கருதப்பட்டது. 'மங்கை, மது, கவிதை' என்ற மூன்றும் மனத்தை மகிழ்வித்து, மதியை மயக்குவன என்று இந்திய நாட்டில் தோன்றிய சமணர்களும் கருதினர். இவ்வையகத்தைச் சொர்க்கமாக மாற்றுவன 'கவிதையும், மதுவும், மங்கையுமென்று' பாரசீகநாட்டுக் கவிஞன் உமர்கயாம் பாடியுள்ளதை[3] அறியாதார் யார்? வாழ்க்கை முறைகளும் சூழல்களும் பேரளவிற்கு மாறிக் கொண்டுவரும் இவ்விருபதாம் நூற்ருண்டில் வாழும் மனிதனும், இலக்கியத்தை மகிழ்ச்சியுடன் பொழுது போக்குவதற்குரிய ஒரு கருவியாகவே கருதுகிருன். வாழ்க்கையில் உண்டாகும் நெருக்கடிகள், உணர்ச்சிக் கொந்தளிப்புகள், மோதல்கள் ஆகியவற்றிலிருந்து விடுபட்டுத், தன்னை

மறந்து இன்பத்தில் திளைக்க விரும்புகின்ற இன்றைய மனிதனுக்கு இலக்கியம் இன்புறுத்தும் கருவியாகவும், வாழ்க்கைப் பிரச்சினைகளிலிருந்து சிறிது நேரம் தப்பித்துக் கொள்ளுவதற்குரிய கருவியாகவும் தோன்றுவதில் வியப்பு ஒன்றும் இல்லை.

கவிதை இன்புறுத்துவதாக இருக்கவேண்டும் என்று சொல்லுகின்றபொழுது, அது மனிதனுடைய அனுபவத்தின் அடிப்படையில் எழுவதாகும் என்பதை நாம் மறத்தலாகாது. இலக்கிய இன்பத்தை நாம் மூன்று வகையாகப் பாகுபாடு செய்யலாம். எழுத்தாளனை எழுதுமாறு தூண்டும் இன்பம் ஒருவகை. அது அவனுடைய வாழ்க்கையில் உண்டாவதாகும். இலக்கியத்தைப் படைக்கின்றபொழுது அவன் அடைகின்ற இன்பம் மற்றொரு வகை; இலக்கியத்தைப் படிக்கின்றபொழுதும் பின்னர் நினைக்கின்றபொழுதும் படிக்கின்றவரிடம் எழும் இனிக்கும் நினைவுகள் மூன்றும்வகை இன்பமாகும். இவற்றுள் மூன்றுவது வகையாகக் குறிப்பிடப்பட்ட இன்பமே இலக்கியத்தைப் படிப்பதனுல் மக்கள் பெறும் இன்பமாகும்.

இவ்வின்பம், பெரிதும் மனிதனுடைய புலன்களுக்கு உணர்ச்சியின் நிறைவை ஊட்டுவதால் உண்டாவதாகும். ஓர் அழகிய இயற்கைக் காட்சியைக் கண்முன்னுல் கொண்டுவந்து நிறுத்துவதன்மூலம், கவிஞன் நம் அகக் கண்ணிற்கு இன்பம் தரமுடியும். அதைப்போன்றே இனிய ஓசை நயத்தையுடைய கவிதையைப் படைப்பதன் மூலம் நம் அகக்காதிற்கு அவன் இசை விருந்தளிக்கலாம். சிறந்த கவிஞர்கள் இவ்விரு இயல்புகளையும் ஒருங்கேயுடைய சிறந்த கவிதைகளையும், இலக்கியங்களையும் படைத்து உலகின்புறுமாறு வழங்கியுள்ளனர்.

சிறந்த பாட்டைப் படிப்பதனுல் நமக்கு உண்டாகும் இன்பத்தின் பெரும்பகுதி அழகிய சொல் படிமங்கள் (Images), இழுமெனும் இனிய ஒலி நயம், இவற்றைத் தம் அகத்தே கொண்டு திகழும் நயமிக்க தொடர்மொழிகள் முதலியவற்ருல் அமைகிறது. ஏற்றமிகு எண்ணங்களால்

எழும் இனிய இசையோடு, கருத்து வளமிக்க கவிதைகளும் இன்புறுத்துவனவாக அமைவது இங்குக் கருதத்தக்க தாகும்.

படிப்பவரை மகிழ்விப்பதற்குப் புலன்நுகர் இன்ப நினைவுகளைத் தூண்டுவதையே, ஆற்றல் மிக்க கருவிகளுள் ஒன்றாக இலக்கியம் பயன்படுத்திவருகிறது. இதனால் தான் கவிதையைப் 'பேசும் பொற்சித்திரம்' என்றும், அதைப் படைக்கும் கவிஞனைக் கூர்த்த மதியும் நுட்பமான புலனுணர்வும் உடையவன் என்றும் போற்றுவது மர பாக இருந்துவருகிறது. இதை நன்குணர்ந்த பிளேட்டோ, "மனிதனை நல்லமுறையில் வாழவொட்டாமல், புலன்நுகர் இன்பங்களை நாடி அலையுமாறு மயங்கச் செய்கிறது கவிதை"[4] என்று குறை கூறியதோடு, அதற்குத் தம் இலட்சியக் குடியரசில் இடம் கொடுக்கவும் விரும்பவில்லை.

இத்தகைய மகிழ்ச்சியையும், இன்பத்தையும் நீதி நூல்கள் அளிப்பதில்லை. அவை, இதற்குமாறாக மனிதனைச் சிந்திக்கத்தூண்டும் ஒழுக்கநெறிக் கருத்துக்களை எடுத் துரைப்பதையே தம்முடைய இலட்சியமாகக் கொண் டிருக்கின்றன என்பது இலக்கியத் திறனாய்வாளர் சில ருடைய கருத்தாகும்.

வெறும் கருத்துக்களையும், உண்மைகளையும் எடுத் துரைப்பது இலக்கியமாகாது என்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. ஆனால், "மகிழ்விப் பதையே இலக்கியத்தின் குறிக்கோள்" என்று கூறினால், அறிவு உலகம், அவற்றைப் புறக்கணித்துவிடும். பொழுது போக்கிற்குப் பயன்படும் கேலிக் கூத்துகளும், திடுக்கிடச் செய்யும் நிகழ்ச்சிகளும், வியப்புறச்செய்யும் புதிர்களும் நிறைந்த 'துப்பறியும் நாவல்கள்' போன்றவை அத் தகைய இலக்கியங்கள் என்று கருதி, அவற்றை அது ஒதுக்கிவிடும். மனிதனுடைய ஆற்றல்களுள் இரண்டு ஒரே வழியில் ஓடிக்கொண்டு இருக்கின்றன. அவற்றுள் 'பயன்' என்பது ஒன்று; மற்றொன்று 'தற்பண்பின் வெளிப் பாடாகு'ம் (self-expression). இவையிரண்டும் ஒன்றை யொன்று சந்திப்பதோடு, கலந்தும் விளங்கினால்தான் இலக்கியம் ஏற்றமுறும். இதனால், இலக்கியம் பொழுது

போக்கிற்காகப் பயன்படுவதோடு, நற்பண்பினை வெளிப் படுத்திப் பிறருடைய பண்புகளைப் பண்படுத்தும் ஆற்றல் உடையதாகவும் இருக்கவேண்டும் என்பதும் பெறப்படு கிறது. எனினும், கவிதையில் இலக்கிய நயங்கள் இடம் பெருமல் இருப்பதில்லை. கவிஞனுடைய அறிவாற்றல் திறனுக்கேற்ப அவை அமைகின்றன. பொதுவாகச் சிறந்த கவிஞன் ஒருவன் படைக்கும் இலக்கியத்தில் நாம் வெறும் இன்பத்தைமட்டும் பெறுவதில்லை. அதைவிடச் சிறந்த ஒரு பயனையும் நாம் பெறுகிரேம். வெறும் இன்பத்தைத் தான் அவ்விலக்கியம் அளிக்கிறதென்ருல், அவ்வின்பம் உயர்ந்ததாக இருக்க முடியாது. எனவே, இலக்கியம் அளிக்கும் இன்பம் நிலைபேறுடையதாக இருக்கவேண்டு மாஞல், மனிதவாழ்க்கையை மேம்பாடுடையதாக்கும் அறநெறிக்கருத்துக்களும், அனுபவ உண்மைகளும் அதில் இடம் பெற்றுத்தாஞக வேண்டும். அப்பொழுதுதான் அது 'வாழும் இலக்கியமாக' விளங்கமுடியும் என்பது T. S. எலியட்டின் கருத்தாகும்.[5] இதஞல் மகிழ்வூட்டு வதும், பண்படுத்துவதும் ஆகிய இருவகைப் பயன்களை யும் விளைவிக்கும் இலக்கியமே சிறப்புடையதாகப் போற்றப்படுவது புலஞகின்றது.

இலக்கியம் மக்கள் வாழ்க்கையைச் செம்மைப்படுத்து கிறது. அதஞல், அது விழுமிய கருத்துக்களை அறி வுறுத்தும் பணியை மேற்கொள்ள நேரிடுகிறது. அறி வுறுத்துவதில் இரண்டு வகை உண்டு. "நீ அதைச் செய்; இதைச் செய்யாதே!" என்று எடுத்த எடுப்பிலேயே உருட்டல் மிரட்டல்களோடு உண்மைகளை எடுத்துரைப்பது ஒரு முறை. பெரிதும் 'மூதுரைகள்' எனப்படும் நீதிநூல் களும், 'தரும சாத்திரங்கள்' எனப்படும் ஒழுக்க நெறிச் சட்டநூல்களும் மேற்கொள்ளும் முறை இதுவாகும். மற்ருென்று நயமாகக் காரியகாரணத் தொடர்புகளை எடுத்துக்காட்டி, 'எதைச் செய்தால் நன்மை உண்டாகும், எதைச் செய்தால் தீமை உண்டாகும்' என்பதை விளக்கி யுரைப்பதன் மூலம், படிக்கின்றவர் உள்ளத்தில் நல்ல கருத்துக்களைப் பதியவைப்பது. இவ்விரண்டாம் முறையே சிறந்த இலக்கியங்களில் இடம்பெற்றிருப்பதை நாம் காணுகின்ருேம்.

இவற்றுள் முதல் வகையைப் பெரும்பாலான நீதி நூல்கள் பின்பற்றியுள்ளன. அவை, மக்களைப் பார்த்துக் கட்டளையிடுகின்ற பாணியில் தம் கருத்துக்களை எடுத் துரைக்கின்றன. தமிழில் உள்ள ஆத்திசூடி, கொன்றை வேந்தன், உலகநீதி, வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி போன்ற நீதி நூல்களும், பதினெண்கீழ்க்கணக்கில் உள்ள இன்னா நாற்பது, இனியவை நாற்பது, நான்மணிக்கடிகை, திரிகடுகம், ஆசாரக்கோவை முதலிய நீதி நூல்களும் இவ் வகையைச் சேர்ந்தவை. திருக்குறள், பழமொழி போன் றவை இரண்டாம் வகையைச் சேர்ந்தனவாகத் தோன்று கின்றன.

நன்கு வரையறுக்கப்பட்ட நோக்கங்களோடு நீதி நூல் கள் இயற்றப்படுகின்றன. குறிப்பிட்ட சில உண்மை களையோ, கருத்துக்களையோ அறிந்து மனித இனம் நல் வாழ்வு வாழவேண்டும் என்று கருதுகின்ற சான்றோர்கள், அவற்றை முறைப்படுத்தித் தெளிவுறுத்துகின்றனர். அவ் வாறு அவற்றை எடுத்துரைக்கும்பொழுது, கற்போர் உள் ளத்தில் அவ்விழுமிய கருத்துக்கள் நன்கு பதிய வேண்டும் என்பதற்காகச் சில இலக்கியத்திறன்களை அவர்கள் கையாளுகின்றனர். அங்கிலேயில் நூலிற்குரிய பத்துவகை அழகுகளுள், அவர்கள் 'சுருங்கச் சொல்லுதலை' முதன்மை யானதாகக் கொள்ளுகின்றனர். அவற்றை விளங்கவைக்க முயலுகின்றனர். ஆனால், 'நவின்றோர்க்கு இனிமை' பயக்கும் வகையில் அவற்றில் நன்மொழியினைப் புணர்த்தி யும், ஓசையுடையதாக அமைப்பதையும்பற்றி அவர்கள் பொதுவாகக் கவலைப்படுவது இல்லை.

எனவே, நீதி நூல்கள் உணர்ச்சித் துடிப்பும், அனுபவக் கனிவும் கலந்த 'படைப்பு இலக்கியங்களாக'க் கொள்ளப் படுவது இல்லை. இக்காரணத்தால், நீதி நூல்கள் மகிழ் விப்பதைக் காட்டிலும் அறிவுறுத்தும் இயல்பு மிகுதியு முடையனவாகத் தோன்றுகின்றன. இதனால் நீதி நூல் களைச் சிலர் இலக்கியமாகக் கொள்வதற்குத் தயங்குகின் றனர். நீதி நூல்கள் நீதிகளைப் போதிக்கின்றன என்பதனால் அவர்கள் அவற்றை வெறுக்கவில்லை. அவற்றில் இலக் கியத்தின் இயல்புகள் போதிய அளவிற்கு இடம்பெறாமல்

போவதையே அவர்கள் குறையாகச் சுட்டிக்காட்டுகின்றனர். இலக்கிய இன்பம் நிறைந்த நீதிநூல்கள் பண்டைக் காலத்திலும் சிறப்புடையனவாகப் போற்றப்பட்டன; இன்றும் போற்றப்படுகின்றன.

**கலையழகு**

கலை என்பது அதனிடத்தில் பழகுகின்றவர்களை உணர்வு வலையில் சிக்கச்செய்வது. கலைகளிலே சிறந்தது இலக்கியக்கலை என்பது அனைவரும் அறிந்த உண்மை. இலக்கியத்திற்கு இன்றியமையாது தேவைப்படுவது கலையழகு. கலை கருத்தின் உறைவிடம்; அழகின் பிறப்பிடம்; இன்பத்தின் நிறைவிடம். ''நிறைந்த அழகை அனுபவிக்கும் பொழுது உண்டாகும் உணர்வு மீண்டும் வெளிவர முயல்கிறது; அங்ஙனம் வெளிப்படுகையில் அது கலை வடிவம் கொண்டுவருகிறது; வெளியிடுபவன் தன்மைக்கும் சக்திக்கும் ஏற்ற கலையாக அது முகிழ்க்கிறது.''[6] அதனால், அதில் அழகு இயற்கையாக அமைந்துவிடுகிறது. கலையழகிற்குரிய பண்புகள் ஒற்றுமை நயம், உயிர்த்துடிப்பு, வரம்பின்மை, ஓய்வு-உறக்கம் (Repose) என்பன. இவை அனைத்தும் பொருந்தியுள்ள பொருளையே கலையழகு வாய்ந்தது என்று நாம் கூறுகிறோம். கலைகளில் இருவேறு வகையான இன்பவூற்றுக்கள் உள்ளன. ஒன்று வெறுமனே எடுத்துரைக்கும் முறையாலும், வடிவஅமைப்பாலும் உண்டாகும் இன்பம். மற்றொன்று அறி குறிகளாலும் அறநெறிக் கருத்து வடிவங்களாலும் உண்டாகும் இன்பம். இவையிரண்டும் ஒருசேர இணைந்தும் இழைந்தும் உள்ள கலைகளே அழகுணர்ச்சியோடு, வற்றாத இன்பத்தையும் அளிப்பனவாகும்.

கலைகளிலே சிறந்தது இலக்கியக்கலை என்பது ஏன்? அறிவின் கலப்பு இல்லாத காரணத்தாலும், கேட்போரைக் கவரும் தன்மையாலும் இசையே சிறந்தது என்பர் சிலர். ஆனால், மக்கள் வாழ்க்கையின் சிறப்பியல்பாக உள்ள மொழியால் அமையும் காரணத்தாலும், இவ்வுலகில் தோன்றுதொட்டு ஆன்மிக நிலைபேற்றிற்குரிய கருவியாக அமைந்து பயன்தருவதாலும் அதைவிட இலக்கியமே சிறந்தது என்பர் பலர்.[7]

இவ்விலக்கியக் கலையின் எழிலுக்கும், ஏற்றத்திற்கும் காரணமாக விளங்குவது அதனிடத்துப் பொதிந்து கிடக்கும் கலையழகாகும். இக்கலையழகு இலக்கியத்தில் எவ்வாறு அமைகிறது என்பதைப்பற்றி இங்கு நாம் காண் போம். கவிதை அல்லது இலக்கியம் எதைத் தெரிவிக் கிறது (Communicate) என்பதைப்பற்றி ஆராய்வதனுல் அதன் உட்பொருளைப்பற்றியும் அதன் சிறப்புக்களைப் பற்றியும் தெரிந்து கொள்ளுகின்ருேம். இதற்கடுத்த நிலை யில் அந்தக் கருத்துக்களை எப்படி அது எடுத்துரைக்கிறது (Expression) என்பதை ஆராய்கின்றபொழுது, நாம் அத னுடைய வடிவத்தை-புறத் தோற்றத்தைப்பற்றிச் சிந்திக் கின்ருேம். அப்புறத் தோற்றமே இலக்கியத்தின் கலையழ கிற்கு நிலைக்களனுக அமைகிறது.

கவிஞன் தான் உணர்ந்த உணர்ச்சிகளுக்கு ஒரு வடி வம் கொடுக்க முயலுகிருன். வேறுவகையாகச் சொல்லு வதானுல், தான்பெற்ற அனுபவத்தைப் பிறருக்கு எடுத் துரைக்க அவன் முயலுகிருன். அம்முயற்சியின் பய னுகவே அவனுடைய அனுபவம் கலைவடிவம் பெறுகிறது. மனிதன் தான்பெற்ற அனுபவத்தை, உணர்ச்சியைப் பிறருக்கு எடுத்துரைப்பதற்குப் பயன்படுத்தும் கருவி களுள் கலைகளைப் போன்ற சிறப்புமிக்க வடிவம் உலகில் வேருென்றும் இல்லை. தன்னையறியாமலேயே அல்லது தன்னுணர்வு இல்லாமலேயே, அவன் தன் பணியைச் செய் கின்றபொழுது அதன் அருமைபெருமைகளை அழகுற வெளிப்படுத்தி விடுகிருன். தான் படைக்க விரும்பும் கவிதையோ, நாடகமோ நல்ல முறையில், தன் அனு பவத்தைப் பிரதிபலிக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு தன் கடமையில் கவிஞன் ஈடுபடுகிருன். அதனுல் தன்னை யறியாமலே அவன் 'நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வை யகம்' என்று பிறருக்கு அதை எடுத்துரைத்து விடுகிருன். தன்னுடைய கவிதையைப் பொதுமக்களோ, அறிஞர் களோ எப்படி வரவேற்பார்கள் அல்லது அதனுல் இயக்கப் படுவார்கள் என்பதைப்பற்றி யெல்லாம் அவன் கவலைப் படுவதில்லை. எந்தக் கவிஞன் தன் கவிதையைப் படைக் கின்றபொழுது, அதன் மூலம் தன் உணர்ச்சிகளை எப்படி வெளிப்படுத்தலாம்—பிறருக்குஉரைக்கலாம்—என்பதைப்

பற்றிக் கவலைப்படுகின்றானோ அவனுடைய படைப்புத்தரம் குறைந்ததாக அமைந்துவிடும். கலைஞன் பெற்ற அனுபவத்தை, எத்துணை அளவிற்குச் சிறப்பாக ஒரு கலைப் பொருள் எடுத்துரைக்கிறதோ, அத்துணையளவிற்குத் தான் அத்தகைய அனுபவ உணர்ச்சியைப் பிறரிடத்து அது கிளர்ந்தெழுமாறு செய்யமுடியும்.

ஆகவே, கவிஞன் தன்னுடைய படைப்பில் தற்சார் பற்ற பண்புகள் இடம்பெற வேண்டும் என்று நினைத்து, தனி மனித அனுபவத்திலிருந்து முற்றிலும் விடுபட்ட கட்டமைப்பை உடைய கவிதையைப் படைப்பானானால், அதில் வாழ்க்கையோடு தொடர்பற்றதும், உணர்ச்சியும், கலையழகும் குன்றியதுமான பண்புகளே அமைந்து விடும். இத்தகைய கவிதைகள், அறிவாராய்ச்சித்துறைக் குரியனவாகக் கொள்ளப்படுமே யொழிய, இலக்கிய மாகக் கருதப்படா.

இதைப் போன்றே, யாராகிலும் தான் பெற்ற அனுபவத்தையும், உணர்ந்த உணர்ச்சிகளையும் கவிதையின் வாயிலாக எடுத்துரைப்பதையே நோக்கமாகக் கொண்டு அதற்காக அரும்பாடுபட்டு, அவற்றை வெளிப்படையாகத் தோன்றுமாறு படைப்பார்களானால், அது அவர்களுடைய உணர்ச்சித் தூண்டுதல்களைச் சித்திரிப்பதாக அமையுமே ஒழிய, பிறரிடத்து அத்தூண்டுதல்களை எழுச்சியுறச் செய்யாது. மேலும், அது முழுநிறைவுடைய கலைப்படைப் பாகவும் அமையாது. அத்துடன் அக்கலைஞனுக்கு அம் முயற்சியில் தோல்வி உண்டானாலும் உண்டாகிவிடும். எனவே, கலைப்பொருள்களைப் படைக்கும் கலைஞனுடைய அனுபவத்தையும் உணர்ச்சித் தூண்டுதல்களையும் மறை முகமாக எடுத்துரைப்பதாக அப்பொருள் அமைய வேண்டும். அப்பொழுதுதான் அவற்றைப் படைத்த கலைஞர்கள் தம் முயற்சியில் வெற்றி பெறமுடியும்.

சிறந்தவை என்று போற்றப்படும் பயன் மதிப்புக் களின் களஞ்சியமாகக் கலைகள் விளங்குகின்றன. அவை தனிச்சிறப்பு வாய்ந்த மனிதர்களிடையே ஊற்றெடுக் கின்றன; அவர்களுடைய வாழ்க்கையில் நெடுநேரம் நிலை பெற்று நின்ற அனுபவத்தின் வெளிப்பாடாக அவை

தோன்றுகின்றன. அவர்கள் தம் வாழ்க்கையில் பெற்ற அனுபவத்தை அடக்கியாளும் ஆற்றல் உச்சநிலையில் இருக்கின்றபொழுது அவை முகிழ்க்கத் தொடங்கு கின்றன. அத்தகைய நேரத்தைத்தான் நாம் 'படைக்கும் உணர்ச்சி மிக்க நேரம்' என்று சொல்லுகிறோம். அச்சமயத் திலேயே கலைப்பொருள்கள் பிறக்கின்றன. படைக்கப் படும் நேரத்தாலும், அனுபவத்தை எடுத்துரைக்கும் கருவி யாக அமையும் காரணத்தாலும் அவை சிறந்த பயன் மதிப் புடையனவாக நிலைபெற்று விளங்குகின்றன.

பிறரால் அன்றாட வாழ்வில் எடுத்துரைக்க இயலாத அல்லது சமுதாயத்தின் தூற்றலுக்கு அஞ்சி எடுத்துரைக்க நடுங்குகின்ற அனுபவங்களை யெல்லாம், கவிஞன் ஒருவனால்தான் கவலையின்றி முழுமையாகப் பிறரும் உணர்ந்து, மெய்ம்மறக்கும் வகையில் எடுத்துரைக்க முடியும். கவிஞன் பிறரால் கண்டுணர முடியாதவற்றைக் கண்டுணர்கிறான்; மற்றவர்களால் எடுத்துரைக்க முடியாத வற்றைக் கவிஞன் ஒருவன்தான் உரிமையுடனும், திறமை யுடனும், துணிச்சலுடனும் எடுத்துரைக்கின்றான். இதனால் கவிஞன் முக்காலமும் உணர்ந்த ஞானியாகவும், கலைஞ னாகவும், மதகுருவாகவும் காட்சி தருகிறான். அவன் படைக்கும் கலைகளை நல்ல முறையில் அணுகினால், அவை எத்தகைய அனுபவங்களின் வெளிப்பாடு என்பதையும், மற்றவற்றைக் காட்டிலும் அவை எத்தகைய பயன் மதிப்புடையவை என்பதையும் நாம் நன்குணர முடியும்.[8]

இதை நாம் புரிந்துகொண்டால், தன்னுணர்ச்சிப் பாடலாக இருந்தாலும், காப்பியமாக இருந்தாலும், நாடக மாக இருந்தாலும், நீதிநூலாக இருந்தாலும், உணர்ச்சி களை வெளிப்படுத்துவதற்கு அவன் கையாளும் முறை களையும், அனுபவத்தைப் பிறர் உணருமாறு எடுத்தியம்பு வதற்குப் பின்பற்றும் வழிவகைகளையும் அடிப்படையாகக் கொண்டே, அவற்றின் கலைத்திறன் மதிப்பிடப் பெறு கிறது என்ற உண்மையை எளிதில் உணரலாம்.

எனவே, நீதிநூல்களிலும் கலையழகு உண்டு என்பதும், அது தம் அனுபவத்தைக் கவிஞன் எடுத்தியம்பும் முறை யின் சிறப்பையொட்டி அமைகிறது என்பதும் மறுக்க முடியாத உண்மைகளாகும்.

**நீதி இலக்கியத்தின் முதன்மைப் பண்பு**

நீதி இலக்கியத்தின் இயல்புகளை அறிவதற்கு முன்னர், இலக்கியத்தின் பொதுப்பண்புகளையும், சிறப்பியல்பு களையும் நாம் அறிதல் நலம் பயக்கும். எழுத்தாளர்கள் எழுதிக் குவிப்பதை யெல்லாம் இலக்கியம் என்று நாம் ஏற்றுக் கொள்ளுவதில்லை. மக்கள் படித்து இன்புறத் தக்கனவாகவும், சிறந்த கருத்துக்களைத் தெரிவிப்பனவாகவும் அமையும் படைப்புகளையே இலக்கியம் என்று அறிஞர்கள் போற்றுகின்றனர். எந்த எழுத்தாளன், தான் எடுத்துக் கொண்ட பொருளிலும் அதை எடுத்தியம்பும் முறையிலும் பொதுமைப்பண்பு திகழுமாறு படைக்கின்றானோ, அந்த எழுத்தாளனுடைய படைப்பே இலக்கியமாகக் கருதப் படுகிறது. மனித இனம் அறிந்தவற்றுள்ளே சிறந்த வற்றையும், சிந்தித்தவற்றுள்ளே சிறந்தவற்றையும் தன்னகத்தே கொண்டு திகழ்வது இலக்கியம் என்று அறிஞர் கள் கூறுவர். இவ்விளக்கம் நீதி இலக்கியத்திற்குச் சிறப் பாகப் பொருந்துவதாகும்.

பொதுவாக இலக்கியத்தைப் படைக்கும் கலைஞன், தான் உணர்ந்தவற்றை விளக்கியுரைப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறான். இவ்வகையில் அவன் தன்னைத் தானே புதிதாகக் கண்டுகொள்ளுவதற்கு அல்லது தன் வேட்கைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்குரிய ஒரு கருவியாகவே இலக்கியத்தைக் கருதுகிறான். சிலர் படிப் பவரைப் பற்றிக் கவலையுறுது மனநிறைவிற்காகவே இலக்கியத்தைப் படைப்பதுமுண்டு. ஆனால், உலக இலக் கியத்துள் பெரும் பகுதி, மக்களுக்கு மகிழ்வூட்டும் நோக்கத்தோடும், அறிவுறுத்தும் அல்லது தங்கள் கருத் தினை ஏற்குமாறு படிப்பவரை இணங்கச் செய்யும் நோக் கத்தோடும் படைக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

புதிதாக எடுத்துரைக்கும் கருத்துக்களை மட்டும் கருத்தில் கொண்டு ஒரு படைப்பினை நாம் மதிப்பிடுவ தில்லை. மனித வாழ்க்கையின் முதன்மையான உண்மைகள்

சிலவற்றை அழகாகவும், கவர்ச்சியாகவும், உணர்ச்சித் துடிப்போடும் எடுத்துரைக்கின்றனவா என்பதை அளவு கோலாகக் கொண்டே இலக்கியங்கள் மதிப்பிடப்படு கின்றன. அவ்வுண்மைகளும் அனைவரும் நன்கறிந்தனவாக இருத்தல்வேண்டும். அவற்றை அறிவுறுத்துவது இலக் கியப் படைப்பாளனுடைய நோக்கமன்று. மனித உணர்ச்சிகளைப் போற்றி, அவற்றின் மறை பொருள் களாகத் தோன்றுகின்ற உண்மைகளை விளக்கியுரைக்கும் வகையில் அவன் அவற்றை எடுத்துரைக்கின்றான். இத ைல், சிறந்த இலக்கியத்துள் அறிவு நலம் கனிந்த கருத்துக் கள் மனித வாழ்க்கையின் உண்மைகளுக்கும் விதிகளுக்கும் பொருந்தி வருவனவாக அமைகின்றன. எனவே, ஆசிரியர் உணர்ந்த வாழ்க்கை உண்மைகளைக், கற்பனை வண்ணத் தோடு எடுத்தியம்புவதே இலக்கியம் என்று கருதப் படுகிறது. கருத்துக்களின் உண்மை இயல்புகளை அடிப் படையாகக் கொண்டே எடுத்துரைக்கும் முறை சிறப் புற்று விளங்குகிறது. புறத்தோற்றத்தில் தோன்று வதைப் போன்று, வாழ்க்கையை அப்படியே படம்பிடித்துக் காட்டவேண்டிய கட்டாயம் இலக்கியத்திற்குக் கிடையாது. அது மனித வாழ்க்கையின் உள்ளார்ந்த பண்புகளைப் பெரிதாக்கிக்காட்டும் நுண்நோக்காடி (Microscope) யாகும்.

எனவே, இலக்கியம் என்பது மனிதப் பண்பை அடிப் படையாகக் கொண்டது ; மனித உணர்ச்சிகளை மதித்துப் போற்றுவது; மனித வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுவது ; மனிதனை மனிதனாக வாழுமாறு நெறிப்படுத்து வது என்று நாம் கூறலாம்.

நீதி இலக்கியம் என்பது மனிதனை மனிதனாக வாழச் செய்வதற்கும், மாண்பு மிகு மனிதனாகச் சிறப்புற்று விளங்கச் செய்வதற்கும் வழிகாட்டும் அறநெறிக் கருத்துக் களை எடுத்துரைப்பதாகும். நீதி இலக்கியத்தைப் படைப் போர் தங்கள் உள்ளத்திற்குக் கூறுகின்ற முறையிலோ உலகை நோக்கி உரைக்கின்ற முறையிலோ அறநெறிக் கருத்துக்களை அறிவுறுத்துகின்றனர். அவர்களுடைய எண்ணமெல்லாம் அறிவுரை கூறுவதிலேயே தோய்ந்து

கிடக்கிறது. அதனால் அவர்களை நாம் அறவுரை போதிக்கும் சமயாசாரியராகக் கருதிவிடக்கூடாது. அவர்கள் அறிவுறுத்துவதையும், வழிகாட்டுவதையும் தங்கள் கடமையாகக் கொண்டவர்களாவர். கவிஞர்களோ அறிவுறுத்துவதோடு, நம்முடைய உணர்ச்சிகளைக் கிளர்ச்சியுறச் செய்கின்றனர்; நாம் உணர்ந்தவற்றையே வாழ்க்கைச் சூழல்களுக்கேற்ப, அறிந்து போற்றுமாறு கலையுணர்வோடு கலந்து அவர்கள் தருகின்றனர்.

சிறந்த கவிஞர்கள் நீதிநூல் ஆசிரியர்களாகவும் பண்டை உலகில் சிறப்புற்று விளங்கினர் என்பதை உலக இலக்கிய வரலாறு நமக்கு அறிவிக்கிறது. அவர்கள் மிகச் சிறந்த அறநெறிக் கருத்துக்களை எடுத்துரைக்கின்ற பொழுது, இலக்கியத்தின் சிறப்பியல்புகளும், கலையழகும் குன்றாத வகையில் திறம்பட எடுத்துரைத்துள்ளனர். எனவே, கவித்திறனும், நீதிக் கருத்துக்களும் ஒருங்கே பொருந்திவாராது என்று சொல்லுவது பொருத்தமில்லை. நீதி இலக்கியத்தை இயற்றும் கவிஞன் சிறந்த கலைஞனாக இருப்பானானால், அதில் அறவுரைகளுக்கு அவன் முதன்மையிடம் கொடுத்திருந்த போதிலும், இன்புறுத்தும் கவிதைப் பண்புகளும், கலையழகும் கற்பவர் உள்ளத்தைக் கவரும் வகையில் அவனால் இடம்பெறச் செய்யமுடியும்.

நீதி இலக்கியத்திற்கும், பிற இலக்கியங்களுக்கும் இடையே உள்ள வேற்றுமை, கருத்துக்களை அறிவுறுத்துவதைமட்டும் அடிப்படையாகக் கொண்டது அன்று; அவற்றை எடுத்துரைக்கும் முறையில் அமையும் வேறுபாடே அவற்றை இருவேறு வகைப்பட்ட இலக்கியங்களாகக் கருதுமாறு செய்கின்றன. பொதுவாக நீதி இலக்கியத்தை இயற்றிய கவிகள் பலர், தங்கள் கடமை அறிவுறுத்துவது மட்டும்தான் என்று தவறாகக் கருதியதன் விளைவாக, அவர்களுடைய படைப்புகள் கலைநயமில்லாக் கவிதைகளாக—வெறும் சொல்லடுக்குகளாக அமைந்துவிட்டன. ஆனால், சிறந்த கலையுள்ளத்தோடு, சிந்தனைத் திறனும், மெய்ப்பொருள் ஆராய்ச்சியில் நாட்டமும் கொண்ட நல்லறிஞர்கள் தங்கள் கொள்கைகளையும்,

கோட்பாடுகளையும் உணர்ச்சி என்ற வண்ணத்தில் குழைத்து, கற்பனை என்ற மெருகிட்டுப் பொலிவுடன் விளங்குமாறு உலகிற்கு அளித்துள்ளனர். அதனுல், அவை கலைநயமிக்க கலைப் பொருள்களாகவே தோன்றுகின்றன. இத்தகைய இயல்புகளையுடைய நீதிநூல்களில் வாழ்க்கையின் உண்மைகளும், ஒழுகலாறுகளும் புதியதோர் பொலிவும், உள்ளத்தைக் கவரும் வலிவும், பயன்மதிப்பும் பெற்று விளங்குகின்றன.

இதுவரை நாம் மேற்கொண்ட ஆய்விலிருந்து வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு தோன்றுவது இலக்கியம் என்பதையும், வாழ்க்கையைத் திருத்துவதாகவும், திருத்தமுற்று அமைவதற்கு அறிவுரை கூறுவதாகவும் அமைவது நீதி இலக்கியம் என்பதையும் அறிகின்ருேம். அந்நீதி இலக்கியம் பெரும்பாலும் உணர்ச்சியைத் தூண்டாமல் அறிவுறுத்துவதாகவும், இன்புறுத்துவதைக் காட்டிலும்' அறிவிப்பதை முதன்மையான நோக்கமாகக் கொண்டதாகவும், கலையழகைவிடக் கருத்திற்கே முக்கியத்துவம் தருவதாகவும் சொல்லப்படுவது ஓரளவிற்கு உண்மையென நாம் ஒப்புக் கொள்ளலாமே யொழிய, முற்றிலும் உண்மையெனக் கொள்ளுவதற்கு இயலாது என்பதும் பெறப்படுகிறது.

## குறிப்புகள்

1. Winstatt, K. William and Brooks, Cleanth: Literary criticism, A short History, p. 426. Oxford Book Company, Calcutta, 1964.

2. Winchester, C. T: Some Principles of Literary Criticism, p. 61. Macmillan & Co; London, 1960.

3. தேசிக விநாயகம்பிள்ளை: மொ. பெ. உமர்கயாம் பாடல்கள், பா. எண்: 106: பாரி நிலையம், சென்னை, 1951.

4. Plato: Republic, Book X, p. 407; Tr. by Rouse. W. H. D. Mentor Book; N. Y.: 1956.

5. Eliot: T. S: On Poetry and Poets, p. 18. Faber and Faber, London, 1957.

6. Croce, B: Aesthetic - As Science of Expression, p. 20. Tr. by Douglas, Ainslie, Macmillan & Co, London, 1909.

7. Abercrombie, L: The Idea of Great poetry, p. 25. London. 1926.

8. Richards, I. A: Principles of Literary Criticism, p. 33, Routledge & Kegan Paul, London, 1961.

# 4. நீதி நூல்களும் இலக்கிய இயல்புகளும்

இலக்கியம் கடந்த காலத்தின் கன்னி; நிகழ்காலத்தின் மனைவி; எதிர் காலத்தின் தாய். அவளுடைய கன்னிப் பருவத்தின் இன்பக் கனவுகளையும் எழில்மிகு கற்பனைகளையும் எடுத்தியம்புவதே கவிதை. அது கடந்த காலத்தைப் படம்பிடித்துக் காட்டுவதாலும், நிகழ் காலத்தைக் காண்பதாலும், எதிர் காலத்தை ஓர்ந்து உணர்வதாலும், சமகால மக்களிடத்தில் தனது அனுபவங்களைப் பகிர்ந்து கொள்வதாலும், கடந்த காலத்தின் கன்னியாகவும், நிகழ் காலத்தின் மனைவியாகவும், எதிர் காலத்தின் தாயாகவும் விளங்குகிறது.

**இலக்கியமும் கவிதையும்**

மனித இனத்தின் அனுபவங்களைக் கலைநயத்துடன் எடுத்துரைப்பதே இலக்கியம். இலக்கியம், கவிதை என்ற சொற்களைப் பெரும்பாலும் ஒரேவகையான பொருளில் வழங்குவது மரபாகும். சொற்களைப் படைப்பாற்றலுடனும் இனிய ஒலிநயத்துடனும், மறவாமல் மனத்தில் நிலைத்து நிற்கத்தக்க பொருள் ஆழத்துடனும் பெற்றுள்ளது இலக்கியமென்றால், அது கவிதையின் சாரமாகத்தானிருக்க முடியும். நாடகமும், நாவலும், கட்டுரையும் கவிதை நடையில் எழுதப் பெறுகின்றபொழுதுதான் அவை சிறப்புற்று விளங்குகின்றன. கவிதையோ. இலக்கியத்தின் ஒரு பகுதிதான். ஆயினும், இலக்கியத்தைச் சிறப்புறச் செய்வதும், அதன் முழுநிறைப் பிரதிநிதியுமாக இருப்பதும் அக்கவிதைதான். இலக்கியத்தின் இயல்புகளைச் செறிவு மிக்கவகையில் போற்றி வளர்த்ததன் பயனே கவிதையாகும். விரிந்ததும், பரந்துபட்டதும் சிக்கலானதுமான

அனுபவங்களைக் கவிஞன் வெளிப்படுத்துவதற்கு முயலுகிறான். இதற்கு, அவன் யாப்பு முறை சார்ந்த செய்யுள் நடையின் மூலம் பல திறப்பட்ட சொல்படிமங்களைக் (Imageries) கவிதையில் பயன்படுத்துகிறான். அனுபவங்களை இத்தகைய முறையில் வகைப்படுத்தி யுரைப்பது எல்லா வகையான இலக்கியங்களிலும் காணப்படும் முதன்மைப் பண்பாகும். கவிதையைக் காட்டிலும் இலக்கியம் என்பது விரிந்த பொருளுடையது என்பதை யாரும் மறுக்க இயலாது. ஆனால், அண்மைக்காலம் வரையில் கவிதை ஒன்றுதான் இலக்கியமாகக் கருதப்பட்டுவந்ததை உலகம் நன்கறியும். கற்பனை வளமும் கலையழகும் வாய்ந்த இலக்கியங்கள் இன்று பல வகையாக வளர்ந்துள்ளன. இந்தியாவைப் போன்ற கீழ்த்திசை நாடுகளில் ஐரோப்பியருடைய வருகை வரையில், கவிதையொன்றே இலக்கியத்தின் பிரதிநிதியாகச் சிறப்புற்று விளங்கியதைக் காணுகின்றோம். இலக்கியம் இன்று பல கிளைகளாகப் பிரிந்து வளர்ச்சியுற்ற போதிலும், அவற்றிற் கெல்லாம் வழிகாட்டியாகக் கவிதைக்கலை சிறப்புற்று விளங்குகிறது. இதனால்தான், இலக்கியம் என்பது பெரும்பாலும் கவிதையின் நெகிழ்ச்சிமிக்க வடிவாகவும், கவிதை என்பது இலக்கியத்தின் செறிவுமிக்க வடிவாகவும் கருதப்படுகின்றன. இதனைப் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள்,

"இலக்கியம் என்னும் கலைக்குடும்பத்தில் மூத்தமகளாய்ப் பிறந்து விளங்கிய பாட்டு என்னும் செல்வி, தொடக்கத்தில் ஒரே செல்வ மகளாக விளங்கிய காலம் பழங்காலம். காவியம், நாடகம், அகம்புறம் முதலாய எல்லாக் குடும்பப் பொறுப்புக்களையும் அந்த மூத்த மகளே மேற்கொண்டு செம்மையாக நடத்தி வந்தாள். அவளை அடுத்துத் தங்கையர் பிறந்து வளர வளர, அப்பொறுப்புக்கள் ஒவ்வொன்றாய் அவள் கையை விட்டு நழுவலாயின. இன்று அவளுடைய தங்கையர் தொடர் கதை, சிறுகதை, நாடகம், கட்டுரை முதலியன, மேற்கொண்டு தமக்கையை விட்டுப்பிரிந்து செல்வாக்குடன் வாழ்கின்றனர். மூத்த மகளாகிய பாட்டு, பிறந்த வீட்டிலேயே நின்று, பழைய செல்வங்களைத் தங்கையர்க்கு வாரி வழங்கிய பின், தன்னுணர்ச்சி, சமுதாய உணர்ச்சி ஆகிய இருவகைப் பொறுப்புக்கள் மட்டும் உடையவளாய் வாழ்கின்றாள்; தன் முன்னைய சீரும் சிறப்புமான பெருவாழ்வை நினைந்து இன்புறும் பேறு அவளுக்கு இன்று உள்ளது."[1]

என்று தெளிவுறுத்தியுள்ளார்.

'கற்பனை வளமும் கலையழகும்' நிறைந்தது கவிதை என்ற கருத்துத்தான், இலக்கியத்தில் சிறந்தது கவிதை என்பதை அறிவிப்பதாக அமைகிறது. இன்றய நிலையில், எழுதப்படுவன அல்லது சொற்களின் மூலம் எடுத்துரைக்கப்படுவன யாவும் விரிந்த பொருளில் இலக்கியம் என்று கொள்ளப்படுகின்றன. அறிவியல் அல்லது அறிவு நலமிகுந்த ஆராய்ச்சிகளை இலக்கிய மென்று கொள்ளுவதில்லை. பயன் கருதித் தனிவாழ்விலோ, வாணிகத்திலோ பொருளீட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் எழுத்துரைகளையெல்லாம் நாம் இலக்கியம் அல்லவென்று ஒதுக்கி விடுகிறோம்.

மனிதனின் உணர்வுநிலைகளை உருவாக்கும் பல்வேறு வகையான எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் கொண்ட மனத்திறனிலிருந்து தோன்றுவதோடு, அவற்றிடையே நல்லதொரு இயைபையும் இலக்கியம் போற்றி வளர்க்கிறது. அதனால், அதைக் 'கற்பனை வளமிக்க எழுத்துரைகள்' என்று நாம் கூறுகிறோம். மனிதனின் உணர்வுநிலைகளின் பல்வேறு கூறுகளும் ஒருங்கு இயைந்து செயற்படுதலைக் கருத்தில் கொண்டே, ஆங்கிலேய திறனாய்வாளர்களான டிரைடனும் (Dryden), கோல்ரிட்ஜும் (Coleridge), 'கற்பனை என்பது தனிச் சிறப்புமிக்க கவிதைத் திறனாகும்' என்று குறிப்பிட்டுள்ளனர். இக்கருத்து பொதுப்படையானதே யொழிய, உளவியல் சார்புடையது அன்று.

### இலக்கியத்தின் நோக்கம்

இனி, இலக்கியத்தைக் 'கலையழகு' வாய்ந்தது என்று கூறுகின்றபொழுது இசை, ஓவியம், முதலிய அழகுக் கலைகளைப் போன்று, இலக்கியமும் இன்புறுத்துவதையே முதன்மையான நோக்கமாகக் கொண்டிருக்கிறது என்பதை நாம் உணருகிறோம். மனிதனுக்கு மகிழ்ச்சியை அளிப்பனவற்றுள் உயர்ந்ததும் சிறந்ததுமாகப் போற்றப்படுவது இலக்கியக் கலையாகும்.

இன்புறுத்துவதை மட்டும் இலக்கியத்தின் நோக்க மாகக் கூறுவர் சிலர். ஆனால், இன்புறுத்துவதோடு வாழ்க்கையைத் திருத்தி, செம்மைப் படுத்துவதாகவும் இலக்கியம் விளங்கவேண்டும் என்பதே பேரறிவாளர் களின் முடிபாகும். ஏனெனில், இலக்கியம் மனித வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு தோன்றுவது; மனித வாழ்க்கையைப் பிரதிபலிப்பதன் மூலம் அது தனிச் சிறப்புமிக்க கலையாகத் திகழ்வது. எனவே, அது வாழ்க் கையில் தீவிரப் பங்கு கொள்ளுகிறது; வாழ்க்கையை ஆராய்கிறது; அதன் நிறைகுறைகளை அம்பலப்படுத்து கிறது; அதிலிருந்து படிப்பினைகளைப் பெறுகிறது. மேலும், தேவையானால் தீர்ப்பு வழங்குவதும் இலக்கியத்தின் நோக்கமாகிறது. இலக்கியம் வாழ்க்கையிலிருந்து பிறக் கிறது; ஆனால், எதிர்காலத்தைச் சித்திரிப்பதன் மூலம், அது வாழ்க்கையை வென்று விடுகிறது.

ஆகவே, இலக்கியம் என்பது வாழ்க்கையால் படைக்கப்படுகிறது; வாழ்க்கைக்கும் மனிதனுக்கும் புத் துயிர் அளிக்கிறது எனலாம். அழகை விரும்பிப் போற்று வதற்கும், நன்மை தீமைகளைப் பகுத்துணருவதற்கும் அது நமக்குப் பயிற்சி அளிக்கிறது. மனிதனின் தன்னறிவை வெளிப்படுத்துவது இலக்கியம். அதன் மூலம்தான் அவன் தன்னுடைய சிறப்புமிக்க உண்மையான வடிவத்தை அறிந்து கொள்ள முயலுகின்றான்.

**இலக்கிய இயல்புகள்**

கலைகளுள் சிறந்தது இலக்கியம். அதன் சிறப்புமிக்க பண்புகள் நான்கு. அவை உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் என்பன. அவை இலக்கியத்தின் மூத்தமகளாகிய கவிதைக்கே சிறப்பாக அமைந்த பண்புகள் எனலாம். உண்மையில் கவிதை என்பது இத்தகைய இலக்கியத் திறன்களால் மட்டும் பிறப்பதன்று; அது இயற்கை ஆற்றலினால் மலர்வது.

ஒரு கவிஞனுக்குக் கவித்திறனும், உத்தியும், இவற்றை வெளியிடும் ஆற்றலும் வேண்டும். இவற்றோடு, அவ னுள்ளே ஏதோவொன்று கனன்று எரிந்து கொண்டிருக் கிறது; அது முட்டி மோதி வெளியே வர முயலுகின்றது;

இறுதியில், ஓர் ஒளிச்சுடராக அது வெளிப்படுகிறது. அந்நிலையில் அவனுடைய உணர்ச்சிப் பெருக்கு உயிர்த் துடிப்புடைய கவிதையாக மலர்கிறது.

எனவே, கவிதையின் உயிராக இருப்பது உணர்ச்சி எனலாம். சொல், ஒலிநயம், தாளம் முதலியவை உணர்ச்சியை வெளிப்படுத்த உதவும் கருவிகளேயாகும். அவற்றின் வாயிலாக உள்ளத்தில் கொந்தளிக்கும் உணர்ச்சிகள் கவிதையின் வடிவிலே வெளிப்படுவதோடு, நிலைத்த வாழ்வையும் பெற்றுவிடுகின்றன. இக்கருத்தை இங்கிலாந்தின் 'இயற்கைக் கவிஞர்' வோர்ட்ஸ் வொர்த்து,

> "ஆற்றல்மிக்க உணர்ச்சிகள் தானாக பொங்கிவழிதலே பாட்டாகும். மனத்தில் நீண்ட அமைதி நிலவுகின்ற பொழுது, கவிஞன் உணர்ச்சிகளைத் திரும்ப நினைவுபடுத்திக் கொள்ளு கின்ற நிலையில் பாட்டு பிறக்கிறது. இன்னும் ஒருவகையான எதிர்ச்செயலால் உணர்ச்சியைத் திரும்பப் பெறச் செய்கிறது; படிப்படியாக மனவமைதி மறைந்துவிடுகிறது. ஆழ்ந்து சிந்திப் பதற்கு முன்பு இருந்த மனவுணர்வோடு தொடர்புடைய உணர்ச்சி. பையப்பையத் தலையெடுக்கிறது. அது மனத்தில் நிலைத்து நிற்கத் தொடங்குகிறது. இத்தகைய மனநிலையின் வெற்றிமிக்க படைப்புக்கள் பொதுவாகப் பாடல் வடிவத்தைப் பெறுகின்றன"[2]

என்று தெளிவுறுத்தியுள்ளார்.

இவ்வுணர்ச்சிதான் கவிஞனுடைய உள்ளத்தில் கற்பனையை எழுப்புகிறது. அக்கற்பனை உள்ளதை உணர்ந்தவாறு வெளியிடுமாறு கவிஞனைத் தூண்டுகிறது. அதனால் அவன் காலத்தையும், இடத்தையும் எளிதில் கடந்து, தான் உணர்த்த விரும்பும் கருத்துக்களைக் கவர்ச்சியுடையதாகப் புனைந்து கூறுகிறான். அப்பொழுது அவற்றை உவமை, உருவகம் முதலியவற்றால் அழகுபடுத்தியும் வெவ்வேறாக உள்ள பொருள்களை இயைபுபடுத்தியும், வாழ்க்கையின் அனுபவத்தை வெவ்வேறான வண்ணங்களால் தீட்டியும் காட்டுகிறான். அப்பொழுது அது கலை வடிவம் பெறுகிறது. அந்தக் கலைவடிவம் கற்பவர் உள்ளத்திலும் அதே கற்பனையைப் பதியவைத்து உணர்ச்சியைத் தூண்டுகிறது.

இலக்கியம் உணர்த்தும் கருத்து உயர்ந்ததாகவும் சிறந்ததாகவும் இருக்க வேண்டும். கருத்து என்பது படிப் படியாகத்தான் கனிகிறது. அது கவிஞனின் இதயத்தில் நெடுங்காலம் குடியிருக்கிறது. அங்கு நன்கு வளர்ந்து முதிர்ந்தவுடன், அது கவிதையாக வெளிப்படுகிறது. கவிதையில் இடம்பெறும் கருத்துக்கள் மனிதவாழ்க்கை யின் மறை பொருளாக உள்ள அனுபவக் கருவூலத்தை அடிப்படையாகக் கொண்டவை. அவை என்றைக்கும் நிலைத்து நிற்கக்கூடிய உண்மைகளாகும். இதனை ருஷியக் கலைஞர் மாக்ஸிம் கார்க்கி,

> "இலக்கியம் மனிதன் தன்னைத்தான் அறிந்துகொள்ளத் துணை செய்வது; தன்னம்பிக்கையை ஊட்டி வளர்ப்பது; வலுப்படுத்து வது; உண்மையைக் காண்பதற்கான முயற்சிக்கு ஆதரவு அளிப் பது; மக்களிடத்தில் உள்ள நல்லனவற்றைக் காண வகைசெய் வது; இழிந்தவற்றைக் களைந்தெறிய வழி காட்டுவது; மக்களின் இதயங்களில் வெட்கம், கடுஞ்சீற்றம், வீரம் ஆகிய உணர்ச்சி களைத் தூண்டுவது; வாழ்வின் மேலான இலட்சியத்திற்குத் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வலிமையூட்டுவது; மனிதனைத் தூய்மைப்படுத்துவது; வாழ்க்கையைப் பயனுள்ளதாகச் செய்யப் பயன்படுவது"[8]

என்று குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது,

நான்காவதாகக் கவிதைக்குத் தேவைப்படுவது வடிவ மாகும். இதைக் கவிஞன் உணர்ச்சியற்ற நிலையில் தேர்ந் தெடுப்பதில்லை அவனுடைய எண்ணம் பக்குவமடைந்த தும், அது வெளிப்படுவதற்கு முயலுகின்றது. அப்பொழுது அது அவனுக்குத் தெரிந்தோ, தெரியாமலோ ஓர் ஒழுங் கான வடிவத்தை பெற்று வருகிறது. வடிவம் என்பது ஒரு கிணற்றைப் போன்றது; உள்ளடக்கம் இல்லாத வடிவம், நீரில்லாத கிணற்றிற்கு ஒப்பாகும். வடிவ அழ கால் மட்டும் பயனில்லை. வடிவத்தின் மூலம் வெளிப்படும் கருத்தும் சிறப்பாக அமைய வேண்டும்.

வடிவம் என்பது கவிதைக்கு உடலைப் போன்றதாகும். மேற்கண்ட உணர்ச்சி, கற்பனை, கருத்து ஆகிய அனைத்தும் ஒருங்கு திரண்டு முழுநிறைவை பெறுவதற்கு நிலைக் களனாக இருப்பது வடிவம் எனலாம். உணர்ச்சி, கற்பனை கருத்து ஆகிய மூன்றும் இணைகின்றபொழுது ஒலிநயம்

தோன்றுகிறது. அவ்வொலிநயம் உணர்ச்சிக்கும் கருத்திற்கும் ஏற்ற சொற்களைக் கையாளுவதால் எழுவதாகும். பாட்டின் வடிவம் எடுத்துக் கொண்ட கருத்திற்கும், முதன்மையாக உணர்த்தப்படும் உணர்ச்சிக்கும் ஏற்ப மாற்ற முறும். சிறப்பாகக் கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் உணர்த்தும் முறைகளுக்கேற்ப அவை அமையும். பாட்டின் வடிவம் கவிஞனுக்கு ஒரு தடையாக அமையாது. அது மூவளவைக் கூறுகளை (Three Dimensions) அமைத்துத் தருகிறது. அவை உணர்ச்சி, சொல், ஒலிநயம் என்பனவாகும். அவற்றைக் கொண்டு கவிஞன் கவிதையென்னும் கலைக் கோயிலைக் கட்டுகிறான். இவ்வாறு மனித இனத்தின் அனுபவக் கருவூலத்தை அடிப்படையாகக் கொண்டு கலைகளில் சிறந்த கவிதைக்கலை படைக்கப்படுகிறது.

### இலக்கியத்தின் பயன்

மனிதன் எச்செயலைச் செய்தாலும் ஏதோ ஒருவகையான பயனைக் கருதியே அச்செயலைச் செய்கிறான். 'பற்றற்று பயன் கருதாது பணிசெய்வது' என்பது மனித இனத்தின் ஓர் உயர்ந்த இலட்சியம். அந்த இலட்சியத்தை நடைமுறையில் கடைப்பிடிக்கின்றவர்கள் மிகச் சிலரேயாவர். அவர்களை உலகம் 'சான்றோர்கள்' என்று போற்றுகிறது. ஆனால், மனித இயற்கை இதற்கு நேர்மாறாக இருந்துவருகிறது. எச்செயலில் ஈடுபட்டாலும், அச்செயலின் மூலம் யாதாகிலும் ஆதாயம் தனக்குக் கிடைக்குமா என்றுதான் மனிதன் எதிர்பார்க்கிறான். இந்நிலையில் இலக்கியத்தைப் படைக்கும் கலைஞனுக்கும், இலக்கியத்தைக் கற்பவர்களுக்கும் அதனால் யாதாகிலும் பயனுண்டா என்ற ஐயம் எழலாம். படைப்புக் கலைஞன் தான் படைத்த பொருளைக் காணுகின்ற பொழுது ஒரு தாயின் நிலையை அடைகிறான். ஏனெனில், அவன் உள்ளத்தில் கருக்கொண்ட உணர்ச்சிகள் நன்கு முதிர்ந்து, கருத்துச் செறிவுடன் கலையாக—கவிதையாக வெளிப்படுகிறது. அதனால் அவன் மகிழ்ச்சியுறுகிறான். அப்பொருளில் அவன் தன்னையே காணுகின்றான். குழந்தைகளிடத்தில் தன்னைக் காணுகின்ற தாயைப்போல, அவனும் தன்னுடைய கலைப் படைப்பைக் கண்டு வியப்பும், விம்மிதமும் அடைகின்றான்.

அதைப் படிக்கின்றவனோ, தன்னுடைய உள்ளத்து முழுவளர்ச்சியடையாத எண்ணங்களும், உணர்ச்சிகளும் அரைகுறையான அனுபவங்களும் நல்லதொரு வடிவம் பெற்றுத் திகழ்வதைக்கண்டு மகிழ்கிறான். மேலும், அவனுடைய நெடுநாளைய கனவு, கலைவடிவில் தன்முன்னே தோன்றுவதைக் காணுகின்ற பொழுது, அதில் தன்னுடைய பண்புகளின் பிரதிபலிப்பையும், எண்ணத்தின் சாயலையும் ஏக்கத்தின் எதிரொலியையும் பார்த்தும், கேட்டும் அவன் இன்புறுகிறான். அல்லது தன்னுடைய குறைகளை உணர்ந்து, அவற்றைப் போக்கிக்கொள்ள வழியென்னவென்பதைப்பற்றிச் சில மணித்துளிகளேனும் அவன் சிந்திக்கிறான். இவ்வாறு இலக்கியம் படைப்பவருக்கும், கற்பவருக்கும் பயன்தருகிறது.

இலக்கியத்தைக் கற்பதால் ஒருவன் பெறக் கூடிய பயன் இன்பமே. அதைத் தவிர வேறு எதையும் அவன் இலக்கியத்திடம் எதிர்பார்க்கக்கூடாது என்பது ஒரு வகைக் கோட்பாடாக இருந்துவருகிறது. 'கலை கலைக்காக' என்ற முழக்கம் எழுப்புவதைப் போன்று 'கவிதை கவிதைக்காகவே' என்று முழங்குகின்றவர்களும் உண்டு. ஒரு கலைப்பொருளின் பயனை, நன்முறையில் நாம் பெற்று அனுபவிக்க வேண்டுமானால், நாம் வேறொரு பயனை அடைவதற்கு அதைக் கருவியாகக் கொள்ளக்கூடாது; அப்பொருளையே தன்னிகரற்ற முழுநிறைவுடைய பொருளாகக் கொண்டு, அது அளிக்கும் இன்பத்தில் மூழ்கித் திளைக்க முயலவேண்டும்.

> வாழ்க்கையைக் கலைக்கண்கொண்டு பார்க்கவேண்டும். அவ்வாறு நோக்கினால் வாழ்க்கை, பெறற்கரிய பேறுகளை அடைவதற்குரிய வழியாக அமையாமல், வழியும் பயனும் ஒன்றி அமைந்ததாகத் தோன்றும். இந்நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டே நாம் கலையையும் கவிதையையும் பார்க்கவேண்டும். அப்பொழுதுதான் அவற்றின் உண்மையான இயல்புகள் நமக்குப் புலனாகும். படிப்பினைகளை அறிவுறுத்துவதற்காகவோ, விதிமுறைகளுக்குக் கீழ்ப்பட்டுச் செயல்படுமாறு செய்வதற்காகவோ, ஒப்புயர்வற்ற குறிக்கோளை அடைவதற்குத் தூண்டுவதற்காகவோ சிறந்த கவிஞர்களுடைய படைப்புக்கள் படைக்கப்படவில்லை. ஆனால், அவை இயந்திரம் போன்ற உணர்ச்சியற்ற வாழ்க்கையிலிருந்து எண்ணங்களைச் சிறிது

> நேரமேனும் வேறுபக்கத்தில் திரும்பிப் பொருத்தமான உணர்ச்சிகளிடத்தில் அவற்றை நிறுத்தி, மனித வாழ்க்கையில் மறைந்து கிடக்கும் மாண்புமிகு உண்மைகளைக் கண்டுணரச் செய்வதையே நோக்கமாகக் கொண்டுள்ளன"[4]

என்பது பேட்டரி (Pater)ன் கருத்தாகும். பயன்மதிப்புக்களுக்குப் பணிபுரியும் வேலைக்காரன் கலை அன்று; கலையே தலைவனாக விளங்குகிறது என்பது பேட்டரின் நம்பிக்கை. கவிஞனுடைய உணர்ச்சியைப் புரிந்து கொண்டு வாழுமாறு நம்மைத் தூண்டுவதே உயர்ந்த இலக்கியமாகும். வாழ்க்கையை அணுகுவதற்குக் காட்டப் படும் வழியைப் பற்றியதே இலக்கியத்தைப் பற்றிய பிரச்சினையாகும். இலக்கியமும் கலைகளும் வாழ்க்கையின் கூறுகள் என்று அவர் கருதவில்லை. சிறந்த முறையில் படைப்பதன் மூலமும், அதைச் தற்சார்பற்ற முறையில் எடுத்துரைப்பதன் மூலமும் அவை வாழ்க்கையின் முழு நிறை வடிவமாகி விடுகின்றன என்பது பேட்டரின் எண்ண மாகும்.

கலையையும், கலையைப் போற்றி நலம் பாராட்டுதலை யும் எளிதில் சிலவிதி முறைகளாகச் சுருக்கித் தந்துவிட முடியாது. அவை மனநிலையைப் பொறுத்த ஒன்றாகும். சிறந்தொரு வாழ்க்கையில் வெளிப்படும் ஆளுமையின் மூலம்தான் நாம் அம்மனநிலையைத் தெளிவாக விளக்க முடியும். வாழ்க்கையில் பெறும் அனுபவத்தின் பயனைப் பற்றிக் கவலையுறாது, அனுபவத்தையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருதவேண்டும் என்று அவர் கூறுகிறார். எனவே, "கலையின் உண்மையான கடமை, கழிந்துகொண் டிருக்கும் உன்னுடைய கண நேரத்திற்குச் சிறந்த பயன் மதிப்பைக் கொடுப்பதாகும்; அதைத்தவிர வேறொன்றும் கடமையாகாது"[5] என்று அவர் அறிவிக்கிறார். கலையாக இருந்தாலும், வாழ்க்கையாக இருந்தாலும் அதனுடைய முழுமைப்பயனை அதனிடத்து அடைவதையே, மனிதன் தன்னுடைய இலட்சியமாகக் கொள்ளவேண்டும் என்பது இதனுடைய உட்பொருளாகும். வாழ்க்கையில் ஆன்மா மகிழ்ச்சியுறுவதையும், வளம் பெறுவதையும் தவிர வேறொன்றையும் எதிர்பார்க்கக் கூடாது என்பதே இதன் கருத்தாகும். இவ்வாறு தன்னுடைய பயனைத் தன்னகத்தே

கொண்டிருப்பது கலை. "வாழ்க்கையின் சிறப்புமிக்க காட்சியைப் பார்ப்பதால் நாம் பெறக்கூடிய பயன் 'பார்ப்பதன் மூலம்' பெறும் இன்பமாகும்."[6]

பேட்டர், 'கலை கலைக்காகவே' என்ற கொள்கையை இவ்வாறு விரித்துரைக்கிறார். இவ்வடிப்படையில் கவிதையை ஆராய்ந்த அறிஞர்கள், "இன்புறுத்துவதே கவிதையின் பயன்; அறிவுறுத்துவது கவிதையின் குறிக்கோளாகாது" என்ற கருத்தினைத் தெளிவுறுத்தி யுள்ளனர். வேறு பயனை அளிக்காது, இன்பம் ஒன்றையே அளிக்கும் கவிதைகளை 'நேர்வழிக் கவிதைகள்' (Pure Poetry) என்று அவர்கள் குறிப்பிடுகின்றனர். இதைத் 'தூய கவிதை' என்றும் கூறுவர். நேர்வழிக் கவிதையால் இன்பத்தைத்தவிர வேறெந்த பயனையும் தரமுடியாது என்பது அவர்களுடைய நம்பிக்கை.

> தூய என்ற சொல்லைப் பௌதிக ஆய்வாளன் 'தூய தண்ணீர்' என்று கூறுகின்றபொழுது எப்பொருளில் பயன்படுத்துகிறானோ, அப்பொருளில் நான் இதைப் பயன்படுத்துகிறேன். ஆனால், இந்த இலட்சியத்தைக் கவிதையில் அடைவது என்பது மிக அரிய செயலாகும். ஒரு பாட்டில் மிக அழகிய அடி ஒன்று இடம் பெற்றிருக்குமானால், தூய கவிதையின் நிலைக்களனாக நாம் அதைக் கொள்ளலாம். தூய கவிதையைப் பற்றிய இக்கருத்து கவிஞனுடைய விருப்பங்கள், முயற்சிகள், ஆற்றல்கள் ஆகியவற்றின் இலட்சிய எல்லையாகும்[7]

என்பது பால் வேலரே (Paul Valery) என்ற திறனாய்வாளரின் கருத்தாகும். இதனால் 'நேர்வழிக் கவிதை' அல்லது 'தூய கவிதை'யின் இயல்பையும், அது எவ்வாறு கவிஞனுடைய இலட்சியமாக அமைகிறது என்பதையும் நாம் அறிகிறோம்.

எட்கர் அலன் போ (Edgar Allan Poe),

> இனிமையான கருத்துடன் இசை சேருகின்றபொழுது கவிதை பிறக்கிறது. கருத்துடன் இசையாத இசை, வெறும் இசையாகவே இருக்கும். இசையுடன் சேராத கருத்தோ, வெறும் உரைநடையாகிவிடும்...கவிதைகளின் முடிவான நோக்கம் உண்மையை உணர்த்துவதாகும். ஒவ்வொரு பாட்டும் அறத்தை அறிவுறுத்துவதாக இருக்கவேண்டும் என்று கூறு

> இன்றனர். ஆகவே, அறக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு ஒரு கவிதையின் சிறப்பினை மதிப்பிடுகின்றனர் ..... கவிதையைக் கவிதைக்காகவே எழுதவேண்டும் என்ற நோக்கத்தோடு நான் கவிதையை அணுகுகிறேன். அவ்வாறு அணுகுவதன் மூலம் கவிதையின் மதிப்பையும் ஆற்றலையும் நல்ல முறையில் கண்டுணர முடியுமென நான் நம்புகிறேன். இவ்வடிப்படையில் பார்த்தால், குறிப்பிட்ட மதிப்புடையதும், சிறந்ததுமான கவிதை உலகில் இருக்கமுடியுமா ?—என்று நாம் ஆராய்ந்து அறிய இயலும். கவிதையைக் கவிதையாகக் காணவேண்டுமேயொழிய, அதை வேறொரு பொருளாகப் பார்க்கக்கூடாது. கவிதை அதனுடைய சிறப்புக்காகவே இயற்றப்பட்டிருக்கிறது என்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும்[8]

என்று கவிதையை அணுகுவதற்குரிய நெறிமுறைகளை வகுத்துள்ளார். இக்கருத்திலிருந்தே 'கவிதை கவிதைக்காக' (Poetry for Poetry's sake) என்ற கொள்கை தோன்றியிருக்கிறது.

கவிதையை ஆராய்கின்ற பொழுது, அல்லது மதிப்பிடுகின்றபொழுது, "கவிதையின் பண்புகள் அனைத்தும் அதில் இடம் பெற்றிருக்கின்றனவா ? அப்பண்புகளின் நிறைவால் கவிதையளிக்கும் இன்பம் சிறப்புடையதாகிறதா ?"-என்ற நோக்கங்களின் அடிப்படையில்தான் கவிதையை நாம் அணுகவேண்டும். இதற்கு மாறாக, "இக்கவிதையில் எத்தகைய கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன ? அவை சிறந்தவைதாமா ? அவை அறத்திற்குப் பொருந்திவரக்கூடியனவா ? அவற்றால் என்ன பயன் கிடைக்கும் ?" -என்பன போன்ற வினாக்களை எழுப்பி, அவற்றின் அடிப்படையில் கவிதையை ஆராய்வது, அழகிய தாமரை மலரைக் கண்டு, அதன் அழகை நுகராது, அதை ஒவ்வோர் இதழாகப் பிய்த்து எடுத்து, "அதனுள் மகரந்தத்தூள் இருக்கிறதா ? பொகுட்டு எனப்படும் கொட்டை முற்றியதாக இருக்கிறதா ? அதன் புறஇதழ் தடித்திருப்பது ஏன்?" -என்பன போன்ற ஆராய்ச்சியில் ஈடுபடுவதாகும். தாவர இயல் ஆராய்ச்சியாளன் தாமரை மலரைப் பகுத்துப் பகுத்து ஆராய்வது பொருந்தும். அதைப் போல, தத்துவ ஆராய்ச்சியாளன் "ஒரு கவிதையில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் சிறப்புடையனவா? அறநெறிச் சார்புடையனவா?" என்று ஆராய்ந்தால் தவறில்லை. ஆனால், ஓர் இலக்கியத்

திறனாய்வாளன் கவிதையைக் கலைக்கண்கொண்டு அணுகுவதுதான் பொருத்தமான செயலாகும். அவன் கவிதையைப் பகுத்துப் பகுத்துப் பார்த்து, அதில் "இந்தக் கருத்து சொல்லப்படவில்லை" என்று கூறுவது அவனுடைய நோக்கமாகாது. அப்படி ஆராய்பவன் இலக்கியத் திறனாய்வாளனாக இருக்கமாட்டான் என்பதே போவின் கருத்தாகும். கவிதையைப் படைக்கின்றவர்களும் அதைக் கருத்தில் கொண்டே தங்கள் படைப்புக் கலையைத் தொடங்கவேண்டும் என்று அவர் கூறுகிறார்.

பிரான்சில் தோன்றிய அறிஞர்கள் சிலர், 'கவிதை கவிதைக்காக' என்ற கொள்கையைச் சிற்சில மாற்றங்களோடு போற்றி ஆதரித்துள்ளனர். அபே பிரெமாண்ட் (Abbe Bremond) என்பவர்,

> கவிதைகள் எல்லாம் இறைமை இணைவுப் பண்புடையன (Mystical). அவை வழிபாட்டுப் பாடல்களோடு தொடர்புடையன. ஒவ்வொரு கவிதையும், புதிரானதும் ஒன்றுபடுத்துவதுமான மெய்ம்மையான மூலப் பண்புக் கூற்றினைப் பெற்றிருக்கிறது. அதனாலேயே அவை பெரிதும் கவிதைப் பண்புடையனவாக இருக்கின்றன. கவிதையைப் பகுத்தறிவு நலமிக்க உரையாடலாகக் குறைத்துவிட முடியாது. பொதுவாக நாம் பயன்படுத்தும் உரையாடல் முறைகளைக் கடந்த நிலையில் உணர்த்தப்படும் ஒரு மொழியமைப்பே கவிதை.[9]

என்று வெளியிட்டுள்ள கருத்துக்கள் இங்குக் கருதத் தக்கன.

கவிதை என்பது எடுத்துரைக்க இயலாத அல்லது சொற்களால் விளக்க முடியாத ஒன்றைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது என்பது இவருடைய கருத்தாகும். இதனுடன் அக்கவிதையின் சிறப்பும் நேர்த்தியும் பின்னிப் பிணைந்து இருக்கின்றன. "எளிதில் புரிந்து கொள்ள முடியாத மெய்ம்மையான மூலப்பண்புக்கூறு ஒன்றினுடைய இருப்பினாலும், அதனுடைய பண்பு பரவி இருப்பதனாலும், அது பொருள்களை மாற்றியும் ஒருமைப்படுத்தியும் இயக்குவதனாலும் கவிதை, அதனுடைய கவிதைப் பண்பைப் பெற்றிருக்கிறது"[10] என்பது உளவியல், மெய்ப் பொருளியல் ஆராய்ச்சிகளின் அடிப்படையில் தெளிவுறுத்தப்பெற வேண்டிய கருத்தாகக் காணப்படுகிறது.

இதுவரையில் 'நேர்வழிக் கவிதை' (Pure Poetry)யைப் பற்றி நாம் கண்ட கருத்துக்களை நான்கு வகையாகப் பகுத்துக் கூறலாம்.

1. வேறு இலட்சியத்தை அடைவதற்குக் கவிதையை ஒரு கருவியாகக் கொள்ளாமல், அது நல்கும் இன்பத்தை அடிப்படையாகக் கொண்டு ஒரு முழுநிறைவுடைய பொருளாக அதைக் கருதுதல்.

2. ஒலிநயத்தின் நிலைக்களன் கவிதை.

3. ஒலிக்கும், வண்ணத்திற்கும் இடைப்பட்ட ஒருவகை அழகையுடைய சொற்களைக் கொண்டது கவிதை.

4. சொற்களும் ஒலிநயமும் சேர்ந்து உணர்த்தும் கருத்துக்களையுடையது கவிதை.

சுருங்கச்சொல்லுவதென்றால், கவிதையில் எக்கருத்தை வேண்டுமானாலும் சொல்லலாம். ஆனால், அதைச் சொல்லும் முறைதான் கலைநயமுடையதாக இருக்கவேண்டும். இவ்வாறு இயற்றப்படும் கவிதை தானாகவே இன்பம் நல்கும் இயல்புடையதாக அமையும் என்பது 'நேர்வழிக் கவிதை'க் கோட்பாட்டினரின் கருத்தாகும்.

இனிக் கவிதையில் அறநெறிக் கருத்துக்கள் இடம் பெறக்கூடாது என்பார் காட்டும் காரணங்களைக் காண்போம்.

(1) கவிதை ஒருகலை. மற்றக்கலைகளைப் போன்றே அதில் அறநெறிக் கருத்துக்களை எதிர்பார்ப்பது வீண்.

கலை பழக்கத்தின் மோனநிலை; உரிமையின்றி நுழைவதைத் தடுக்கும் காவலாள்; கலை சுவைமிக்க சிந்தனையின் தேவதை; எவ்வகையிலும் பிறரைத் திருத்தவேண்டும் என்பது அவள் நோக்கம் அன்று. அவள் எல்லா வகையான தன்னல இயல்புகளையும் கொண்டவள். அதனால், அவள் தன்னுடைய முழுநிறைவைப் பற்றியே கவலைப்படுகிறாள். எனவே, அவள் பிறருக்கு உயர்ந்த இலட்சியங்களைக் கற்பிக்கவேண்டும் என்ற விருப்பம் அற்றவள். எக்காலத்திலும் எச்சூழலிலும் அழகைக் கண்டு அனுபவிப்பதிலேயே அவள் கருத்தைச் செலுத்துகிறாள்[11] என்று கலையைப் பற்றிப் பொதுவாகக் கூறப்படும் கருத்துக்கள் இலக்கியக் கலைக்கும் பொருந்துவதாகும்.

(2) மனித இனத்தின் செயல்முறைகளுள் அறநெறிக் கருத்துக்களும் கவிதைக்கலையும் வேறுபட்ட இரண்டு முக்கிய செயல்முறைகளாகும். அவை தங்கள் தனியுரிமையைக் காத்துக் கொள்வதன் மூலமே தங்களுடைய முக்கியத்துவத்தைப் பெறமுடியும்.

(3) அறநெறி வாழ்விற்கு முற்பட்ட நிலையில் அமைந்த வாழ்க்கையைக் கவிதை விரித்துரைக்கிறது. எனவே, அறநெறிக் கருத்துக்கள் என்பன மேலெழுந்த வாரியான பண்பே ஒழிய, உள்ளார்ந்த இயல்புகளல்ல.

(4) இறைமை இணைவுப் பண்பு (Mystical) நிலையில் கவிதை வாழ்க்கையை வெளிப்படுத்துகிறது. எனவே, அறநெறியுணர்வைக் கடந்த நிலையிலேயே கவிதை பிறக்கிறது எனலாம் (அபே பிரெமாண்டின் கருத்தைப் போன்றது).

(5) கவிதைக்கும் அறநெறிக் கருத்துக்களுக்கும் இடையே ஏதோ ஒருவகையான தொடர்பு இருக்கலாம். அது எதிர்பாரா நிகழ்ச்சியாகவோ அருகிய வழக்காகவோ இருக்கும்.[12]

இக்கருத்துக்கள் அனைத்தும் 'கலை கலைக்காக' என்ற கொள்கையிலிருந்து தோன்றி வளர்ந்த 'கவிதை கவிதைக்காக' என்ற கருத்தை வற்புறுத்துவனவாகும். நாம் 'கவிதை கவிதைக்காக' என்பார் காட்டும் காரணங்களைக் காண்போம் :

இவ்வனுபவத்தைப் பற்றிக் 'கவிதை கவிதைக்காக' என்ற முழக்கம் என்ன சொல்லுகிறது? நான் புரிந்து கொண்ட முறையில் அது, பின்வரும் கருத்துக்களைத் தெரிவிக்கின்றன. முதலாவதாக கவிதையனுபவமே முடிந்த பயனாகும். அது பிறிதொரு பயனுக்குக் கருவியாக அமையாமல், தானே அப்பயனாக இருக்கிறது. அதாவது கவிதை உள்ளார்ந்த பயன் மதிப்பை உடையது. அடுத்து அதன் கவிதைப் பயன்மதிப்பும் இந்த உள்ளார்ந்த பண்பாகவே அமைந்து கிடக்கிறது. கவிதைக்கு மற்றொரு முடிந்த பயன் மதிப்பும் இருக்கலாம். அதாவது பண்பாட்டையோ, சமயவுணர்வையோ பெறுவதற்குரிய ஒரு கருவியாக கவிதை அமையலாம். ஏனெனில், அது கற்பிப்பதாகவோ, உணர்ச்சிகளைப் பண்படுத்துவதாகவோ சிறந்ததொரு பண்பை வளர்ப்பதாகவோ இருக்கலாம். மேலும், அது கவிஞனுக்குப் புகழையோ, பொருளையோ, மனச்சான்றின் அமைதியையோ அளிப்பதாகவும் அமையலாம். இக்காரணங்களுக்காகவும் நாம் கவிதையை மதித்துப் போற்றலாம். ஆனால், இம்முடிவான மதிப்பு, கற்பனைச் சார்புடைய

> அனுபவமாகவும், நம்மை மனநிறைவு அடையுமாறு செய்யும் பயன்மதிப்பாகவும் இருக்க இயலாது; நேரிடையாக அதை முடிவு செய்யவும் முடியாது. இதை, நாம் முழுவதும் அதன் உள்ளார்ந்த பண்புகளைக் கொண்டே தீர்மானிக்கவேண்டும்.... கவிதையைப் படைக்கும் கவிஞன் கவிதையளிக்கக் கூடிய முடிந்தபயனைக் கருதினாலும், படிக்கின்றவர் அதைக் கவிதை அனுபவத்தில் பெற விழைந்தாலும், கவிதையின் பயன் மதிப்பின் தரம் குறைய நேருகிறது. கவிதையை அதனுடைய இயல்பான சூழ்நிலையிலிருந்து பிரித்து, அதனுடைய இயல்பினை நாம் மாற்றமுனைவதால் இத்தரக்கேடு உண்டாகிறது. ஆனால் கவிதை தனிமையும், உரிமையும், முழுமையும் வாய்ந்த தனிப்பட்டதோர் உலகமாகத் தானே விளங்குகிறது. அதனால் காட்சிப் பொருளைச் சார்ந்த உலகின் ஒரு பகுதியாகவோ, படியாகவோ விளங்க அதனுடைய இயல்பு அதற்கு இடம் தருவதில்லை.[18]

இங்குக் கூறப்பட்ட நான்கு வகையான கருத்துக்களை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டியவர்களாக இருக்கிறோம். முதலாவதாக 'முடிந்த பயன் மதிப்புக்கள்' என்று குறிப்பிடப்பட்ட பண்பாடு, சமயம் போன்றவை யெல்லாம் நன்கு வேறுபட்ட நிலைகளை அடிப்படையாகக்கொண்டு ஆராயப்பட வேண்டியவையாகும் இவற்றுள் சில கவிதை யனுபவத்திற்கு வேறுபட்ட தொடர்புடையனவாக உள்ளன. பண்பாடு, சமயம், அறிவுறுத்தல், உள்ளத்தைப் பண்படுத்தல் போன்றவை கவிதையின் பயன் மதிப்புக் களைக் கொண்டு அனுபவங்களைப் பற்றி நாம் தீர்மானிக்க வேண்டியனவாகும். இவ்வாறு செய்யவில்லை யென்றால், 'கவிதைப் பண்பு' என்பது பொருளற்ற வெற்றொலியாகப் போய்விடும்; கவிஞனுடைய புகழ், பொருள், மனச்சான்றின் நீடமைதி என்பன வெல்லாம் பொருத்த மற்றவை என்பது தெளிவாகப் புலனாகும்.

இரண்டாவதாகக் கற்பனைச் சார்புடைய அனுபவத்தை அதன் உள்ளார்ந்த பண்புகளைக் கொண்டே தீர்மானிக்க வேண்டும் என்பது தவறான வழியைக் காட்டுவதாகும். பெரும்பாலான நிகழ்ச்சிகளில் நாம் அவ்வாறு தீர்மனிப்ப தில்லை. அதைப் பற்றி முடிவு செய்ய வேண்டுமானால், நாம் அதை விட்டு வெளியே வரவேண்டிய நெருக்கடி உண்டாகிறது. பெரும்பாலும் நாம் அவற்றின் பயன்

மதிப்பைப் பற்றிய குறிப்புகளைக் கருத்தில் கொண்டோ, நினைவு படுத்திக்கொண்டோ அதை மதிப்பிடுகிறோம். அவ்வாறு அதைப்பற்றித் தீர்மானிக்கின்ற பொழுது, மனித வாழ்க்கையெனும் பேரமைப்பில் அதற்குரிய இடத்தை நாம் புறக்கணிப்பதில்லை. எனவே, அதனுடைய பயன் மதிப்பு இத்தகைய புறஇயல்புகளைச் சார்ந்திருக்கின்ற பொழுது, நாம் எவ்வாறு உள்ளார்ந்த பண்புகளை மட்டும் கருத்தில் கொண்டு அதை மதிப்பிடமுடியும்?

மூன்றாவதாக, "கவிதையைப் படைக்கும் கவிஞன் கவிதையளிக்கக் கூடிய முடிந்த பயனைப் பற்றிக் கருதினாலும், படிக்கின்றவர் அதைக் கவிதை அனுபவத்தில் பெற விழைந்தாலும் கவிதையினுடைய பயன்மதிப்பின் தரம் குறைந்து விடும்" என்பது ஆராயத்தக்கது. இவையெல்லாம் "முடிந்த பயன் என்று கருதப் பெறுவன யாவை? கவிதை எவ்வகையைச் சேர்ந்தது?"-என்ற வினாக்களுக்குரிய விடைகளைப் பொறுத்து அமைவதாகும். கவிதையின் வகைகள் சிலவற்றுள் முடிந்தபயன்களாகக் கருதக் கூடியவற்றை இடையே நுழைப்பதால், கவிதையினுடைய பயன் மதிப்பு குறைந்து விடுகிறது என்பதை நாம் மறுப்பதற்கு இல்லை. ஆனால், வேறு சில வகையான கவிதைகளில் அவற்றின் மதிப்பும் சிறப்பும், அவை உணர்த்தும் முடிந்த பயன் மதிப்புக்களைப் பொறுத்தே சிறப்புடையதாகப் போற்றப்படுகின்றன. சிலப்பதிகாரத்தின் சிறப்பும், கம்பராமாயணத்தின் ஏற்றமும், திருவாசகத்தின் மதிப்பும் அவை உணர்த்தும் பயன் மதிப்புக்களை அடிப்படையாகக் கொண்டன என்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமை இருக்க இயலாது. இவற்றைப்படைப்பதற்கு, முடிந்த பயன்மதிப்புக்கள் என்பன தேவைப்படவில்லை என்று யாராகிலும் கூறமுடியுமா? அல்லது அந்நூல்களைப் படிக்கின்றவர்கள் அப்பயன் மதிப்புக்களை உணராமல் போய்விடுகிறார்களா?

எனவே, நாம் கவிதையை இரண்டு வகையாகப் பிரித்துணர வேண்டும். முடிந்த பயன் மதிப்புக்களை எடுத்துரைப்பதால் தரம் குறைந்துபோகும் கவிதைகள் ஒரு வகை என்று நாம் கூறலாம். மற்றொரு வகை அவற்றை

எடுத்துரைப்பதால் சிறப்புறும் கவிதைகளாகும். எனவே, கவிதைகளின் வகைகளுக்கும் இயல்புகளுக்குமேற்ப, அவற்றை நாம் வேறுபட்ட கொள்கை நெறிகளை அளவு-கோலாகக்கொண்டு மதிப்பிடவேண்டுமேயொழிய, எல்லா வற்றையும் ஒரேவகையான அளவுகோலால் அளந்து பார்க்க முயலுவது அறிவுடைமையாகாது.

இறுதியாகக் கூறப்பட்ட கருத்து ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டிய ஒன்றாகும். "கவிதை தனிமையும் உரிமையும், முழுமையும் வாய்ந்த தனிப்பட்டதோர் உலக மாகத்தானே விளங்குகிறது. அதனால் காட்சிப் பொருளைச் சார்ந்த உலகின் ஒரு பகுதியாகவோ, படியாகவோ திகழ்வதற்கு அதனுடைய இயல்பு அதற்கு இடம் தருவ தில்லை. எனவே, அதை முழுமையான வடிவில் பெற வேண்டுமானால், நீ அவ்வுலகிற்குச் சென்று அதனுடைய சட்டதிட்டங்களுக்கு ஏற்ற வகையில் நடந்துகொள். அச் சமயத்தில், நீ காட்சிப் பொருளைச் சார்ந்த உலகத்தின் நம்பிக்கைகளையும், குறிக்கோள்களையும், உனக்குரிய குறிப்பிட்ட சூழ்நிலைகளையும் புறக்கணித்துவிடு" என்னும் கொள்கைக் கவிதையை, வாழ்க்கையிலிருந்து பிரித்து வேறுபடுத்த முயலுகிறது.

மனிதன் வாழ்க்கையில் பெறக்கூடிய பரந்துபட்ட அனுபவங்களில் புறச்சார்பான பண்புகள் நுழையுமானால் அவை சிதைந்துவிடும். அத்தகைய அனுபவங்களுள் ஒரு சிலவற்றைத் தன்னகத்தே கொண்டது கவிதை எனவே, ஒரு வரையறைக்குட்பட்ட அனுபவத்தை வெளிப்படுத்து வதே கவிதை எனலாம். அதிலுள்ள அனுபவம் மிக உயர்ந்த நிலையில் நுட்பமாக அமைக்கப்பட்டதாகும். எனவே, கவிதையில் உறையும் அனுபவம் ஒருவன் கடைத் தெருவிலோ, சந்தைக் கடையிலோ எளிதில் விலைக்கு வாங்கக் கூடியதன்று. மேலும், அது பிறருக்கு எடுத் துரைக்கக் கூடியதாகவும் இருக்கிறது. சிற்சில வேறு பாடுகளுடன் வேறுபட்ட பல உள்ளங்கள் அனுபவிக்கக் கூடியதாகவும் அவ்வனுபவம் அமைகிறது. ஆகவே, அது காட்சிப் பொருளைச் சார்ந்த உலகிலிருந்து வேறுபட்ட தன்று. அனுபவத்தைக் 'கவிதையாக்குதல்' அல்லது

'உருமாற்றுதல்' என்பது ஒரு பொய்க் கதை. இதைப் போன்றே 'ஆழ்ந்த சிந்தனை இயல்புடையது' அல்லது 'அழகியலுணர்வைச் சார்ந்தது' என்று கூறுவதெல்லாம், கவிதையையும், கவிதைப் பண்பையும் பற்றிப் பேசுவதால் உண்டாகும் குழப்பமாகும். அனுபவங்களின் பருப்பொருளாக உள்ள கவிதைகளைப்பற்றி மட்டும் நினைப்போமானால் இத்தகைய குழப்பமே உண்டாகாது.

மேலும், கவிதையனுபவத்தை வாழ்க்கையில் அதைப் பெறுமிடத்திலிருந்தும், அதனுடைய பயன் மதிப்புக்களிலிருந்தும் பிரித்து வேறுபடுத்திக் காட்டுவது தவறு. 'கவிதை கவிதைக்காகவே' என்று முழக்கமிடுவோரின் ஒருதலைச் சார்பான போக்கையும், குறுகிய மனப்பான்மையையும், அரைகுறையான சிந்தனையையும் அச்செயல் சுட்டிக் காட்டுகிறது.[14]

இக்கருத்துக்கள் அனைத்தும், கவிதை கவிதைக்காக மட்டும் படைக்கப்படவில்லை (அதாவது இன்புறுத்தும் ஒரு நோக்கத்தை மட்டும் அடிப்படையாகக்கொண்டு படைக்கப்படவில்லை); மனித வாழ்க்கையை விளக்கியுரைப்பதையும், அதன்மூலம் மக்கள் வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவதையும் நோக்கமாகக் கொண்டே படைக்கப்பெறுகின்றது என்ற உண்மையை வலியுறுத்துகின்றன.

"இலக்கியம் கலையின் ஒருவகை வடிவம் என்ற முறையில் தத்துவத்தோடும், சமயத்தோடும் சேர்ந்து நம்மிடத்து உறங்கிக்கிடக்கும் ஆன்மாவை விழிப்புறச் செய்கிறது. அவ்வாறு செய்வது அதன் தலைசிறந்த கடமையாகும். நம்முடைய ஆன்மாவை விழிப்புறத் தூண்டுவதைப் போன்று நம்மை இன்புறுத்துவதோ, நமக்குக் கற்பிப்பதோ அதனுடைய தலையாய நோக்கம் அன்று. சிறந்த இலக்கியம் அறிவைத் தூண்டி இயக்குவதில்லை. ஆனால், அது ஆன்மிகப் புலனுணர்ச்சியை இயக்குகிறது. அது ஒரு வாதமன்று; மாயவித்தை; மந்திரம் ஓதுதல். அது வாழ்க்கையை விரித்துரைப்பது அன்று. அதனுடைய வடிவத்தையே மாற்றியமைப்பதாகும்"[15] என்பதனால் இலக்கியம் இன்

புறுத்துவதோடும் அறிவுறுத்துவதோடும் அமையாமல் மனிதனுடைய ஆன்மாவை விழிப்புறச் செய்கிறது என்ற தொரு புதிய கருத்தையும் நாம் அறிகிறோம்.

டாக்டர் இராதாகிருஷ்ணன், "மனிதனுடைய ஆன்மா கழிபேருவகை அடைகின்றபொழுது பொங்கிவழியும் இன்பவுணர்வே இலக்கியமாக வெளிப்படுகிறது" என்று கூறுகிறார். இலக்கியம் நம்மைப் பெரிதும் கவர்வதற் குரிய முதன்மையான காரணத்தை இவ்விளக்கம் தந் துதவுகிறது. இலக்கியம் 'வாழ்க்கையின் மதிப்பீடு', என்பதையோ, 'ஆளுமையின் வெளிப்பாடு' என்பதையோ அவர் மறுக்கவில்லை. இவை இரண்டுமட்டும் சிறந்த இலக்கியத்தைப் படைப்பதற்கு உதவுவது இல்லை. இவற் ரோடு ஆன்மிக நுண்ணறிவும் அனுபவமும் சேர்ந்தால் தான், உண்மையான சிறப்புமிக்க இலக்கியமாக அவை விளங்கமுடியும் என்ற கருத்தை அவர் எடுத்தியம்புகிறார். இதனால், 'கவிதை கவிதைக்காக' என்னும் கோட்பாட்டை நடுவுநிலைமையுடனும், தெளிந்த அறிவுடனும் திறனாய்வு செய்கின்றவர்கள் குறையுடையதாகப் புறக்கணிப்பர் என்பது புலனாகின்றது.

தன்னுடைய கலையழகிற்காக மட்டும் வாழ முயலும் கவிதை விரைவில் அழிந்துவிடும். "அது சுவையற்றதாக இருப்பதால், தானே அழிந்துவிடுமேயொழிய அதை அற நெறிக் கருத்துக்கள் அழிப்பதில்லை."[16] எனவே, "இலக் கியப் படைப்பு வெற்றியுடன் செயற்படும்போது, மகிழ்வு பயன்பாடு என்ற இரு நிலைகளும் ஒருங்கே நிலவ வேண்டும். அத்துடன் அவையிரண்டும் ஒன்றியிணைந் திருக்க வேண்டும்"[17] என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

### இருவகை இலக்கியக் கொள்கை

இலக்கியம் சில நெறிமுறைகளை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பெறுகிறது. அதனுடைய வடிவமும், உணர்த்தும் பொருளும் யாப்பமைதியோடு கருத்தமைதி யும் உடையனவாக அமைகின்ற பொழுதுதான் அது சிறப் புறுகிறது. 'இலக்கியம் என்பது என்ன?' என்பதை ஆராய்ந்தவர்கள், அதைப்பற்றி ஏதோ ஒரு வகையான

எண்ணச் சார்புடையவர்களாகத் தோன்றுகின்றனர். ஆனால், அவர்கள் அந்த எண்ணத்தைப் பகுத்துப் பார்த்து அதன் உண்மையான உட்பொருள் என்ன வென்பதைப் பற்றித் தெளிவு பெற முயலுவதில்லை. 'இலக்கியம் எப்படி இருக்கிறது?' என்பதைப்பற்றி ஆராய்ந்தவர்கள் 'அது எதற்காக இருக்கிறது' என்பதைப்பற்றித் தெளி வற்ற கருத்துடையவர்களாகவே இருந்துவருகின்றனர். முதல் குழுவைச் சேர்ந்தவர்கள், பொதுவாக மக்களுடைய செயல் முறைகளில் ஒரு பகுதியாகவே இலக்கியத்தைக் கருதலாயினர். ஆனால், அவர்கள் அது எவ்வாறு தானாக இயங்குகிறது என்பதை அறிவதில் ஆர்வம் காட்டவில்லை. மற்றவர்களோ இலக்கியத்தைத் தன்னிறைவுடைய செயல் முறையாகக் கருதினர். அதற்கென நெறிமுறைகளும், தனிப்பட்ட இலட்சியங்களும் உண்டென அவர்கள் நம் பினர். இவ்விருவகைப் போக்குகளும் இலக்கியத்தின் வளர்ச்சியை ஒட்டி உண்டான எண்ணத்தின் எழுச்சிகளைக் காட்டுகின்றன.

இவற்றுள் முதலில் குறிப்பிட்டதை 'ஒழுக்கநெறி அமைதி (Moral)யுடைய இலக்கியக் கொள்கை' என்றும், பின்னால் கூறியதை 'விதிமுறை வடிவஅமைதி (Formal) யுடைய இலக்கியக் கொள்கை' என்றும் நாம் கூற லாம். 'ஒழுக்கநெறி அமைதி' என்பது தனிப்பட்ட எந்த ஒழுகலாற்றையும் குறிப்பதாகாது. பொதுவாக அது நல்வாழ்வு நெறிக்குரிய கருத்துக்களைக் குறிப்பதாகும். இதைப் போன்றே, விதிமுறை வடிவ அமைதி என்பது இலக்கியத்தின் குறிப்பிட்ட ஒரு வடிவத்தைப்பற்றிய இலக்கண விதிகளைக் குறிப்பதாகாது. இலக்கியத்தின் பொதுவான வடிவ அமைதியைப் பற்றியதாக அது அமை யும். 'ஒழுக்கநெறி அமைதி' என்பது மனிதனின் செயல் முறைகளுக்கு முழுவடிவம் கொடுக்கும் கூறுகளுள் ஒன்றாகவே இலக்கியத்தை நோக்குகின்றது. இந்த முழு நிறை வடிவத்தைக் கருத்தில்கொண்டே, இலக்கியத்தை மதிப்பிடுவதையும், விளக்கியுரைப்பதையும் செம்மை யாகச் செய்ய முயலுகின்றனர் ஒழுக்கநெறி அமைதிக் கோட்பாட்டினர். இதற்கு மாறாக, இலக்கியம் தானே தனித்து இயங்கும் ஓர் உலகம் என்ற கருத்தை விதிமுறை

வடிவ அமைதிக் கோட்பாட்டினர் கொண்டுள்ளனர். அதனுல், அவ்வுலகிற்கெனத் தனிப்பட்ட நடைமுறை விதிகளும், குறிக்கோள்களும், பயன்களும் இருப்பதாக அவர்கள் நம்புகின்றனர்.

கலைக்கு ஒரேவொரு சட்டம் அல்லது விதிதான் உண்டு, எந்தக் கலைப்பொருளும் அதன் இயல்புக்கேற்ற வகையில் முழு நிறைவை அடையவேண்டும் என்பதே அவ்விதி. ஆனுல், ஒவ்வொரு கலைக்கும் தனித்தனி வழிவகைகள் உண்டு என்பது விதிமுறை வடிவ அமைதிக் கோட்பாட்டினரின் கருத்தாகும். இலக்கியத்தின் ஊடு பொருளாக மொழி விளங்குகிறது. பொருள்கள், மக்கள், உணர்ச்சிகள், முதலியவற்றை மொழிஉணர்த்துவதோடு, அவற்றிடையே அமைந்துள்ள வடிவ அமைப்பைச்சார்ந்த தொடர்பின்பிரதி நிதியாகவும் அது இயங்குகிறது. இவ்வாறு அமையும் இலக்கியம் முழுநிறைவு அடைவதற்கு ஒழுக்கநெறி அமைதியோ சமூகச் சார்புடைய விதிமுறையோ பயன் படுவதில்லை என்றும், இவற்றிலிருந்து வேறுபட்ட விதி யொன்று இலக்கியம் முழுநிறைவை அடைவதற்குத் தேவைப்படுகிறது என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

### விதிமுறை வடிவ அமைதி

ஒருமைப்பாடு, ஒத்திசைவு (Consonance), சுடரொளி (Radiance)என்றமூவகைப் பண்புகளே இலக்கியத்தைமுழு நிறைவு அடையச் செய்கின்றன என்பது அவ்விதியாகும். இலக்கியப் படைப்பு யாதாக இருந்தாலும் அது குவிய லாகவோ, தொகையாகவோ, கூருகவோ இருந்தால் அது எழில்மிகு வடிவ அமைதியைப் பெறுவது இல்லை. அது ஒரு முழுநிறை வடிவை உடையதாக இருந்தால்தான் சிறப் புற்றிலங்கும். இதற்குத் தேவைப்படும் பண்பு ஒருமைப் பாடாகும். பல்வேறு பிரிவுகளுக்கும், பகுதிகளுக்கும் இடையே ஒருமைப்பாடு இருந்தால்தான் அது நல்லதோர் இலக்கியமாக விளங்கமுடியும். இவ்வொருமைப் பாட்டை, அரிஸ்டாட்டில் முதற்கொண்டு இன்று வாழும் தீவிரமான நோக்குடைய இலக்கியத் திறனுய்வாளர்கள் வரையி லுள்ள எல்லாரும், யாதாகிலும் ஒரு வகையில் போற்றி வருகின்றனர்.

இலக்கியப் படைப்பின் பல்வேறு உறுப்புகளுக்கு இடையே தேவைப்படும் இசைவிணக்கமும், தகவுப் பொருத்த அளவும் சேர்ந்து ஒத்திசைவை உருவாக்கு கின்றன. ஒரு 'கரு' படிப்படியாக வளர்ச்சியுறுவதிலும், பல்வேறு கிளைகளாகப் பிரிந்து செல்லுவதிலும் இசைவும் இணக்கமும், பொருத்தமும் இருந்தால்தான் அது நய முடையதாக அமையமுடியும். இப்பணியைச் செய்வது 'ஒத்திசைவு' என்னும் பண்பாகும். இதனை நாம் வெறும் வடிவ அமைப்புச் சார்புடைய சொல்லாகக் கருதுவதற்கு இல்லை. சொல் படிமங்களின் (Imagery) பொருத்தமான அமைப்புகளும், நிகழ்வியலோடு கொண்ட நிலையான தொடர்பும், உணர்ச்சிப் பெருக்கின் குரலிசைவும் ஒன்றுகச் சேர்ந்து ஒத்திசைவினை உருவாக்குகின்றன. எனவே முரண்பட்ட பல்வேறு கூறுகளுக்கு இடையே செயல் திறன்மிக்க இணக்கத்தையுடையது ஒத்திசைவு எனலாம்.

சுடரொளி என்பது சொற்களின் மூலம் இலக்கியம் மன நிறைவினை உண்டாக்குவதோடு அதில் கருத்துக்கள் ஒளிவிட்டுப் பிரகாசிப்பதுமாகும். இதை இலக்கிய இழை யமைப்பு (Texture) என்றும் கூறலாம். நேர்வழிக் கவிதை யை ஆராய்கின்றவர் 'மாய வித்தை' என்று குறிப்பிடு வதையும், ஓரிலக்கியத்தை மொழி பெயர்க்கின்றபொழுது, முதல்நூலின் பண்புகள் இழக்கப்படுகின்றன என்று சொல்லுவதனுல் நாம் சுட்டும் பண்புகளையும் மொழி யியல் அமைப்பிலே காணப்படும் அழகியல் உணர்வின் வெளிப்பாட்டையும், சொற்களைப் பொதுவாகப் பயன் படுத்துவதால் வெளிப்படும் பொருளைக் கடந்து நிற்கும் இயல்புகளையும் கொண்ட முழுநிறை வடிவ அழகின் அமைதியையே, நாம் 'சுடரொளி' என்ற சொல்லால் குறிப் பிடுகிறேம்.

இலக்கியத்தைப்பற்றி விதிமுறை வடிவ அமைதிக் கொள்கையினர் கூறும் கருத்துக்கள் அனைத்தையும் நாம் இந்த மூன்றுவகைத் தலைப்புக்களில் அடக்கிவிடலாம். 'கவிதை கவிதைக்காக' என்பார் காட்டும் நான்குவகை யான பண்புகளையும் ஒத்திசைவு, சுடரொளி என்ற இவ் விரு இயல்புகளிலேயே நாம் அடக்கிக்கூற இயலும்.

### ஒழுக்கநெறி அமைதி

வாழ்க்கை முழுநிறைவு உடையதாக விளங்குவதற்குத் தேவைப்படும் விதிமுறைகளே, இலக்கியம் முழுநிறைவு பெற்று விளங்குவதற்கும் தேவைப்படுகின்றன என்பது ஒழுக்கநெறி அமைதிக் கொள்கையினரின் கருத்தாகும். மனிதனின் பிற அனுபவங்களை ஆட்சிபுரியும் விதிகளே இலக்கியத்தை ஒழுங்கு முறைப் படுத்துகின்றன. மனித வாழ்க்கை முழுநிறைவுஅடைவதற்கு இலக்கியம் எந்த அளவிற்குத் தன் பங்கினை வழங்குகிறது என்பதை அடிப்படையாகக் கொண்டே அது மதிப்பிடப்படுகிறது.

மதிதனின் ஒவ்வொரு செயலும் சிறிதளவேனும் சிறப்பு வகையாகத் தோன்றுகிறது. இலக்கியத்தை இயற்றுவதற்கும், படித்து இன்புறுவதற்கும் சிறப்பு வகையான செயல் முறைகள் நமக்குத் தேவைப்படுகின்றன. இச்சிறப்பு வகைகள் எவ்வாறு பொதுத் திட்டத்தில் பொருந்துகின்றன என்பதையும், மனித அனுபவத்தின் கூட்டுத்தொகையில் எவ்வாறு இலக்கியம் தொடர்பு கொண்டுள்ளது என்பதையும் விளக்கியுரைக்க வேண்டிய பொறுப்பு ஒழுக்கநெறி அமைதிக் கொள்கையின் கடமையாகிறது.

இவ்வினுக்களுக்குரிய விடையை ஓரிரு சொற்களிலோ, சொற்ருெடர்களிலோ நாம் கூற இயலாது; ஓரிரு விடைகளின் மூலமும் இவ்வினுக்களுக்கு விடை பகரவும் முடியாது. தெளிவாக இவ்வினுக்களின் பொருள்களைப் புரிந்து கொள்ள வேண்டுமானுல், பல வகையான விடைகளைக் கூற நேரிடும்.

இவற்றிற்கு ஒரே சொற்ருெடரிலும் விடை பகரலாம். இலக்கியம் என்பது ஒப்புயுர்வற்றது; நாம் போற்றிப் பின்பற்றத்தக்க சிறந்த அறச்செயல்களின் எடுத்துக் காட்டுகளையும், வெறுத்து ஒதுக்கத்தக்க தீயசெயல்களின் எடுத்துக்காட்டுகளையும் இலக்கியம் தந்துதவுகிறது என்று நாம் கூறலாம். இம்முறையையே பன்னெடுங்காலமாக ஒழுக்க நெறி அமைதிக் கோட்பாட்டினர் பயன்படுத்தி வருகின்றனர்.

இதில் ஓரளவிற்கு உண்மையும் இருந்துவருகிறது. காலந்தோறும் நற்பண்பும் நல்லொழுக்கமும் உடைய மனிதரின் எடுத்துக்காட்டுகளை இலக்கியத்தில் மனித இனம் கண்டு போற்றியுள்ளதை நாம் காணுகின்றோம். ஒரு காலத்தில் தமிழினம் கண்ணகியைப் போற்றியது; மற்றொரு காலத்தில் இராமனையும் சீதையையும் பாராட்டியது ; இன்று மனோன்மணியையும் மலர்விழியையும், அறவாழியையும் அருளப்பரையும் போற்றுவதோடு, கண்ணகிக்கு வழிபாடும் செய்கிறது. இதைப் போன்றே எக்காலத்திலும் இலக்கியம் எச்சரிக்கை செய்யவும் தயங்கியதில்லை. கோவலனுடைய வாழ்க்கைக் கேடுகளும், இராவணனது வீழ்ச்சியும். கட்டியங்காரனுடைய அரசியல் சூழ்ச்சிகளும், சீவகவழுதியின் மதிமயக்கமும், குடிலனுடைய வஞ்சனை உள்ளமும், நாகநந்தியின் போலி வேடமும் நந்தினியின் நயவஞ்சக உள்ளமும் நமக்கெல்லாம் ‘அபாய’ அறிவிப்புக்களாக உள்ளதை நாம் உணர்ந்து போற்றுகிறோம்.

எனினும், இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தர்கள் அனைவரும் நல்லவர்கள் என்பதற்கோ, அறநெறியில் ஒழுகுகிறவர்கள் என்பதற்கோ இலக்கியம் உறுதியுரை வழங்க முடியாது. ஒருகாலத்தில் வாழும் குறிப்பிட்ட ஓரின மக்களுக்குச் சிறந்ததோர் இலட்சியப் படைப்பாகத் தோன்றும் இலக்கிய மாந்தர், பிற்காலத்தினருக்கு கயவர்களாகக் காட்சி யளிக்கலாம். கடுமையான எச்சரிக்கைகள் ஏறுமாறான வகையில் பரிந்துரைகளாகவும் கொள்ளப் படலாம். பிளேட்டோவும், டால்ஸ்டாயும், தாகூரும் இலக்கியம் நல்ல எடுத்துக்காட்டுகளைத்தான் சித்திரிக்க வேண்டும் என்று கூறியதைக் கருத்தில் கொண்டு, நம் இலக்கியங்களைத் துருவித்துருவி ஆராய்ந்து பார்த்தால், நம்முடைய இலக்கியச் செல்வத்தின் முக்கால்பகுதியை நாம் அழித்தொழிக்க நேரிடும்; அல்லது எடுத்துக்காட்டுகளும் எச்சரிக்கைகளும் தனிப்பட்டனவாகவும் தூய்மையானவையாகவும் படைக்கப்படவேண்டும் என்றும் அதில் கலப்பு இருக்கலாகாது என்றும் சொன்னால், இலக்கியத்

தின் செறிவும் வகையும் கெட்டுப்போகும். அதுமட்டுமன்று. மாதவியும் கோவலனும், கும்பகருணனும் இராவணனும் நம்மை நையாண்டி செய்வதற்கு வந்துவிடுவார்கள்.

ஒழுக்கநெறி மதிப்பீட்டிற்கு இலக்கியம் தேவையான மூலப்பொருள்களைத் தந்துதவுகிறது. தனிமனிதனின் வாழ்க்கையிலிருந்து நாம் பெறக்கூடிய அம்மூலப் பொருள் களின் அளவினைவிட, மிகுதியான படிப்பினைகளை இலக் கியம் நமக்கு வழங்குகிறது ; பரந்துபட்ட ஒழுக்கநெறி அனுபவங்களை இலக்கியம் நமக்குக் கொடுத்துதவுகிறது. எனவே, ஒழுக்கநெறி அமைதிப் பண்புகள் தனிமனித வாழ்க்கையில் இருப்பதைக் காட்டிலும் இலக்கியம் ஒன்றி லேயே திரண்டு காணப்படுவதில் வியப்பில்லை.

அறநெறிப் பயன்மதிப்புத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளாமல் போனால், ஒழுக்கநெறி அமைதிக் கொள்கை வரையறுக்கப்பட்ட பொருட்செறிவு அற்றதாகப் போய் விடும். எனவே, அது பருப்பொருள் சார்புடையதாகவும் வெளிப்படையாகக் கருத்துக்களைச் சுட்டுவதாகவும் அமையவேண்டும். அவ்வாறானால், அது மக்கள் வாழ்க்கை யின் பல்வேறு நிலைகளையும் செயல்களையும் தழுவிச் செல்வதாக இருக்கவேண்டும். இவ்வாறு இலக்கியம் அமைகின்றபொழுது அது சமூகச் சார்புடையதாகிவிடு கிறது.

## இலக்கியமும் சமூகவியல்புகளும்

"இலக்கியம் என்பது சமூக இயற்காட்சியாகும். இலக்கியம் படைக்கப்படுவதே ஒரு சமூகச் செயலாகும். எழுதுவதன் மூலம் நாம் கருத்தைத் தெரிவிக்க முயலு கிறோம். நாம் தனிமையில் தியானம் செய்ய விரும்பினால் எதற்காக எழுதப்போகிறோம்? நம்முடைய அனுபவத்தை யும் கருத்துக்களையும் பிறருக்கு அறிவிக்கவேண்டும் என் பதே நாம் எழுதுவதற்குரிய நோக்கமாகும். எழுதியதை வெளியிடுவதன் மூலம், நாம் பலருக்கு நம்முடைய கருத்தைத் தெரிவிக்க நினைக்கின்றோம். அந்தப் பலர் ஒரு குழுவாகவோ, ஓரினமாகவோ, ஒரு தேசிய இன மாகவோ இருக்கலாம். ஓர் இலக்கியப்படைப்பு உண்மை

யென ஏற்றுக்கொள்ளும் பயன்மதிப்புக்கள் ஒரு குழுவினாலும், ஓரினத்தாலும், ஒரு தேசிய இனத்தாலும் அல்லது எல்லாராலும் சிறந்ததென்று போற்றத்தக்கனவாகவே இருக்கும். எனவே, இலக்கியம் பற்றி ஒழுக்க நெறி அமைதிக்கொள்கை, சமூகவியல் கொள்கையாகவும் விளங்குகிறது''[18] என்பது இந்நாளைய மேனாட்டுத் திறனாய்வாளர் ஒருவரின் கருத்தாகும். இக்கருத்துப்படி எல்லா ஒழுக்க நெறிகளும் சமூகச் சார்பான ஒழுக்க நெறிகள் என்றோ, அறநெறித் தீர்ப்புக்களும் மதிப்பீடுகளும் சமூகச் சார்புடையன என்றோ கூறுவதற்கில்லை. அவை ஒழுக்க நெறிகளைப் பற்றியன அல்ல என்று கூறவதும் கூடாது. இலக்கியத்தைப் பற்றியும் அவை ஒழுக்கநெறிச் சார்பாகப் பேசுகின்றன என்று நாம் கூறலாம்.

இலக்கியம் சமூகச் சார்புடையது என்பதற்கு மற்றொரு காரணமும் காட்டலாம். 'இலக்கியத்தின் மூன்று குரல்களும்' பிறர் கேட்பனவாகவே அமைந்துள்ளன. தனி மனிதனோ, ஒரு குழுவோ அவற்றைக் கேட்டுணர முடியும். இவ்வடிப்படையில் நோக்குவோமானால், ஒரு சமூகக் குழுவின் செயல்முறைகளின் பகுதிகளை வழங்குவதே இலக்கியம் என்றும், அச்சமூகக் குழுவோடு தொடர்பு படுத்தப்பட்டே இலக்கியம் மதிப்பிடப் பெறுகிறது என்றும், அத்தொடர்பின் அடிப்படையிலேயே கருத்துக்கள் இலக்கியத்தில் விளக்கப்படுகின்றன என்றும் கூறுவதே ஒழுக்கநெறி இலக்கியக் கொள்கை என்பது புலனாகும். ஆனால், சமூகக் குழுவென்பது சமுதாயத்தின் முழுநிறை வடிவத்தின் ஒரு பகுதி என்பதை நாம் மறந்துவிடலாகாது. இச்சமுதாய முழுநிறை வடிவத்தோடு தொடர்புடைய ஒழுக்கநெறி இலக்கியக் கொள்கையே தன்னுடைய பகுப்பு ஆய்வினைச் செம்மையாக நடத்த முடியும்.

இக்கருத்து ஓரளவிற்கு மார்க்கசிய இலக்கியக் கோட்பாடாகத் தோன்றலாம். அவர்கள் சமூகப் பொருளாதாரச் சக்திகளின் பிரதிபலிப்பே இலக்கியம் என்பர். இதைச் சிறிது மாற்றி, 'இலக்கியம் என்பது சமூகத்தின் வினைத் திட்பத்தால் தோன்றுவது' என்று நாம் கூறலாம். எந்த

இலக்கியப் படைப்பாக இருந்தாலும் அதில் சமூகச் சார்புடைய உட்பொருள் இடம்பெற்றிருப்பதால், நாம் அதை இவ்வாறு கூறலாம். அச்சமூகச் சார்புடைய உட்பொருளை இலக்கிய ஆசிரியன் நன்குணர்ந்து திட்டமிட்டு எடுத்துரைக்கலாம். அல்லது அவன் தன்னுணர்வு இல்லாமலேயே அதைத்தான் படைக்கும் இலக்கியத்தின் மூலம் அறிவுறுத்தலாம்.

இதனுல், பிரசார நோக்கத்தைக் குறிக்கோளாகக் கொண்டது இலக்கியம் என்று கருதிவிடக்கூடாது. எந்தச் சமூகத்திலிருந்து இலக்கியம் அரும்புகிறதோ, அந்தச் சமூகம் சிறந்ததெனப் போற்றும் விழுமிய இலட்சியங்கள் தாமாகவே இலக்கியத்தில் இடம்பெறும். அவை இலக்கியம் கற்பவர்க்கு இன்பத்தை அளிப்பதோடு, வாழ்க்கையைச் செம்மைப் படுத்திக் கொள்ளுவதற்குரிய கருத்துக்களைத் தந்துதவும். பண்டைத் தமிழர்கள்,

அறம்பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே

(நன். 10)

என்று இலக்கியத்தின் நோக்கத்தை எடுத்துரைத்தனர். தமிழ்ச் சமுதாயம் சிறந்ததென்று போற்றிய விழுமிய கருத்துக்களாகிய இந்நான்கையும், தமிழ்ப் புலவர்கள் தங்கள் இலக்கியத்தின் வாயிலாக அறிவுறுத்துவதைச் சிறந்த முறையில் செய்துள்ளனர். இதைப் பிரசாரம் என்று யாரும் சொல்ல முடியாது. அந்தச் சமூகத்தின் உள்ளார்ந்த இலட்சியங்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பன அந்தச் சமூகத்தைச் சேர்ந்த புலவர் இயற்றிய இலக்கியங்களில் எதிரொலிக்கின்றன என்றுதான் நாம் கூறவேண்டும்.

## இருவகைப் பண்புகளும் இணைந்ததே இலக்கியம்

இக்காரணங்களினுல், நாம் இலக்கியத்தை விதிமுறை வடிவ அமைதிக் கொள்கையின் அடிப்படையில் மட்டும் அணுகக்கூடாது ; அல்லது ஒழுக்கநெறி அமைதிக் கொள்கையின் அடிப்படையில் மட்டும் அதை அணுகுவது பயன் தாராது என்ற முடிவிற்குவர நேர்கிறது. ஆகவே, நாம் மேற்கண்ட இருவகைக் கொள்கைகளின் கூட்டிணைப்பான சமூகவியல் கண்ணேட்டத்தோடு இலக்கியத்தை அணுகு

வது நல்லது. அவ்வாறுயின் இலக்கியத்தை நாம் ஒரு செயல்முறை ஏற்பாடாகவே கொள்ளவேண்டும். குறிப்பிட்ட சில வடிவ அமைதிக் கட்டுக்கோப்பினை இலக்கியம் நமக்குத் தருகிறது. அந்தக் கட்டுக்கோப்புக்கள் மொழிச் சார்புடையனவாக உள்ளன. ஓவியங்கள் வண்ணங்களைக் கொண்டு வரையப்படுவதைப் போன்று இலக்கியங்கள் மொழியைக் கொண்டு படைக்கப் பெறுகின்றன. ஆனால், பொருள்களையும், தனி மனிதர்களையும், செயல்களையும், நிகழ்ச்சிகளையும், உணர்ச்சிகளையும் அவற்றிடையே உள்ள தொடர்புகளையும் மொழியானது சிறப்பிக்கின்றது என்பதை நாம் மறத்தலாகாது. இவை சமூகச் சார்புடையனவாகவும் ஒழுக்கநெறி இயல்பு சார்ந்தனவாகவும் உள்ளன. எனவே, ஓர் இலக்கியத்தின் கருத்துக்களை ஆராயாமல், நாம் அதனுடைய வடிவ அமைதியைப் பகுத்துணருவது என்பது அரிய செயலாகும். ஒரு கால் அதை நாம் கருத்துப் பொருளாகக் கொண்டு மரபுவழி ஓரளவிற்கு ஆராய முடியும். ஆனால், ஓர் இலக்கியத்தின் முழுமையான வடிவ அமைதிபற்றிய விளக்கத்தைக் கொடுக்க வேண்டுமானால், நாம் அப்பொருள்களைப் பருப்பொருள் மெய்ம்மை நிலையில் காணவேண்டும். அவை இலக்கியத்தின் வடிவத்தினை மாற்றும் அளவிற்கு ஆற்றல் மிகுந்தனவாக உள்ளமையால் நாம் இத்தகைய நெறிமுறைகளைப் பின்பற்ற வேண்டியவர்களாக இருக்கிறோம்.[19]

மேலும், இலக்கியம் நமக்கு ஒழுக்கநெறிச் சார்புடைய கருத்துக்களையும் சமூகவியல் சார்புடைய கருத்துக்களையும் தந்துதவுகிறது என்பதை இங்கு நாம் நினைவுகூர்தல் வேண்டும். ஆனால், அக்கருத்துக்கள் குறிப்பிட்ட சில வடிவ அமைப்புக்களில் நமக்குத் தரப்படுகின்றன. சமூக-அறநெறிக் கருத்துக்களால் உணர்த்தப்படும் வடிவத்தைப் பற்றிக் கவலையுறுமல், அச்சமூக-அறநெறிக் கருத்துக்களை மட்டும் ஆராய்வோமானால் நாம் மேற்கொண்ட ஆராய்ச்சி இலக்கிய ஆராய்ச்சியாக அமையாது. அது வரலாறு, சமூகவியல், அறவியல் பற்றிய ஆராய்ச்சியாக அமைந்துவிடும். எனவே, ஓர் இலக்கியப் படைப்பினைப் பற்றி முழுமையான விளக்கம் தரவேண்டுமானால், நாம் அத

னுடைய வடிவ அமைதியைப்பற்றியும் ஆராய்ந்தறிய வேண்டும். அது ஒழுக்கநெறி அமைதிப் போக்கினை உருவாக்கும் எதிரிடை ஆற்றலைக் கொண்டு இயங்கு கின்றமையால் இவ்வாறு நாம் அணுகவேண்டியவர்களாக இருக்கிறோம்.[20]

எனவே, நாம் எப்பக்கத்திலிருந்து நம்முடைய இலக் கிய ஆராய்ச்சியைத் தொடங்கினாலும் ஒழுக்கநெறி அமைதிக்கும், வடிவ அமைதிக்கும் இடையே உள்ள சிக்கலான செயல் விளைவுபற்றிய வழக்கெதிர் வழக்காடும் முறையில் ஈடுபட வேண்டியவர்களாக இருக்கின்றோம். இம்முறையே இலக்கியப் படைப்பின் முழு நிறை வடிவ மாக நோக்குவதற்கு உகந்ததாகும்.

இவ்விருவகைப் பண்புகளின் இணைப்பினால் அமை வதே சிறந்த இலக்கியமாகும். இவ்விருவகைப் பண்பு களுள் யாதாகிலும் ஒரு பண்பு முனைப்பாக அமைகின்ற இலக்கியங்கள் உண்டு. விதிமுறை வடிவ அமைதிப் பண்பு மிக்குடைய இலக்கியங்கள் இன்புறுத்தும் இயல்புடையன வாக அமைகின்றன. ஒழுக்கநெறி அமைதிப் பண்பு முனைப்பாக உள்ள இலக்கியங்கள் நீதி இலக்கியங்களாகப் போற்றப் பெறுகின்றன.

### திருக்குறள் ஒரு நீதி இலக்கியம்

அறநெறிக் கருத்துக்களை அறிவுறுத்துவதையே முதன்மையான நோக்கமாகத் திருக்குறள் கொண்டிருக் கிறது. எனினும், அது கருத்துக்களை உணர்த்தும் முறை யில் ஓர் ஒருமைப்பாடும், ஒத்திசைவும், சுடரொளியும் இணைந்தும், இழைந்தும் காணப்படுகின்றன. அவற்றுடன் கற்பனை வளமும், கவிதைத்திறனும் பொருத்தமான அள விற்குத் திருக்குறளில் இடம்பெற்றுள்ளன. மேலும் திருக்குறளின் மூன்றாவது பகுதியாகிய காமத்துப் பால் முழுவதிலும் இலக்கியமணம் கமழ்கிறது. அதில் நாடகப் பண்புகள் நிறைந்து காணப்படுகின்றன. இப் பண்புகள் திருக்குறளில் இடம் பெற்றுள்ளமையால் இலக்கிய உல கில் சிறந்ததொரு நீதி இலக்கியமாக அது சிறப்புற்று விளங்குகிறது.

மேற்கண்ட இலக்கிய இயல்புகளைக் கொண்ட நீதி இலக்கியங்கள் கலையழகு குன்றாத வகையில் கருத்துக்களை எடுத்தியம்புகின்றன. அவற்றுள் கருத்துக்கள் இன்புறுத்தும் இயல்புகளோடு ஓரளவிற்கேனும் தொடர்பு கொண்டுள்ளன. மேலும், அவை கற்பனையின் உதவியைச் சிறிதளவேனும் நாடுவதால் சிறப்புறுகின்றன.

எடுத்துரைக்கும் முறையை அடிப்படையாகக் கொண்டு தோன்றுவது கலையழகு. நீதிநூல்கள் கருத்துக்களை எடுத்துரைக்கும் முறைகளைப்பற்றிப் பொதுவாகக் கவலைப் படுவதில்லை. ஆனால், அவற்றுள் தலைசிறந்த நீதி இலக்கியங்களாக உள்ளவை எடுத்துரைக்கும் முறைகளிலும் புதுமைப் போக்குகளையும் சுவைமிக்க திறன்களையும் பயன்படுத்தியுள்ளன. இங்கு நீதிநூல்கள் கருத்தை எடுத்துரைக்கும் முறையைப்பற்றி வடமொழிவாணர்கள் கூறியுள்ள கருத்து நினைவுகூர்தற்கு உரியதாகும்.

> உயர்ந்த கருத்துக்களை எடுத்துக் கூறிக் கேட்போரைச் செயற்படுத்தும் நெறியில் ஒரு பொருளை மறைநூல் கூறுவது தலைவன் தன் பணியாளனுக்கு இடும் கட்டளையைப் போன்றது. அதனையே, ஓர் அறநூல் கூறுதல் ஓர் அன்பன் தன் நண்பனுக்கு அறிவுரை கூறுவதை ஒக்கும். காப்பியம் அறக் கருத்தைக் கூறுவது அன்புறு காதலி, தன் இன்புறு காதலனுக்குக் கொஞ்சு மொழியில் அன்பையும் இன்பத்தையும் குழைத்துத் தருவதைப் போன்றது.[21]

என்பது வடமொழி இலக்கண நூலார் கருத்தாகும்.

இதிலிருந்து நாம் ஓர் உண்மையை உணரலாம். எவ்வளவு உயர்ந்த கருத்தாக இருந்தாலும், அதைப் படிப்பவர் உள்ளத்தைக் கவரும் வகையில் இதமாக எடுத்துரைப்பதை அறநூல் ஆசிரியர்கள் பொதுப் பண்பாகவும், இன்றியமையாது வற்புறுத்திக் கூறவேண்டிய இடங்களில், எப்படி நண்பன் ஒருவன் தன் நண்பனுக்கு எவ்வளவு அறிவுரை கூறியும் திருந்தாமல் கெட்டுப் போவதைக் கண்டு உரிமையுடன் கடிந்து உரைக்கின்றானே அதைப்போன்று சிறிது கடுமையாகவும் கருத்துக்களை எடுத்துரைக்கும் முறையைச் சிறப்புப் பண்பாகவும் பெற்றுள்ளனர் என்பதை நாம் அறியமுடிகிறது.

திருவள்ளுவர் பெரும்பாலும் ஒவ்வோர் அதிகாரத்திலும் முதல் ஏழெட்டுக் குறட்பாக்களில் நயமாகவும் இதமாகவும் தாம் கூறவந்த கருத்துக்களை எடுத்துரைப்பதையும், ஒன்பதாவது அல்லது பத்தாவது குறளில் அக்கருத்தினைச் சிறிது கடுமைகலந்த குரலில் வற்புறுத்திக் கூறுவதையும் நாம் காணலாம்.

சான்றாகப் 'புறங்கூறாமை' என்ற அதிகாரத்தை நாம் எடுத்துக்கொள்வோம். முதல் குறட்பாவில் புறங்கூறாது இருத்தலாகிய அறத்தைக் கடைப்பிடிப்பதால் உண்டாகும் நன்மையையும், இரண்டுமுதல் நான்காம் குறட்பாமுடிய புறங்கூறுவதின் கொடுமைகளையும், ஐந்து முதல் ஒன்பது பாட்டுவரை புறம் கூறுகின்றவர்க்கு உண்டாகும் குற்றத்தையும் துன்பத்தையும் கூறி, இறுதிப்பாடலில் புறம் கூறும் இயல்பை ஒழிப்பதற்குரிய உபாயத்தையும் ஆசிரியர் நமக்கு அறிவிக்கின்றார். அவற்றுள் முதல் எட்டுப் பாடல்களில் புறங்கூறுவதனால் உண்டாகும் கேட்டையே நயமாக எடுத்துரைத்த வள்ளுவர், ஒன்பதாவது பாட்டில் 'இப்படிப் பிறரைத் தூற்றித் திரிபவனை ஏன் நிலமகள் சுமந்து கொண்டிருக்கிறாள் தெரியுமா? இக்கொடியதைப் பொறுத்துக் கொள்ளுவதே தனக்கு அறமாகும் என்று கருதிப் பொறுத்துக் கொண்டிருக்கின்றாள். இல்லையென்றால் இக்கொடியவர்களை எல்லாம் என்றோ அழியும்படி அவள் விட்டுவிட்டிருப்பாள்' என்ற கருத்தமைய,

> அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
> புன்சொல் உரைப்பான் பொறை. (குறள் 189)

என்று அறைகிறார்.

எல்லாவற்றையும் பொறுத்தல் நிலமகளுக்கு இயல்பாயினும், புறங்கூறுவோரைப் பொறுத்தல் அரிது என்னும் கருத்தால், "அறன்நோக்கி ஆற்றுங்கொல் என்றார்" என்னும் பரிமேலழகரின் உரைநயம் இக்கருத்தைத் தெளிவுறுத்துவதாகும். இவ்வாறு திருக்குறளின் ஒவ்வோர் அதிகாரத்தையும் நாம் ஆராய்ந்து பார்ப்போமானால் இவ்வுண்மை புலனாகும்.

திருவள்ளுவர் தாம் கூறவந்த கருத்துக்களைக் கலை யழகு குன்றாத வகையில் பல்வேறு முறைகளால் எடுத் துரைக்க முயன்றுள்ளார். அவற்றுள் சிறப்புமிக்க சிலவற்றை இங்கு நாம் காணலாம். நீதிநூல்கள் 'இதைச் செய்க ; இதைச் செய்தல் வேண்டாம்' என்று அறிவுறுத் தும் இயல்பினையுடையன. இவ்வாறு ஓர் அதிகாரம் முழுவதும் விதியாகவும் விலக்காகவும் அமைந்தவை திருக் குறளில் பல உள்ளன. விருந்தோம்பல், வாய்மை, இனி யவை கூறல், செய்ந்நன்றியறிதல் என்பன போன்றவை 'செய்க' என்று விதிமுறை கூறும் அதிகாரங்களாகும். புறங்கூறாமை, கொல்லாமை, பெரியாரைப் பிழையாமை என்பன போன்றவை 'செய்யற்க' என விலக்குமுறை கூறும் அதிகாரங்களாகும்.

இனி, 'செய்க' என்று வியங்கோள் வாய்பாட்டான் எடுத்துரைக்கும் குறட்பாக்கள் பல உள்ளன. சான்றாக

அன்றறிவாம் என்னா தறஞ் செய்க (குறள் 36)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல் (குறள் 759)

என்பனவற்றைக் கூறலாம்.

அடுத்து 'செய்யற்க' என்று விலக்கும் முறையில்,

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு (குறள் 106)

உள்ளற்க உள்ளம் சிறுகுவ (குறள் 798)

என்பன போன்ற பாடல்கள் பல அமைந்துள்ளன.

இதனைச் செய்யின் இன்னபயன் விளையும் என்றும், இதனைச் செய்யாது விடினும் செய்யத்தகாத இதனைச் செய்யினும் இன்ன தீமை உண்டாகும் என்றும் வள்ளுவர் கூறுந்திறன் நயமுடையதாகும்.

அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு (குறள் 75)

பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வித் தலைப்படா தார் (குறள் 88)

இவற்றைப் போன்றே, ஒரு கருத்தைத் தனித்தனியே உடன்பாட்டு வாய்பாட்டானும் எதிர்மறை வாய்

பாட்டானும் ஆசிரியர் எடுத்துரைப்பார்; ஒரு குறட் பாவில் இரண்டையும் சேர்த்துக் கூறுவர்; வினவாக அமைத்துத் தம் கருத்தைப் புலப்படுத்துவார், வினவைக் கூறி விடையையும் தாமே அமைப்பார்; ஒன்றன் இலக் கணம்கூறி அதனோடு தொடர்புள்ளவற்றைச் சொல்லப் புகுவார்; இன்ன காரணத்தால் இது இத்தகையது; இது செய்தற்குரியது; இது செய்யத்தகாதது என்பர். இதனி னும் இது தீயது; இதனினும் இது நன்மையானது; இதனினும் இது தலையாயது; இது சிறந்தது; இதைக் காட்டிலும் விரும்பத்தக்கன வேறில்லை என்றெல்லாம் பல வகை வாய்பாட்டான் வள்ளுவர் வகுத்துரைப்பார். உவமை, உருவகம் போன்ற அணிகளின் வாயிலாகவும் அவர் கருத்துக்களைத் தெளிவுறுத்துவார்.

மேலும் நாடகப்பாங்கிலே, காமத்துப்பால் முழுவதை யும் தலைவன், தலைவி, தோழி கூற்றாக வைத்துக் கூறுவர். பொருட்பாலிலும் சில இடங்களில் வள்ளுவர் இம்முறை யைக் கையாண்டுள்ளார். ஆசிரியர் தம்முடைய கூற்றாக வைத்து, தன்மையிடத்துச் சொற்களை ஆண்டு கருத்துக் களைத் தெரிவிப்பார்; நல்லனவற்றைப் போற்றியும் தீயன வற்றை இழித்து முரைப்பார்[22].

இவ்வாறு வள்ளுவர் பலவகை முறைகளைக் கையாளு வதன் மூலம் தாம் கூறவந்த கருத்துக்களைத் தெளிவுறுத்து வதோடு, அவற்றில் செஞ்சொல் கவியின்பம் சிறப்புற்று விளங்கவும் செய்துள்ளார். கலையழகு குறையா வகையில் கருத்துக்களை உணர்த்துவதில் வள்ளுவர் தன்னிகரற்ற நீதி நூலாசிரியராக விளங்குகிறார். பிற நீதி நூல்களில் காண முடியாத இப்பண்பு திருக்குறளைச் சிறந்ததோர் இலக்கிய மாக மேம்பட்டு விளங்கச் செய்துள்ளது என்றால், அது மிகையாகாது.

அறநெறிக் கருத்துக்களை அறிவுறுத்தும் திருக்குறளில் இலக்கியத்தின் இன்றியமையா இயல்புகளான கற்பனை, உணர்ச்சி ஆகியவை குறிப்பிடத்தக்க அளவிற்கு இடம் பெற்றுள்ளன. இவை இரண்டுடன் ஒன்றிய கருத்துக்கள் பல திருக்குறளில் காணப்பெறுகின்றன. பொருளாலும், ஓசை நயத்தாலும் சிறப்புடைய சொற்களைக் கொண்டே

வள்ளுவர் தம் கவிதைகளைப் புனைந்திருக்கின்றார். பொருளும் ஓசையும் ஒன்றுகின்ற பொழுது உணர்ச்சி வெளிப்படுகிறது. இவ்வுணர்ச்சிக்குக் கைகொடுத்து உதவுவது கற்பனை. தொடர்பற்றன போல் தோன்றும் இரண்டு பொருள்களை ஆசிரியர் தம் கற்பனையின் துணைக்கொண்டு தொடர்புபடுத்துகிறார்.

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து (குறள் 90)

என்று வள்ளுவர் கூறுவதன் மூலம், அனிச்சப் பூவின் மென்மையைவிட விருந்தினரின் உள்ளம் மிகமிக மென்மையானது என்ற கருத்தை உணர்த்துகிறார். அனிச்சப் பூவைக்காட்டிலும் விருந்தினர் உள்ளம் மென்மையானது என்பது பொருந்துமா? மோந்தாலே வாடிவிடும் மலர் அனிச்சம். மனிதன் ஒருவன் அதைமோந்து பார்க்கிற பொழுது அவனுடைய வெப்பம் பொருந்திய மூச்சு அதில் படுகிறது. அதனால் அது உடனே வாடிவிடுகிறது. ஆனால், இதைவிட வியப்பிற்குரிய பொருளாக விருந்தினர் உள்ளனர். அவர்களை முகம் திரிந்து நோக்கினால் போதும்; அந்த நோக்கே அவர்களை வாடிவிடச் செய்கிறது. இதைப் போன்று எளிதில் குழையக் கூடிய பொருள் உலகில் வேறொன்று இருக்க முடியாது என்று வள்ளுவர் கருதுகிறார். எனவே, அவருடைய உள்ளத்தில் இதற்கு ஒப்பாக அனிச்சப் பூவைக் கூறலாம் என்ற எண்ணம் எழுகிறது. இரண்டையும் இணைத்துப் பார்க்கிறார். அவ்விணைப்பில் கற்பனை உருவாகிறது. அதன் பயனாக இக் கவிதை பிறந்தது.

ஆசிரியருக்கு, விருந்தினர் உள்ளம் அனிச்சப் பூவை விட மென்மையானதாகத் தோன்றுகிறது. அதனால் அவருடைய உள்ளத்தில் விருந்தினர் வருந்தக்கூடாது என்ற இரக்க உணர்ச்சியும் தலையெடுக்கிறது. அவ்வுணர்ச்சியைத் தம் கற்பனையோடு வள்ளுவர் கலந்து தருகிறார். 'குழையும் விருந்து' என்ற தொடரில் உள்ள 'குழையும்' என்னும் சொல்லில் இருக்கும் உம்மை, வெறும் உம்மையன்று. "ஐயோ! என்ன செய்வது? சிறிது முகம் வேறுபட்டு நோக்கினாலும் அவர்கள் மனம் வருந்துமே!" என்ற

பரிவு உணர்ச்சியை அது வெளிப்படுத்துகிறது. இங்குக் கற்பனை, உணர்ச்சி ஆகிய இரண்டுடன் ஒன்றிய கருத்து ஆசிரியருடைய உள்ளத்தை நமக்கு நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது. இதைப்போன்ற கற்பனை நயம் பொருந்திய கவிதைகள் பல நீதி இலக்கியமாகிய திருக்குறளில் காணப்பெறுகின்றன.

உணர்ச்சியை வெளிப்படுத்தும் கவிதைக்கு, உணர்ச்சியை எளிதில் வெளிப்படுத்துவதற்குரிய வகையில் அதன் வடிவம் அமைதல் வேண்டும். குறட்பா கவிஞன் விருப்பம்போல் வளைந்து கொடுக்கும் ஆற்றலற்றது ; பல கட்டுப்பாடுகளை உடையது. ஒன்றே முக்கால் அடியில் ஏழுசீர்களைக் கொண்ட குறட்பா யாப்பில் ஆசிரியர் இயன்றவரை உணர்ச்சியையும் புலப்படுத்த முயன்று, வெற்றியும் பெற்றிருப்பது செயற்கரிய செயலாகும்.

அறநெறிக் கருத்துக்களை இலக்கியங்கள் குறிப்பாகவும் மறைமுகமாகவும் அறிவுறுத்துவதே சாலச் சிறந்தது என்பர். இவ்வுண்மை பிற இலக்கியங்களுக்குப் பொருந்தக் கூடியது. அறநெறிக் கருத்துக்களை அறிவுறுத்துவதையே நோக்கமாகக்கொண்டு இயற்றப்படும் நீதி இலக்கியங்களில் இவ்வியல்பினை எதிர்பார்ப்பது தவறாகும். சிறந்த இலக்கிய இயல்புகளைத் தன்னகத்தே கொண்ட திருக்குறளைப் போன்ற நீதி இலக்கியங்களில் இவ்வியல்பு இடம் பெறுவது இயலாது.

இலக்கியத்தின் பயன் இன்புறுத்துவது என்றும், அறிவுறுத்துவது என்றும் நாம் முன்னர்க் கண்டோம். 'இவற்றில் எது சிறந்தது?' என்ற ஐயம் எழலாம். பாவிலே உயர்ந்தது அறத்தைப் பற்றி அறிவுறுத்துவதா? அல்லது பாவிலே சிறந்தது இன்புறுத்துவதா? என்பதை ஆராய்ந்து பார்த்த நாம், இவ்விரு இயல்புகளும் ஏற்ற வகையில் இணைந்தும் இழைந்தும் இருக்கின்ற பாவே போற்றத் தக்கது என்ற முடிவிற்கு வரலாம். மேலும், இன்புறுத்துதல் அறிவுறுத்துதல் என்பனவற்றுள், நாம் ஒன்றை மற்றொன்றிலிருந்து பிரித்துக் காணமுயலுவதே அறிவுடைமை யாகாது, அவை இரண்டும் ஒரு ரூபாய் நாணயத்தின்

இரண்டு பக்கங்களைப் போன்றவை. அவற்றுள் ஒன்றை மற்றொன்றிலிருந்து பிரிக்க முடியாது; பிரிக்க முயலுவது வீண் முயற்சி. சிறந்த இலக்கியங்களில் அவை இரண்டும் ஒன்றாகப் பின்னிப் பிணைந்துதான் காணப்படும்.

இப்பண்புகளில் ஒன்று சில இலக்கியங்களில் முதன்மையிடம் பெற்றிருக்கலாம்; அல்லது இரண்டாம் இடத்தைப் பெற்றிருக்கலாம். இதனால், இலக்கியங்களை இன்புறுத்தும் இயல்பு மிகுதியாகவுடைய இலக்கியம் என்றும், அறிவுறுத்தும் இயல்பு மிகுதியாகவுடைய இலக்கியம் என்றும் நாம் பாகுபடுத்திக் கூறலாம். இவ் வடிப்படையில் நோக்கினால் காப்பியம், சிறுகதை போன்றவை இன்புறுத்தும் இயல்பு மிக்குடையனவாகத் தோன்றும்; நீதிநூல்கள் அறிவுறுத்தும் இயல்பு மிகுதியுமுடையனவாகத் தோன்றும். இவ்வாறில்லாமல் ஒரே ஒரு பண்பு மட்டும் பெற்று விளங்கும் இலக்கியங்களை நாம் உலகில் காண்பதரிது. ஆழ்ந்தும், அகன்றும், நிலை பெற்று விளங்கும் இயல்பு பொருந்திய மனிதப் பண்புடன் தொடர்புடையதாகவும், மனித வாழ்க்கையிலிருந்து முகிழ்ப்பதாகவும் இலக்கியம் இருப்பதால், அதில் அறிவுறுத்தும் கருத்துக்கள் இடம் பெறாமல் இருக்கமுடியாது. அப்படி அறிவுறுத்தும் கருத்துக்கள் இல்லாத இலக்கியங்கள் எவையேனும் இருக்குமானால், அவை சிறந்த இலக்கியம் என்று போற்றத் தக்கனவாக இருக்க இயலா என்று நாம் உறுதியாகக் கூறலாம். அவை நிலையான வாழ்வைப் பெறாது விரைவிலே அழிந்தொழிந்து விடும்.

இக்காரணங்களினால் பாவிலே உயர்ந்தது அறத்தைப் பற்றி மட்டும் அறிவுறுத்துவது அன்று ; பாவிலே சிறந்தது இன்புறுத்துவது மட்டுமன்று ; அவை இரண்டும் ஒன்றாக இணைந்து விளங்கும் பாவே உயர்ந்ததும், சிறந்ததுமாகும். திருக்குறளில் இவ்விரு இயல்புகளும் கலந்து காணப்படுகின்றன. அதனால் தான், அதை இன்றும் " நீதி இலக்கியமாக " வையகம் போற்றுகிறது.

## குறிப்புகள்


1. வரதராசனார், மு.: இலக்கியத் திறன், பக். 54.
2. Wordsworth, W.: Literary Criticism, pp. 156-7. Ed. by Nowell, C. Smith; London; N. D.
4. Gorky, Maxim : Essays on Literary Criticism, P, 48. Foreign Languages Publishing House, Moscow, 1958.
4. Pater, William: The Renaissance: Studies in Art and Poetry, p. 48.
5. ஷை, பக். 52.
6. ஷை, பக். 20.
7. Valery, Paul: The Art of Poetry, p.185., Routledge & Kegan Paul, London, 1951.
8. Poe, Edgar Allen. "The poetic principle", p. 197. Complete works Ed. by J. A. Harrison, Vol. XIV, N. Y : 1902.
9. Read, Horbert: Phases of English Poetry. Quoted in the Chapter on "Pure Poetry" p. 112., Hogarth Press. London, 1928.
10. Garrod, H. W. : The Profession of Poetry, pp. 34-35; Clarendon Press., Oxford, 1929.
11. Whistler, James: "Ten O'Clock Lecture" The Religion of Beauty, p. 217. Ed. by Richard Aldington, London, 1950.
12. Buckley, vincent: Poetry and Morality, p. 14. Chatto and Windus, London, 1959.
13. Bradley, A. C.: Oxford Lectures on Poetry, p. 5; Macmillan & Co; London, 1962.
14. Richards, I. A: Principles of Literary Criticism, pp. 71-80. Routledge & Kegan Paul, London, 1961.
15. Radhakrishnan, S.: Moral Values in Literature, p. 57. Formative Ideals, Ed. by Venkata Rao, P. K., Deccan Publications, Bangalore, 1950.
16. Garrod. H. W.; Poetry and the Criticism, p. 21; O. U. P. London, 1931.
17. ரெனி வெல்லாக்கும் ஆஸ்டின் வாரனும்: இலக்கியக் கொள்கை, பக். 29. மொ. ப: குளோறியா சுந்தரமதி; IATR: சென்னை, 1966.

18. Hough, Graham: An Essay on Criticism, p. 30., Gerald Duckworth & Co; London, 1966.

19. ஷை, பக். 38.

20. 'இருவகைக் கோட்பாடுகள்' என்ற பகுதி மேற்கண்ட நூலின் கருத்துக்களைத் தழுவி எழுதியதாகும்.

21. Mammata: Kavyaprakasha, pp. 1-2., Tr. by Ganganatha Jha, The Indian Press, Allahabad., 1925.

22. இவற்றின் விரிவை 'திருக்குறள் அமைப்பும் முறையும்' என்ற நூலில் காண்க.

# 5. உலக மொழிகளில் நீதி இலக்கியம்

நாகரிக முன்னேற்றம் அடைந்த நாடுகள் அனைத்தும் இலக்கியத்தையும், இலக்கியப் படைப்பாளர்களான கவிஞர்களையும் போற்றிப் புகழ்ந்து வருகின்றன. பண்டை உலகில் 'பாக்கள்' அல்லது 'கவிதைகள்' என்ற பெயராலேயே இலக்கியம் குறிப்பிடப்பெற்றது. அக்காலத்தில் உரைநடை நன்கு வளர்ச்சியுறாததால், 'கவிதை'களே இலக்கியமாகக் கருதப்பெற்றன. செய்யுள் வடிவில் பாக்களைப் படைப்பதும், இசையோடு அவற்றைப் பாடுவதும் நாகரிகம் அடையாத மக்கள் சமூகத்தில் மட்டுமல்லாமல், நன்கு நாகரிக வளர்ச்சியுற்ற மக்கள் சமூகங்களிலும் பண்பாட்டு வளர்ச்சிக்குரிய செயல்களாகக் கருதப்பட்டன. இதனால், அச்சமூகங்கள் இலக்கிய வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தன.

## 1. இலக்கிய வளர்ச்சி

எந்நாட்டின் வரலாற்றை ஆராய்ந்தாலும், அந்நாட்டு மக்களுடைய சிந்தனையின் வளர்ச்சிக்கேற்ப, இலக்கியங்களும் பலவகையாகப் பெருகிவளர்ந்திருப்பதைநாம்காணுகின்றோம். பண்பாடும் நாகரிகமும் எத்தகைய போக்கில் வளர்ந்திருக்கின்றனவோ, அத்தகைய போக்கிற்கேற்ப அந்நாட்டு இலக்கியமும் வளர்ச்சியுற்றிருக்கிறது. குறிப்பிட்ட மக்களினத்தார் வாழ்ந்த இடத்திற்கும், அதன் தட்பவெப்ப நிலைகளுக்குமேற்ப, அவர்களிடையே புறத்தூண்டுதல்கள் (Stimuli) தோன்றின. அப்புறத் தூண்டுதல்களுக்கேற்ற எதிர்ச் செயல்களாக (Response) அவர்களுடைய சிந்தனை வளர்ச்சியும் வாழ்க்கை முறைகளும்

அமைந்தன. இத்தகைய சூழலில்தான், பல்வேறு நாடு களிலும் குறிப்பிட்ட ஒரு காலத்தில் நீதி நூல்கள் தோன்றின.

**முதல்நிலை**

நாகரிகம் வளர்ச்சியுறத் தொடங்கிய காலத்தில், பல்வேறு நாடுகளிலும் முதன்முதல் பாணரும், பாடினி யரும் இலக்கிய வளர்ச்சிக்கு மூலகாரணமாக இருந் துள்ளனர். அவர்கள் மாவீரர்களின் புகழை ஊர்ப்பொது மன்றங்களிலும், திருவிழா நடைபெற்ற இடங்களிலும், மன்னரின் அவைகளிலும் இசையோடு பாடிக் கேட் போரை மகிழ்வித்தனர். அவர்களுடைய பாடல்கள் வீர வுணர்ச்சியை ஊட்டியதோடு, மகிழ்ச்சி அளிப்பதாயும் அமைந்தன. அவர்களுடைய பாடல்களில் மூதுரைகளும், பழமொழிகளும், அறவுரைகளும், அறிவுரைகளும் இலை மறை காய்போல இங்குமங்குமாக இடம்பெற்றிருந்தன. இவ்வாறு இலக்கியம் அரும்பத் தொடங்கிய காலத்தைப் "பாணர்-பாடினியரின் காலம்" ((The period of the Bards and Minstrels) என்று நாம் அழைக்கலாம்.

'பாணர்-பாடினியரின் காலம்' என்பது தொல்பழங் கால மக்கள் சமுதாயத்தில் முதன்முதல் இலக்கியம் தோன்றிய காலகட்டமாகும். அக்காலத்தில் பாணனே மூதறிஞனாகக்கருதப்பெற்றான். அவனுக்குச்சமுதாயத்தில் சிறப்பிடம் தரப்பட்டது. அவன் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தான். எங்கு இன்பநிகழ்ச்சிகள் நடந்தாலும் அல்லது துன்ப நிகழ்ச்சிகள் நடந்தாலும் அங்கு, அவன் முன் னின்று அவற்றை நடத்திவைத்தான். அச்சமயங்களில் அவன் உணர்ச்சித் துடிப்புடன் வீரர்களின் அரும்பெருஞ் செயல்களைப் போற்றிப் பாடினான். அப்பொழுது, தான் பாடும் பாடலுக்கேற்பத் தாளமிட்டு அவன் ஆடினான். அவ்வாறு அவன் ஆடலோடு பாடலையும் சேர்த்துப் பாடிய பொழுது, அவனைச் சார்ந்த ஆடவர்களும் மகளிரும் அவனோடு சேர்ந்து ஆடிப்பாடி பார்வையாளரை மகிழ் வித்தினர். காலப்போக்கில் பாணனோடு ஆடலிலும் பாடலிலும் வல்ல மகளிரும் சேர்ந்து மன்றத்தினருக்கு ஆடலும் பாடலும் கலந்த இலக்கிய விருந்தளித்தனர்.

அதனால், ஆடல் மகளிராகிய விறலியரும், பாடல் மகளிராகிய பாடினியரும் பாணனைச்சார்ந்து வாழத் தொடங்கினர். இவ்வாறு இசையும், பாட்டும், கூத்தும் கலந்து ஒன்றிய நிலையிலேயே இலக்கியம் தோன்றியது.

இலக்கிய வடிவத்தின் முதல்நிலையாக ஆடலிசைப்பா விளங்குகிறது. இசையும் கூத்தும் சேர்ந்து இன்புறுத்தும் பாட்டே 'ஆடலிசைப்பா' என்பதாகும். கூத்து என்பது 'போலச் செய்யும்' இயல்பூக்கத் தூண்டுதலால், உள்ளத்து உணர்ச்சிகளை உடலுறுப்புகளின் அசைவுகளால் குறிப்பாகப் புறத்தே புலப்படுத்தும் கலையாகும். முதன் முதல் தானாகு வெளிப்பட்ட பாட்டு இவ்வடிவைப் பெற்றிருக்கவேண்டும். அதில் கருத்து அல்லது உணர்ச்சி இசையோடும் நடிப்போடும் கலந்து வெளிப்படும் வகையில் சிறப்பிடம் பெற்றிருக்கலாம். இம்மூவகைக் கலைகளும் இன்று தனித்தனியாகப் பிரிந்துவிட்டன. எனினும், ஆதியில் அவையெல்லாம் ஒன்றாக இருந்திருக்க வேண்டுமென்பதை அவற்றிற்கு இடையே இன்றும் இருந்து வரும் நெருக்கமான தொடர்பு அறிவிக்கிறது.

பண்டைத் தமிழ் மக்கள் தமிழ்மொழியை இயற்றமிழ் இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்று முத்தமிழாகப் பாகுபாடு செய்துள்ளமை இங்குக் கருதத்தக்கது. 'முத்தமிழ்' என்ற கோட்பாடு தமிழ் இலக்கியம் இசையோடும் கூத்தோடும் இணைந்தும் இழைந்தும் தோன்றிவளர்ந்த நிலையைக் குறிப்பதாகும். தமிழின் வகையை விளக்குமிடத்துப் பிங்கல நிகண்டு,

> இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத் தமிழென
> வகைப்படச் சாற்றினர் மதியுணர்ந் தோரே
>
> (பிங்க. நி. 1332)

என்று எடுத்தியம்புகிறது. இம்மரபு சங்க காலம் முதற்கொண்டு இன்றுவரை புலவரால் போற்றப்பட்டுவருவதாகும்.[1]

இசையும் கூத்தும் பிறந்தபொழுதே இயல்தமிழாகிய இலக்கியமும் பிறந்திருக்கலாம். இதற்குத் தமிழில் உள்ள சொற்களே போதிய சான்றுகளாகும். 'அசைதல்' என்று

பொருள்படும் 'ஆடல்' என்ற சொல்லும், ஆடலோடு பண் கலந்த செய்யுளைக் குறிப்பிடும் 'பாடல்' (பாவோடு கலந்த ஆடல்) என்ற சொல்லும் ஆதி காலத்திலேயே தமிழ் மக்கள் முத்தமிழாகிய இயல், இசை, நாடகக் கொள்கையைப் போற்றினர் என்பதற்குத் தக்க சான்றுகளாகும்.

> பண்என்னும் பாடற்கு இயைபின்றேல் (குறள் 573)

என்னும் குறட்பா, பாடலோடு இசை இயல்பாகக் கலந்திருக்கும் நிலையைச் சுட்டுகிறது. 'பா பாதி; பண் பாதி' என்பது தமிழில் வழங்கிவரும் பழமொழி.

> கவிப்பா வமுதம் இசைக் கறியோடு
> கண்ண னுண்ணக் குவிப்பார்

என்ற பழம் பாடலும் இங்கு நினைவுகூர்தற்கு உரியதாகும்.

'பா' என்பது "சேட்புலத்திருந்த காலத்தும், ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமல் பாடம் ஓதுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற் கேதுவாகிய பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை"[2] என்று நம்முன்னோர்கள் தந்துள்ள விளக்கம் இங்குக் கருதத்தக்கது.

இவ்வாறு இசையும் கூத்தும் கலந்து இலக்கியம் பாட்டாகத் தோன்றியதை உலக மொழிகள் சிலவற்றிலும் காணலாம். வடமொழியில் கவிஞர்களுக்கு முன்னோடியாக இருந்தவர்கள் 'சூதர்' (Sutas) என்று அழைக்கப் பெற்றனர். அவர்கள் ஆடலிலும் பாடலிலும் வல்லவர்களாக இருந்தனர். கிரேக்க மொழியில் மிகப் பழமையான பாடலுக்கு 'மோல்பே' (Molpe) என்ற பெயர் வழங்குகிறது. அதற்கு 'ஆடலோடு கூடிய பாடல்' என்பதே பொருளாகும். அதைப் பாடிக் காட்டியவர்கள் 'ஒயோட்ஸ்' (Aoides) என்று அழைக்கப் பெற்றனர். பிற்காலத்தில் இச்சொல், கவிஞர்களைக் குறிக்கவும் வழங்கப் பட்டது.[3]

இவ்வாறு தோன்றிய 'ஆடலிசைப்பா' இலக்கியம், பாணனின் இதழ்களிலிருந்து நேராக மக்களுடைய காது

களுக்குப் பாய்ந்து சென்றது. ஒரு பாணனிடமிருந்து மற்ருெரு பாணனுக்கும், ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்ருெரு தலைமுறையினருக்கும் 'வாய்மொழி' இலக்கியமாக அது பரவியது. இவ்வாறு எழுத்து வடிவம் பெருமல் பாணரின் வாயையும், மக்களுடைய காதுகளையும் நிலைக்களனகக் கொண்டு வளர்ந்த இவ்வகை இலக்கியத்தை "மிதவை இலக்கியம்" (Floating Literature) என்பர். அடுத்தடுத்தும், திரும்பத்திரும்பவும் பலர் அப்பாட்டுக்களைப் பாடியபொழுது வடிவத்திலும் சந்தத்திலும் அவை எளிதில் மாற்றமுற்றன. நிலையான வடிவமும், ஒலிநயமும் அற்று எளிதில் திரியக்கூடியனவாக இருந்தமையால், அவற்றை "மிதவை இலக்கியம்" என்று திறனய்வாளர் அழைக்கலாயினர்.[4] இவ்வாடலிசைப்பா இலக்கியம், கல்வியறிவுடையாருக்கும், கல்வி அறிவில்லாதவருக்கும் பொதுவாக இன்பம் அளித்தது. மேலும், அது இரு சாராருக்கும் ஒரேவகையான பயன் தரத்தக்கதாகவும், எத்தகைய வர்க்க வேறுபாடோ, சலுகையோ அற்றதாகவும் விளங்கியது. இப்பாடல்களுக்குத் தனி மனிதர் யாரையும் ஆசிரியராகக் கூற இயலாது. அக்காலத்திய இலக்கிய உலகில், இது இன்ஞருடையது; இது அன்ஞருடையது' என்று வரையறுத்துக்கூற இயலாத முறையில் சமுதாய இலக்கியமாகவும் நாட்டுப் பாடல்களாகவும் அவை நாட்டிலே நடமாடின.

## இரண்டாம் நிலை

மக்களினம் எண்ணத்தெரிந்து, அறிவை வளர்த்துக் கருத்துவகையால் முன்னேற்றம் காணத் தொடங்கிய காலத்தில் உணர்ச்சித் துடிப்பும், கற்பனை உள்ளமும், கருத்துவளமும் வாய்ந்த கவிஞர்களால் இலக்கியம் போற்றி வளர்க்கப்பெற்றது. மக்களுடைய அறிவுப் பசிக்கு விருந்தளிக்கும் வகையில் சிந்தனையைத் தூண்டும் கருத்துக்களையும், நல்வாழ்க்கைக்குத் தேவையான அறநெறிக் கருத்துக்களையும் பெருஞ்சிறப்பு மிக்க வீரர்கள், அரசர்கள் முதலியோரின் பொன்றுப் புகழையும் பாக்களின்மூலம் கவிஞர்கள் புனைந்துரைத்தனர். கவிஞர்

தம் உள்ளத்து ஊற்றெடுக்கும் உணர்ச்சிகளோடு, தம் வாழ்க்கை அனுபவம் என்னும் வண்ணத்தைக் கலந்து, கற்பனை என்னும் மெருகிட்டு, மொழி என்னும் கிழியில் அறிவு என்னும் எழுதுகோலால் தீட்டிய சொல்லோவியங்களே இலக்கியங்களாகும். அறிவிலும் பண்பிலும் வளர்ச்சியுற்ற சமுதாயத்தில், மக்களால் மதித்துப் போற்றப் பெறும் சிறப்புடையவர்களாகக் கவிஞர்கள் வாழ்ந்தனர். அக்காலத்தை இலக்கிய வளர்ச்சியின் இரண்டாம் நிலையாகக் கூறுவர். அதனைக் 'கவிஞர்களுடைய காலம்' (The Period of Poets) என்று நாம் குறிப்பிடலாம்.

அக்காலத்தில் இலக்கியங்கள் எழுதிவைக்கும் சிறப்பைப் பெற்றன; மிதவை இலக்கியங்கள் மறைந்தன; மரபுவழி வளர்ந்த இலக்கிய நெறியுடன் கவிதைகள் இயற்றப்பட்டன. மிதவை இலக்கியத்தின் ஒரு பகுதி தனிப்பட்ட கவிஞர்கள் சிலருடைய கைவண்ணத்தைப் பெற்றுச் சொல்நயமும் கருத்தாழமும் வாய்ந்த கவிதைகளாக வடிவெடுத்தது.[5] மற்றொரு பகுதி நாட்டுப் பாடல்களாகப் பாணரிடத்தும், கல்வியறிவில்லாப் பொது மக்களிடத்தும் வழங்கத் தலைப்பட்டது. நாளடைவில் அவை மெல்ல மறைந்துபோயின. இன்று, நாம் 'இலக்கியம்' என்று போற்றுவன யாவும் நூல் வடிவம் உடையன; மரபுவழி வந்தக் கருத்துக்களின் களஞ்சியங்களாக விளங்குவன; தனி மனிதர்களை அல்லது குறிப்பிட்ட சில கவிஞர்களை ஆசிரியர்களாகக் கொண்டு இயங்குவன; பலருடைய பாடல்களை ஒரு நூலாகத் தொகுத்து இலக்கியமாகப் போற்றும் மரபு அக்காலத்தின் முதன் முதலாகத் தோன்றியிருக்கலாம்.

அக்காலத்தில் மனிதனின் அறிவியல் உணர்வு வெறும் 'வழக்காற்று நெறி ஒழுகலாறாக' அமையாமல், நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற ஒழுக்கநெறிக் கோட்பாடாக வளர்ந்துசிறந்தது. அறநெறிக் கொள்கைகளை ஒல்லும் வகையெல்லாம் ஓயாது, தங்கள் கவிதைகளின் மூலமாக உலகிற்கு நயமாகக் கவிஞர்கள் எடுத்தியம்பினர். அக்காலத்தில் இயற்றப்பெற்ற இலக்கியங்களை, 'அறநூல்கள்' என்னும், 'தத்துவ நூல்கள்' என்றும்,

தனிச்சிறப்புவாய்ந்த 'இலக்கியங்கள்' என்றும் நாம் பாகு படுத்திக் கூற இயலாது. அவற்றில் இலக்கியப் பண்பு களும் அறநெறிக் கொள்கைகளும் இரண்டறக் கலந் துள்ளன.

பண்டைக் காலத்தில் நாகரிகச் சிறப்புடன் விளங்கிய நாடுகள் அனைத்திலும் ஏட்டிலே எழுதிப் போற்றப்பெறும் இலக்கியங்கள் தோன்றின. அவையாவும் இவ்விரண்டாம் நிலையைச் சேர்ந்தனவாகலாம். இலக்கிய வளர்ச்சியின் இரண்டாம் நிலையான 'கவிஞர்களுடைய காலத்தின்' முற் பகுதியில் பாபிலோனிய, பண்டை எகிப்திய இலக்கியங் களும், இந்தியாவின் வேதங்களும், சீனாவின் கன்பூசியஸ் காலத்திய நூல்களும் தோன்றின. அக்காலத்தின் பிற் பகுதியிலேயே கிரேக்க மொழியில் ஹோமருடைய காப்பி யங்களும் பிற கவிஞர்களுடைய நாடகங்களும், தமிழகத் தின் சங்க இலக்கியங்களும், வட இந்தியாவின் இதிகாசங் களும், சீனாவில் கன்பூசியஸுக்குப் பிற்பட்ட இலக்கியங் களும் அரும்பின. ரோமாபுரியில் வர்ஜிலுக்கு முற்பட்ட இலக்கியங்களும், அவருடைய புகழ்மிக்க காப்பியமும் இக் காலத்தில் தோன்றியனவாதல் வேண்டும். இவ்விரண்டாம் நிலையாகிய 'கவிஞர்களின் காலத்தில்' தோன்றிய இலக்கி யங்களே தொன்மைச் சிறப்புடையனவாக விளங்குகின் றன. இக்காலத்தில் இயற்றப்பட்ட இலக்கியங்கள் அனைத் தும் இன்றைக்குக் கிடைக்கவில்லை. எனினும், கிடைத் துள்ள இலக்கியங்களை மதிப்பிடும் அறிஞர்கள், அவை "அளவில் குறைவாக இருந்தாலும் தரத்தில் மேம்பட்டன வாக உள்ளன" என்று மொழிந்துள்ளனர். இவ்வுண்மை நம்முடைய இலக்கியங்களுக்கும் பொருந்துவதாகும்.

### மூன்றாம் நிலை

மனித இனத்தின் நாகரிக வளர்ச்சியில் அறிவு முதிர்ச்சியும், அனுபவக் கனிவும் உண்டான காலத்தில் தோன்றிய கவிஞர்களுள் சிலர் வியக்கத்தக்க சிந்தனை யாளர்களாக விளங்கினர். அவர்கள் 'நான் யார்? என் உள்ளமார்? என் ஞானங்களார்?' என்பன போன்ற மனித வாழ்க்கையின் புரியாத புதிர்களாகவுள்ள, என்றும் எளிதில் விடைகூற இயலாத பிரச்சினைகளுக்கு விடை

காண முயன்றனர். அச்சிந்தனையாளர்கள் அறிவாராய்ச்சியில் விருப்பு வெறுப்பற்றவர்களாயும், உண்மை காணும் வேட்கை உடையவர்களாயும் இருந்தனர். அவர்களுடைய அயராத ஆன்மிக ஆராய்ச்சியாலும், மெய்ப்பொருளைக் காணத் துடிக்கும் பேரார்வத்தாலும் இலக்கியத்தின் வளர்ச்சியில் புதியதொரு திருப்பம் உண்டாயிற்று. அக்காலத்தைத் 'தத்துவ ஞானிகளின் காலம்' (The Period of Philosophers) என்று நாம் கூறலாம்.

அக்காலத்தில் பல்வேறு கிளைகளையுடையதாக இலக்கியம் தழைத்து வளரத்தொடங்கியது. அவற்றுள் மெய்ப்பொருள்பற்றிய ஆராய்ச்சி நூல்கள் முதலிடத்தைப் பெற்றன. அக்காலத்தில்தான் 'நவில்தொறும் நூல்நயம் பயக்கும்' இலக்கியத்திலிருந்து, அறிவுறுத்துவதையே முதன்மையான நோக்கமாகக் கொண்ட அறநூல்கள் தனிப்பட்ட துறையாக வளர்ச்சியுற்றன. அதையொட்டி அறிவுத்துறையின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த அறிவியல் நூல்களும் கலையாராய்ச்சி நூல்களும் செய்யுள் நடையில் தோன்றத் தொடங்கின.

அக்காலத்திய இந்தியாவில் பௌத்த, சமண தத்துவ நூல்களும், உபநிடதங்களும் தோன்றின. கிரேக்க நாட்டில் நாடக இலக்கியங்களுடன் மெய்ப்பொருள் ஆராய்ச்சி நூல்களும், கணக்கியல், வானவியல், பௌதிகம், அளவையியல், அறிவியல் நூல்களும், நீதி இலக்கியங்களும், இன்ன பிற நூல்களும் ஏராளமாகத் தோன்றின. ரோமாபுரியில் சட்டவியல், அறவியல், தத்துவ நூல்களும் இக்காலத்தில் குறிப்பிடத்தக்க அளவிற்கு இயற்றப் பெற்றன. சீனாவும் இதற்கு விதிவிலக்கு ஆகிவிடவில்லை.

இங்கு நாம் ஓர் உண்மையைக் கருத்தில் இருத்த வேண்டும். மேற்கண்ட இலக்கிய வளர்ச்சியின் மூவேறு நிலைகளும் உலகம் முழுவதிலும் ஒரே காலத்தில் தோன்றி மறைந்தன என்று நாம் கருதுவது தவறாகும். ஒவ்வொரு நாட்டிலும், அங்கு வளர்ச்சியுற்ற நாகரிகத்தின் முதிர்ச்சிக் கேற்பப், பல்வேறு காலங்களில் அவை மலர்ந்து மணம் பரப்பினவாதல் வேண்டும். பண்டை உலகின் பல்வேறு பகுதிகளில் நாகரிகத்தின் நறுமணமாகிய தென்றல் வெவ்

வேறு காலங்களில் வீசியதைப் பார்க்கிறோம். எனவே, அந்நாடுகளில் இம்மூவகை நிலேயும் வேறுபட்ட பல கால கட்டங்களில் தோன்றியுள்ளதைக் கண்டு நாம் வியப் படைய வேண்டியதில்லே. கிரேக்கமும் ரோமாபுரியும் மிகவும் நெருங்கிய அண்டை நாடுகளாக இருந்தபோதிலும் அவற்றின் நாகரிக மலர்ச்சி, பெரிய கால இடையீட்டிற்குப் பின்னர் உண்டாகியிருப்பதை வரலாறு எடுத்துரைக் கின்றது. கிரேக்க நாகரிகத்தின் வீழ்ச்சி, ரோம நாகரிகத் தின் எழுச்சிக்குத் தூண்டுகோலாக அமைந்ததை நாம் காணுகின்றோம். எனவே, அந்நாட்டில் கி. மு. நான்காம் நூற்றாண்டிற்குப் பின்னரே இலக்கிய வளர்ச்சியின் முதல் நிலே அரும்பியிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இது உண்மையானல், கிரேக்க நாட்டில் சிறப்புற்று விளங் கிய 'பாணர்—பாடினியர் காலத்திற்கு'ச் சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரே, ரோமாபுரியில் அந் நிலே உண்டானதாகக் கூறவேண்டும். இதைப் போன்றே, பல்வேறு நாடுகளிலும் இலக்கியம் வளர்ச்சியுற்றிருக்க லாம் என்பது அந்நாடுகளின் வரலாறுகளால் தெரியவரு கின்றது.

இவ்வாறு இலக்கிய வளர்ச்சியின் மூவேறு நிலே களுக்கு இடையேயும் கால இடையீடு இருந்திருக்க வேண்டும். கிரேக்க நாட்டில் முதல்நிலேக்கும், இரண்டாம் நிலேக்கும் இடையேயுள்ள கால இடைவெளி மூன்று நூற்றாண்டுகளுக்கும் குறைவானதாகும்; இரண்டாம் நிலேக்கும் மூன்றும் நிலேக்கும் இடையே நூற்றைம்பது ஆண்டுகள் இடைவெளி இருந்திருக்குமானல் அதுவே அதிகப்படியான கால இடைவெளி என்று கூறத் தோன்றும். கிரேக்கத்தின் ஒரு பக்கத்தில் கவிஞர்கள் நாடக இலக்கியத்தை வளர்த்துக் கொண்டிருந்த காலத் தில், மற்றொரு பக்கத்தில் பைத்தாகரஸ், சாக்கரடிஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் முதலியோர் மெய்ப்பொருள் ஆரய்ச்சியிலும், அறிவியல் ஆராய்ச்சியிலும், வேறுபல கலேத்துறைகளிலும் ஈடுபட்டிருந்ததை நாம் காணுகின் றோம். அங்கு நாகரிகம் மிக விரைவாகப் பரிணும வளர்ச்சி யுற்றதாகத் தெரிகிறது. ஆகவே, அம்மூன்று நிலே

களுக்கும் இடையே கிரேக்கத்தில் அதிகப்படியான கால இடைவெளி இருந்திருக்க இயலாது.

தமிழகத்திலும் இந்நிலையே நிலவியது எனலாம். 'கடைச்சங்க காலம்' என்பது தமிழ் இலக்கியத்தின் பொற்காலம். அது கி. மு. மூன்ரும் நூற்ருண்டுக்கும் கி. பி. மூன்ரும் நூற்ருண்டுக்கும் இடைப்பட்டதாகலாம். இக்காலத்திற்குச் சற்று முன்புவரை நானிலத்து ஐந்திணை நாகரிகம் சிறப்புற்று விளங்கியதாகத் தோன்றுகிறது. அக்காலத்தில் பாணரும் பாடினியரும் நாளும் இன்னிசை யால் நற்றமிழ் இலக்கியத்தைப் போற்றி வளர்த்தனர். சங்க காலத்தில் முப்பெரும் வேந்தர்களின் தலைமையின் கீழ் முப்பேரரசுகள் தமிழ்கூறும் நல்லுலகில் சீரும் சிறப்பு முற்று விளங்கின. அக்காலம் தமிழ் இலக்கிய வளர்ச்சி யில் 'கவிஞர்களின் காலமாகக்' கருதத் தக்கதாகும். ஆனல், அக்காலத்தின் இடையிலேயே தெய்வத் திருவள்ளு வர் வையகம் போற்றும் வான்மறையை உலகுய்ய உவந் தருளியுள்ளார். இதிலிருந்து நாம் ஓர் உண்மையை உய்த் துணரலாம். இலக்கிய வளர்ச்சியின் மூவகைக் காலமும் ஒன்ருேடொன்று நெருங்கிய தொடர்புடையன; அந்தந்த நாட்டு மக்களின் மனவளத்திற்கும் சிந்தனைத் திறத்திற்கு மேற்ப கால இடையீடு உள்ளதாகவோ, அற்றதாகவோ அவை அமைந்துவிடுகின்றன என்பதாகும். கூர்ந்து நோக்குவோமானல் கி. பி. நான்காம் நூற்ருண்டை ஒட்டியே தமிழில் இலக்கண இலக்கியம் அல்லாத பிற நூல்கள் தோன்றின என்பது புலனுகும். இவ்வடிப்படை யில் உலகின் பல்வேறு நாடுகளிலும் இலக்கியம் தோன்றி வளர்ந்துள்ள வரலாற்றை நோக்குகின்றபொழுது இக் கருத்து உறுதிப்படுகிறது.

அறிவு ஆராய்ச்சியில் ஆர்வம்கொண்ட அறிஞர்கள், தாம் கூறவிரும்பிய கருத்துக்களைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதற்குச் செய்யுளே ஏற்ற கருவியென்பதை அறிந்தனர். அதனல், அவர்கள் வான நூல் முதற்கொண்டு நில நூல் வரையிலுள்ள பல்வேறு கலைகளையும், அறிவியல் ஆராய்ச்சிகளையும் செய்யுளிலே வடித்துத் தந்தனர். இக் காரணத்திற்காக அவர்களைக் கவிஞர்கள் என்றும்,

புலவர்கள் என்றும், 'போயட்ஸ்' என்றும், 'புராபட்ஸ்' (Prophets) என்றும் பண்டைக் காலத்திய மக்கள் போற்றினர்.

செய்யுள் நடையில் அரிய பல தத்துவக் கருத்துக் களையும், மற்றும் பல கலைத்துறைச் செய்திகளையும் எடுத்துரைத்தவர்களைக் 'கவிஞர்கள்' என்று போற்றும் மரபு நம் நாட்டில் மட்டும் அல்லாமல், பண்டை நாகரிகச் சிறப்பு மிக்க நாடுகள் பலவற்றிலும் இருந்துவரும் வழக்கமாகும். இதனை " மருத்துவம் அல்லது அறிவியல் பொருள்பற்றிய ஆராய்ச்சி நூலைச் செய்யுள் நடையில் எழுதியதற்காக அந்நூலாசிரியரைக் 'கவிஞர்' என்று பாராட்டுவது வழக்கமாக இருந்துவருகிறது. ஆனால், ஹோமருக்கும் எம்பிடோகிளிசுக்கும் (Empedocles) இடையே (அதாவது அவர்களுடைய இலக்கியப் படைப்புகளுக்கு இடையே) செய்யுளைத் தவிர, வேறெப்பண்பும் பொதுவாக இல்லை. எனவே, ஹோமரைக் கவிஞர் என்று குறிப்பிடுவதும், எம்பிடோகிளிசைக் 'கவிஞர்' என்பதைவிட, 'அறிவியலறிஞர்' என்று குறிப்பிடுவதுமே பொருத்தமாகும்''[6] என்று ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அரிஸ்டாட்டில் மொழிந்துள்ளமை இங்கு நினைவுகூர்தற்கு உரியதாகும்.

## 2. கிரேக்க மொழியில் நீதி இலக்கியங்கள்

உலகில் தொன்றுதொட்டுப் பல மொழிகள் பேசப்பட்டு வருகின்றன. அவற்றுள் சில மொழிகளைப் பேசிய மக்கள் நாகரிகத்தின் கொடுமுடியில் வீறுடன் விளங்கினர். அவர்களுள் மாண்புமிகு கிரேக்கரும், ஆடம்பர ஆரவார மிக்க ரோமானியரும், சிந்தையைக் கவரும் புதிய பழக்க வழக்கங்களைக் கொண்ட சீனரும், வியக்கத்தக்க வகையில் ஆன்மாவின் கடைத்தேற்றத்திற்காக அரும்பாடுபட்ட இந்தியர்களும் நெடுங்காலமாக இலக்கியத்தைப் போற்றி வளர்த்துள்ளனர். அவர்களுடைய இலக்கியச் சோலைகளிலே எழில்மிகு கவிதைக் கொடிகளும், கவினுறு காப்பியச் செடிகளும் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணப்பூக்களைக் கொண்டு ஒளிர்கின்றன. அவற்றுள் நீதி இலக்கியம் என்பது ஒரு முல்லைக் கொடியாகும். அக்

கொடி சிந்தனையாளர்களெனும் கார்மேகங்கள் இடையருமல் பெய்த கருத்துக்கள் என்னும் மழையால் செழித்து வளர்ந்து, அறிவெனும் அரும்பு ஈன்று, அறமெனும் போதாகி, அன்பெனும் மலராக மலர்ந்து, இன்பமெனும் நறுமணத்தை இவ்வுலகிற்கு வழங்கி வருகிறது.

### வரலாற்றுப் பின்னணி

பண்டைக் காலத்தில் சிறப்புற்று விளங்கிய நாகரிகங்களுள் தொன்மைப்புகழும்,வரலாற்றுச் சிறப்பும்வாய்ந்தது கிரேக்க நாகரிகமாகும். பிற நாட்டு மக்கள் கனவிலோ, கற்பனையிலோ காணமுடியாத அளவிற்குக் கவின்மிகு கலைகள் பலவற்றைப் போற்றிவளர்த்த பெருமைகிரேக்கத்திற்குரியதாகும். அழகுணர்ச்சியில் நாட்டமிக்க கிரேக்கர் போற்றி வளர்க்காத கலைகளே உலகில் இல்லை என்பர். கலைகளின் திருக்கோயிலாகவும்,மெய்ப்பொருள் ஆராய்ச்சியின் வளர்ப்புப் பண்ணையாகவும், பல்வேறு அரசியல் முறைகளின் பட்டறையாகவும் விளங்கியது கிரேக்க நாடு. அதனுடைய வாழ்க்கையின் அடித்தளத்தை அழகு, அறம், உண்மை, உரிமை என்ற நான்கு தூண்கள் தாங்கி நின்றன. எளிமையையும், இயற்கை வனப்பையும் விரும்பிப் போற்றும் நிகழ்வியல்பாங்குக் (Realists) கொள்கையாளராகக் கிரேக்கர்கள் வாழ்ந்தனர். அதனல் கிரேக்க இலக்கியம் இயற்கையழகை நாடுவதாயும், எளிமையும் இனிமையும் வாய்ந்ததாயும் வளர்ச்சியுற்றது. அதில் கம்பனின் செயற்கை அழகையோ, ரோமாபுரியின் புகழ்மிக்க வர்ஜிலின் வியப்பூட்டும் வண்ண சாலத்தையோ, மாண்புமிகு ஆங்கிலக் கவிஞன் மில்டனின் ஒப்பனையழகையோ நாம் காணமுடியாது. அது பெரிதும் நம்முடைய சங்க இலக்கியத்தைப் போன்று ஆடம்பரமற்றதாயும், அதேசமயத்தில் இயற்கை வனப்புடையதாயும் விளங்குகிறது. இலக்கியத்தில் மட்டும் அல்லாமல், ஏனைய கலைகளிலும் அழியாத உண்மையின் எளிமையையும், சூழ்ச்சித் திறனற்ற நேர்மையையும், தெளிவுமிக்க அழகினையும் கிரேக்கர்கள் வடித்துத் தந்துள்ளனர்.

### நீதி இலக்கியங்களின் தோற்றம்

கிரேக்கத்தின் இலக்கிய வரலாறு மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட காலத்திலேயே தொடங்கிவிட்டது என

லாம். ஆடலிசைப் பாக்களின் வழியே வளர்ந்த இலக்கிய மரபில், ஹோமர் (Homer) என்ற கவிஞன் கி. மு. எட்டாம் நூற்றாண்டு அளவில் படைத்த காப்பியங்களான இலியத்தும் (Iliad), ஒடிசியும் (Odyssey) ஆதி இலக்கியங்களாகப் போற்றப் பெறுகின்றன. அவை கிரேக்க நாட்டின் மாவீரர்களின் வீர வரலாற்றைச் சொல்நயமும், பொருள்நயமும், உணர்ச்சித் துடிப்பும் ததும்பும் வகையில் எடுத்தியம்புகின்றன.

இவ் வீரகாப்பியங்களை அடுத்து, நீதி இலக்கியங்களும் நாடகங்களும் கிரேக்க நாட்டில் தோன்றின. ஹோமரின் காலத்தையொட்டி வாழ்ந்தவராகக் கருதப்பெறும் ஹெஸியட் (Hesiod) என்பார் இயற்றிய "வேலையும் நாள்களும்" (Works and Days) சிறந்ததொரு நீதி இலக்கியமாகப் போற்றப் பெறுகிறது. அக்காலத்தில் நீதிப்பாடல்கள் கவிதைக் கலையிலிருந்து வேறுபட்ட ஒரு தனித்துறையாகக் கருதப்படவில்லை. அரிஸ்டோபனிஸின் (Aristhopanes) 'தவளைகள்' (The Frogs) என்ற நாடகத்தில், "மக்களுக்கு அறிவுரை கூறுவதற்குத் தெய்வத்தால் அனுப்பப்பட்ட ஆசிரியர்களே கவிஞர்கள்"[7] என்ற கருத்து இடம்பெற்றிருக்கிறது. இதனால், அக்காலத்தில் "கவிதை அறிவுறுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்டது" என்னும் கருத்து மேலோங்கி நின்றதை நாம் அறிகிறோம். கிரேக்க நாட்டு வரலாற்றின் தொடக்க காலத்தில் கவிஞன் ஒவ்வொருவனும் ஆசிரியனாகக் கருதப்பெற்றான்; ஒவ்வொரு கவிதையும் மக்கள், தங்கள் வாழ்க்கையைத் திருத்திச் செப்பம் செய்துகொள்ளுவதற்கு அறிவுரை பகருவதாக அமையவேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது.[8]

இக்காரணத்தினால்தான், பல நூற்றாண்டுகள் வரை கிரேக்க நாட்டு மக்களால் அறவுரை கூறும் ஆசானாகவே ஹோமர் போற்றப்பட்டார். ஆனால், 'கவிஞர்கள் மக்களுக்கு அறவுரையும் அறிவுரையும் கூறும் ஆசான்கள்' என்ற நிலை என்று மாறத்தொடங்கியதோ அன்று, 'அற நூல்கள்' என்ற தனி இலக்கிய வகை தோன்றியது எனலாம். என்று தத்துவஞானிகள், புலவர்களுக்குப் போட்டியாக மக்களுக்கு அறவுரை கூற முன்வந்தனரோ

அன்று, கவிஞர்களுக்கு இருந்து வந்த தனிப்பெருஞ் செல்வாக்குக் குன்றத் தொடங்கியது. யாப்பு இலக்கணத் தளையிலிருந்து விடுதலைபெற்ற மொழிநடையில், எளிதில் மக்களுக்குப் புரியுமாறு சிக்கலான கருத்துக்களை மெய்யுணர்வாளர்கள் எடுத்துரைக்கத் தொடங்கிய காலம் முதல், மற்ற இலக்கிய வடிவங்களிலிருந்து அறநெறிப் பாடல்கள் பையப்பைய விலகிச் சென்று தனித்து வளரத் தொடங்கின.

கி. மு. ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த பழைய மெய்யுணர்வாளர்களின் சிறிய குழுவினர், மிகவும் சிக்கலான மெய்ப்பொருள் ஆராய்ச்சிக் கருத்துக்களைப் போதிப்பதற்குப் பழைய காப்பிய யாப்பினைத் தங்கள் நூல்களில் பயன்படுத்தினர். அவர்களுள் அயோனியரான ஸெனோபனஸ் (Xenephanes of Colphon), பர்மினிடிஸ் (Parmenides), எம்பிடொகிளிஸ் (Empedocles) என்போர் இங்குக் குறிப்பிடத்தக்கவராவர். அவர்கள் செய்யுள் வடிவத்தைத் தேர்ந்தெடுத்தமைக்கு ஒரு காரணம் உண்டு. நன்கு வளர்ச்சியுறாத அயோனிய உரைநடையைக் காட்டிலும் தங்களுடைய மதிப்புமிக்க தத்துவக் கருத்துக்களை எடுத்துரைப்பதற்குச் செய்யுள் நடையே சிறப்புடைய கருவி என்று அவர்கள் கருதினர். ஸெனோபனஸ், எம்பிடொகிளிஸ் ஆகியோரிடத்துக் கவித்திறன் இல்லை என்று யாரும் குறைகூற முடியாது. எனினும், அவர்கள் பயன்படுத்திய கருவியாகிய செய்யுளின் யாப்புமுறை அவர்களுடைய கருத்துப் பொருள் ஆராய்ச்சியின் நுட்பங்களைத் தெளிவாக எடுத்துரைப்பதற்குப் பொருத்தமற்றது என்பதை உணர்த்தியது.

தத்துவக் கருத்துக்களை எடுத்துரைக்கும் பாடல்களை ஆழ்ந்து கற்றவர்கள், பொதுவாகக் 'கவிதை' என்று கருதப்பெறுவதிலிருந்து, அவை வேறுபட்டிருப்பதை நன்குணர்ந்தனர். சிறப்புமிக்க கலைத்துறை ஆய்வாளராகிய அரிஸ்டாட்டில், வெளிப்படையாகவே இப்பாடல்களை இலக்கிய நயம் நிறைந்த பாடல்களிலிருந்து வேறுபடுத்தி ஒதுக்கிவிடுவதால் இதை நாம் அறியலாம். தம்முடைய 'பாவியல்' (Poetics) என்ற நூலில், 'காப்பிய

யாப்பினைப் பின்பற்றி அறநெறிப் பாடல் இயற்றுபவனை புலவன் என்று அழைப்பது தவருகும்"[9] என்று அவர் குறிப்பிட்டுள்ளார். இதன் மூலம் அரிஸ்டாட்டில் ஒரு கருத்தைக் குறிப்பாக வெளியிட்டுள்ளார். காப்பிய யாப்பில் ஹெஸியட் போன்றவர்கள் இயற்றிய நீதி நூல்களைக் கவிதை நலம் கனிந்த இலக்கியங்களாகப் போற்றக் கூடாது என்ற கருத்து அவருடைய கூற்றிலிருந்து புலனுகின்றது.

'தத்துவ ஞானிகளுடைய காலத்தில்' இலக்கியத்திற்கும், பிற கலைகளுக்கும் இடையே இருந்து வந்த தொடர்பு முறிந்துபோகும் நிலை உண்டாயிற்று. கவிவாணர்கள் தத்துவ ஞானிகளையும், அவர்தம் ஆன்மிக விசாரணை பற்றிய நூல்களையும் எள்ளி நகையாடினர். பிளேட்டோவின் காலத்தில் இத்தகைய நிலை இருந்தது. அதைத் தம் 'குடியரசில்' (Republic) அவர் குறிப்பிட்டுள்ளார்.

> தத்துவம் ஒரு நாய்; அதைக் கவிதை போற்றி வளர்த்தது. நன்கு வளர்ச்சியுற்றவுடன் அந்நாய், தன்னை வளர்த்த கவிதையைப் பார்த்தே குரைக்கின்றது ... தத்துவஞானி அறிவில்லாமல் பிதற்றுவதில் ஆற்றல் உடையவன்.
>
> (குடியரசு, பகுதி 10, பக். 408)

என்ற பாணியில் கிரேக்கத்து இலக்கியச் சிற்பிகள் தத்துவ ஞானிகளை நையாண்டி செய்தனர். இதைப் பிளேட்டோ தம் நூலில் குறிப்பிடுவதோடு அமையாது, கவிஞர்கள் எப்படிப்பட்ட இயல்புடையவர்கள் என்பதையும் சுட்டிக் காட்டுகிருர். இறுதியில், அவர் 'கவிஞர்களை நம்பாதீர்கள்!" என்று எச்சரிக்கை செய்வதோடு, அவர்களைத் தம் இலட்சியக் குடியரசிலிருந்து அடித்து விரட்டியும் விட்டார்.

எனினும், இதைப்பற்றிக் கிரேக்க மக்கள் பெரிதும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவர்கள் 'கவிதை' என்பது வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருக்கவேண்டும். என்ற கருத்துடையவர்களாகவே இருந்துவந்தனர். அதனல், இன்புறுத்துவதைவிட, அறிவுறுத்துவதே கவிதையின் தலையாய பண்பென்று அவர்கள் நம்பினர். அவர்கள்

போற்றிப் பாராட்டிய இன்பியல், துன்பியல் நாடகங்களிலும் இப்பண்பைப் பேரளவிற்கு அவர்கள் எதிர் பார்த்தனர்.

**வேலையும் நாள்களும்** (Works and Days)

காப்பிய காலத்தையொட்டி கிரேக்க மொழியில் தன்னுணர்ச்சிப் பாடல்கள் (Lyrics) பல தோன்றின. அவற்றுள் ஹெஸியட் (Hesiod) என்பவர் 'வேலையும் நாள் களும்', 'தெய்வங்களின் மரபுவழி' (Theogony), 'ஹெரா கிளிசின் கேடயம்' (The Shield of Herakles) என்ற நூல் களை இயற்றியுள்ளார். இம்மூன்றனுள், இறுதியாகக் குறிப்பிடப்பட்ட இரண்டும் காப்பிய மரபினை அடியொற்றி இயற்றப்பெற்றவையாகும். முதலில் குறிப்பிட்ட 'வேலை யும் நாள்களும்' என்ற நூலே இங்கு நம்முடைய ஆராய்ச் சிக்குரியதாகும்.

ஹெஸியட் என்ற கவிஞர் கி. மு. எட்டாம் நூற்றாண் டின் இறுதியிலோ, ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத் திலோ வாழ்ந்திருக்கலாம் என்பது அறிஞர்களின் கருத் தாகும். அவர் இயற்றிய 'வேலையும் நாள்களும்' என்ற நூல், நீதி இலக்கியமாகவும், உழவர் பாட்டாகவும் போற்றப்பெறுகிறது. அன்றாட வாழ்க்கையில் தாம் பெற்ற அனுபவங்களையும், தொழில் முறையில் பெற்ற அனுபவ அறிவையும், பழங்கதைகளையும், உருவகக் கதை களையும், தம் வரலாற்றையும் இடையிடையே கலந்து இதனை ஒரு நீதி இலக்கியமாக அவர் உருவாக்கியுள்ளார்.

ஹெஸியட் கவிஞராகவும், உழவர் பெருங்குடி மகனாக வும் விளங்கினார். அவர் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்த பெருமகனாராவர். அவருடைய நூலில் பண்டை உலகின் சிந்தனையில் அரும்பிய சீரிய கருத்துக்களின் சுவடுகள் நன்கு பதிந்துள்ளன. மண்ணகத்தின் வியப்பிற் குரிய மறைபொருள்களின் நறுமணம் அவருடைய நூலினுள் கமழ்கிறது. அவர் மக்களுக்காகப் பேசினார். ஆனால், மூடநம்பிக்கைகளும், உழைப்புத்திறனும் நிறைந்த ஏழை எளிய மக்களுக்காக அவர் பரிந்துபேசினார். எனவே, அவருடைய நூல் அறநெறி ஆராய்ச்சி நூலாக

வும் உழவர்களின் கையேடாகவும் காட்சிதருகிறது. ஹோமரை அவைக்களத்தைச் சார்ந்த கவிஞர் என்றால், ஹெஸியட்டை மக்கள் கவிஞர் எனலாம்; ஹோமரைக் கற்பனைக் கடல் என்றால், ஹெஸியட்டை உலக நடை முறையை நன்குணர்ந்த நிகழ்வியல் பாங்குக் கொள்கை (Realism) யாளர் எனலாம். தாம் அன்றாட வாழ்க்கையில் கண்டுணர்ந்தவற்றையே அவர் சொற்களில் வடித்துத்தந் துள்ளார். எனவே, ஹெஸியட்டை ஐரோப்பாவின் முதல் நிகழ்வியல் பாங்குக் கொள்கையாளர் என்று கூறினால், அது தவறாகாது.[10]

இந்நூலிலிருந்து, நிலக்கிழார் ஒருவரைக் கவிஞர் விளித்துப் பாடியதாகத் தெரிகிறது. அக்கிழாரின் பெயர் பெர்ஸிஸ் (Perses) என்பது நூலின்கண்ணுள்ள குறிப்பு களினால் அறியப்பெறுகிறது.[11] அவர் ஆசிரியரின் பேராசை பிடித்த தம்பியாக இருக்கவேண்டும் என்பது ஆராய்ச்சியாளரின் கருத்தாகும். அந்நிலக்கிழார் தாமாக நிலத்தை உழுது பாடுபட்டதோடு, வேறுசில கூலியாட் களையும் உதவியாகக் கொண்டு உழவுத்தொழிலைச் செய்து வந்தார் என்பதும் நூலிலுள்ள சில வாசகங்களினால் புலனாகின்றது.

‘வேலையும் நாள்களும்’ என்ற இந்நூலில் மனி தனுடைய துன்பங்களும், துயரங்களும் எவ்வாறு தோன் றினவென்பதை ஆசிரியர் அருமையான கதையொன்றின் மூலம் விளக்குகின்றார். வறுமையின் கொடிய பிடியி லிருந்தும், துன்பச்சுழலிலிருந்தும் மனிதன் எவ்வாறு தப்பிப்பிழைப்பது என்பதற்குரிய வழியையும் அவர் காட்டுகிறார். அவ்வழி மெய்வருத்தம் பாராது, பசி நோக்காது, கண்ணயராது உழைக்கும் நெறியாகும். ‘உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?’ என்று இக் கிரேக்க நாட்டுக் கவிஞனும் கேட்கிறான். வயலில் வேலை செய்யும் கூலியாட்கள் பாடும் குழுப்பாடலையும், திரே சியன் குன்றுகளிலிருந்து வீசும் வாடைக்காற்றினையும், வேனிற் காலத்தின் கொடிய வெப்பத்தையும், குன்றும் குளிரால் நடுங்கும் குளிர்காலத்தையும் தம் நூலில் சொற் சித்திரங்களாக அவர் தீட்டிக் காட்டுகிறார். அவர்

இயற்கை நல்கும் இன்பத்தையும், கொடிய துன்பத்தையும் ஒருங்கே படம் பிடித்துக் காட்டுகிறார். அவர் நிகழ்வியல் பாங்குக் கொள்கையாளராக இருந்ததோடு, இலட்சியவாதியாகவும் விளங்குகிறார். நூல் முழுவதிலும் அறத்தின் ஆற்றலையும், உழைப்பின் மேன்மையையும் ஒல்லும் வகையெல்லாம் ஓயாது அவர் எடுத்துரைக்கின்றார்.

ஒருவன் அன்றாட வாழ்க்கையில் எப்படி ஒழுக வேண்டும் என்பதைப் பற்றிய மூதுரைகளை இந்நூலாசிரியர் அறிவுறுத்தும் திறன் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். ஹோமர் அறத்தைப்பற்றிப் பேசுமிடங்களில் அவற்றைக் குறிப்பாக வெளிப்படுத்துகிறார். ஹெஸியட் அறத்தை இலைமறை காய்போல அமைத்துக் கூறுவதோடு அமையாமல், சில விடங்களில் வெளிப்படையாகவே அதைப் போதிக்கிறார். அவர் அறத்திற்குரிய தெய்வத்தைப்பற்றியும் குறிப்பிடுகிறார். அறத்தெய்வம் வழங்கும் நீதி, காலம் தாழ்த்தி வெளிப்பட்டாலும் நடை முறையில் நிறைவேற்றப் படும்பொழுது அது ஆற்றல் மிக்க விளைவுகளை உண்டாக்குமென்றும் கவிஞர் கருதுகிறார். அறம் செய்கின்றவனுக்கு எல்லாச் செல்வமும் பெருகும் என்பதை உறுதியாக அவர் உரைக்கின்றார். இங்குச் 'சிறப்பீனும் செல்வமும் ஈனும்' (குறள் 31) என்ற குறட்பாவின் எதிரொலியை நாம் கேட்கின்றோம்.

ஹோமர் கூறிய தெய்வ வழிபாடுகளையே 'வேலையும் நாள்களும்' சிறப்பித்துக் கூறுகிறது. ஆனால், இதில் ஒரு பெரும் பக்தியுணர்ச்சி ஊடுருவிச் செல்லவில்லை.

> அழிவில்லாத தெய்வங்களுக்கு நீ காலையிலும் மாலையிலும் செய்யவேண்டிய வழிபாடுகளை, உன் சக்திக்கேற்றவாறு செய்வாயாக! அதனால் உனக்குச் செல்வம் சேரும். நீ பிறருடைய நிலத்தை வாங்கும் நற்பேறுண்டாகும்; மற்றவர்கள் உன் நிலத்தை வாங்கக்கூடிய துன்பநிலை உனக்குண்டாகாமல் தடுக்கலாம். (வே. நா. 335-342)

'தெய்வங்களை ஏன் வழிபடவேண்டும்?' என்ற கேள்விக்கு இக்கவிஞர் கூறியுள்ள விடையால், மனிதன் தன்னலங் கருதியே தெய்வங்களை வழிபடவேண்டும் என்ற கருத்துப் புலனாகின்றது. இது அச்சத்தின் அடிப்படையில்

தோன்றிய சமயக்கொள்கையாகும். கிரேக்க மக்களின் வாழ்க்கையில் இக்கொள்கை சிறப்பிடம் பெற்றிருந்ததை 'வேலேயும் நாள்களும்' எடுத்துரைக்கிறது.

மேலும், அண்டை அயலாரின் இயல்புகளேயும், உற்ருர் உறவினரின் ஏற்றத்தையும், மகளிரின் மனப்பாங்கையும் கற்பவர் உள்ளத்தில் ஆழப்பதியுமாறு ஹெஸியட் பாடியுள்ளார். அழியாப் பெருவாழ்வுடைய தேவர்களேப் போல் விளங்குவதற்கு, அளவான வாழ்க்கை வாழவேண்டும் என்று கூறுவதோடு, அவ்வாறு வாழ்வதற்குரிய வழிவகைகளே அவர் வகுத்துத் தருகிருர். இவ்வாறு செயற்கை முறையில் 'முல்லேத்திணேப் பாடல்களேப்' பாடிய கவிஞர்களுக்கு ஒருவழியில் மூதாதையாகவும், பிற்காலத்திய கிரேக்கத்தில் தோன்றிய தத்துவப் பாடல்களேப்பாடிய கவிஞர்களுக்கு முன்னேடியாகவும் அவர் விளங்குகிருர்.

ஹெஸியட் ஒழுக்கத்தையும் நீதியையும் காக்கும் தெய்வம் ஒன்று இருப்பதாகக் குறிப்பிடுகிருர். அறவியல் நேர்மைப் பண்பையும் சட்டவொழுங்கிற்குட்பட்ட விதிகளேயும் அவருடைய பாக்கள் அறிவுறுத்துகின்றன. இவ்வியல்புகள் 'வேலேயும் நாள்களும்' என்ற அவருடைய நூலில் இடம் பெற்றுள்ளதைக்கண்டு வியந்த கிரேக்க மக்கள் அவரைப் புனிதக் கவிஞர்' (Vates) என்று பாராட்டினர். இந்நூலாசிரியர் தாம் வாழ்ந்த காலத்தில் அல்லற்பட்ட உழவருடைய உள்ளத்து உணர்ச்சிகளே எதிரொலிக்கும் வகையில் இந்நூலே இயற்றி இருக்கிருர். சமூக நீதியினே நிலேநாட்டுவதிலும் வஞ்சனேயும் சூழ்ச்சியும் நிறைந்த இவ்வுலகத்தில் மக்கள் எவ்வாறு வாழவேண்டும் என்பதிலும் இப்புலவர் பேரீடுபாடு கொண்டுள்ளார்.

'வேலேயும் நாள்களும் என்ற ஹெஸியட்டின் கவிதை,

> ஒரு குயவன் மற்ருெரு குயவனுக்குப் பகையாகிருன்; ஒரு தச்சன் மற்ருெரு தச்சனுக்குப் போட்டியாகிருன்; ஒரு பிச்சைக்காரன் மற்ருெரு பிச்சைக்காரனேக் கண்டு பொருமைப் படுகிருன்; ஒரு பாணன் மற்ருெரு பாணனேக் கண்டு மனம் பொருமுகிருன். (வே. நா. 25-28)

என்று தொடங்குகிறது அறநெறியில் அசைக்கமுடியாத நம்பிக்கைகொண்ட ஆசிரியர், இத்தகைய தீமைகளுக்கும்

துன்பங்களுக்கும் மூலகாரணம் 'சோம்பலே' என்பதை அழுத்தந்திருத்தமாக அறிவுறுத்துகிருர். இந்த அவல நிலை மாறவேண்டுமென்ருல், ஒவ்வொருவரும் தத்தம் கடமையைச் செய்யவேண்டும் என்ற சிறந்த கோட்பாட்டை அவர் எடுத்தோதுகிருர்.

உழைப்பதால் ஒருவனுக்கு இழுக்கு உண்டாகாது; ஆனல், உழைக்காமல் சோம்பித்திரிவதே மானக் கேடாகும்.
(வே. நா. 311-312)

மனித வாழ்க்கையின் வெற்றிக்குரிய மறைபொருள் 'உழைப்பில்' அடங்கிக்கிடப்பதாகக் கவிஞர் கூறுவது உலகம் என்றும் உணர்ந்து போற்றத்தக்க உண்மையாகும். இவ்வாறு இந்நூல் முழுவதிலும் அறவியல் பண்பே—நீதியுணர்த்தும் பண்பே இழையோடிச் செல்லுகிறது.

மனித வாழ்க்கைக்கு நலம் பயப்பன யாவை?

என்பதை இந்நீதி நூலார் கூறுவதற்கு மறந்துவிடவில்லை.

நல்லவர் பக்கத்தில் வாழ்வது நன்மை தரும்;
அல்லவர் பக்கத்தில் வாழ்வது அல்லல் தரும்
(வே. நா. 345-346)

என்று அறிவுறுத்திய ஆசிரியர்,

"பிறரிடமிருந்து கொள்ளும் பொருளை அதிகமாகக் கொள்ளாமையும், கொடுக்கும் பொருளைச் சிறிது மிகுதியாகக் கொடுத்தலும் என்றும் நலம் பயக்கும்" (வே. நா. 348-350)

என்று குறிப்பிடுகிருர்.

ஹெஸியட்டின் மற்ருெரு கருத்தும் இங்கு நோக்கத் தக்கது. 'உலகம் வரவர எல்லாத்துறைகளிலும் தேய்ந்து கொண்டு வருகிறது' என்ற கருத்தை அவர் கொண்டுள்ளார். பண்டைக் காலத்தைப் 'பொற்காலம்' என்று போற்றுகிற இயல்பு மனிதனிடத்தில் வேரூன்றி நிற்கிறது. இவ்வியல்புக்கு நம் கவிஞர் மட்டும் விதிவிலக்கன்று. கடந்தகாலத்தை அவர் பொற்காலம், வெள்ளிக் காலம், வெண்கலக்காலம் (வே. நா. 110-200) என்று

பாகுபாடு செய்துள்ளார். இப்பொழுது நடைபெறுவது இரும்புக்காலம் என்றும் அவர் குறிப்பிடுகிருர். இக் காலத்தின் கொடுமையை,

> இரவு வந்தாலும் மனிதனுடைய உழைப்பிற்கும் துன்பத்திற்கும் ஒரு முடிவு இல்லாக் கொடுமை நிறைந்த காலம் இது! சோர்வும் கவலையும் மனிதனுடைய சொத்தாகும். தெய்வங்கள் நம்மை வதைப்பதற்காகக் கவலையையும் ஏக்கத்தையும் இம் மண்ணுலகிற்கு அனுப்பியவண்ணம் உள்ளன. எனினும் இக் காலத்தில் தீயவற்ருேடு நல்லவை ஒன்றிரண்டு கலந்து காணப்படுகின்றன. (வே. நா. 170-180)

என்று கூறும் ஆசிரியர், இதற்கு விரைவில் ஒருமுடிவு வரும் என்று சொல்லுகிருர். 'இரும்புக் காலத்திற்கு ஒரு முடிவு வந்துவிட்டதை நாம் எப்படி அறிவது?' என்று யாரும் கவலைப்படவேண்டாம் என்கிருர் அவர். 'அவ் வழிவுக் காலம் வந்துவிட்டால் உலகம் எப்படி இருக்கும் தெரியுமா?' என்ற விஞவை எழுப்பி, அதற்கு அவரே விடையும் தருகின்ருர்:

> குழந்தைகள் பிறந்தவுடன் நரைமயிர் உடையவர்களாகத் தோன்றுவார்கள்; பெற்ருேர்கள் தம் மக்களிடத்துத் தீராப் பகைமை பாராட்டுவார்கள்; மக்கள் பெற்ருேரை எதிர்த்துப் போரிடுவார்கள்; விருந்தினன் தன்னைப் போற்றி விருந்தளித்தவரைத் தூற்றிச் செல்லுவான்; உடன் பிறந்தவன் பகைவனுக மாறுவான்; கொடுத்த வாக்கைக் காப்பாற்றுபவன் பழிக்கப் பெறுவான்; நல்ல மனிதன் நாள்தோறும் அழுது கண்ணீர் வடிப்பான்; கொடிய செயல்களே நல்லவை என்று போற்றப் பெறும்; மாபாதகம் செய்பவனே மாண்புமிகு மனிதனென்று போற்றப் பெறுவான்; பொருமைப்பேய் மனித இனத்தைப் பிடித்துக்கொண்டு உலுக்கு, உலுக்கென்று உலுக்கிவிடும்; வன்முறைச் செயல்களையே எல்லாரும் சிறந்தவை என்று போற்றுவர். (வே. நா. 190-200)

என்று அவர் படம்பிடித்துக் காட்டும்நிலை இரும்புக் காலம் கெட்டழியப் போவதற்குரிய முன்னெச்சரிக்கையாகும்.[12]

இனி, அவர் மனிதன் வாழ்வதற்குரிய சிறந்தநெறி எதுவென்பதைப்பற்றிக் கூறியுள்ள கருத்தினைக் காண்போம்:

நம் முன்னல் இருவகை வாழ்க்கை நெறிகள் உள்ளன. ஒன்று எளிதில் யாராலும் சென்று அடையக் கூடிய வசதியான வழி. மனம்போன போக்கில், தான் கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்று வாழ்வதற்குரிய நெறி அது. ஆனல், அது தீயதாகும். அதனல், ஒருவனுக்குச் சிறப்புண்டாகாது; மற்றொரு நெறி கரடு முரடானது; நெடுந்தொலைவு அழைத்துச் செல்வது. அவ்வழியே சென்ருல் விரைவில் களைப்பும் சோர்வு முண்டாகும்; செங்குத்தான குன்றுகள் வழியாக அவ்வழி செல்லுகிறது. அதன் சிகரத்தை அடைந்துவிட்டால் அவ்வழியை 'அறநெறி' என்று கூறுவர்.

(வ. நா. 287-293)

வேறுசில அறிவுரைகளையும் ஹெஸியட் இடையிடையே கூறிச் செல்லுகின்ருர்:

கன்னிப் பெண்ணை மணம் புரிந்துகொள்; உன்னல் அவளுக்கு நல்ல பழக்கவழக்கங்களைக் கற்பிக்க முடியும்.

(வே. நா. 699)

உன் உடன் பிறந்தவனேடு பழகும்பொழுது அன்புடன் பழகு. அவனிடம் ஒன்றைக் கொடுக்கின்றபொழுது, சாட்சியாக வேறு சிலரை உடன் வைத்துக்கொண்டு கொடு. அளவு கடந்த நம்பிக்கையும் அளவுகடந்த ஐயுறவும் மனிதனை அழித்துவிடும். (வே. நா. 371-373)

மனிதனையும் விலங்கையும் வேறுபடுத்துவது மனிதனுடைய மனச்சான்ருகும். மனச்சான்றின் அடிப்படையில் அவன் நியாயமானது எது? நேர்மையற்றது எது? என்பதை எளிதில் கண்டறிகிருன். இந்நியாய உணர்வு, மனிதனை நெறியோடும் முறையோடும் வாழச்செய்கிறது; வெறும் ஆற்றல் நியாயமாகாது. (வே. நா. 280-282)

இரவலரிடத்திலும் முன்பின் அறியாதவர்களிடத்திலும் அனதைகளிடத்திலும் அன்பு காட்டவேண்டும். விருந்தோம்பல், பெற்ருேர்களிடத்தில் பணிந்து நடத்தல், மணம்புரிந்த மனைவி முதலியோரிடத்தில் நல்லமுறையில் நடந்து கொள்ளுதல் சிறந்த பண்புகளாகும். (வ. நா. 353-354)

பின்னர், தெய்வங்களுக்குச் சீற்றத்தை உண்டாக்கும் செயல்களைப்பற்றிய சிறுபட்டியல் ஒன்றைக் கொடுத்து (695-723), அவற்றைத் தவிர்க்குமாறு இந்நூலாசிரியர் வற்புறுத்துகிருர். இப்பகுதியில் கூறப்பெறும் கருத்துக்கள் சமய அடிப்படையில் அமைந்த மூடநம்பிக்கைகளாகக்

காணப்பெறுகின்றன. இறுதியாக நல்ல நாள்களையும் தீய நாள்களையும்பற்றிய செய்திகள் விரிவாகப் பேசப்படுகின்றன:

> சில சமயங்களில் குறிப்பிட்ட ஒருநாள், ஒருவனுக்குப் பெற்ற தாயைப்போன்று நன்மைகளைச் செய்யும் நாளாக அமையும். மற்றும் சில சமயங்களில், அந்நாளே அவனுக்கு மாற்றாந் தாயாக மாறிவிடும். எனவே, எவனொருவன் இவற்றையெல்லாம் நன்குணர்ந்து தன்னுடைய வேலையைத் தொடங்குகிறானோ, அவனைப் போன்ற நற்பேறுடையவன் இவ்வுலகில் எங்கும் காண்பதரிது. (வே. நா. 824-826)

இவ்வாறு ஒழுக்கநெறிக் கொள்கைகளை எடுத்தியம்பும் இந்நூலில், இலக்கியத்தின் எழில்மிகு கலை நயங்கள் இடையிடையே கலந்து காணப்பெறுகின்றன. அவற்றுள் இரண்டு சிறப்புடையன. "இரும்புக்காலத்தின் இறுதி நாள்களில் வன்முறைச் செயல்கள் தலைவிரித்தாடும்; அப்பொழுது தீயவர்களே செல்வாக்குடையவர்களாக விளங்குவர்; அவர்கள் வைத்ததே சட்டமாகும். அந்நிலையில் நல்லவர்களாகிய ஏழை, எளிய மக்கள் அவர்களிடத்தில் அகப்பட்டுக்கொண்டு அல்லற்படுவர்" என்ற கருத்தை விளக்குவதற்கு, ஆசிரியர் ஒரு சிறிய உருவகக் கதையைக் கூறுந்திறம் கலையழகு உடையதாகும்.

> ஒரு நாள் மாலை நேரம்; ஒரு வானம்பாடியைப் பருந்து ஒன்று தூக்கிச் செல்லுகிறது. அது தன்னுடைய கூரிய நகங்களினால் வானம்பாடியின் கழுத்தை நெரித்துக்கொண்டு மேக மண்டலங்களிடையே பறந்து செல்லுகிறது. அப்பறவையோ வாய்விட்டுக் கண்டவரெல்லாம் மனம் நைந்துருகும்படி புலம்புகிறது. ஆனால், ஆணவம் வாய்ந்த பருந்தோ வானம்பாடியை, 'உனக்கு இப்பொழுது என்ன துன்பம் வந்துவிட்டது? ஏன் வீணாக அழுகிறாய்? உன்னுடைய தலைவனிடம்தானே நீ இருக்கிறாய்! நீ இனிமையாகப் பாடுவதால், உன் தலைவன் தான் போகுமிடம் எல்லாம் உன்னையும் உடன்கொண்டு செல்லுகிறான். அவன் விரும்பினால் உனக்கு விடுதலையளிப்பான்; அல்லது அவன் தன் விருப்பம் போல உன்னைத் தின்று தீர்த்துவிடவும் செய்வான். எனவே, ஆற்றல்மிக்கவனோடு ஆற்றலற்றவன் போட்டியிட முயல்வது முட்டாள்தனம். அவ்வாறு முயன்றால் அவன் தோல்வியடைவான். அதுமட்டுமா? அவன் தன்மானத்தையும் இழந்துவிடுவான்; இறுதியில் தானே அழிந்து போவான்' என்று சொல்லிற்று. (வே. நா. 200-212)

இக்கதையின் மூலம் ஆசிரியர் தீமையின் கொடிய ஆற்றலையும், அதனால் விளையும் கேடுகளையும் சித்திரித்துக் காட்டுகிறார். அறநெறியின் சிறப்பை எதிர்மறைமுகத் தான் விளக்கும் ஆசிரியர் அதை ஒரு நீதிக்கதையின் வாயிலாக எடுத்துரைத்துள்ளார். இது அவருடைய கற்பனைத் திறனுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

அடுத்து, இலக்கியத்தின் எழில்மிகு சொல்லோவியம் ஒன்றை நாம் காணலாம். நிலக்கிழாராகிய ஹெஸியட் அறுவகைப் பருவங்களின் இயல்புகளையும், அக்காலத்தில் செய்யவேண்டிய உழவுத்தொழில் முறைகளையும், அழகுற வருணித்துள்ளார். அவற்றுள் குளிர்காலத்தில் வீசும் வாடைக்காற்றின் கொடுமையை அவர் ஓடும் திரைப்படமாக்கிக் காட்டுகிறார்:

> திரேஸ் குன்றுகளிலிருந்து வாடைக்காற்று வீசத் தொடங்கி விட்டால் அதைப்போன்ற தீய நாள்கள் வேறு இருக்கமுடியாது. எருதின் தோலையுரித்துவிடுவதைப் போன்று வாடைக்காற்று வீசும்; செடிகொடிகள் தங்களைத் தாங்களே மேலே மூடிக் கொள்ளும். மலையிலிருந்து புறப்படும் வாடை, காடுகளில் பாய்ந்து வருவதால் பைன் மரங்களையும், ஓக்கு மரங்களையும் முறித்துக் கொண்டுவரும். அதைக் கண்ட உடனேயே மரங்கள் எல்லாம் வேதனைக் குரல் எழுப்பும்; விலங்குகள் குளிரால் நடுங்கித் துடிக்கும். அவற்றின் தோல்களில் மயிர் அடர்த்தியாக இருக்கும். எனினும், குளிர்காற்று எருதின் முரட்டுத் தோலிற்குள்ளும், வெள்ளாட்டின் அடர்த்தியான மயிருக்கு இடையிலும் பாய்ந்து செல்லுகிறது. ஆனால், குடிசையினுள் தன் அன்புறுதாயின் அருகே அடக்கத்தோடு அமர்ந்திருக்கும் அச்சிறு பெண்ணின் மென்மையான தோலின் ஊடே ஊடுருவிச் செல்ல முடியாது தத்தளிக்கிறது. (வே. நா. 590-520)

இங்கு, குளிரின் கொடுமையையும், குடிசையில் வாழ்வோரின் உள்ளவுரனையும் ஆசிரியர் திறம்பட வருணிக்கிறார். வாழ்க்கையின் முக்கியப் பிரச்சினைகளைப்பற்றி உழவர்கள் சிந்திக்கத் தொடங்கிவிட்டனர் என்பதை ஹெஸியட்டின் எழுத்தோவியம் நமக்கு அறிவிக்கிறது.

### அரியதொரு நீதி இலக்கியம்

'வேலையும் நாள்களும்' என்ற இந்நூலில் காணப் பெறும் அறநெறிக் கருத்துக்கள் வழக்காற்று ஒழுக்க

நெறியை அடிப்படையாகக் கொண்டவையாகும். 'கி. மு. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்திய நீதிநூல்கள், யாதாகிலும் கிரேக்கமொழியில் உண்டா ?' என்று ஆராய்ந்து பார்க்கின்றபொழுது, ஹெஸியட்டின் இந் நூலைத் தவிர, வேறெந்தநூலும் இன்று கிடைக்கவில்லை. ஆயினும், நீதிகளை எடுத்துரைக்கும் மூதுரைகள் கி.மு. எட்டாம் நூற்றாண்டிற்கு முன்பு கிரேக்க மொழியில் இருந்திருக்க வேண்டும். அவற்றின் படிப்படியான வளர்ச்சியின் பயனாகவே 'வேலையும் நாள்களும்' போன்ற நூல்கள் தோன்றுவதற்குரிய சூழ்நிலை உருவாகி யிருக்கவேண்டும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்

மாண்புமிகு கிரேக்கத்தின் வீரயுகத்தைச் சொற் சித்திரங்களாகத் தீட்டிக்காட்டிய மாபெரும் புலவன் ஹோமருக்கு அடுத்து, சீரும் சிறப்புமுற்றுத் திகழ்பவர் ஹெஸியட் என்பவரேயாவர். இலியத்து, ஒடிசி ஆகிய காப்பியங்களுக்குப் பின்னர், கிரேக்க இலக்கிய வர லாற்றில் காலத்தால் பழமையும், கருத்தால் புதுமையும் கொண்டு திகழ்வது 'வேலையும் நாள்களும்' என்னும் இலக்கியப் படைப்பாகும். கிரேக்க நாட்டின் தலைவிதியை வகுத்த மாவீரர்களின் வரலாற்றைப் போற்றிப் புகழா மலும், ஆற்றல்மிகு ஆட்சித் தலைவர்களுக்கு அறவுரை கூறாமலும், அவர்களுடைய வெற்றிக்கும், நாட்டின் நலத் திற்கும் இன்றியமையாத வேளாண்மைத் தொழிலையும், அதனுடன் தொடர்புள்ள வேறுபிற தொழில்களையும் செய்துவந்த உழவர்களுக்கும், தொழில் வினைஞர்களுக் கும் 'மண்ணில் நல்ல வண்ணம்' வாழ்வதற்குரிய அற நெறிக் கருத்துக்களையும், வாழ்வில் கண்டுணர்ந்த உண்மைகளையும், அன்றைய சமுதாயத்தின் மனப்பாங் கினை எதிரொலிக்கும் வகையில் 'ஹெஸியட்' என்ற கவிஞர் தெளிவாகவும், நயமாகவும் கற்பவர் உள்ளத்தில் ஆழப் பதியுமாறு அரியதொரு நீதிநூலைத் தீட்டி யுள்ளார்.

கி. மு. ஏழாம் நூற்றாண்டில் கிரேக்க நாட்டில் வாழ்ந்த மக்களுக்காக இந்நீதிநூல் இயற்றப்பட்டிருந்

தாலும், இதனுள் காலத்தால் கறைபடாத, இடத்தால் இழிவுறாத, மொழியால் மொய்ம்பு குறையாத கருத்துக்கள் சில உள்ளன. அவை அனைத்துலக மக்களுக்கு என்றும் பயன்படக்கூடிய தகுதியுடையன.

சிந்தனைத் திறனில் தன்னிகரற்று விளங்கும் கிரேக்கத்தின் மாபெரும் சிந்தனையாளர்களுக்கு முன்னோடியாகவும், அவர்களுடைய வருகைக்குக் கட்டியங் கூறுகின்ற வகையிலும் ஹெஸியட்டின் 'வேலையும் நாள்களும்' வீறுடன் விளங்குகிறது. மெய்யுணர்வாளர்கள் மேற்கொண்ட அறிவாராய்ச்சியின் பயனாகு மெய்ப்பொருளைக் காட்டும் 'அறிவு நூல்கள்' என்ற சிறப்பு வகையான தத்துவ நூல்கள் தோன்றுவதற்கு முன்னரும், காப்பிய மரபிற்குப் பின்னரும் கிரேக்க மொழியில் தோன்றிய இலக்கியங்களுள் பெரும்பாலானவை தன்னுணர்ச்சிப் பாடல்களாக (Lyrics) இயற்றப்பட்டுள்ளன. இவ்வகையைச் சேர்ந்ததே ஹெஸியட்டின் 'வேலையும் நாள்களும்' என்னும் நீதி இலக்கியமாகும். எளிய, இனிய ஓசை நயத்தோடு, உணர்ச்சித்துடிப்பும், கற்பனை வளமும் நிறைந்து விளங்குவதால் இந்நூல் தோன்றிய காலம் முதற்கொண்டு இன்றுவரை போற்றப்பெற்று வருகிறது. இதில் எண்ணத்தின் எழுச்சி, இதயத்தின் மலர்ச்சியோடு இணைந்துள்ளதை நாம் காணலாம்; கருத்துச் செறிவுடன் கவின்மிகு கற்பனைகளும் களிநடம்புரிகின்றன. ஹெஸியட்டின் 'வேலையும் நாள்களும்' கிரேக்க மொழியில் தோன்றியுள்ள ஓர் இலக்கியமாகவே இன்றும் கருதப் பெறுகிறது. அதனுடைய நோக்கும் போக்கும் பண்டைக் கிரேக்க இலக்கிய மரபிற்குரியதாகவே திறனாய்வாளர்களால் பாராட்டப் பெறுகிறது.[13]

## ஹெஸியட்டும் வள்ளுவரும்

ஹெஸியட்டின் சிந்தனையில் அரும்பிய கருத்துக்களுள் சில மன்பதைப் பாவலனாகிய வள்ளுவனுடைய அறநெறிக் கருத்துக்கள் சிலவற்றோடு ஒத்துள்ளன. அவற்றைப் பின்வரும் அட்டவணையில் நாம் காணலாம் :

| | வேலையும் நாள்களும் | திருக்குறள் |
|---|---|---|
| 1. | பொற்காலத் திருநாட்டில் பஞ்சமோ, நோயோ, உட்பகையோ உண்டாவதில்லை. —230 | உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்<br>சேரா தியல்வது நாடு. —734 |
| 2. | எவனொருவன் பிறனொருவனுக்குத் தீமை செய்கிறானோ, அவன் தனக்குத்தானே தீமை செய்து கொண்டவனாகின்றான். —652 | பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா<br>பிற்பகல் தாமே வரும். —319 |
| 3. | உழைத்துப் பாடுபடுவது மானக்கேடாகாது; சோம்பித் திரிதலே இகழ்ச்சிக்குரியதாகும். —311 | பொறியின்மை யார்க்கும் பழியன்று; அறிவறிந்து<br>ஆள்வினை இன்மை பழி. —618 |
| 4. | வறுமை இழிவைக் கொடுக்கும். —317 | தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக<br>நல்குரவு என்னும் நசை. —1043 |
| 5. | தீயவர் அயலவராக இருப்பதைப் போன்ற கொடிய துன்பமும் இல்லை; நல்லவர் அருகில் வாழ்பவராக இருப்பதால் உண்டாகும் இன்பத்தைப் போன்றது வேறெதுவும் இல்லை. —346 | நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்<br>அல்லற் படுப்பதூஉம் இல். —460 |
| 6. | நல்ல மனைவியைப் போன்ற பெறற்கரிய பேறும் இல்லை: தீய மனைவியைப் போன்றதொரு கொடுமையும் வேறில்லை. —702-703 | இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்<br>இல்லவள் மாணாக் கடை. —53 |
| 7. | உள்ள விருப்பத்தோடு ஒருவன் பிறருக்கு உதவிபுரிவதனால் அவன் மகிழ்ச்சியும் மனநிறைவும் அடைகிறான். எனவே, ஈதல் நன்று. —357-358 | ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை<br>வைத்திழக்கும் வன்க ணவர். —228 |
| 8. | பருவத்தைப் பாழாக்காமல் ஓயாது உழைத்துப் பாடுபடு; சோம்பி இருப்பாயானால் மானத்தை இழந்து பிச்சை எடுக்க நேரிடும். —385-387 | குடிசெய்வார்க்கு இல்லை பருவம்; மடிசெய்து<br>மானம் கருதக் கெடும். —1028 |

| வேலையும் நாள்களும் | திருக்குறள் |
| --- | --- |
| 9. சோம்பலுக்கு இரையாகிப் பயனில் சொற்களைப் பேசிக் காலத்தைக் கழிப்பவன் வாழ்வதற்கு வழியறியாது அல்லற்படுவான். —500 | ........................மடியுடையார்<br>மாண்பயன் எய்தல் அரிது.<br>—606 |
| 10. எப்பொருளையும் அளவாகக் கப்பலில் ஏற்று. அளவுக்கு மிஞ்சினால் அடித்தளம் முறிந்துவிடும். அத்துடன் சரக்குகளும் கடலுள் மூழ்கிப்போய் விடும். —693 | பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்<br>சால மிகுத்துப் பெயின். —475 |
| 11. எச்செயலையும் காலமறிந்து செய்வது நல்லது. —694 | ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்<br>கருதி இடத்தாற் செயின். —484 |
| 12. நல்லவர்களைத் தேர்ந்து அவரிடத்து நட்புக்கொள். —712 | மருவுக மாசற்றார் கேண்மை.<br>—800 |
| 13. ஒருவன் தன் நாவினை அடக்கியாளுதலால் உண்டாகும் நன்மையைப் போன்று வேறொரு நன்மையும் இல்லை. —719-720 | யாகாவா ராயினும் நாகாக்க; காவாக்கால்<br>சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.<br>—127 |
| 14. வீண் பேச்சில் ஈடுபட வேண்டாம்; தூற்றிப் பேசுவது எளிது; அதன் விளைவைத் தாங்குவது அரிது. —760 | நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்<br>பண்பில்சொல் பல்லா ரகத்து.<br>—194<br>சீர்மை சிறப்பொடு நீங்கும்.<br>—195 |

ஹெஸியட்டிற்கும் வள்ளுவருக்கும் இடையே கருத்து வகையில் காணப்பெறும் வேறுபாடுகள் பல. அவற்றுள் இரண்டு இங்குக் குறிப்பிடத்தக்க அளவிற்குச் சிறப்பு வாய்ந்தன. திருவள்ளுவர் பெண்ணினத்தைப் பெருமைப் படுத்திப் பேசும் பாவலராவர். அறத்துப்பாலில் 'பெண்ணின் பெருந்தக்க யாவுள?'[54] என்ற வினாவை எழுப்பி,

பொருட்பாலில் 'பெண்ணே பெருமையுடைத்து' (907) என்று சுட்டிக்காட்டி, காமத்துப்பாலில் 'பெண்ணின் பெருந் தக்கது இல்' (1137) என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறு கிறார் வள்ளுவர்.

ஆனால், ஹெஸியட் "பெண்களை நம்பாதே! முகமன் கூறுவோர்களை நம்பினால் உண்டாகும் கேடு, பெண்களை நம்பினால் உண்டாகும்" (375) என்று அறிவுறுத்துகிறார். வள்ளுவர் 'பெண்வழிச் சேறல்' என்ற பகுதியில் கூடப் பெண்ணை இழித்துப் பேசவில்லை; மனைவிக்கு அடிமை யாகிக் 'கையும் காலும் தூக்கத்தூக்கும் ஆடிப்பாவை போல்' தனக்கெனச் சிந்தனையும் செயல்திறனும் இல்லாத ஆண்மகனையே அங்கு இழித்துரைக்கின்றார்.

ஹெஸியட் 'பழிக்குப்பழி வாங்குவாயாக' (348) என்று கூறுகிறார். அவர் காட்டும் அறவழியில் தவறு செய்தவர்களை மன்னிக்கும் பண்போ, தவற்றை மறந்து தவறு செய்தவரிடத்து அன்போடு நடந்துகொள்ளும் பெருந்தன்மையான போக்கோ இடம்பெறவில்லை. குறள்நெறியில், திறனல்ல தற்பிறர் செய்யினும் நோ நொந்து அறனல்ல செய்யாமை நன்று' என்பது சிறந்த தொரு குறிக்கோள். அதைவிடப் பன்மடங்கு சிறந்த கொள்கை 'ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம்; பொறுத் தார்க்குப் பொன்றுந்துணையும் புகழ்' என்று கருதித் தீமையைப் பொறுத்துக்கொண்டு அமைதியாக இருப்பது அதைவிட இன்னும் சிறந்தது, 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல்' என்ற கோட்பாடு. இவ்வகையில் நோக்குகின்ற பொழுது திருக்குறளின் அறவியல் சிந்தனை முதிர்ச்சியுற்றதாகத் தோன்றுகிறது. இதற்கு ஒரு வகை யில் நாம் அமைதி கூறலாம். வள்ளுவருடைய காலத்திற்கு அறுநூறு ஆண்டுகளாகிலும் ஹெஸியட் முற்பட்டவராவர். அக்காலத்திய சமுதாய நிலையில் இத்தகைய விழுமிய கருத்துக்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு இல்லை என்று நாம் கூறலாம். ஆனால், இங்குப் பின்வரும் கருத்தினை நாம் நினைவுகூர்தல்வேண்டும். இயேசு பெருமானின் அரு ளாட்சி ஐரோப்பாவில் பரவிய காலத்தில்தான் அருள் நெறியும், தவறுசெய்தோரை மன்னிக்கும் மனப்பண்பும்

அங்கு வாழ்ந்த மக்கள் உள்ளத்தில் இடம்பெறத் தொடங்கியதாகச் சரித்திரம் பேசுகிறது. எனவே, ஹெஸியட் அவற்றைப்பற்றி அறியாதவர் என்று நாம் கூறுவது அவருக்கு இழுக்காகாது.

### மூதுரைகள்

ஹெஸியட்டிற்குப் பின்னர் தோன்றிய நீதி நூல்களைச் சிறப்புமிக்கவை என்று நாம் கூறுவதற்கு இல்லை. ஏழு மூதறிஞர்களுடைய வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு 'மூதுரைகள்' பல அக்காலத்தில் எழுந்தன. நாடு முழுவதிலும் பரவியிருந்த மூதுரைகளையும் பழமொழிகளையும் அறிஞர்கள் திரட்டினர். அவற்றைப் புராண மரபைச்சார்ந்த பெரியோர்கள்எழுதியதாக மக்கள் நம்பும்படி நீதி நூல்களாக அவர்கள் தொகுத்துக் கொடுத்தனர். அவற்றுள் உலகப் புகழ்வாய்ந்த மூதுரைகள் சில இடம்பெற்றுள்ளன. 'உன்னை நீ அறிவாயாக' (Know Thyself) என்ற மூதுரை டெல்பியிலிருந்த கோயிலின் மீது பொறிக்கப்பெற்றிருந்தது. 'அளவுக்கு மிஞ்சினல் அமுதமும் நஞ்சு' (Nothing too much), 'பிணையம் கொடுத்தால் உடனே இழப்பல்லவா வரும்?' (Surety; loss to follow) என்பன போன்ற மூதுரைகள் அன்றைய கிரேக்க மக்களின் இதழ்களிலெல்லாம் உலாவிக்கொண்டிருந்தன. இத்தகைய மூதுரைகளையும் பழமொழிகளையும் கி. மு. நான்காம் நூற்றுண்டு அளவில் ஆர்கோசைச் சேர்ந்த லோபோன் (Lobon of Argos) என்பவர் நூலாகத் தொகுத்தார். இந்நூலில் இடம்பெற்றுள்ள மூதுரைகளும், பழமொழிகளும் காலத்தால் பழமையானவை என்று கருதப் பெறுகின்றன. எனினும், அவற்றில் இலக்கியமணம் கமழவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஹெஸியட்டின் 'வேலையும் நாள்களும்' என்ற நீதி நூலுக்குப் பிறகு கிரேக்க மொழியில் தோன்றிய மூதுரைப்பாடல்கள் பெரிதும் நீதிப்பாடல்களாகக் கருதப் படாமல், 'பட்டியல் வரிசைப் பாடல்களாகக்' (Catalogue of Poems) கொள்ளப்பட்டுள்ளன. அவை நீதிப்பாடல்களோடு பேரளவிற்குத் தொடர்புடையனவாக உள்ளன. சிலசமயங்களில் அவற்றில் அறநெறிக் கருத்துக்களுக்கே

முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளதை நாம் காணலாம். அவ்வற நெறிக்கருத்துக்கள் குறிப்பாகவும், வெளிப்படை யாகவும் அறிவுறுத்தப்பெறுகின்றன.

**சைமோனிடீஸின் பாடல்கள்**

சைமோனிடீஸ் (Simonides) என்ற கவிஞருடைய பாடல்களும், சட்டவியல் வல்லுநரான சோலன் (Solon) என்பவரின் பாடல்களுள் சிலவும் இவ்வகையைச் சேர்ந் தனவாகும். சைமோனிடீஸ் என்ற கவிஞர் கி. மு. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்தவராவர். அவ ருடைய பாடல்கள் 'அயாம்பிக்' (Iambic) எனப்படும் குறில் நெடிலான ஈரசைச் சீர்கொண்ட, மூவிரு சீரடிப் பாட்டில் இயற்றப்பட்டனவாகும். அவற்றுள் ஒரு சிறிய பாட்டு வாழ்க்கை நிலையாமையைப் பற்றிப் பேசுகிறது; எதிர்காலத்தைப்பற்றி மனிதன் முன்கூட்டியே அறிந்து கொள்ளமுடியாமல் அல்லற்படுவதையும் அது குறிப்பிடு கிறது; மனிதன் நம்பிக்கையார்வத்தால் அடைகின்ற வீண்பெருமையின் சிறுமையையும் சுட்டிக்காட்டுகிறது. பின்னர் மனிதனுக்கு இறப்பு எப்படியெல்லாம் வருகிறது என்பதை சைமோனிடீஸ் அழகுற எடுத்தியம்புகிறார்:

> ஒருவன் தன்னுடைய இலட்சியத்தை அடைவதற்குள் கொடுமை நிறைந்த முதுமையால் தாக்கப்பட்டு மறைகிறான்; மற்றும் சிலர் மனித இனத்தை வாட்டும் கொடிய நோய்கள் சிலவற்றால் இறந்துபோகின்றனர்; வேறு சிலர் கொடிய பேய் பிசாசுகளால் அழித்தொழிக்கப்படுகின்றனர்; சிலர் கவலை யற்று மகிழ்ச்சியாக வாழக்கூடிய காலத்தில் புயல்காற்றினால் அலைக்கழிக்கப்பட்டும், கடல்கொந்தளிப்பினால் துன்புறுத்தப் பட்டும் இறக்கின்றனர்; சிலர் வாழ்க்கையில் உண்டாகும் துன்பங்களைப் பொறுக்கமாட்டாமல் தூக்கில் தொங்கு கின்றனர். இவ்வாறு பல்வேறு வடிவங்களில், ஊழ்வினை மனிதர் முன்னால் தோன்றி சிறிதும் எதிர்பார்க்க முடியாத வகையில், தொல்லைகளையும் துன்பங்களையும் கொடுத்து அழித்து விடுகிறது. எனவே, துன்பப்படுகிற காரணத்தால் யாரும் தீமையை நாடவேண்டாம்; அல்லது யாருடைய உயிருக்கும் தீங்கு சூழவேண்டாம்.

மேற்கண்ட கருத்துக்களுள் "துன்பம் வந்துற்றகாலை யாரும் தீமையை நாடவேண்டாம்; பிறருக்குத் தீங்கு

செய்யவேண்டாம்" என்று கூறும் அறவுரை எக்காலத்தவரும், எந்நாட்டவரும் பொன்னேபோல் போற்றத்தக்க முதுமொழியாகும்.

தெய்வப் புலவர் திருவள்ளுவர் 'தீவினையச்சம்' என்ற அதிகாரத்தில்,

இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து. (குறள் 205)

அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல். (குறள் 203)

என்றும், 'இன்னா செய்யாமை' என்ற அதிகாரத்தில்,

கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள். (குறள் 312)

இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல். (குறள் 316)

தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல். (குறள் 318)

என்றும் இயம்பியுள்ள கருத்துக்கள் மேற்கண்ட கிரேக்க மொழிப் பாடலின் பொருளைத் தெளிவுறுத்துகின்றன. ஆனால், வள்ளுவர் சைமோனைட்ஸ் கருத்துக்களைக் காட்டிலும் பலபடிகள் உயரச் சென்று பிறருடைய துன்பத்தையும் தன்னுடைய துன்பமாகக் கருதவேண்டும் என்று கூறுகிறார்.

அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை. (குறள் 315)

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை. (குறள் 317)

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். (குறள் 314)

என்று அறிவுறுத்தியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

இக்கவிஞருடைய மற்றொரு நீண்ட நெடும்பாட்டு, பெண்களின் பல்வேறு இனங்களை வருணிப்பதாகும். பெண்கள் பல வகைப்படுவர். அதற்குக் காரணம் என்ன?

தெய்வங்கள் அவர்களைப் படைத்தபொழுது வேறுபட்ட இனங்களைச் சேர்ந்த விலங்குகளேயும், மற்றும் பல பொருள்களையும் கொண்டு அவர்களைப் படைத்ததாக அப் பாடல் கூறுகிறது.

துப்புரவற்றும், மிகுதியாகக் குழந்தைகளைப் பெற்றும் வாழும் பெண் பன்றியிலிருந்தும், பிறர் செய்திகளில் தலையிடும் ஆர்வமும் சூழ்ச்சித்திறனும் உடைய பெண் நரியிலிருந்தும் படைக்கப்பட்டனராம். எங்கும் அலைந்து திரிந்து எடுத்ததற் கெல்லாம் எரிந்துவிழும் பெண், மந்தமாக இருக்கும் பெண், ஆத்திரமும் அழுகையும் கொண்டு பொங்கியெழும் பெண், தன்மான உணர்ச்சி யற்ற பெண், மோப்பம் பிடிக்கும் பெண், எதிலும் பதற்றம் உடைய பெண், சிறிதுநேரம் கைகால்களை அடக்கிவைத்திருக்காத பெண், எப்பொருளையும் நுட்ப மாகச் சீர்தூக்கிப் பார்க்கும் பெண் ஆகியோர் முறையே நாய், நிலம், கடல், கழுதை, மரநாய், குதிரை, குரங்கு தேனீ ஆகிய விலங்குகளிலிருந்தும் பொருள்களிலிருந்தும் படைக்கப்பட்டதாகச் சைமோனைட்ஸ் கேலிச் சித்திரமாகத் தீட்டியுள்ளார். இவற்றுள் 'தேனீ'யிலிருந்து படைக்கப் பட்டபெண்ணே கலையுணர்வு வாய்ந்த 'நல்ல பெண்மணி' யாகக் கருதப்படுகிறாள். மற்றவர்களெல்லாம் 'நல்லியல்பு களற்ற நங்கையர்' என்பதைக் கவிஞன் உலகிற்கு உணர்த்த விரும்புகிறான்.

நீதிப்பாடல் ஒன்று சிறந்த இலக்கிய நயம் உடைய தாக இயற்றப்பட்டுள்ளமைக்கு இப்பாடல் ஒரு சான்றா கும். மேலும், இப்பாடல் ஆடவர்களை மகிழ்விப்பதற் காகவே இயற்றப்பட்டதாகத் தோன்றுகிறது. நாயிலிருந்து படைக்கப்பட்ட பெண், 'தன் தாயைப் போன்றே இருக் கிறாள்' என்று கவிஞன் எள்ளி நகையாடுகிறான்.

> எதையும் அவள் கேட்கவும் அறியவும் விரும்புகிறாள். குறிக் கோள் இல்லாமல் அவள் எங்கும் அலைந்து திரிகிறாள். அவள் கண்முன்னால் யாரும் இல்லையென்றாலும், அவள் 'வள்வள்' ளென்று குரைக்கிறாள்; விருந்தினர் முன்னிலையிலும் அவள் உறுமிக்கொண்டே இருக்கிறாள்; அவளுடைய கணவன் அவளை இங்கிதமாகவோ, அச்சுறுத்தியோ அடக்கமுடியாது அல்லற் படுகிறான்.

நிலத்திலிருந்து படைக்கப்பட்ட பெண் உணர்ச்சியற்றவள்; அவளுக்கு எதைப்பற்றியும் ஒன்றும் தெரியாது. 'நல்லது எது?' தீயது எது?' என்பதுகூட அவளுக்குத் தெரியாது. அந்த அள விற்கு அவள் அறியாமை நிறைந்தவளாக இருக்கிறாள். ஆனால், அவளுக்கு ஒன்றே ஒன்றுமட்டும் நன்றாகத் தெரியும். ஓயாமல் தின்பதற்குத்தான் அவள் கற்றுக்கொண்டு இருக்கிறாள். கொடிய குளிர்காற்று வீசினால், அவள் அந்தக் குளிரில் நடுங்கிக்கொண்டு இருப்பாளே தவிர, கனலடுப்பு அருகில் சென்று குளிர்காயக்கூட அவளுக்குத் தெரியாது.

(கிரேக். பா. தொ. பக். 27)

இவ்வகையான எழுத்தோவியங்கள் பெண்களுள் இருவகை யினரைப்பற்றிக் கிரேக்கநாட்டு ஆண்கள் கொண்டிருந்த அச்சத்தையும், அவமதிப்பையும் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

தமிழகத்தில் தோன்றிய அறவோரான நம் திருவள்ளு வர் பெண்ணினத்தின் பெருமையைப் பேசும் முற்போக்கு நோக்கம் கொண்ட கவிஞராகத் திகழ்கிறார். அவர் ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளில் ஓரிடத்தில் கூடப் பெண் இனத்திற்கு மாசு கற்பிக்க முயலவில்லை என்பதை நாம் முன்னரே கண்டோம்.

சைமோனைட்ஸ் என்ற இக்கவிஞரின் பாடல்களில் ஒரு வகையான துன்பியல் நோக்கு (Pessimism) கலந் துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. வாழ்க்கைப் போராட்டத்தில் தம்முடைய எதிரிகள் பலரிடம் அவர் தோல்விகள் பல கண்டவர். வெறுப்பும் சலிப்புமுற்றுச் செயல் குலைந்த நிலையில் அவர் பாடிய பாடல்களே நமக்குக் கிடைத்துள்ளன. அதனால் அவருடைய பாடல் களில் நிலையாமை, துன்பமே உலகம் என்பன போன்ற கருத்துக்களே முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளன. இத்தகைய கருத்துக்களுக்குப் பின்னணியாக அவர் அறத் திடத்துக் கொண்ட அசைக்க முடியாத நம்பிக்கை பண்ணிசைக்கிறது. இக்கருத்துக்களை அவர் எளிமை யும், தெளிவும் வாய்ந்த மொழியின் மூலம், கற்பவர் உள்ளத்தைத் தொடும் வகையில் கவிதைகளின் வாயிலாக எடுத்துரைக்கிறார். அவருடைய கவிதைகளுள் சிறந்த தாகக் கருதப்பெறும் பாடல் மனிதனின் சிறுமையைப் பற்றியதாகும்.

நம்முடைய வாழ்நாள்களோ மிகச் சில; அதில் தோன்றும் துன்பங்களோ மிகப்பல ; நம் ஆற்றலோ சிறிது ; செய்யும் தவறுகளோ மிகப்பெரிது; இறப்பு என்பவனே நம்முடைய பகைவனுவான்; அவனிடமிருந்து நாம் யாரும் தப்பமுடியாது; நம்முடைய வாழ்க்கைப் பயணத்தின் எல்லையாக இருப்பது இறப்பு ; அதை நோக்கி நல்லவரும் தீயவரும் ஒன்றுபோல வந்து சேருகின்றனர். நமக்கு அழியா அமைதியைத் தருவது எது ? நாம் மணமகளின் மடியில் உறங்குவதன்றோ ?

(கிரேக். பா. தொ. பக். 32)

என்ற இக்கருத்துக்களைத் தரும் பாடல் மனித வாழ்க்கையின் நிலைபேறற்ற தன்மையைப் பரிவுடன் நம் உள்ளத்தில் பதியவைக்கிறது

**சோலனின் கவிதைகள்**

கிரேக்க நாட்டின் பழம்பெரும் சட்டவியல் அறிஞர் சோலன். அவர் சிறந்த புலவராகவும் விளங்கினுர். அவர் பாடிய பாடல்கள் பல. அவை அரசியல் பாடல்கள், தன்னுணர்ச்சிப் பாடல்கள், அறநெறிப்பாடல்கள் என்று பலவகைப்படும். இங்கு நாம் அவருடைய அறநெறிப் பாடல்களின் அமைப்பையும் அழகையும் காண்போம். அவர் வாழ்ந்த காலம் கி. மு. ஆரும் நூற்ருண்டின் தொடக்கம் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

அவருடைய பாடலில் ஒன்று (எ. 27) மனிதனின் வாழ் நாள்களைப்பற்றி விளக்குகிறது. அவர் மனிதனின் வாழ் நாளை, ஏழு ஆண்டுகளைக்கொண்ட பத்துப்பருவங்களாகப் பிரித்து அவை ஒவ்வொன்றின் சீரையும் சிறப்பையும் சிந்தைக்கினிய சொற்களால் எடுத்தியம்புகிருர். மற்ருெரு பாடல் (எ. 13) நீண்ட நெடும் பாட்டாக இருக்கிறது. அதில் ‘வாழ்க்கைத் தத்துவத்தை’ யாவரும் எளிதில் புரிந்துகொள்ளுமாறு சோலன் விளக்கியுள்ளார்.

அப்பாடல் கலைத்தெய்வங்களின் (Muses) வணக்கத் தோடு தொடங்குகிறது. தனக்குப் பெருமையும் புகழும், செல்வமும் செல்வாக்கும் பெருக அருள்புரியுமாறு சோலன் அத்தெய்வங்களை வேண்டுகின்ருர். இவ்வடிப் படையில் அவருடைய சிந்தனையில் பலதிறக் கருத்துக்கள் தோன்றுகின்றன. அநீதியும் ஆணவமும் சீயஸினுல் (Zeus) இறுதியில் அழிக்கப்பெறும் என்று அவர் கூறு

கிறார். இதையடுத்து, ''மனிதன் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையினாலேயே வாழுகின்றான்; நோய்வாய்ப் பட்டவர்கள் விரைவில் நோய் நீங்கிவிடும் என்ற நம்பிக்கை யார்வத்தோடு வாழுகின்றனர்; ஏழை மக்கள் எதிர் காலத்தில் 'குபேரனாகிவிடுவோம்' என்ற விருப்பார்வ முடன் நாளைத் தள்ளுகின்றனர்'' என்ற பொருள் பொதிந்த கருத்தினை அவர் மிகுந்த நம்பிக்கையுடன் எடுத்தியம்பு கிறார்.

பின்னர், மக்கள் தங்கள் வயிற்றுப் பிழைப்பிற்காகச் செய்துவரும் தொழில்கள்பற்றிய பட்டியல் தரப் பெறுகிறது. அவற்றுள் கப்பல் வாணிகர், உழவர், கைத்தொழில் வினைஞர், கவிஞர், மெய்யுணர்வாளர், மருத்துவர் ஆகியோரைப் பற்றிச் சிறப்புமிக்க சித்திரங்களைச் சிறிய அளவில் அவர் வரைந்துள்ளார்:

> மனிதனின் செயல்முறைகள் பலதிறப்பட்டன. வீடு நிறைய ஆதாயத்தைக் கொண்டு சென்று குவிக்க வேண்டுமென்று கருதுகிறான் ஒருவன். மீனினத்தோடு போட்டியிடும் வகையில் கப்பலின்மூலம் கடலில் ஓயாது அலைந்துதிரிந்து அவன் அல்லற்படுகிறான்; கொடிய காற்றால் அவன் அலைக்கழிக்கப் படுகிறான். எனினும், அவன் தன் உயிரைப்பற்றிக் கவலைப் படுவதே இல்லை! மற்றொருவன் 'நீரோடை நிலங்கிழிக்க நெடு மரங்கள் நிறைந்த பெருங்காட்டை'க் கெடுத்துக் கழனியாக்கு கிறான். ஆண்டு முழுவதும் நிலத்தை ஆழ உழுது பயிரிடுவ திலேயே அவன் தன்னுடைய உடல், பொருள், ஆவியனைத்தை யும் பயன்படுத்துகிறான். வேறொருவன் அதீனாவின் அருளைப் பெற்றவனாகி விளங்குகிறான். அவன் பல்வேறு பொருள்களைக் கலைத்திறனோடு தன் கைகளால் படைக்கிறான். பிறிதொருவன் கலைத்தெய்வங்களின் பரிசுகளை நன்கு கற்றுத் தேர்ந்தவனாகி, அத்தெய்வங்களின் அழகிய கலைச்செல்வங்களை எவ்வாறு எடுத்தியம்பினால் சிறப்பாக அமையும் என்பதைப்பற்றிச் சிந்திப்பதிலேயே தன் வாழ்நாள் முழுவதையும் கழித்து விடுகிறான்! (கிரே. பா. தொ. பக். 46)

இதையடுத்து, ஊழ்வினையின் பேராற்றலைக்கண்டு சோலன் வியப்புற்றுப் பாடியுள்ள பாடல் நம் கருத்தைக் கவர்கிறது. மனிதனுக்கு இன்பதுன்பங்களைக் கொண்டு வந்து ஊட்டுவது ஊழ்வினையே என்று அவர் குறிப்பிடு கிறார். மேலும்,

என்றும் அழியாது நிலைபெற்று விளங்கும் தெய்வங்கள் நமக்கு அளிக்கும் பரிசுகளை நாம் புறக்கணிக்கக் கூடாது. நாம் தொடங்கும் ஒவ்வொரு செயலுக்கும் இன்னலும் இடையூறும் உண்டாவது இயற்கை. ஒருவன் ஒரு செயலைச் செய்யத் தொடங்கும்பொழுது அதன் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை முன்கூட்டி அறியமுடியாது; அவன் எதிர் பார்த்ததற்கு நேர்மாருக அது முடிந்தாலும் முடியலாம்.
(கிரே. பா. தொ. பக். 47)

என்று அவர் அறிவிக்கிருர். இக்கருத்து,

ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்ருகும்
அன்றியது வரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல். (நல்வழி 27)

என்ற ஔவையாரின் பாட்டை நினைவூட்டுகிறது. ஊழ்வினையின் ஆற்றலை இதே முறையில்,

ஊழிற் பெருவலி யாவுள மற்ருென்று
சூழினுந் தான்முந் துறும். (குறள் 380)

என்று திருவள்ளுவர் மொழிந்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

இவற்றைப் போன்றே சோலனின் வேறுசில பாடல்களும் அறநெறிச் சார்புடையனவாக உள்ளன. அவை 'கையறுநிலைப்பா' யாப்பில் பாடப்பெற்றன.

சைமோனைட்ஸ், சோலன் ஆகிய இருவருடைய பாடல்களும் நீதிக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு இயற்றப் பெற்றுள்ளன. அவை மனித வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவதற்குரிய வழிவகைகளை வகுத்துத் தரும் முறையில் பாடப்பெற்றுள்ளன. எனினும், அவை இலக்கிய நயம் குன்ருத வகையில் இயற்றப்பெற்றுள்ளன. இதனுல்தான், அவற்றை வருணனைப் பாடல்களுள் (Descriptive Poetry) ஒரு வகையான 'பட்டியல் வரிசைப்' பாடல்களாக அறிஞர்கள் போற்றுகின்றனர்.[14]

**பார்மினீடிஸ்** (Parmenides of Elea)

கிரேக்கத்தின் ஈலியாப் பகுதியைச் சேர்ந்தவர் பார்மினீடிஸ். அவர் கி. மு. ஐந்தாம் நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராவர். கி. மு. 450 அளவில் அவரை சாக்கரடிஸ் சந்தித்ததாகக் கூறப்படுகிறது. பார்மினீடிஸிடமிருந்து சாக்கரடிஸ் அரிய பல உண்மைகளை அறிந்து கொண்டாராம். அப்பொழுது பார்மினீடிஸ் மிகவும் முதுமையுற்று இருந்ததாக பிளேட்டோ குறிப்பிடுகிருர். இச்சந்திப்பு நடைபெற்றதோ? இல்லையோ? அதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. ஆனுல், இந்நிகழ்ச்சியைப் பற்றிய செய்தியால் நமக்கு ஓர் உண்மை புலனுகின்றது. பிளேட்டோவைக் கவிஞரும், மெய்யுணர்வாளருமான பார்மினீடிஸ் பெரிதும் கவர்ந்துள்ளார் என்பது மறுக்க முடியாத உண்மை.

அக்காலத்திய வழக்கப்படி தம்முடைய தத்துவக் கொள்கைகளைச் செய்யுள் மூலமாக அவர் வெளியிட்டார் என்பர் ஒரு சில ஆராய்ச்சியாளர். ஆனுல், இது தவருன கருத்து என்கிருர் பர்னெட்.[15] மற்ற தத்துவ ஞானிகள் உரை நடையில் தத்தம் கருத்துக்களை வெளியிட்டனர். ஆனுல், பார்மினீடிஸ் பாட்டிலே தம் கொள்கைகளைக் கோயில் கொள்ளச் செய்தார் என்பதுதான் உண்மை என்று அவர் குறிப்பிடுகிருர். பிறவிக் கவிஞராக விளங்கிய பார்மினீடிஸ், பைத்தகோரசின் கொள்கைகளால் கவரப்பட்டு, மெய்ப்பொருள் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அதன் விளைவாக அவர் 'இயற்கை' என்ற பெயரில் சிறந்ததொரு கவிதை நூலைப் படைத்திருக்கிருர். அதை இருபெரும் பகுதிகளாக அவர் பிரித்திருக்கிருர். முதற்பகுதி 'உண்மையின் நெறி' (The Way of Truth) என்றும், இரண்டாம்பகுதி 'கருத்தின் நெறி' (The Way of Opinion) என்றும் பெயரிடப்பெற்றுள்ளன. முதற் பகுதியைச் சிறப்புமிக்க இலக்கியமாக அறிஞர்கள் போற்றுகின்றனர்.

அப்பகுதியில் அவர் புதியதொரு தத்துவக் கோட்பாட்டைத் தெளிவுறுத்துகிருர். 'புலன்களினுல் உணரப் படுவன அனைத்தும் பொய்யானவை. எனவே, புலன்களை

நம்மை மயக்கும் கள்ளர்கள் எனலாம். புலன்களினுல் உணரப்படும் பொருள்கள் அனைத்தும் மாயை. உலகில் ஒரேவொரு உண்மைப் பொருள்தான் இருக்கிறது. அதை ஆன்மா என்று அறிஞர் கூறுகின்றனர். அது வரம்பற்றது; பகுக்க முடியாதது' என்று பார்மினீடிஸ் குறிப்பிடுகிருர்.

'எல்லாம் மாறிக்கொண்டே இருக்கின்றன' என்று ஹெராகிளிட்டஸ் கூறினுர். பார்மினீஸோ,

> கவர்ச்சிமிகு புலன்காட்சிக்கு அப்பால் என்றும் மாருத நிலைபேருன உண்மைப் பொருளாகிய அகண்டத்துவம்தான் இருக்கிறது. அது தோற்றமும் முடிவுமற்றது; திரிபும் இல்லாதது; திரிபுகளாக நமக்குத் தோன்றுவன வெல்லாம் புலன்களின் குறும்புகளால் எழுந்தனவே அல்லாமல் வேறில்லை. அது வெறும் பாழிலிருந்து தோன்றவில்லை; பாழி லிருந்து தோன்றுகிறது என்று சொன்னுல் அது பொருந்தாது. ஒரு பொருளிலிருந்து தோன்றினது என்று சொன்னுல், தோன்றிய பொருள் மறைந்துவிடும். அது தான் என்றும் இருக்கிறது. மற்றவையெல்லாம் வெறும் பொய்—மாயை. காலம், இடம் என்ற வேறுபாடு அங்குக் கிடையாது. அவை யெல்லாம் வெறும் தோற்றங்களே.

> எங்கே தொடங்கினுல் என்ன? எல்லாம் எனக்கு ஒன்றே; மீண்டும் அந்த இடத்திற்கே நான் வருவேன். அது ஒரு வட்டம் போலிருக்கிறது. (கிரே. பா. தொ. பக். 56)

என்று அவர் சொல்லுகிருர். மேலும், அவர் காணப் படும் பொருளும் காண்போனும் ஒன்று என்கிருர். கருத்தும் கருதப்படும் பொருளும் ஒன்றுதான். மேலும் இறந்து போனது (கடந்த காலத்தில் நிகழ்ந்தது) ஒரு வனுடைய நினைவிற்கு வருமாளுல், அது இறந்ததாகாது என்று பார்மினீடிஸ் வாதாடுகிருர். இதைப் போன்ற கருத்துக்களைத் தம் பாடலின் மூலம் அவர் எடுத்தியம்பு கிருர். இந்தியத் தத்துவ ஞானத்தில், ஆதிசங்கரருடைய 'மாயாவாதத்தின்' சாயலை, அவருக்கு ஆயிரம் ஆண்டு களுக்கு முற்பட்ட பார்மினீடிஸின் தத்துவத்தில் நாம் காணுகின்ருேம்.

அவருடைய கவிதையில் இலக்கிய நயத்தைக் காண் பது அரிதாக இருக்கிறது. பிழையற்ற செய்யுளில் அவர் மிகச் சிறந்ததும் உயர்ந்ததுமாகிய மெய்ப்பொருள்

கருத்துக்களை வடித்துத் தந்திருக்கிறார். இதனால், அவரை நாம் 'ஒரு தத்துவஞானி' என்று போற்றலாமே யொழிய, 'நீதி இலக்கியம் இயற்றிய கவிஞர்' என்று பாராட்டுவதற்கு இயலாது. எனினும், கிரேக்க இலக்கியத்தைச் சென்ற நூற்றாண்டில் ஆராய்ந்த திறனாய்வாளர்கள் அவருடைய 'இயற்கை' என்ற நூலை, நீதி இலக்கியமாகப் போற்றியிருப்பது சிந்திக்கத்தக்க வொன்றாகும். எளிதில் நினைவிலே இருத்துவதற்கு ஏற்ற முறையிலும், காதுகளுக்குக் கவர்ச்சியூட்டும் வகையிலும் அவர் கவிதையின் மூலம் சிறந்த கருத்துக்களை எடுத்துரைத்துள்ளார் என்பதைத் தவிர, நாம் அவர் நூலைப்பற்றி வேறொன்றும் கூறுவதற்கில்லை. அந்நூலின் உள்ளுறை அறநெறியை அடிப்படையாகக் கொண்டது அன்று. மெய்ப்பொருளைக் காண்பதற்குரிய அறிவாராய்ச்சி (Epistemology) நூலாக அவருடைய 'இயற்கை' நமக்குக் காட்சி அளிக்கிறது.

### பிற்காலத்தில் தோன்றிய நீதி நூல்கள்

ஆத்தென்சின் நலிவிற்குப் பிறகு, மாசிடோனியாவை ஆட்சிபுரிந்த கிரேக்க மன்னன் பிலிப்ஸும், அவருடைய மகனை மாவீரன் அலக்சாண்டரும் கிரேக்கக் கலைகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தனர். இக்காலத்தையொட்டி இலக்கியங்கள் பல படைக்கப் பெற்றன. அவற்றைப் படைத்த கலைஞர்கள் சிறந்த அறிவாளிகள். அவர்கள் 'அறிவினை அறிவிற்காகவே' உயர்ந்த பயன் மதிப்புடையதாகக் கருதிப் போற்றினர். அதனால், அவர்கள் அறிவு நலம் வாய்ந்த கருத்துக்களைக் கவிதையின் மூலம், மக்கள் சமுதாயத்திற்குப் பயன்படுமாறு செய்வதற்கு முன் வந்தனர். அரிஸ்டாட்டில், தம்முடைய 'பாவியலில்' வேண்டுமென்றே புறக்கணித்து விட்டுச் சென்ற ஹெஸியட்டின் 'வேலையும் நாள்களும்' என்ற இலக்கியத்திலிருந்து அரிய பல கருத்துக்களை எடுத்துக் கையாண்டதோடு, ஹோமருக்குச் சரிநிகர் சமானமாகவே ஹெஸியட்டை அவர்கள் போற்றிப் புகழ்ந்தனர்.

### இயற்காட்சிகள் (Phenomena)

அரேதஸ் (Aratus) என்ற கவி சிசீலியா என்ற நகரைச் சேர்ந்தவராவார். அவர் ஆத்தென்சிற்குச்

சென்று கல்வி கற்றார். அங்கு, அவர் ஸ்டாயிக்கு (Stoic) தத்துவஞானத்தின் தலைவரான ஸெனோ (Zeno) என்பவரின் சீடரானார். அதனால் அகத்திலும் புறத்திலும் கடுமையான தன்னடக்கமும், இன்பதுன்ப நடுநிலைக்கோட்பாட்டையும் அவர் கடைப்பிடிக்கலானார். பின்னர் மாசிடோனிய அரசனான ஆந்திகோனஸ் கோனதஸ் (Antigonus Gonatas) என்பவரின் அவைக்களப்புலவராக அரேதஸ் விளங்கினார். அவ்வரசரின் வேண்டுகோளுக்கு இணங்கி 'இயற்காட்சிகள்' என்ற நூலை கி. மு. 277இல் அவர் இயற்றினார்.

'இயற் காட்சிகள்' என்ற நீதிநூல், வானநூல் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டதாகும். அவர் தம்முடைய பொருளின் சிறப்பினை நன்குணர்ந்திருந்தார்; அதன் முக்கியத்துவத்தையும் அவர் அறிந்திருந்தார். அவர் அகத்தெழுந்த உணர்ச்சிப் பெருக்கு அந்நூலின் வெற்றிக்குக் காரணமாக அமைந்தது.

சிறந்த கவிதையின் மூலம் பரந்துபட்ட மக்கள் கூட்டத்திற்கு விண்மீன்கள் நிறைந்த வானத்தின் அருமை பெருமைகளை அறிமுகப்படுத்திவைக்கவேண்டும் என்பதே அவருடைய நோக்கமாகும். இந்நோக்கத்தை நிறைவேற்றுவதில் அவர் சிறந்த முறையில் வெற்றியும் கண்டார்.

அதனுடைய முன்னுரை உண்மையான இலக்கிய நயம் பொருந்தியதாகக் காணப்பெறுகிறது. ஸ்டாயிக்கு கருத்துக்களைப் பின்பற்றும் வகையில், ஆசிரியர் சீயஸ் (Zeus)ஸை நிலைபேறான உலகவமைப்பின் திருவுருவமாகப் போற்றுகிறார். இத்துதிப்பாடலில் பக்திமணம் கமழ்கிறது. பிறகு துருவ நட்சத்திரத்தின் அமைப்பினையும், அழகையும் அரேதஸ் அழகுற வருணிக்கிறார். கடலோடிகளுக்கும், உழவர்களுக்கும் முக்கியமான நட்சத்திரங்களின் சிறப்பை அவர் எடுத்துரைக்கிறார். அடுத்து விண்மீன்கள் பலவற்றின் இருப்பினையும் ஏற்றத்தையும் முறைப்படுத்திக் கவி தெளிவுறுத்துகிறார். விண்மீன்களைப் பற்றிய இவ்விளக்கத்தில் புராணக்கதைகளும் கற்பனைக் கதைகளும் மிக அருகிய வழக்காகவே கையாளப் பெற்றுள்ளன. நீதி தேவதையாகிய டைக்கு (Dike)ப்

பற்றிய செய்திகள் மட்டுமே மிக விளக்கமாகப் பேசப் பெறுகின்றன. அத்தெய்வம் வெண்கல ஊழிக்காலத்தில் மண்ணுலகைக் கைவிட்டு, வானில் கன்னிராசியின் தலைவியாகத் தலைமைப்பதவி ஏற்கச் சென்றுவிட்டாள். இக் கதையின் மூலத்தை, ஆசிரியர் ஹெஸியட்டிடமிருந்து எடுத்துக்கொண்டார். அவர் அதை மாற்றியும், திருத்தியும் தம்முடைய கற்பனைத்திறத்தால் சுவைமிக்கதாகச் செய்து விட்டார்.

> வடக்குராசி விண்மீன் குழுவின் அடிகளுக்கு அடியில், அக் கன்னிப்பெண் ஒளிவிட்டு பிரகாசிக்கும் தானியக்கதிர் ஒன்றைக் கையிலேந்தியவண்ணம் நின்று கொண்டிருக்கிறாள். அவள் விண்ணகத்தின் பழைய தந்தையாகிய அஸ்டிரேயசுக் (Astraeus)குப் பிறந்தவளோ? அவளுடைய அருள்மட்டும் நம்மீது பதியட்டும். (கிரே. பா. தொ. பக். 93)

என்று கூறும் ஆசிரியர், அவளைப்பற்றிய கதையொன்றையும் வரைந்துள்ளார்:

> ஒரு காலத்தில் நிலவுலகம் அவளுடைய வீடாக இருந்தது. மனித சமுதாயத்தோடு அவள் கலந்து பழகினாள். அவள் என்றுமே மனிதர்களின் கூட்டத்தோடும், மகளிரின் குழுக்களோடும் கலந்து பழகத் தயங்கியது இல்லை. ஆனால், அவள் இங்கேயே என்றும் நிலைபெற்று வாழ்பவளைப் போல அவர்களுக்குத் தலைமையேற்றாள். ‘நீதி’ என்ற பெயரைத் தனக்கேயுரிய பெயராக அவள் பூண்டாள். அறிவுநலம் கனிந்த முதியோர்களைப் பயபக்தி மிகுந்த ஆட்சி மன்றங்களுக்கு அல்லது அகன்ற சந்தைக்கடைப் பகுதிகளுக்கு வருமாறு அவள் அழைப்பு விடுத்தாள். சட்டத்தின் முன்னால் எல்லாரும் சமம் என்ற கருத்தை அவள் இனிய இசையோடு பாடி மெய் சிலிர்க்கச் செய்தாள்.[16] (கிரே. பா. தொ. பக். 94)

என்பனவற்றைப் போன்ற செய்திகள் நமக்குப் புதுமையாகவும் வியப்பூட்டுவனவாகவும் உள்ளன. இவ்வாறு வானவெளியின் நட்சத்திரக் குழுக்கள் பலவற்றின் இயல்பையும், இருப்பையும், இயக்கத்தையும் அரேதஸ் மிகநயமாகவும் விரிவாகவும் விளக்குகிறார்.

அவருடைய பாடலின் செம்பாதிக்கு மேற்பட்ட பகுதியை நிலையான விண்மீன் குழுக்களைப் பற்றிய வருணனை கவர்ந்துவிடுகிறது. கோள்களைப் பற்றிய

செய்திகள் ஒருசில செய்யுள்களில் முடிந்து விடுகின்றன. அதையடுத்து இராசி மண்டலத்தின் சின்னங்களும், விண் மீன் குழுக்களின் தோற்றமும் மறைவும் பற்றிய செய்திகள் விரிவாகப் பேசப்பெறுகின்றன. பின்னர் எஞ்சியிருக் கின்ற மூன்ருவது பகுதியில், வானிலையில் உண்டாகும் மாற்றங்களைத் தெரிவிக்கும் அறிகுறிகளைப் பற்றிய செய்திகள் பாடப்பெற்றுள்ளன.

இங்கு விண்மீன்களின் நிலைகளைப்பற்றிக் கவிஞர் கூறுவதோடு அமையவில்லை. சந்திரனின் ஒளிவட்டம், மேகங்கள் உருவாகும் வகை, மறைகின்ற சூரியனின் கதிர்கள் சூழ்ந்து பரவுதல் போன்ற பல செய்திகளை அவர் விளக்கியுள்ளார். ஆனல், அவற்ருேடு பறவை, விலங்குகள் முதலியவற்றின் வாழ்க்கையிலிருந்தும், மனிதன் பயன்படுத்தும் கருவியிலிருந்தும் வானிலையின் பல்வேறு இயல்புகளைக் கண்டறியலாம் என்பதை அவர் சுட்டிக் காட்டுகிருர். மேலும், மரங்களும் செடிகளும், விளக்கினுடைய ஒளிச்சுடர்களும், நிலக்கரியின் நெருப்பும் அரேதசுக்கு வானிலையினை அறிவிக்கும் அறிகுறிகளாகத் தோன்றுகின்றன. 'இச்செய்திகளை எதற்காக இப்பாடலில் சேர்த்தார்?' என்ற எண்ணம் நமக்கு எழலாம். உழவர் களுக்கும் கடலோடிகளுக்கும் தேவையான செய்திகளை அறிவுறுத்தும் கவிஞர், இச்செய்திகளும் அவர்களுக்குத் தெரிந்திருத்தல் நல்லது என்று கருதிப் பிற்சேர்க்கையாக இவற்றை மூலநூலோடு சேர்த்தாரா என்று கருதத் தோன்றுகிறது.

இப்பாடலை அக்காலத்திய கிரேக்கப் புலவர்கள் பெரிதும் பாராட்டிப் போற்றியுள்ளனர். காலிமாக்கஸ் (Calimachus) என்ற புலவன்,

> நடையிலும் பாட்டிலும் நாவலன் ஹெஸியட்டை எட்டி பிடிக்க விரும்பிய அரேதஸ், அழகுற விண்ணக மீன்களின் வியப்புறு இயல்பினை, பண்ணமை பாடலால் பாங்குறப் பாடி ஞன். ஓங்கு புகழ்ப் பாணன் ஹோமரை விட்டுப் பாங்குடன் பாவலர் போற்றும் ஹெஸியட்டின் நயமிகு துணையை நாடினன் நம் கவிஞன். இன்புறு கவிகளும், ஏற்றமிகு பழமொழிகளும்

கனிவுறு விண்ணகக் கவிதையாம் 'இயற்காட்சி', அல்லும் பகலும் அயராது கண்ட அனுபவ உண்மைகளின் சார மன்ருே?[17]

என்று புகழ்மாலை சூட்டியுள்ளான். லியோனிடஸ் (Leonidas) என்ற மற்ருெரு புலவனே,

சீயஸ் விண்மீன்களுக்குப் பேரொளி கொடுத்துப் பெருமைப் படுத்திஞன். நம் அரேதஸ் அவற்றிற்குப் புகழொளி கொடுத்துப் பாமாலை சூட்டிஞன். எனவே, சீயஸிற்கு அடுத்த சிறப்பினை நம் கவிஞன் உலகம் வியக்கப் பெற்றுவிட்டான்[18]

என்று குறிப்பிடுகிருன். இந்நூலை அடிப்படையாகக் கொண்டு கி. மு. இரண்டாம் நூற்ருண்டில் ஹிப்பார்க்கஸ் (Hipparchus) என்பவர் சிறந்ததொரு வான நூலை எழுதியுள்ளார். இந்நூல் அரேதஸின் கவிதையை ஆராய்ச்சிக் கண்கொண்டு விளக்கியுரைப்பதாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

'இயற்காட்சி' நூலில் நீதிக்கருத்துக்கள் என்று சொல்லத்தக்கவை யாவை என்பதை நாம் ஆராய்ந்தறிய வேண்டியவர்களாக இருக்கிருேம். விண்வெளியில் இயங்கும் விண்மீன்களும், கோள்களும் எவ்வாறு மனிதனுடைய வாழ்க்கையை—சிறப்பாகக் கிரேக்க நாட்டுக் கடலோடிகளின் வாழ்க்கையையும், உழவர்களின் வாழ்க்கையையும் பாதிக்கின்றன என்பதை ஆசிரியர் முதலில் அறிவுறுத்துகிருர். பின்னர், அவற்றிலிருந்து அவர்கள் உய்த்துணர வேண்டிய உண்மைகளை அவர் சுட்டிக் காட்டுகிருர். அவற்றை அன்ருட வாழ்க்கையில் கடைப்பிடிப்பதன் மூலம் வாழ்க்கையின் முழுப்பயனையும் அடைய முடியும் என்று அவர் கூறுகிருர். இவ்வாறு கிரேக்க மக்களுள் ஒரு பகுதியினரான கடலோடிகளுக்கும், உழவர்களுக்கும் வாழ்க்கைக்குத் தேவையான அறிவுரைகளைக் கூறுவதால் இந்நூலைக் கிரேக்கர்கள் 'நீதி நூலாகக்' கருதினர் போலும். இன்றைய இருபதாம் நூற்ருண்டுக் கண்ணேேட்டத்தில் இந்நூலைப் பார்க்கின்றபொழுது அது இன்பமூட்டும் பண்புகள் சிலவற்ருேடு அறிவுறுத்தும் பண்புகள் பலவற்றையும் தன்னகத்தே கொண்ட ஒரு செய்யுள் நூலாகக் காட்சி தருகிறது.

***மருத்துவ நூல்கள்***

சிஸரோ போன்ற பிற்கால அறிஞர்களால் குறிப்பிடப் பெறும் மற்ரெரு நீதிநூல் ஆசிரியர் நிகாண்டர் (Nicander) என்பவராவர். அவரியற்றிய நீதி நூல்கள் பல. அவற்றுள் இரண்டேஇப்பொழுது கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று 'தேரியகா' (Theriaca) என்பது; மற்ரென்று 'அலக்ஸி பார்மைக்கா' என்பதாகும்.

'தேரியகா' என்ற நூல், சற்றேறக்குறைய ஆயிரம் பாடல்களில், விஷவிலங்குகளின் கடிகளுக்குரிய முறிப்பு மருந்துகளைப் பற்றிப் பேசுகிறது. இரண்டாவதாகக் கூறப்பட்ட நூலில் நஞ்சு கலந்த உணவை உண்டால், அந்நஞ்சினை முறிப்பதற்குரிய மருந்துகள் குறிப்பிடப்பெற் றுள்ளன. இவற்றைத் தவிர அந்நூல்களில் வேறெந்தச் செய்திகளும் இடம்பெறவில்லை. இலக்கியப் பண்புகள் மருந்துக்குக்கூட அந்நூல்களில் காணப்படவில்லை. தமிழி லுள்ள தன்வந்திரி என்பவர் இயற்றிய 'மாட்டு வாகடம்' என்ற நூலைப்போன்று அவை உள்ளன. கிரேக்கக் கவிஞர் களுள்ளே, நிகாண்டரைப் போன்ற கவித்திறனற்ற கவிஞர்கள் வேறு யாருமே இருந்திருக்க முடியாது என் பது ஆராய்ச்சியாளர் முடிவாகும். "இக்கவியிடத்தில், ஒரு கவிஞருக்கு இருக்கவேண்டிய பண்புகள் ஒன்று கூடக் காணப்பெறவில்லை ஆனல், இதற்கு நேர்மாருக ஒரு கவிஞரிடத்தில் இருக்கக்கூடாத பண்புகள்—பலதிறப் பட்ட குறைகள் அவரிடம் காணப்படுகின்றன. அவருடைய கவிதை எளிதில் புரியாததாகவும், சாரமற்றதாகவும், போலியாகவும், மனச்சோர்வு ஊட்டுவதாகவும் இருக் கிறது. இவற்றைவிட இழிவானது அவர் எடுத்துக்கொண்ட பொருளாகும். படிப்பவருக்கு எப்படி அருவருப்பையும் வெறுப்பையும் உண்டாக்குகிறதோ, அதைப்போன்றே அதை இயற்றிய கவிஞருக்கும் தாம் எடுத்துக்கொண்ட பொருளிடத்து உண்மையான ஈடுபாடு இருந்திருக்க முடியாதென்று தோன்றுகிறது"[19] என்பதனல் நாம்இவ் வுண்மையை உணரலாம்.

கிரேக்க இலக்கியத்தை வளப்பமுறச் செய்த அறிவு ஊற்றும், உணர்ச்சி ஊற்றும் வற்றத் தொடங்கிய காலத் தில் நிகாண்டர் வாழ்ந்தார். அவருக்கு முன்பே கிரேக்

கத்தின் சிறப்புமிக்க புலவர்கள் எல்லாரும் மறைந்து விட்டனர். மாண்புமிகு கிரேக்கத்தின் பொற்கால வாழ்க் கையினைக் காரிருள் சூழ்ந்த அந்திப்பொழுதில் அக்கவிஞன் தோன்றினன். அதனால், அவன் எளிமை, உண்மை, தெளிவு, அழகுணர்ச்சி என்ற இலக்கியப் பண்புகளை மறந்து, போலியாக வெறும் ஆரவாரமிக்க கவிதை நூல் களைப் படைத்தான். அவற்றில் கலையழகோ, கருத்துச் செறிவோ, இலக்கிய இன்பமோ சிறிதளவும் இடம்பெற வில்லை. மேலும், அவை மக்கள் வாழ்க்கையோடு தொடர் பற்றனவாகவும் போய்விட்டன. எனினும், அவற்றை 'நீதிநூல்கள்' என்று பிற்காலத்தினர் போற்றியமை நமக்கு வியப்பூட்டுகிறது.

**கிரேக்க இலக்கியத்தில் நீதிநூல்கள் பெறுமிடம்**

கவின்மிகு கருத்துக்களையும், ஏற்றமிகு எண்ணங்களை யும் மூலப்பொருள்களாகக் கொண்டே கவிதைகள்இயற் றப்பெறவேண்டும் என்ற எண்ணம் உடையவர்களாகக் கிரேக்கர்கள் வாழ்ந்தனர். அழகிய பொருள்களில் இருந்து கிடைக்கும் புலனுகர் இன்பத்தோடு, திட்டவட்டமான அறவியல் பண்பையும், போக்கையும் எல்லாக் கலை களிடத்தும்—சிறப்பாகக் கவிதைக் கலையிடத்தும்—அவர் கள் உள்ளத்தால் உணர்ந்து, பயன்மதிப்பு வாய்ந்ததாகக் கருதிப் போற்றினர். கவிஞர்களுடைய படைப்புக்கள் எல்லாவற்றையும், சிறப்பாக ஹோமரின் காப்பியங்களை அவர்கள் ஒழுக்கவியல் ஆராய்ச்சி நூல்களாகக் கொண்ட னர். அறநெறிக் கருத்துக்களைக் கருத்துப்பொருள் வள மிக்க நீதிகளாகக் கேட்டறிந்து கொள்ளுவதற்கு மாற்றாக, அவர்கள் வாழ்க்கையைப் பருப்பொருள் சார்புடைய தாகப் படைத்துக் காட்டுவதன் மூலம் அவற்றைக் கண் டறிய முயன்றனர்.

கிரேக்கருடைய கல்வித்திட்டத்தில் கவிதை முதன்மை யிடம் பெற்றிருந்தது. அவர்களுடைய நடைமுறைச் செயல்களுக்கு வழிகாட்டியாகவும், விளக்கவுரையாகவும் கவிதை அமைந்திருந்தது; அவர்களுடைய துருவித் துருவி ஆராயும் சிந்தனைக்கு உற்சாகமூட்டும் அருமருந்தாகக் கவிதைப் பயன்பட்டது. சிறு பிள்ளைப்பருவம் முதல்

இன்பம் நுகர்வதற்கு மட்டும் அல்லாமல், எடுத்துக் காட்டவும், எச்சரிக்கவும், உற்சாகமூட்டவும் இனிமை நிறைந்த இலக்கியக் கடலில் அவர்கள் மூழ்கித் திளைத் தனர். தேசிய காப்பியங்களே அவர்களுடைய வேதங் களாக இருந்தன. நற்பேறு உண்டாகின்ற பொழுதும், குடும்பச் சிக்கல்களிலும், நாட்டு ஆட்சியில் உண்டாகும் பிரச்சினைகளிலும் தாங்கள் எடுக்கும் முடிவிற்குத் தூண்டு கோலாக அல்லது வற்புறுத்தி யுரைப்பதற்கு ஆதாரமாக இலக்கியத்தின் உதவியை அவர்கள் நாடினர். இத்தகைய முக்கியத்துவத்தைக் கிரேக்கர்களுடைய வாழ்க்கையில் இலக்கியம் பெற்றிருந்தது.

அவர்கள் இலக்கியத்தை அனுபவ அறிவின் களஞ் சியமாகக் கருதினர். இதனால், அதனுடைய பயன் மதிப்பை மட்டும் கணித்தறியும் தூய அறவியல் முடிவுகளை அவர்கள் எளிதில் அடைய முடிந்தது. இத்தகைய நிலைமாறுபாட்டுக் காலத்தைத் தொடங்கிவைத்தவர் பிளேட்டோ யென்றால், அது தவறாகாது. ஏழையாக இருப் பவன் நல்லவனாகவும், நேர்மையாளனாகவும் இருப்பா னாகில், அவனே மகிழ்ச்சியுடன் வாழும் மனிதனாவான்; அவன் தீயவனாகவும் நேர்மையற்றவனாகவும் இருப்பானா னால், அவனைப்போன்று துன்பப்படுகிறவர்கள் உலகில் வேறு யாரும் இருக்கமுடியாது இத்தகைய அறநெறிக் கருத்துக்களை மக்களுக்கு எடுத்துரைக்கும் பணியைத் தலை யாய கடமையாகக் கவிஞர்கள் கொள்ளவேண்டும்[20] என்று பிளேட்டோ கவிஞர்களுக்கு அறிவுரை கூறி யுள்ளமை இங்குக் கருதத்தக்கது. இம்முறையில் நீதிகளை அறிவுறுத்துவது நையாண்டி செய்வதாகமுடியும். எனி னும், இது கிரேக்க மக்களின் இயல்பான நோக்கமாக இருந்தது.

ஒரு கவிதையின் சீரும், சிறப்பும் அதனுடைய நுதல் பொருளின் வரம்பையும், அது எடுத்துரைக்கும் ஆழமான அறநெறிக் கருத்தினையும் அடிப்படையாகக் கொண்டுள் ளன. ஆனால், இன்றைய திறனாய்வாளர்களைப் போன்று அதனுடைய வடிவத்தின் கலைநுகர்ச்சி அழகினை மட்டும் அளவு கோலாகக்கொண்டு அவற்றை அவர்கள் மதிப்

பிடவில்லை. ஒருவன் நல்ல கவிஞனாக விளங்கவேண்டும் என்றால், அவன் முதலில் நல்ல மனிதனாக இருக்க வேண்டும் என்று கிரேக்கர்கள் நம்பினர். அவர்கள் கவிஞரை வெறும் கலைஞராக மட்டும் கருதாது, வாழ்க்கையின் உட்பொருளை விரித்துரைக்கும் அறவோராகவும் கருதினர்.

இதனால், நீதி நூல்களைத் தனியாகப் பிரித்துப் போற்றாமல் இன்புறுத்துவதோடு அறிவுறுத்தும் கடமையைச் செய்வதே இலக்கியம் என்று பொதுப்படையாக அவர்கள் கருதினர். மேலும், ஹோமருக்குத் தரப்பட்ட சிறப்பு, ஹெஸியட் என்ற நீதி இலக்கியக் கவிஞனுக்கும் தரப் பெற்றது. தொன்றுதொட்டு மனித இனத்திற்கு அறிவுரை கூறும் அறவோர்களாகவே கவிஞர்களைக் கிரேக்க மக்கள் கருதினர். இக்காரணத்தாலேயே அவர்களைச் சிறப்பு மிக்கவர்களாக உலகம் போற்றிவருகிறது என்பது அரிஸ்டோபனிஸ்[21] போன்ற அறிஞர்களின் உறுதியான நம்பிக்கையாகும்.

ஆனால், காலப்போக்கில் மெய்ப்பொருள் ஆராய்ச்சி சிறப்புறத் தொடங்கியது. அப்பொழுது, அறநெறிகளைப் போதிக்கும் நீதிநூல்களை இலக்கியத்தின் ஒரு வகை என்று கருதக்கூடிய நிலை உண்டாயிற்று. ஆயினும், அக்காலத்திற்கு முன்பு இயற்றப்பட்ட 'வேலையும் நாள்களும்' என்ற நீதிநூல் சிறந்ததோர் இலக்கியமாகவே போற்றப்பெற்றது.

கி. மு. நான்காம் நூற்றாண்டிற்குப் பின்னர் இயற்றப் பெற்ற இலக்கியங்கள் சிலவற்றை அவர்கள் 'நீதி இலக்கியம்' என்று அழைக்கலாயினர். எனினும், அவற்றை ஏன் நீதி நூல்கள் என்று போற்றினர் என்பதைத் தமிழர்களாகிய நம்மால் புரிந்துகொள்ளுவது கடினமாக இருக்கிறது. கிரேக்க நாட்டில் தோன்றிய இத்தகைய இரண்டொரு நூல்களை நீக்கிவிட்டால், மற்ற நீதிநூல்களை இலக்கியங்களாகக் கருதுவதில் தவறில்லை. அழகுணர்ச்சியும் அறவுணர்ச்சியும் சரிநிகர் சமானமாகப் போற்றப்பட்ட கிரேக்க நாட்டில் நீதி இலக்கியத்திற்குச் சிறந்ததோரிடம் கொடுக்கப்பட்டதில் வியப்பில்லை.

## 3. இலத்தீன்மொழி நீதி இலக்கியம்

### ரோமானியரின் வாழ்வும் வரலாறும்

இரேக்கப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் ரோமாபுரி எழுச்சியுற்றது. அதனுடைய வரலாற்றை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். குடியாட்சிக்காலம், அகஸ் தசின் காலம், பேரரசின்காலம் என்று அவை அழைக்கப் பெறும். இவற்றுள் இரண்டாவது, மூன்ருவது கால கட்டங் களில் இலக்கியங்கள் பல இயற்றப்பெற்றுள்ளன. அவை பயனுடையனவாகவும் நடைமுறைக்கு இயைந்தனவாகவும் இருக்கின்றன. ரோமானியருடைய அறிவாற்றல் போரி லும், அரசியலிலுமே ஈடுபாடு உடையதாக இருந்தது. அவர்கள் அமைதியை நிலைநாட்டுவதிலும், வாணிக வளத் தைப் பெருக்குவதிலும் பெரிதும் கருத்தைச் செலுத்தினர்.

இரேக்கர்கள் கொள்கையளவில் கலைகளையும் அறி வியலையும் போற்றி வளர்ப்பதில் ஈடுபட்டனர். ரோமானி யர்கள் நடைமுறை வாழ்க்கைக்குப் பயன்படும் கலை களையும், அறிவியலையும் வளர்ப்பதில் ஆர்வம் காட்டி னர். ரோமானியருடைய பண்பாடு பலதிறப்பட்ட இனத்தைச் சேர்ந்த மக்களிடமிருந்து முரண்பட்ட பண்பு களைக் கடன் வாங்கியது; அவற்றைத் தனதாக்கிக் கொள்ளுவதன் மூலம், தன்னுடைய தனிச்சிறப்பு வாய்ந்த ஆளுமையை அப்பண்பாடு போற்றிக்காத்துக் கொண்டது. இவ்வாறு இணங்கிச் செல்லும் தன்மையாலும், எதையும் தன்னுடைய இயல்புக்கேற்ப மாற்றியமைத்துக்கொள்ளும் திறமையாலும் ரோமானியருடைய பண்பாடு நடைமுறைக் குகந்தவற்றைப் போற்றிவளர்க்கும் பண்பாடாக மலர்ந் தது. அவர்களுடைய மனப்பான்மை ஸ்டாயிக்கு தத்து வத்திஞல் உருவாக்கப்பட்டது. 'எதையும் தாங்கிக் கொள்ளும் இதயம்', தன்னலத்துறவு, கடுமையான தனி யுரிமைக் கோட்பாடு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு ரோமானியப் பண்பாடு உருவாக்கப்பட்டது. நாளடைவில் ஆடம்பர ஆரவாரம் நிறைந்த சொகுசு மிக்க வாழ்க்கையைப் போற்றும் நிலையை அது அடைந்தது. அதஞல், தானே அது வீழ்ச்சியுறத் தொடங்கியது.

ரோமானியர் முதன் முதலாக ஓர் உலகப் பேரரசை நிறுவமுயன்று, ஓரளவிற்கு அதில் வெற்றியும் கண்டனர். அதனால் பெரும்பேரரசைக் கட்டிக்காக்கும் ஆட்சித் திறனை யும், புதிய குடியேற்றங்களை அமைப்பதில் நல்ல அனு பவத்தையும் அவர்கள் பெற்றனர் பலதிறப்பட்ட இனத்தைச் சேர்ந்த மக்களுக்கு நீதி வழங்குவதில் நாட்டம் செலுத்திய ரோமானியர், 'சட்டத்தின் முன்னால் மக்கள் அனைவரும் சமம்' என்ற கோட்பாட்டிற்கு வித்திட்டனர். அவர்களுடைய அரும்பெரும் முயற்சியால் இன்றைய மேனாட்டுச் சொத்துரிமைச் சட்டங்களும், குற்றவியல் சட் டங்களும் கருக்கொள்ளத் தொடங்கின. அவற்றை அடிப் படையாகக் கொண்டே இன்றைய உலகின் பல்வேறுநாடு களினுடைய சட்டவியல் மரபு உருவாக்கப் பெற்றுள்ளது.

இவ்வாறு ரோமானியப் பேரரசின் பண்பாடு வேற்றுமையில் ஒற்றுமை காணும் நோக்கத்தை அடிப் படையாகக் கொண்டு வளர்ச்சியுற்றது. பல வகைப்பட்ட இனமக்களையும், சூழ்நிலைகளையும், பொருளியல் ஈடு பாட்டையும், சமுதாய வேறுபாடுகளையும் அரசு ஒன்று படுத்தியது. ரோமானியர் இலட்சியவாதிகளாக வாழாமல், நடைமுறைக்குத் தேவையான செயல்களில் ஈடுபடும் செயல் வீரர்களாக விளங்கினர். அதனால், தங்கள் பண் பாட்டு முத்திரையோடுகூடிய படைப்பாற்றல் வாய்ந்த புதிய பாணிகளைக் கலைத்துறைக்கு வழங்க அவர்களால் முடியவில்லை. அவர்களுக்கு முன்பே, கிரேக்கநாடு கட்டடக் கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இலக்கியக்கலை போன்ற பலவகைக் கலைகளுக்குரிய வழியை வகுத்துக் கொடுத்து விட்டது. தென் இத்தாலியில் கிரேக்கருடைய குடியேற்றங் கள் அமைக்கப்பட்டிருந்தன. அங்கிருந்து, ரோமானியர் கிரேக்கக் கலை மரபுகளைக் கற்றனர். ஆனால், இத்தகைய கலைப்பெருஞ் செல்வத்தைத் தங்களுக்குரிய அடிப்படை யாகக்கொண்டு, கிரேக்கரைக்காட்டிலும் வியக்கத்தக்க வகையில் வீறூர்ந்த முழுநிறைவுடன் ரோமானியர் எதை யும் செய்து முடித்தனர். இடைக்காலக் கிறித்துவக் கோயில்கள் எல்லாம் ரோமானிய அரண்மனைகளைப் போன்று விண்ணைத் தீண்டித் தழுவும் முறையில் கட்டப் பட்டன. வெற்றித் தோரணவாயில்களை நேர்த்தியான

சிற்பக்கலைப் பண்புகளுடன் அவர்கள் கட்டினர். அவர்களுடைய மனித வடிவச் சிற்பங்கள் எல்லாம் தன்மை நவிற்சிப் பண்புடையனவாக உள்ளன. ரோமாபுரியின் சுவர் ஓவியங்கள் எழில்மிகு பரந்த இடைவெளியுடையன. அதனுடைய செல்வம் பலவகைத் தொழில்நுட்பக் கலைகளைச் செழித்தோங்கச் செய்தது.

ரோமானியருடைய இலக்கியங்கள் பெரிதும் கிரேக்கருடைய இலக்கிய மரபுகளைப் பார்த்துப் பின்பற்றிய பாணியாகத் தோன்றுகின்றன. ஹோமருடைய இலியத்தை முதன்முதல் ஆண்டிரானிக்கன் (கி. மு. 284-204) என்ற கிரேக்கர் இலத்தீனில் மொழிபெயர்த்தார். இவ்வாறு முதன்முதலாக மாண்புமிகு கற்பனை இலக்கியத்தோடு, ரோமானியர் அறிமுகப்படுத்தி வைக்கப்பெற்றனர். இலத்தீன் இலக்கியத்தின் எதிர்கால வாழ்க்கையையும் வளர்ச்சியையும் குறிப்பாகப் புலப்படுத்தும் வகையில் இத்தொடக்கம் அமைந்தது. இலத்தீன் இலக்கிய மரபிலும், வடிவிலும் கிரேக்க இலக்கியத்தின் சாயல் படிந்திருப்பதை மூலாதாரமாகக் கொண்டே இலத்தீன் இலக்கியம் பையப்பைய வளர்ந்தது.

ரோமாபுரியின் பொற்காலம் என்று போற்றப்பெறுவது பேரரசன் அகஸ்தசின் ஆட்சிக்காலமாகும். அக்காலத்திற்கு முன்பே, இலத்தீன் மொழி இலக்கியம் பலவகையிலும் சிறப்புற்று விளங்கத் தொடங்கியது. அக்காலத்தில் லுக்கிரிஷஸ் (Lucretius) என்ற புலவன் ரோமாபுரியின் இலக்கியவானில் நீலக்கடலிடை எழும் செங்கதிரோனாகத் தோன்றினான். “பெரும்பாலான படைப்புத்துறைகளிலும், கலையியல் சாதனைகளிலும் ரோமானியர் தங்களைக் கிரேக்கர்களுக்குத் தாழ்ந்தவர்களாகக் கருதினர். தத்துவக் கருத்துக்களைச் சிறந்த கவிதையின் மூலம் எடுத்துரைத்த லுக்கிரிஷஸின் துறையில் அவர்கள் நாணமடைய வேண்டியதில்லை. வீறுமிக்க கருத்தும், சிறப்புமிக்க உட்பொருளும் உடையதாய் விளங்குவதோடு நிலையான சொல்லாற்றலும், தத்துவச் சார்பான நுண்மாண் நுழைபுலமும், தருக்க வாதமும், கவித்துவ இன்னோசை நயமும் பொருந்திய லிக்கிரிஷஸின் படைப்பினை விஞ்சத்தக்க அளவில் கிரேக்க

மொழியில் ஓர் இலக்கியமும் இல்லை"[22] என்பது திறனாய்வாளர் ஒருவருடைய கருத்தாகும்.

**பொருள்களின் இயற்கை**

கவிஞர் லுக்கிரிஷஸின் (கி. மு. 95-55) வாழ்க்கை வரலாறு இருள் செறிந்ததாக இருக்கிறது. அவருடைய நூலிலிருந்து நாம் அவரைப்பற்றி அறியும் குறிப்புகளைத் தவிர, வேறொன்றும் அவரைப்பற்றி நமக்குத் தெரியவில்லை. அவரை இழித்துரைக்கும் நோக்கத்தில் கட்டப்பெற்ற கதை ஒன்று வழங்கி வருகிறது. அவர்மீது பொறாமை கொண்ட பெண்ணொருத்தி அவருக்குக் காதல் பித்து ஊட்டும் மருந்தைக் கொடுத்து, மயக்கமுறச் செய்தாள். அதனால் அவர் பைத்தியம்பிடித்து அலைந்துதிரிந்தார்; அக்காலத்தில் இடையிடையேமனத்தெளிவு உண்டாயிற்று; அப்போது, அவர் இச்சிறந்த இலக்கியத்தைப் படைத்தார். அறிவுநலம் கனிந்து சிறந்த இலக்கியப் படைப்புகளைப் படைக்கும் பக்குவமுற்ற காலத்தில், மனக்கோளாறினால் அவர் தற்கொலை செய்துகொண்டார் என்பது கதை. இக்கதையின் மெய்ம்மையை நம்மால் அறுதியிட்டுக் கூற இயலாது. ஆனால், காலப்போக்கில் இக்கதை பல மாற்றங்களைப் பெற்றுப் பல புதிய செய்திகளைக் கொண்டதாய் வளர்ந்துள்ளதை, டெனிசன் (Tennyson) என்ற கவிஞர் லுக்கிரிஷஸைப் போற்றிப் பாடியுள்ள பாட்டால் நாம் அறிகிறோம். டெனிசன், "லுக்கிரிஷஸின் மனைவியே மருந்திட்டுத் தன் கணவனைக் கொன்றுவிட்டாள்" என்று கூறிப் புலம்புகிறார்.

நாம் இக்கதைகளை நம்புவதற்கு இல்லை. அவருடைய அரிய இலக்கியப் படைப்பான **'பொருள்களின் இயற்கை'** என்ற கவிதையிலிருந்து நாம் அறியக்கூடிய செய்திகள் சில. அவர் கல்விநலம் வாய்ந்த மேற்குடி வகுப்பைச் சேர்ந்த ரோமானியராகக் காட்சிதருகிறார். ரோமாபுரியின் சொகுசுமிக்க ஆடம்பர ஆரவார வாழ்க்கையை அவர் நன்கு அனுபவித்துள்ளார். நாட்டின் செல்வச் செழிப்பும் பல்வேறு வசதிகளும் வாய்ந்த அரண்மனைகளையும், வளமனைகளையும் அவற்றின் கவர்ச்சிமிக்க பண்புகளையும், இழிந்த இயல்புகளையும், அவற்றின் சலிப்

பூட்டும் தன்மைகளையும், வெளிப்புறப் பூஞ்சோலை விருந்துகளையும் அவர் நன்கு கண்டு, களித்திருக்கிறார். எனினும், ரோமாபுரியின் உள்நாட்டுப் போர்கள் நடைபெற்ற நெருக்கடியான நாள்களில் அவர் வாழ நேர்ந்தும், தம்மைச் சூழ்ந்துள்ள புறஉலகின் அதிர்ச்சிதரும் செயல்களையும் செய்திகளையும் உணர்ந்தவரைப்போல அவர் காட்டிக் கொள்ளவில்லை. ஓரிடத்தில் தாம் போற்றும் தெய்வத்தை நிலையான அமைதி நீடிக்க அருள்புரியுமாறு அவர் வேண்டுகின்றார் :

> என் நாட்டின் தலைவிதி நிர்ணயிக்கப்படும்
> இத்தகைய நெருக்கடியான நேரத்தில், என்னுடைய
> இந்தப்பணியை அமைதியான மனநிலையோடு
> தொடர்ந்து செய்ய இயலவில்லையே!

என்று அவர் மனம் நொந்து வருந்துகிறார். இவ்வமைதியற்ற சூழ்நிலை அவரைப் பொல்லாத உலகினின்று விலகி வாழுமாறு தூண்டியது; அதிகார வேட்கைக்கும், செல்வத்தைச் சேர்க்கத்தூண்டும் இயல்பூக்கத்திற்கும் எதிராக அவருடைய உள்ளத்தில் பற்றில்லாத மனப்போக்கு வளர்ச்சியுற்றது. எனவே, புற உலகை மறந்து, தமக்கென்று படைத்துக்கொண்ட தம் கனவுலகக் கற்பனை மாளிகையில் அவர் வாழத்தொடங்கினர்.

**பொருள்களின் இயற்கை : அமைப்பும் அழகும்**

அவருடைய பொன்றூப் புகழிற்குக் காரணமாக இருப்பது அவருடைய அரிய இலக்கியப் படைப்பான **'பொருள்களின் இயற்கை'** (De Rerum Natura) என்னும் நூலாகும். இதனை அவர் உரைநடையில் படைத்திருப்பாரானல் இத்தகைய புகழைப் பெற்றிருக்கமாட்டார். பல நூற்றாண்டுகள்வரை அவருடைய கருத்துக்கள் மக்களுடைய உள்ளத்தில் எதிர்ப்புணர்ச்சிகளைத் தூண்டி வந்தன. எனினும், அவருடைய கவிதை மக்களுடைய உள்ளங்களைத் தன்னுடைய அடிமைகளாக்கிக் கொண்டது எனலாம் அந்நூல் ஆறுபகுதிகளைக் கொண்டதாகும். அவை முறையே 1. ரோமானியக் கடவுள்நெறி, 2. அணுக்கொள்கை (Atomic Theory), 3. எபிகூரிய அறநெறிக் கோட்பாடு, 4. பாலுணர்ச்சியும் காதலும்,

5. நாகரிகத்தின் பரிணும வளர்ச்சி, 6. வானநூலும் வானிலேயும் என்ற பொருள்களைப்பற்றிய சிக்கலான கருத்துக்களைத் தெளிவுறுத்துகின்றன. அவர் தம்முடைய தத்துவநெறிக் காவலரான மெம்மியஸ் (Memmius) என்பவருக்கு இந்நூலினைப் படைத்துள்ளார்.

லுக்கிரிஷஸ் இலத்தீன் இலக்கியத்தின் பழைய மரபின் பிரதிநிதியாவார். அவருடைய நூலில் ரோமானிய ருடன் பிறந்த சுறுசுறுப்பும், எழுச்சியும் நிறைந்த மன வியல்புகளை நாம் காணலாம். அவர் வாழ்ந்த காலத்தில் முதல் பணிப்பெரும் மூவர் (Triumvirate) ஆட்சி முடிந்து, சீஸரின் ஆட்சி நடைபெறலாயிற்று. அதற்கு முன்பு பெரிய படுகொலைகளும் உள்நாட்டுப் போர்களும் நடந்து முடிந்தன. இதனுல் அமைதியற்ற ஒரு சூழ்நிலை எங்கும் நிலவியது. இத்துயர நிலையின் சாயலை அவருடைய கவிதை யில் உள்ள குறிப்பு ஒன்றினுல் நாம்அறிய முடிகிறது. உலகம் சீரழிந்துகொண்டு போவதையும், ஆடம்பர ஆர வாரங்களையும், போர் மூளுவதற்குரிய சூழ்நிலைகளையும் அவர் நன்குணர்ந்திருக்கிறுர். ஆணவத்தாலும் அதி கார வெறியினுலும் உண்டான பதவிப் போராட்டத்தின் பொருளற்ற போக்கையும், இழிவையும் கண்டு அவர் மனம் நைந்துருகினுர். அதனுல், அவருடைய உள்ளம் மெய்யுணர்வார்ந்த அமைதியை நாடி ஏங்கித் தவிக்க லாயிற்று.

வாழ்க்கை நெறியை நாடிச் சென்றோர்
வழிதவறி விட்டனரே! மதிநுட்பம்
வாய்ந்தோர்இடும் பூசலைப்பார்! மேல்நிலையில்
உள்ளவர்கள் பதவிக்காகப் போரிடுவதைப்பார்!
அதிகாரத்தின் உச்சநிலையை அடைந்து,
உலகை அடக்கியாளத் துடிக்கும் மனிதர்கள்
அல்லும்பகலும் அயராது அல்லற்படுவதைப்பார்!
வழிதவறிச் சென்றோர்கள் நெறிப்படுவது எக்காலம்?
ஞானிகள் கண்ட அமைதி
மிக்க வாழ்க்கை வாழ்வதைவிட
பூசல்நிறைந்த இவ்வாழ்க்கையா
அமைதிதரும்? இன்பம் தரும்?

(பொருள். இ. பகுதி II, 7-13

என்று தம்மைத்தாமே கேட்பதன்மூலம், அவர் உலகையும் கேட்கிறுர்; சிந்திக்கத் தூண்டுகிறுர்.

லுக்கிரிஷஸ் வாழ்ந்த காலத்தில் கீழைநாடுகளின் புதிய வழிபாட்டு முறைகளை ஏற்றுக்கொண்ட ரோமானியர், பழைய நம்பிக்கைகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் எதிராகப் புரட்சி செய்தனர். அதனல் அமைதியற்ற ஐயுறவு அறிஞர்களுடைய உள்ளங்களை அலைத்துவந்தது. பழைய கொள்கைகளும், கோட்பாடுகளும் ஆட்டம் கொடுத்தன. மக்கள் அவற்றை நம்பத் தயங்கினர். அக் காரிருள் நம்முடைய ஆசிரியர் உள்ளத்திலும் குடிபுகுந்தது. பெரிய போராட்டத்திற்குப் பிறகு அறிவுத்திறன் சார்ந்த ஐயுறவுகளையும், சமயத்துறையில் எழும் ஐயுறவுகளையும் அவர் வெற்றி கொண்டார். அதனல், அவருடைய உள்ளத்தில் அமைதி நிலவத் தொடங்கியது. ஆனல், அப்போராட்டம் அவர் உள்ளத்திலே நிலையான வடுவினை உண்டாக்கி விட்டது. எனவே, தம்முடைய நாட்டு மக்களை மன வமைதிக்கு ஊறுவிளைக்கும் மூடநம்பிக்கைகளிலிருந்தும், இறப்பைப்பற்றிய அச்சத்தின் பிடியிலிருந்தும் விடுவிக்க வேண்டியது தம்முடைய கடமை என்று அவர் உணர்ந்தார். எபிகூரிய தத்துவமே மக்களுக்கு அத்தகைய மனவமைதியை அளிக்கத்தக்க மாமருந்து என்று அவர் நினைத்தார். அதனல், தம் குருநாதரின் நற்செய்தியை ரோமானியரின் வீடுகள்தோறும் கொண்டுசென்று வழங்கவேண்டும் என்று அவர் திட்டமிட்டார். எனவே, சமய நற்பணியாளரின் ஆர்வம் நிறைந்த உள்ளத்தோடு அவர் எபிகூரிய தத்துவக் கருத்துக்களைப் பிழிந்தெடுத்து, அவற்றைப் 'பொருள்களின் இயற்கை'ப் பாடலோடு குழைத்துத் தந்தார்.

அவருடைய தன்னலமற்ற தொண்டு உள்ளத்தாலும் பேரார்வத்தாலும் இதுவரை மேட்டுக்குடி மக்களின் இன்பக் களியாட்டத்திற்குப் போக்காகக் கருதப்பட்ட எபிகூரசின் 'இன்பியல் நெறி', மக்கள் வாழ்க்கையிலே அமைதியைக் காண்பதற்கு வழிகாட்டும் அறநெறியாக மலர்ச்சியுற்றது. கிரேக்கத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு இனிய கவிதையின் மூலம், ஏற்றமிகு வாழ்க்கைத் தத்துவத்தை இவ்வையகத்திற்கு லுக்கிரிஷஸ் வழங்கினர். மரபுவழி வந்த தத்துவக் கருத்துக்களால்

தம்முடைய அறிவுப் பசியைப் போக்க முடியவில்லை என்றும், தம்முடைய ஆன்மாவின் வேட்கையை மரபுவழி வந்த சமயத்தால் தணிக்க முடியவில்லையே என்றும் அவர் மனம் வெதும்பினர். இவ்வகையில், அவர் பண்டைக் காலத்தில் தோன்றிய மார்ட்டின் லூதராவார். தம்முடைய நம்பிக்கை இன்மையில் அவர் தீப்பொறி பறக்கும் கனலானர். அவருடைய நூல் மெம்மியசை நோக்கி விளிப்பதாகப் படைக்கப்பட்டாலும், உண்மையில் அது உலகத்தையும் எதிர்காலத்தையும் நோக்கிப் பாடப்பெற்றதாகும். அவருடைய நூலில், அவர் காலத்திய வரலாற்றுக் குறிப்புகள் ஒன்றுகூட வெளிப்படையாக இடம் பெறுதற்கு இதுவே காரணமாகும்.

நூலின் தொடக்கத்தில் அவர் காதல் தெய்வமான வீனஸைப் போற்றி வணங்குகிறார்; அவளைக் காதல் தெய்வமாகவும், இனப்பெருக்கத்திற்குரிய இயற்கையின் சின்னமாகவும் அவர் பாராட்டுகிறார். அவள் மார்ஸ் (Mars) என்ற போர்க்கடவுளின் காதலியாகக் கருதப்பட்டாள். எனவே, அவளைப் போற்றி வழிபடுவதனல் அவளுடைய காதலனின் இரக்கத்தோடு கூடிய அருளாணையைத் துணையாகக் கொண்டு நாட்டிலே அமைதியை நிலைநாட்ட முடியும் என்று அவர் நம்புகிறார். இத்தெய்வ வணக்கப் பகுதி (*1-42*), லுக்கிரிஷஸ் இயற்றியதுதானு என்று ஆராய்ச்சியாளர் சிலர் ஐயுறுகின்றனர். இக்கவிஞர், தெய்வநம்பிக்கையற்ற எபிகூரிய லோகாயத வாதியாவார். எனவே, தம்முடைய நூலில் அவர் தெய்வ வணக்கத்தைப் பாடியிருப்பாரா என்பது ஒரு சாராரின் கேள்வியாகும். 'அவர் தெய்வத்தை நம்பினரோ, நம்பவில்லையோ அதைப் பற்றிய கவலை நமக்கு வேண்டாம்; நூலின் முதலில் தெய்வ வணக்கம் கூறும் பழைய இலக்கிய மரபைப் பின்பற்றி, அவர் 'வீனஸ் வணக்கம், பாடியுள்ளார்' என்று மற்றொரு சாரார் அறிவிக்கின்றனர். இக்கடவுள் வாழ்த்தில் அத்தேவியிடம் அவர் வேண்டுவன நம் கருத்தைக் கவருவனவாக உள்ளன.

**உன்னையல்லால் உலகில் இன்பமில்லை! உன்னையல்லால் உலகில் அழகுமில்லை! இக்கவிதையைப் படைக்க நான் உன்னருளை வேண்டுகிறேன்! இதனை என் நண்பன் மெம்மியஸுக்**

காக இயற்றுகின்றேன். அன்னையே? என்னுடைய சொற்களுக்கு அழியாத அழகினை அருள்வாயாக! எழுதுகின்றபோதெல்லாம் எனக்கு நின் கருணையைக் காட்டுவாயாக! கடலிலும் நிலத்திலும் நடக்கும் கொடிய போர் ஓய்ந்து எங்கும் அமைதியும் இன்பமும் நிலவ அருள்புரிவாயாக! மாண்டொழியும் மனிதனுக்கு மாளாத அமைதியையும் நல்லின்பத்தையும் உன்னையல்லால் அளிக்க வல்லவர் யார்? உன் ஆருயிர்க் காதலரின் அரவணைப்பில் நித்தம் நீ கொஞ்சிக் குலவிடும்பொழுது எமக்கு இந்த நல்வரத்தை வேண்டிடுவாய்? ரோமர்கள் என்றும் அமைதியாக வாழ்ந்திட வரம் வேண்டிடுவாய்? எந்தை நாட்டின் தலைவிதி தகர்க்கப்படும் இவ்வேளையிலே என்றன் பணியை மனவமைதியுடன் எப்படி நான் புரிந்திடுவேன்?

(பெ. இ. பகுதி 1, 22-40)

என்னும் பகுதி, அவருடைய மனநிலையைப் படம்பிடித்துக் காட்டுவதாகும்;

இவ்வேண்டுகோள் கவிஞரின் உள்ளக்கிடக்கையை நமக்கு அறிவிக்கிறது. தம் நாடு நலம்பெற்றுச் சிறந்து வாழவேண்டும் என்பது அவருடைய பேராவலாக இருப்பதோடு, தம்முடைய கவிதை எழிலும் ஏற்றமும் பெற்று விளங்கவேண்டும் என்ற விழைவு அவரைக் கவிதை இயற்றுமாறு உந்தித்தள்ளுகிறது.

ரோமானியக் கடவுள் நெறி நிலையங்களைத் தாம் எதிர்ப்பதற்குரிய காரணங்களைத் தெளிவாக அவர் எடுத்துரைக்கிறார். அச்சத்தின் அடிப்படையிலேயே சமயம் தோன்றியதை லுக்கிரிஷஸ் விரிவாக விளக்கியுள்ளார். அச்சமும் அறியாமையும்தான் மனிதனை இயற்கைச் சக்திகளைக்கண்டு அஞ்சி நடுங்கச்செய்தது என்றும், அதன் விளைவாக அவன் அவற்றைத் தெய்வங்களாக உருவகப் படுத்தி வழிபடத் தொடங்கினான் என்றும் அவர் குறிப்பிடுகிறார். வானிலே ஒளிசெய்து பாயும் மின்னலும், மண்ணுலகைத் தாக்கும் இடியும், நிலத்திலும் கடலிலும் அழிவுகளை உண்டாக்கும் புயல்களும் சூறுவளிகளும், மாடமாளிகைகளை மண்மேடாக்கி விடும் நிலநடுக்கங்களும் சேர்ந்து ஆதிமனிதனின் அச்சவுணர்வை மிகுதிப்படுத்தி

இயற்கையின் கொடுமைகளுக்கு அஞ்சி அவற்றை வரம்பில் ஆற்றலுடைய தெய்வங்களாகப் போற்றுமாறு செய்தன என்பதைத் திறம்பட அவர் விளக்குகின்ருர். இயற்கையின் விதிகளை அறியாமையால், செருக்குமிக்க அரசர்களும், மாபெரும் படைத்தலைவர்களும், திரளான மக்கள் கூட்டமும் இயற்கையின் ஆற்றலைக் கொண்டு செலுத்தும் தெய்வங்கள் வானுலகில் உள்ளன என்று நம்பினர். அத்துடன் அவை உலகத்து மக்களுடைய துன்பங்களைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாதவை என்றும் அவர்கள் அஞ்சினர்.

இவ்வவல நிலையே தம்முடைய காலம் வரையிலும் நின்றுநிலவி வருவதை, கவிஞர் நன்குணர்ந்தார். சீர்திருத்த வாதியின் உள்ளவுரத்துடனும், உருவ வழிபாட்டு எதிர்ப்பு இயக்கத்தினரின் எல்லையில்லாப் பேரார்வத்துடனும், தம் நாட்டு மக்களிடத்துக்கொண்ட மனவருத்தம் கலந்த பரிவுடனும் அவர் இப்பகுதியைப் பாடியுள்ளார். அவர் இயற்கைச் சட்டத்தைப் பற்றிய அறிவினைப் பெற்றிருந் தார். அத் தெளிந்த அறிவு அவ்வச்சத்தையும் நம்பிக்கை யையும் அடியோடு தகர்த்தெறிந்ததாகச் சொல்லுகிருர். தெய்வங்கள் இருக்கின்றனவா? என்பதற்குரிய சான்று களைத் தேடி அவர் அலையவில்லை. அத்தெய்வங்களைப் பற்றிய தவருன நம்பிக்கைகளையும், கருத்துக்களையும் அவர் தகர்த்தெறியத் தொடங்கிஞர். அன்றுவரை ரோமா னியருடைய சமய நம்பிக்கையின் தூண்களாக இருந்து வந்த மூட நம்பிக்கைகளையும் பொருளற்ற சமயச் சடங்கு களையும் அவர் வெறும் 'பிச்சுப் பிள்ளை விளையாட்டு' என்று கடிந்துரைத்தார்.

'சமயம் என்பது என்ன? அதன் கொடுஞ் செயல்கள் எவ்வாறு இருக்கும்?" என்பதை அவர் ஒரு கிரேக்கக் கதையின்மூலம் சித்திரிக்கிருர். திருமணத்திற்குக் காத் திருந்த தன் மகளை, ஒரு புரோகிதன் தூண்டுதலால் காற்றுத் தெய்வத்திற்குப் பலிகொடுத்துவிட்டுக் கப்பலில் போருக்குச் செல்லும் அகமெனுன் (Akamemnon) என்ற கிரேக்க மாவீரனின் கதையைச் சொல்லி, 'இதுதான் சமயம்; இவைதாம் அதனுடைய கொடுஞ்செயல்கள்' என்று கூறிக் கவிஞர் பெருமூச்சு விடுகிருர். அச்சத்தையூட்டும்

புரோகிதர்களின் சொற்களைக் கேட்டு, அஞ்சிநடுங்கும் ஆயிரக்கணக்கான மக்களின் அவல வாழ்க்கையைக் கண்டு அவர் உள்ளம் நைந்துருகினர். நன்மையும் தீமை யும், இழப்பும் ஆதாயமும் மூடநம்பிக்கைகளோடு பிணைக்கப்பட்டுள்ளன. மக்களை அச்சுறுத்துவதற்குத் தன் னலக்காரர்கள் அவற்றைக் கருவிகளாகப் பயன்படுத்து வதைக்கண்டு லுக்கிரிஷஸ் மனம் கொதித்தார். 'நெஞ்சு பொறுக்குதில்லையே! இந்நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்' என்று அவர் துடித்தார்.

மக்கள் எல்லாரும் ஒன்ருகச் சேர்ந்து சமயத்தையும், அடக்குமுறைகளையும் எதிர்க்கும் நாள் ஒன்று வரப் போகிறது. அந்நாளில் அச்சமெனும் அந்தகாரத்தில் மூழ்கிக்கிடக்கும் மக்கள் உள்ளம், அறிவொளிபெற்று 'அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கத்தையும் அளப் பருந்தன்மை வளப்பெருங் காட்சியையும்' கண்டு மகிழப் போகிறது. இயற்கைச் சட்டத்தின் இன்னொளி அவர் களுடைய உள்ளங்களில் நம்பிக்கை ஒளியை ஊட்டப் போகிறது. அதற்கு அடிப்படையாகத் தேவைப்படுவது அறிவியல் மனப்பான்மை. தெய்விக ஆணையால் பாழி லிருந்து எப்பொருளும் தோன்ருது என்பதை மக்கள் உணரவேண்டும். ஏனெனில், ஒரு பொருளிலிருந்து மற் ருெரு பொருள் தோன்றுமே ஒழிய, வெறும் பாழிலிருந்து எப்பொருளும் தோன்ருது. இதுதான் இயற்கையின் நியதி. வித்தின்றி எப்பொருளாவது தோன்றுமோ? எனவே, ஒவ்வொரு பொருளும் குறிப்பிட்ட ஒரு வித்திலிருந்து தோன்றியது என்பதை நாம் மறத்தலாகாது. எல்லாப் பொருளும் அவ்வவற்றிற்குரிய மூலப்பொருளிலிருந்து தோன்றிப் படிப்படியாக வளர்ச்சியுறுகின்றன. இப் பரிணும வளர்ச்சியே உலகிலுள்ள உயிரினங்களின் தோற்றத்திற்கும், பொருள்களின் மாற்றத்திற்கும் மூல காரணமாகும். இவற்றின் மூலப்பொருளாய் இருப்பது எது? அதுதான் அணு (Atom). அணுக்களே மண்ணில் மறைந்துகிடக்கின்றன. அவற்றை வெளிப்படுத்துவதன் மூலமே உலகப்பொருள்கள் அனைத்தும் தோன்றியுள்ளன.

என்று அவர் விளக்குகிருர். இப்பகுதி டார்வினுடைய (Darwin) பரிணும வளர்ச்சிக் கொள்கையின் முன்னேடி யாகத் திகழ்கிறது.

பிறகு அணுவின் மூலக்கூறுகளேப் பற்றியும் பாழ் அல்லது வெட்டவெளியைப்பற்றியும் பல உண்மைகளே அவர் எடுத்துரைக்கிருர். அவற்றின் கூட்டுறவால் உலகில் உள்ள பிற பொருள்கள் எல்லாம் உண்டாயின என்பதை அவர் நிலைநாட்டுகிருர். இறுதியாகத் தம்முடைய கருத்துக்களை அறிந்து கொள்ள,

> சிறப்பு மிக்க செகத்தீரே ! செவி கொடுத்து என்சொல்
> கேளீரே!
> இயற்கையின் விந்தைகளை அறிந்து செல்வீரே !
> (பொ. இ ; பகுதி 1, 920-21)

என்று எல்லாரையும் திரண்டுவருமாறு அவர் அழைக் கின்ருர்.

இரண்டாவது பகுதியில் லுக்கிரிஷஸ் அணுக்கொள்கை யைப்பற்றி விளக்குகிருர். அணுவிலிருந்து உலகம் எவ் வாறு தோன்றியது என்பதை இயற்கைப் பொருள்களின் படிப்படியான வளர்ச்சியை அடிப்படையாகக்கொண்டு அவர் தெளிவுபடுத்துகிருர். முதலில் மனிதன் இன்ப மாக வாழ்வதற்குரிய வழி என்ன என்பதைப்பற்றி அவர் ஆராய்கிருர்.

> பிறருடைய துன்பத்தைக் காண்பதில் மனிதன் மகிழ்ச்சி அடைகிருன்; அது அறிவுடைமையாகுமா? தான்மட்டும் துன்பத்திலிருந்து தப்பித்துக் கொள்ளத் துடிக்கும் மனிதன், பிறர் துன்பப்படுவதைக் கண்டு மகிழலாமா இது உண்மை யான மகிழ்ச்சியாகாது. இவற்றையெல்லாம் கடந்தநிலையில் மனம் அமைதியாக இருக்கும்பொழுது தோன்றும் உயர்ந் ததும், சிறந்ததுமான வீறமைதியினுல் உண்டாகும் மன நிறைவே மக்களுக்கு ஆக்கம் தருவதாகும். அம்மன நிறைவைப் பெறுவதற்கு மனிதன் தன் உள்ளத்தோடு போராடவேண்டும். உள்ளம் என்னும் போர்க்களத்தில் ஒரு போர் நடைபெற வேண்டும். அப்போரில் ஒருபக்கத்தில் உயர்ந்த வாழ்க்கைத் தத்துவங்களும், அறிஞர்களுடைய மெய்யறிவும் நிற்கும். அவற்றை எதிர்த்து மனிதனின் எண்ணங்களும் உணர்ச்சிகளும் மோதும். அவ்வாறு நடைபெறும் போரால் உள்ளத்தெளிவு

உண்டாகும். இப்பேரண்டத்தில் சிறிய எறும்புகளைப் போன்று மனிதர்கள் தோன்றுகின்றனர். மறைந்துகிடப்பதும், ஒழுங்கானதுமான வாழ்க்கை நெறியைத் தேடி அவர்கள் இங்கும் அங்கும் அலைந்து திரிகின்றனர். அவர்கள் மதிமயக்குற்ற நிலையில் தங்களுக்குள்ளேயே போராடிக் கொண்டிருப்பதை நீ காணலாம். (பொ. இ ; பகுதி 2, 5-15)

என்று ஆசிரியர் மனித வாழ்க்கையின் அவல நிலையையும் அந்நிலையை மாற்றவேண்டுமானால் அவர்கள் மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகளையும் அறங்கூறும் ஆசானாக நின்று நமக்கு அறிவுறுத்துகிறார்.

நீ அரும்பாடுபட்டு சேர்க்க விரும்பும் செல்வத்தாலோ, புகழாலோ, குடிப்பெருமையாலோ உன் உடலுக்குண்டாகும் நோயினையோ, உள்ளத்தில் உண்டாகும் குழப்பத்தினையோ போக்க முடியாது. உடல் நோயையும், மனநோயையும் நீக்க வேண்டுமானால், அதற்கு ஒரேவொரு மருந்துதான் இருக்கிறது. இறப்பைப்பற்றி நீ கொண்டிருக்கின்ற அச்சத்தைப் போக்குவதால்தான் அது முடியும். அதற்காக நீ முதலில் செய்யவேண்டியது என்னவென்பது தெரியுமா? இயற்கையின் உள்ளார்ந்த நியதியின் புறவியல்புகளைப் புரிந்துகொள்ளவேண்டும். அதற்காக முதலில் உன் மனத்தில் குடிகொண்டுள்ள மூடப்பழக்க வழக்கங்களை எல்லாம் வேரோடு கல்லி எறி! மனத்திற்கு ஓய்வு கொடு! ஆன்மாவின் உலைச்சலைப் போக்கி ஊக்கமூட்டு! அப்பொழுது மாபெரும் படைகளையுடைய மன்னர்களால் சாதிக்க முடியாததை உன்னால் சாதிக்கமுடியும்!

(பொ. இ; பகுதி 2, 30-46)

என்னும் பகுதியில் மனிதன் சாவைக்கண்டு 'அஞ்சியஞ்சி சாகும்' அவலநிலையைப் போக்குவதற்குக் கவிஞர் அறிவு ஒளியை வழங்குகிறார். அடுத்து, 'இன்று வாழ்க்கை எப்படி இருக்கிறது?' என்ற வினாவை அவர் எழுப்புகிறார்.

வாழ்க்கை இருள்செறிந்த அந்தகாரத்தில் அநியாயமாகப் பாழாக்கப்படுகிறது அல்லவா? இருட்டினைக்கண்டு என்ன வருமோ என்று அஞ்சிநடுங்கும் சின்னஞ்சிறு குழந்தைகளைப் போன்று நாம் நல்ல வெளிச்சத்திலேயே அஞ்சி நடுங்குகின்றோம். சிறுவர்கள் கனவில் கண்ட கொடிய காட்சிகள் வாழ்க்கையில் நிச்சயம் நடக்கும் என்று எண்ணி, அஞ்சி நடுங்குவதைப்போன்று தாமாகக் கொடுமை செய்யமுடியாத பொருள்களைக்கண்டு நாம் திகைப்புற்று அவற்றைவிட்டு நெடுந்தூரம் ஓடி ஒளிந்துகொள்ளுகிறோம் அல்லவா?

(பொ. இ; பகுதி 2, 55-60)

என்று கேட்கும் கவிஞர் 'இதுதானு மனிதன் வாழவேண்டிய வாழ்க்கை? இதிலிருந்து அவனுக்கு விடுதலேயே கிடைக்காதா? இந்த ஆன்மிக அடிமைத் தளேயிலிருந்து அவன் விடுதலே பெறுவதற்குரிய வழியாவது தெரியுமா?' என்று உலகைப்பார்த்து வினவுகிருர்.

அதற்குரிய வழி அறிவுப்பாதையில் செல்லுவதுதான்! அறிவொளியின் துணையைக்கொண்டு அகத்தில் சூழ்ந்துள்ள அறியாமை இருளே விரட்டி ஓட்டுவதுதான்! அவ்வாறு அறியாமை இருளே ஓட்டவேண்டுமானுல், முதலில் நாம், "**பொருள்களின் இயற்கை**" இயல்புகளே நன்கறிந்து கொள்ளவேண்டும். அதற்கு முதற்படி அணுக்களின் தோற்றத்தை ஆராய்வதாகும். அணுக்களின் சேர்க்கை, இயக்கம், ஆற்றல், வெளிப்பாடு, நெறிபிறழ்வு, சிதைவு, உருமாற்றம் போன்ற பல் இயல்புகளேயும் ஆராய்ந்து அறிவதன் மூலம் நாம் சடப்பொருள்களின் தோற்றம், வளர்ச்சி, நிலேபேறு, இயக்கம் ஆகியவற்றைப்பற்றித் தெளிந்த அறிவைப் பெற முடியும் என்று அவர் கூறுகிருர்.

பின்னர், அணுக்கள் வடிவத்தால் வேறுபட்டுள்ள நிலேயை லுக்கிரிஷஸ் விளக்குகிருர். அவருடைய அணுக் கொள்கை ஆராய்ச்சிக்குரியது. அணுக்களே பொருள் களின் தோற்றத்திற்கு அடிப்படையாக உள்ளன என்று அவர் தெரிவிக்கிருர். இயற்கையில் ஒழுங்கான முறையும், நிலேயான விதிகளும் நிலேபெற்றிருப்பதோடு, அவற்றிடையே கட்டாயமானதொரு தொடர்பும் இருக்க வேண்டும் என்று அவர் நம்புகிருர். தற்கால அறிவியலறிஞர்களும் கண்டு வியக்கத்தக்க வகையில், ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே 'இயற்கை நியதியைப்' பற்றிய கொள்கையை வகுத்தளித்த லுக்கிரிஷஸின் உள்ளம் வெறும் கவிதையுள்ளமாகாது. இன்று உயிரின் தோற்றம், பரிணும வளர்ச்சி முதலியவற்றைப்பற்றிக் கூறப்படும், கருத்துக்களின் கருமுதல்கள் இக்கவிஞருடைய கவிதையில் இடம் பெற்றிருப்பது இங்குக் கருதத்தக்கதாகும்.

இவ்விரண்டாம் பகுதியில் கவர்ச்சிமிக்க அறிவு நலம் கனிந்த அறநெறிக் கருத்துக்களே, மனித இனம் மன நலத்தோடு வாழ்வதற்காக அவர் எடுத்துரைக்கின்ருர். அவ்வறநெறிக் கருத்துக்கள் அனேத்தும் மிகச் சிறந்தவை

யாகப் போற்றப்பெறுகின்றன. இப்பகுதி அதன் தற்பண்பிலும், இன்பத்தைத்தேடுவதிலும், புலனுகர்ச்சியிலும் எபிகூரஸின் சித்தாந்தமாகத் தோன்றுகிறது. எளிமையையும், பொறுப்பிணையும் ஏற்றுக்கொள்ளுவதில் ஸ்டாயிக் (Stoic) கோட்பாடாகவும், எளிய வாழ்க்கையின் உயர்ந்த பயன்மதிப்புக்களைக் கண்டறிவதில் மனித நலப் பண்புடையதாகவும், அது காணப்படுகிறது.

மூன்றுவது பகுதியில் ஆசிரியர் தம்முடைய அறநெறிக் கொள்கையினை விரிவாக விளக்கத் தொடங்குகிருர். இன்பியல் கோட்பாட்டினை உலகிற்கு முதன் முதல் எடுத்தியம்பிய எபிகூரஸ் (Epicurus) என்ற தத்துவ ஞானியைத் தம்முடைய குருநாதராகக்கொண்டு அவர் போற்றி வணங்குகிருர்.

மாண்புமிகு கிரேக்கத்தின் மங்காதப் பெருநிலவே !
மாந்தர் மனக்குகையில் மண்டிய காரிருள் தான்
மாயமாய் மறைந்தொழிய மண்ணில் வந்துதித்த
காயாத செம்மைநலம் கனிந்த செங்கதிரே !
நேயமிகு வாழ்க்கைக்கு நல்லநெறி வகுத்தளித்தாய் !
நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
மானிடர்தம் வாழ்வில் மாண்புறச் செய்திட்டாய் !
ஆற்றல்மிகு கிரேக்கத்தின் அறிவுப் பேரொளியாய்
ஏற்றமிகு வாழ்க்கைக்கு எழிலூட்டும் நெறியதனை,
வாட்டமின்றி வாழ்ந்திடவே வாழும்வழி வகுத்தளித்தாய்
நாட்டமுடன் நன்னெறியில் நாயேனும் வாழ்ந்திடவே,
போற்றி யுன்றன் பொன்னுனை அடிச்சுவட்டை
ஏற்றிப் பின்தொடர என்றனக்கு நின்னருளை
நானிலம் வியக்க நல்குக இப்பொழுதே!

(பொ. இ., பகுதி 3, 1-5)

என்று வழிபாட்டுணர்ச்சியோடு லுக்ரிஷஸ் வேண்டுகின்ருர். இப்பகுதியில் உள்ள சில கருத்துக்கள் ஒப்புயர்வற்றனவாகும் அவற்றின் பேரழகு மட்டும் இதற்குக் காரணமாகாது. மனிதனிடத்திலே மறைந்துகிடக்கும் தெய்வத்தன்மையைப் போற்றியுரைக்கும் பக்தியுணர்வு நம் உள்ளத்தை நெகிழச்செய்கிறது. எபிகூரஸ் வெற்றிபெறுவதற்கு அண்டமெலாம் தேடி அலைந்தது எது? அது வேருென்றும்இல்லை ! 'இயற்கை நியதி' என்னும் சட்டமே (Law of Nature). அதைக் கண்டறிவதற்கே அவர் அல்லும்பகலும்

அயராது முயன்றார். அவ்வறிவு மனித இனத்தை வாழ்க்கையின் தளைகளிலிருந்து, சிறப்பாக மூடப்பழக்க வழக்கங்களின் பிடியிலிருந்து விடுதலைபெறச் செய்யும் என்று அவர் உண்மையாக நம்பினார். இதை நாம் ஒரு 'கனவு' என்று சொல்லலாம். ஆனால், அது சிறந்ததொரு கனவு அல்லவா? மனித இனத்தின் துன்பத்தைப் போக்க வேண்டும் என்ற அருளுணர்வால் தோன்றிய கனவு அல்லவா? அக் கனவைக்கண்ட அறிஞனை, நம் கவிஞன்

மாண்புமிகு கிரேக்கத்தின் மங்காதப் பெருநிலவே !
மாந்தர்மனக் குகையில் மண்டிய காரிருள் தான்
மாயமாய் மறைந்தொழிய மண்ணில்வந் துதித்த
காயாத செம்மைநலம் கனிந்த செங்கதிரே !

என்று போற்றிப்பாடுகின்ற பொழுது, ஒரு பக்தனுடைய உள்ளக்கனிவை அல்லவா நாம் அவரிடத்துக் காணு கின்றோம்! 'தெய்வங்கள் தேவை இல்லை' என்ற கொள் கையை நிலைநாட்ட விரும்பிய கவிஞன், தன் குருநாதரிடம் கொண்டுள்ள பக்தியை வேறெந்த சொற்களால் சொல்லு வது?

## லுக்கிரிஷஸும் அறநெறியும்

லுக்கிரிஷஸின் சமய எதிர்ப்பு அவருடைய அறநெறித் தத்துவத்தின் திறவுகோலாகக் காணப்பெறுகிறது. அவரு டைய அறநெறிக்கொள்கை மனிதன் மண்ணுலகில் நல மாகவும், வளமாகவும் வாழ்வதற்குரிய வழிவகைகளை வகுத்துரைப்பதாகும். இருமுனைப் போராட்டத்தின் மூலம் அவர் சமயத்தையும், சமயப் புரோகிதர்களையும் சாடி யுள்ளார். எதிர்மறைவகையான் எதிர்க்குமிடத்தில் அவ ருடைய கருத்துக்கள் திட்டவட்டமாகவும், தெளிவாகவும், உறுதியாகவும் உள்ளன. பெருவாரியான மக்கள் இன்று வரை வாழ்ந்து வருவதைப்போன்று செல்வத்திற்காகவும், அதிகாரத்திற்காகவும் போராடக்கூடாது என்பது அவர் துணிவாகும். பேராசை, பேரார்வம், காமவுணர்ச்சி ஆகிய மூன்றுமே மனிதன் நிலையான இன்பத்தை அனுபவிப்ப தற்குத் தடையாக இருந்து வருகின்றன என்று அவர் நினைத்தார். "செல்வச் செருக்கிலும், செழிப்பு மிகு ஆண வத்திலும், வெற்றி போதையிலும் மூழ்கித் திளைக்கும்

மனித இனம் மனநிறைவு இல்லாமல் எதையோ நினைத்து எண்ணியேங்குவதை ஒரு மனிதன்கூட இன்றும் உணரவில்லை. தங்களுக்கு வேண்டியவை எவையென்பதைக் கூடப் பெரும்பாலான மனிதர்கள் இன்றும் அறிந்து கொண்டார்கள் என்று சொல்லமுடியாது" என்றெல்லாம் அவர் மனம்நொந்து கூறுகிறுர்.

லுக்கிரிஷஸ் அறத்தைப் பற்றி முறையாக ஆராய்ந்து தம் கருத்துக்களைத் தெளிவுறுத்தவில்லை. சமயத்தைப் பற்றி அவர் மொழிந்துள்ள கருத்துக்களும் இவ்வகையைச் சேர்ந்தவையே. எனினும், நாம் அவருடைய சிந்தனைகளை முறைப்படுத்திப் பார்க்கின்றபொழுது 'நன்மை தீமை,' 'அறம்-பாவம்' பற்றி அவர் கொண்டிருந்த கருத்துக்களை நாம் தெளிவாக அறிய முடிகிறது. திருவள்ளுவரின் திருக்குறளைப் போன்றோ, அரிஸ்டாட்டிலுடைய 'அறவியலை'ப் போன்றோ, சிஸரோவின் 'ஒழுக்கவியலை'ப் போன்றோ தனிப்பட்ட அறவியல் கொள்கைகளை விளக்கும் நூலை நாம் லுக்கிரிஷஸிடமிருந்து பெறவில்லை. எனினும், ஒழுக்க நெறியின் பிரச்சினைகள் அவருடைய உள்ளத்தைத் தாக்கியதையும், அதனுல் அவருடைய சிந்தனையில் எழுச்சிகள் உண்டானதையும் அவருடைய நூலில் நாம் காண முடிகிறது.

அவர் 'அறத்தை' எபிகூரிய கண்ணோட்டத்தில் வியக்க முயன்றுள்ளார். மனநலம் சார்ந்த இன்பமே அவருடைய அறநெறிக் கொள்கையின் முடிந்த பயனுகத் தோன்றுகிறது. இதை அடையவேண்டுமானுல், மனிதன் இறப்பைப் பற்றிய அச்சத்தையும், தெய்வங்களைப்பற்றிய அச்சத்தையும் தன் மனத்திலிருந்து அகற்றிவிடவேண்டும். இதைச் செய்தால் மனிதனுக்குச் சிந்தனை உரிமையும், ஆன்மிக அனுபவ உரிமையும் கிடைக்கும். இவ்வுரிமைகளைப் பெற்றுல்தான் மனிதன் உண்மையான அறவாழ்வு வாழமுடியும் என்று லுக்கிரிஷஸ் நம்பினுர்.

எனவே, அறிவியல் கண்ணோட்டத்தில் இயற்கையையும், ஆன்மாவையும் அவர் காணலானுர். சிறப்பாக ஆன்மாவின் இயல்புகளைத் தருக்கவாதத்தின் அடிப்படையில் ஆராய்ந்து விளக்கிய ஆசிரியர், அது அழியக்கூடியது

என்ற முடிவிற்கு வருகிறார். இம்முடிவைப்பற்றி மெய்ப் பொருள் ஆராய்ச்சியாளர் கருத்துவேற்றுமை கொண்டுள் ளனர். சற்றேறக்குறைய முந்நூறு அடிகளில் (830-1094), அவர் தம்முடைய கருத்தை அசைக்க முடியாத உண்மை என்ற நம்பிக்கையோடு நிலைநாட்டியுள்ளார்.

பின்னர் இறப்பைப்பற்றிய அச்சத்தை அகற்றினால் ஒழிய, மனிதனுக்கு வாழ்வுகிடையாது என்பதை அழுத்தந் திருத்தமாக அவர் அறிவிக்கிறார். "இறப்பைக்கண்டு ஏன் அஞ்சவேண்டும்?" என்பது உலகைப்பார்த்து அவர் கேட்ட கேள்வியாகும்.

> மனிதன் இறந்த பிறகு துன்பப்படுவதற்கு ஒன்றும் இல்லை. ஆன்மாவே அழியக்கூடிய பொருளால் ஆனது. உண்மையான இறப்பில், இரண்டாவது ஆன்மாவிற்கு இடமே கிடையாது. எனவே, இறப்பதற்கு முன்பு 'இறப்பு வந்துவிடுமே; நாம் இறந்துவிட்டால் என்ன செய்வது?' என்றெல்லாம் எண்ணி வருந்துவது அறியாமை. இனி இன்பம் மிகு இல்லம் நம்மை வரவேற்காது; மகிழ்ச்சியூட்டும் மனைவியும் மறந்துவிடுவாள்; தந்தையின் முத்தத்தை முதலில் பங்கிட்டுக் கொள்ளவும், மதி மயக்கத்தையூட்டவும் மயக்குறுமக்கள் குறுகுறுவென்று ஓடி வரமாட்டார்கள். 'உங்களைக் காப்பாற்றிக்கொள்ள முடியாமல் எங்களை வாட்டுகிறீரே! பெரும் தொல்லையாகப் போய்விட்டது உங்களால்' என்று மக்கள் இனிக் குறை சொல்லவுமாட்டார்கள். சிறிய மனிதனுக்குக் குறுகிய வாழ்நாள்களே உள்ளன. 'விரைவில் அது கழிந்துவிட்டால் மீண்டும் அதைப் பெற முடியாது' என்ற உண்மை அறியாத மனிதர் கண்ணீர்விட்டுக் கதறுகின்றனர். ஆனால், அழியப்போகும் மனிதன், தன் ஆன்மா விற்காகவும் வாழ்க்கைக்காகவும் எண்ணி ஏங்கிக் காலத்தை வீணாக்கலாமா? இறப்பு என்பது என்ன? உள்ளமும் உடலும் ஒன்றாகச் சேர்ந்து உறங்குவது அல்லவா இறப்பு? நாள் தோறும் உறக்கத்தை நாம் விரும்புகின்றோம் அன்றோ? அதைப்போன்ற முடிவில்லா உறக்கமே இறப்பு! அதைக் கண்டு அஞ்சி நடுங்குவது எதற்காக?
>
> (பொ. இ; பகுதி 3, 830-870)

என்று வினவும் ஆசிரியர், அச்சத்தை அகற்றுவதற்குரிய வழியை அடுத்துச் சொல்லுகிறார்.

> இறப்பினால் மனிதனுடைய உடலும் ஆன்மாவும் அழிந்து விடுகின்றனவா? அவை எதற்காக அழிந்துவிடுகின்றன? பழைய அணுக்கள் எல்லாம் புதிய வடிவில் வெளிப்படுவதற்கே

அவை அழிகின்றன. பழையன கழிவதன் மூலம் புதியன தோன்றுகின்றன. இறப்பதனால் மனிதன் நரகத்திற்குப் போவதில்லை; அணுக்களாலான அவனுடைய உடல் அழிந்து அணுக்களாக மாறிவிடுகின்றது; அவ்வணுக்கள் மீண்டும் ஒன்றாகச் சேர்ந்து பல புதிய பொருள்களாகத் தோன்று கின்றன. இதுதான் 'பொருள்களின் இயற்கையாகும். ஒரு பொருளிலிருந்தே பிறிதொரு பொருள் தோன்ற வேண்டும் என்பது இயற்கைச் சட்டம். எனவே, உயிர் என்பதை நாம் வாடகைக்கு வாங்கமுடியுமே ஒழிய, நம்முடைய உரிமைப் பொருளாக அதைக் கொள்ளமுடியாது. என்றைக்காகிலும் இறப்பு வரத்தான் செய்யும். களங்கமற்றப் பேரறிவாளன் ஹோமர். அவனைக் கலைமகளின் திருமகன் என்றல்லவா உலகம் போற்றிற்று? அவன் இன்று எங்கே? மற்றவர்களைப் போன்றே அவனும் மண்ணில் மறைந்து உறங்குகிறான். மனித இனத்தின் சிந்தனைத் திறனில் தனிப்பெருந் தலைவராக விளங்கியவர் எபிகூரஸ்! உதயசூரியனுடைய ஒளி விண்மீன்களின் ஒளியை மங்கச் செய்வதைப் போன்று, அவர் பிற தத்துவவாதிகளை எல்லாம் தலைகுனியச் செய்தார். அவர் நமக்கு ஓர் ஆசான்; உலகிற்கொரு தீர்க்கதரிசி. அவருடைய வாழ்வும் முடிந்து விட்டது!

இவற்றை அறிந்த பிறகுமா நீ இறப்பதற்குத் தயங்குகிறாய்? நீ இறப்பது நேர்மையற்றதென்று நினைக்கிறாய்? நீ உன் வாழ்க்கையில் இப்பொழுதே ஓரளவிற்குச் செத்துக்கிடக்கிறாய்! நீயோ உன் வாழ்நாளின் பெரும்பகுதியை உறக்கத்தில் கழித்துவிடுகிறாய்! என்றும் நீ கனவு காண்பதிலும், குறட்டை விடுவதிலும் உன் பொன்னான காலத்தின் பெரும்பகுதியைப் பாழாக்குகிறாய்! மயங்கியதோர் அச்சம் நிறைந்த மனத்தோடு நீ அலைகிறாய்! உன்னை வாட்டும் நோய் என்னவென்பது உனக்கு என்றும் தெரியாதே! எண்ணற்ற கவலைகளால் எப்பக்கமும் நெருக்குண்டு நீ நெஞ்சம் குமுறுகிறாய்! கண்மூடித்தனமான அறிவுகெட்ட செயல்களால் குடிகாரனைப்போன்று நீ தள்ளாடு கிறாய்! (பொ. இ; பகுதி 3, 1040-1060)

என்ற விரிவானதொரு விளக்கத்திற்குப்பிறகு, 'இறப்பைக் கண்டு அஞ்சுவது அறியாமை' என்ற தம் கோட்பாட்டைக் கவிஞர் நிலைநாட்டுகிறார்.

மனிதர்கள் பெருஞ்சுமை யொன்றைத் தம் உள்ளத்தில் சுமந்து கொண்டு இருப்பதை ஒருமுறை உணர்வார்களானால், அத் துன்பத்திற்குறிய மூலகாரணம் எதுவென்பதை அவர்கள் அறி வார்களானால், இன்று நாம் அடிக்கடிப் பார்ப்பதைப்போன்று மனிதர்கள் யாரும் வாழமாட்டார்கள்! தமக்கு வேண்டியது

என்னவென்பதை அறியாமலேயே, ஏதோவொரு நல்ல இடத்தில் தங்கள் சுமையை இறக்கிவைக்கப் போவதைப்போல மனிதர்கள் ஓடிக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் அடிக்கடி அகன்ற இல்லத்தை விட்டு வெளியே சென்று அலேகிருர்கள்; வீட்டில் சலிப்புத்தட்டிவிட்டதென்று வெளியே ஓடுகிருர்கள். ஆனால், திடீரென்று திரும்பவும் இல்லத்தை நாடிச் செல்லுகின்றனர். அப்பொழுது, அவர்கள் 'வெளி உலகம் பயனில்லே' என்கின்றனர். சில சமயங்களில் அவர்கள் நகரைவிட்டுக் கிராமத்திற்கு விரைந்து ஓடுகின்றனர். அங்குத் தூங்கிப் பெருஞ் சுகம் காண விழைகின்றனர்; அல்லது அங்குத் தங்குவதால் பிறர் தம்மை மறந்துவிட விரும்புகின்றனர்; அல்லது நகரில் உள்ள வீட்டிற்குச் சில சமயங்கள் திரும்பி விரைந்து ஓடுகின்றனர். இவ்வாறு ஒவ்வொரு மனிதனும் தன்னேத்தானே தட்டிக்கழித்துக்கொள்ளப் பெருமுயற்சி செய்கிருன்.

என்று குறிப்பிடும் லுக்கிரிஷஸ் 'பொருள்களின் இயற்கை'யை விளக்கத் தொடங்குகிருர்:

நாம் அறிந்தவரை எவனும் தன்னேத்தானே இழக்கமுடியாது. இந்த ஆன்மா அவர்கள் விருப்பத்திற்கு மாருக அவர்களேப் பற்றிக்கொண்டிருக்கும். ஏனெனில், அவர்கள் நோய்வாய்ப் பட்டிருக்கின்றனர்; அவர்களுடைய நோயின் காரணத்தை அவர்கள் எப்பொழுதும் உணருவதில்லேயே! ஆனால், அவர்களுடைய புலனுணர்வில் தெளிவுண்டாகுமாளுல் அவர்கள் எல்லாவற்றையும் விரைந்து உதறித்தள்ளி விடுவர். அப்பொழுது அவர்கள் '**பொருள்களின் இயற்கையைக்**' கண்டறிய முயல்வர். 'மரணத்திற்குப்பின் மனிதனுடைய நிலே என்ன?' என்னும் விஞ இன்று அல்லது நேற்றுத் தோன்றியது அன்று! அது என்றுமுள்ள ஒரு பிரச்சினேயாகும்.

(பொ. இ; பகுதி 3, 1040-1075)

என்று கூறி, 'சாவைக் கண்டு அஞ்சாதீர்!' என்று மனித இனத்திற்கு அவர் ஆறுதல் கூறுகிருர்.

அடுத்துள்ள நான்காம் பகுதியில் காதலுணர்வின் இயல்புகள் விளக்கப்பெறுகின்றன. காதலின் இயல்புகளே எடுத்துரைக்குமிடத்து, ஆசிரியர் பாலுணர்வின் பண்புகளேயும் சுட்டிச் செல்லுகிருர்:

....இப்புலனுகர்ச்சி நமக்கு இன்பம் ஊட்டுகிறது. அதை நாம் காதல் என்கிறேம். ஆனால், காதலின் இன்பவெறியில் வடித்தெடுக்கப்பட்ட சில துளிகள் இதயத்தினுள் விழுந்தவுடன், உள்ளத்தே கொடிய கவலே குடிபுகுந்து விடுகிறது. அன்புறு

காதலி அருகில் இல்லை. எனினும், அவளுடைய வடிவம் கண்ணைவிட்டு நீங்குவது இல்லை; அவளுடைய இன்புறு பெயர் காதில் ஒலித்துக்கொண்டே இருக்கும். இத்தகைய காதலில் உண்டாகும் கற்பனைகளை அடியோடு ஒழித்துவிடுவது மிகவும் சிறந்தது. காதலாகிய உணவை உட்கொள்ளாது பட்டினியாக இரு! மனத்தை வேறு பக்கத்தில் திருப்பு! கிடைக்கின்ற பெண்ணிடத்தில் உன் காமவெறியைத் தணித்துக்கொள்! அவ்வுணர்ச்சியைக் குறிப்பிட்ட ஒரு பெண்ணிடத்தில் செலுத்தினால், துன்பம் மலையாகக் குவிந்துவிடும்; மனப்புண் உண்டாகும். நீ காதல் உணர்ச்சியைப் பெருக்குவாயானால், மனப்புண்ணை மேலும் வளர்ப்பதாக முடியும்; புதிதாகக் காதலில் மீண்டும் ஈடுபடாமல், தெருவில் காணும் பெண்கள் பின்னால் அலைந்துதிரிந்து பொழுதைப்போக்கு! அவர்கள் பின்னால் அலைந்துதிரிந்து பொழுதைப் போக்குவதன் மூலம் காதலால் உண்டான புண்ணிற்குக் களிம்பிட்டுக் காதல் நோயைத் தணித்துக்கொள்வாயாக! அவ்வாறு செய்யாவிட்டால் நாளும் நாளும் பித்து அதிகரிக்கும். அதனால் உண்டாகும் கடும்வேதனை உள்ளத்தை அரித்துத் தின்றுவிடும்.

எனவே, ஒருத்திக்கு நீ அடியமையாவதற்கு முன்பு, 'எவனொருவன் காதலில் ஈடுபடாது விலகி வாழுகிறானே அவன் காதலின் பரிசை இழப்பதில்லை' என்பதை அறிவாயாக! காதலில் ஈடுபடாதவனே துன்பங்கலவாத புலனின்பத்தில் மூழ்கித்திளைக்க முடியும். உனக்கு எங்குச் சிந்தனை உரிமை இருக்கிறதோ அங்குதான் உண்மையான இன்பத்தை நுகர முடியும். இன்ப வெறியால் துடிக்கும்பொழுதும், காதலருடைய வெறி அவர்களைத் துன்ப இருளில் அலைக்கழிக்கின்றது; குருட்டுத்தனமான தவறுகளைச் செய்யத் தூண்டுகிறது. கைகளினாலும், கண்களினாலும் முதலில் அனுபவிக்க வேண்டிய இன்பத்தைக் காதலன் அனுபவிக்கத் தயங்குவான். எதை அவர்கள் பின்தொடர்ந்து சென்றார்களோ, அதை அவர்கள் பிழிந்தெடுத்துவிடுகின்றனர். அதனால் உடலுக்குத் துன்பத்தை உண்டாக்கிவிடுகின்றனர். அடிக்கடி பற்களை இதழ்களில் பதித்து விடுகின்றனர். வாயினை முத்தத்தால் தாக்குகின்றனர். எனவே, துன்பம் கலவாத முழு நிறைவுடைய இன்பமாக அது அமைவதில்லை. மறைமுகமாக எரிச்சலூட்டும் பண்பு இதில் பதுங்கிக்கிடக்கிறது. ஐம்புலன்களாலும் இன்பம் நுகர்கின்றபொழுது எவ்வாறாகிலும் அவற்றிற்கு ஊறுவிளைப்பதால்தான் அது பைத்தியமூட்டுகிறது. ஆனால், காதல் தெய்வமாகிய வீனஸ் காதல் விளையாட்டுக்களில் உண்டாகும் துன்பங்களைத் தணித்துவிடுகிறாள்; இனிமை கலந்த இன்பம் கடிப்பதைக் கட்டுப்படுத்துகிறது. எந்த உடல் அவனுக்குக்

காமவெறியை ஊட்டியதோ அந்தவுடலின் மூலமே, தன்னுடைய வெறியைத் தணித்துக் கொள்ளலாம் என்று அவன் நம்புகிருன்.

ஆனுல், இயற்கை இதை எதிர்க்கிறது. வேறுவகையில் உடற் பசியைத் தணித்துக்கொள்ளுமாறு அவனைத் தூண்டுகிறது. மனிதனுடைய நுகர்ச்சி வேட்கைகளில், காதல்தான் இத் தகைய இயல்புடையதாக இருக்கிறது. இன்பம் நுகர நுகர, நுகர்ச்சி வேட்கை கொழுந்துவிட்டு எரியத் தொடங்குகிறது. உணவும், நீரும் மனித உடலின் குறிப்பிட்ட உறுப்புக்களின் வேட்கையைத் தணிக்கின்றன. அவற்றில் எழும் விருப்பம் எளிதில் நிறைவு அடைந்துவிடுகிறது. ஆனுல், காதலியின் கவர்ச்சிமிகு முத்தத்திலும், எழில்மிகு தோற்றத்திலும் காதலன் இன்பத்திற்காகச் சில சித்த உருவங்களைத் தவிர எதையும் தேர்ந்து காண்பதில்லை. நீர் வேட்கைகொண்ட மனிதர்கள் கனவில்கூட நீரைப்பருகுவதற்கு எண்ணி யேங்குவதைப் போல விருப்பமிக்க நம்பிக்கை அவன் மனத்தில் சுற்றிச் சுழலுகிறது. ஆனுல், அவனுடைய வேட்கையைத் தணிக்க அங்கு நீரில்லை. அதனுல், நீருக்குப் பதிலாக நீரின் சாயலையுடைய வடிவத்தைக் கைப்பற்ற அவன் வீணே முயலுகிருன். வேட்கையினுல் உண்டாகும் துன்பத்தினுல் என்றும் அவன் அவதிப்படுகிருன்.

வரப்போகும் பேரின்பத்தின் அச்சாரமாக இளமையின் வண்ணமலரைக் காதலர் தழுவிச் சுவைக்கின்றனர். பெண் வடிவத்தில் வீனஸ் தன்னுடைய வித்தினை ஊன்றுகின்றபொழுது, ஆர்வத்தோடு அவர்கள் உடலை உடலோடும், இதழை இதழோடும் அழுத்துகின்றனர் ; இருவர் வாயிலுமூறும் இனிய நீரை ஒன்ருகக் கலக்கச் செய்கின்றனர். ஆனுல், இவையெல்லாம் வீண்முயற்சியாகும். அன்புறு காதலியின் தசையில் ஒரு பகுதியை அவனுல் தொடாமல் அணுக முடிவதில்லை. ஒருவருக்கொருவர் மெய்ம்மறந்த மகிழ்ச்சியாகிய வெறி உணர்ச்சியில் வாழ்க்கையைப் புதைத்துக்கொள்ள முடிவதில்லை...இதனுல் அவர்கள் மனநிறைவு அடைவதில்லை. திரும்பத் திரும்பக் காமக் களியாட்டத்தில் அவர்கள் ஈடுபடுகின்றனர். அவர்களுடைய ஆற்றல் சிதறுண்டு வீணுகப்போகிறது ; உழைப்பு புறக்கணிக்கப்படுகிறது; பேரும்புகழும் மங்கி மறைந்துவிடுகிறது; இதற்கிடையே செல்வமெல்லாம் அழிந்துவிடுகிறது. சொகுசுமிக்க இன்ப வாழ்க்கைப் பொருள்களுக்காகத் தேடிய பொருள் பாழாக்கப்படுகிறது. இன்பக் களியாட்டத்திற்கு இடையே ஒரு சிறு தவருன எண்ணம் அவர்களிடையே எழுமானுல் எல்லாம் தலைகீழாகப் போய்விடும் 'வாழ்க்கைச் சோம்பலிலும் பற்ருக்குறையிலுமே கழிய

வேண்டுமா' என்ற எண்ணம் தோன்றும். மானக்கேட்டிலிருந்து தோன்றும் மனச்சான்றின் குறுகுறுப்பு மனிதனை ஆட்டிப் படைத்துவிடும். அல்லது காதலி கவனக்குறைவாகச் சொல்லும் ஒரு சொல் அவனைப் பேயறைந்தவன் போல ஆக்கிவிடும்; அல்லது அவளுடைய மையுண்ட கண்கள் மையல்கொண்டு மயங்குமானால், அவள் வேறு யாரையோ நாடுகிறாள் என்ற ஐயம் அவன் உள்ளத்தே தலையெடுக்கும். அல்லது அவளுடைய புன்முறுவலில் மனக்காழ்ப்பு பளிச்சிடுமானால் போதும்! அவள் அவனைக் காதலித்துக் கொண்டிருக்கும் அதே நேரத்தில், அது குமுறும் எரிமலையாகிவிடும்; இதனால் கண்ணை மூடிக்கொண்டிருக்கும் பொழுதே காதல் 'பொய்யாய்ப் பழங் கதையாய்'ப் பயனற்றுப் பாழாய்ப் போவதை நாம் காண லாம்:

எனவே, நான் முன் எச்சரிக்கை செய்ததுபோல வருமுன் காப்பதற்கு விழிப்பாக இருப்பதே நல்லது! எப்பெண்ணிடமும் மயங்கிச் சிக்கிக்கொள்ளாதே! விழிப்பாக இரு! காதலெனும் கண்ணியில் விழாது காத்துக்கொள்ள முயல்வாயாக! அது ஒன்றும் கடினமான செயலன்று! ஆனால், ஒருமுறை வலையில் வீழ்ந்துவிட்டாலோ, அதிலிருந்து தப்பிப் பிழைத்துத் திரும்பு வது என்பது எவராலும் இயலாத செயலாகும்!

(பொ. இ; பகுதி 4, 1058-1148)

இவ்வறிவுரை 'எது இன்பம்' என்பதை விளக்கத் தொடங்கி, 'காதல் என்பது என்ன?' என்பதற்குத் தெளி வற்றதும் நாகரிக மற்றதுமான கருத்துக்களை எடுத் துரைத்து, இறுதியில் 'காதல் வலையில் சிக்கிக் கொள் ளாதே' என்று எச்சரிக்கை செய்வதோடு முடிவடைகிறது. இப்பகுதியில் லுக்கிரிஷஸ் அறத்தைப் பற்றிச் சிறிதும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. 'ஒருத்தியைக் காத லித்து அவளுடன் ஒழுங்காக வாழ்வது இன்ப வாழ்க்கை யாகாது' என்ற சித்தாந்தத்தை உலகிற்கு உணர்த்த முன் வந்த ரோமானியரான லுக்கிரிஷஸ், வடமொழியில் 'காம சாத்திரங்களை' எழுதிய அறிஞர்களுக்கு எவ்வகையிலும் இளைத்தவரல்லர் என்று நாம் கூறலாம். அவருக்குக் காதல் என்றாலே கசக்கிறது; தெருவில் திரியும் பெண் ணிடம் பெறும் இன்பமே சிறந்ததாகத் தோன்றுகிறது. அவருடைய ஆளுமையிலும், பண்புநலனிலும் அழியாது இடம் பெற்ற களங்கத்தால் உண்டான மனக்கோட்ட மாக இவை இருக்க வேண்டும். இதனால்தான் அவர்,

அழகற்ற பெண் ஒருத்தி ஆடவன் ஒருவனுடைய காதலைப் பெறுவது தெய்விக ஆணையாலோ, ஊழ்வினையாலோ அன்று. ஒரு பெண் தன்னுடைய அடக்கமான நடையுடைத்தோற்றத்தாலும், நேர்த்தியான ஒப்பனையாலும் அடிக்கடி தன்னுடைய பரிசைத் தானே வெற்றிகொள்ள முடியும். நீ ஒரு பெண்ணோடு வாழத்தலைப்பட்டால், இதை நீ எளிதில் உணரலாம்! அசைக்க முடியாத உள்ள உறுதியைச் சிறுசிறு தாக்குதல்களால் நெகிழ்ச்சியுறச் செய்வது எளிது. உலகில் பன்னெடுங் காலமாக இருந்துவரும் திட்பமான பாறையின் மீது அடிக்கடி நீர் வந்து மோதுமானால், அப்பாறையும் பொடிப் பொடியாகத் தகர்ந்து போய்விடும் அல்லவா?

(பொ. இ; பகுதி 4, 1277-1287)

என்று அவர் கூறும் கருத்து, இன்பம் ஒன்றையே குறிக்கோளாகக்கொண்டு வாழ விரும்புவோர்க்குக் காட்டும் வழியாகத்தான் இருக்க முடியும். 'பொருள்களின் இயற்கை' என்ற நூலின் இப்பகுதியில்தான், அதன் ஆசிரியர் அறங்கூறும் அறவோராகத் தோன்றாமல், காமக் களியாட்டத்தில் ஈடுபாடுமிக்க சிற்றின்பவாதியாகக் காட்சியளிக்கிறார்.

தம் நூலின் ஐந்தாம் பகுதியின் தொடக்கத்தில் எபிகூரஸின் மாண்பினையும். அறநெறியில் அவர்பெற்ற அறிவொளியையும் லுக்கிரிஷஸ் வழிபாட்டுணர்ச்சியோடு எடுத்துரைக்கிறார்.

இந்த ஞானியினுடைய தத்துவத்தின் நுண்ணறிவுத் திறனைக் கவிதையில் வடித்துத் தருவது எளிய செயலன்று. அவருடைய சிறப்பியல்புகளைச் சுட்டிக் காட்டுவதற்கு ஏற்ற சொல்லாற்றல் என்னிடம் இல்லை. அவர் உள்ளத்தால் உணர்ந்தும், அறிவால் ஆராய்ந்தும் கொடுத்த அப்பரிசைப் பெறுவதற்குரிய பக்குவத்தை எந்த மனிதரும் அடையவில்லை. நான் அவரைக் கடவுள் என்றே சொல்லுவேன். எக்கடவுளாவது அவரைப் போன்று தெளிவுமிக்க வாழ்க்கை நெறியை உலகிற்கு வகுத்தளித்துள்ளதா?

(பொ. இ; பகுதி 5, 1-7)

என்னும் பகுதியில் எபிகூரஸை அவர் மாபெரும் ஞானியாகப் போற்றுகிறார். அவரைத் தெய்வத்தோடு ஒப்பாகக் கருதும் கவிஞர் அவர், மனிதனாகப் பிறந்தாலும் தெய்வமாகப் போற்றத்தக்க சிறப்புடையவர் என்று அறிவிக்கிறார்.

> மனவமைதியற்ற நிலையில் எந்த மனிதனாலும் நன்றாக வாழ முடியாது. நாம் எல்லோரும் மனவமைதியோடு வாழ வழி காட்டிய அப்பெருந்தகையைத் 'தெய்வம்' என்று சொல்லாமல் வேறு என்னவென்று கூறுவது? (பொ. இ; பகுதி 5, 10-11)

என்பது அவருடைய கேள்வியாகும்.

உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் இன்பத்தை நாடுகின்றன. மனிதனும் இன்ப நாட்டத்தையே இயல்பூக்கமாகக் கொண்டிருக்கிறான். ஆனால், அவனால் இன்பமாக வாழமுடிகிறதா? ஐம்புல நுகர்ச்சியோடு மனநிறைவும் சேர்வதுதானே உண்மையான இன்பம்? அத்தகைய இன்பம் மனிதருள் எத்தனைப் பேருக்குக்கிட்டுகிறது? இன்பத்தை விரும்பி அல்லும் பகலும் அல்லற்பட்டு, ஆற்றாது கண்ணீர் வடிப்பவரன்றோ மிகுதி? அவர்களுக்கு வழி காட்டிய சிறப்பு எபிகூரஸுக்குரியதாகும். மனிதர்களைப் பிடித்து வாட்டும் அச்சங்களை அகற்றி, மனநிறைவோடு இன்பத்தை நுகருவதற்குரிய வழியைக் காட்டியமையால் அவர் தெய்வமாகப் போற்றத்தக்கவர் என்பது ஆசிரியருடைய துணிவாகும்.

பிறகு, அணுக்களின் கூட்டுறவால் உலகம் தோன்றிய வரலாற்றை விளக்கும் கவிஞர், உலகம் அழிவில்லாதது என்றோ, தெய்விகத்தன்மை வாய்ந்தது என்றோ கருதக் கூடாது என்பதற்குப் பல காரணங்களைக் காட்டுகிறார்.

> மண்ணுலகமும் ஒருநாளைக்கு அழிந்துவிடும் என்பது என்னுடைய சிறப்புமிக்க கோட்பாடு. (பொ. இ; பகுதி 5, 100)

என்று பல காரணங்கள் காட்டி ஆசிரியர் தெளிவுறுத்துகிறார்.

பின்னர் லுக்கிரிஷஸ் இறைமையியலை, "இயற்கை நிகழ்ச்சிகளின் காரண காரியத் தொடர்புகளால் உண்டாவது; அவை தற்செயல் நேர்வுகள் அல்ல; இறுதி விளைவு நோக்கிய ஒரு மூலத்திட்ட அமைப்பின் கூறுகளே" என்று குறிப்பிடுகிறார். உலகத்திற்குத் தோற்றம் என்பது ஒன்று உண்டு. தோன்றிய பொருள்கள் எல்லாவற்றிற்கும் முடிவு உண்டு என்பது இயற்கையின் நியதி. எனவே, உலகமும் ஒரு நாளைக்கு அழிந்தேபோகும். விண்ணிலே இயங்கும்

கோள்கள், மீன்கள் ஆகியவற்றின் இயக்கத்தைப் பௌதிக நூலின் அடிப்படையில் அவர் விளக்குகிறார். தெய்வங்களின் இருப்பினை ஏற்றுக்கொள்ளாமலேயே உலகத்தின் இளமைப் பருவத்தை விளக்கமுடியும் என்று அவர் கருதுகிறார். இவ்வடிப்படையில் செடி கொடிகளும், மரங்களும், விலங்குகளும் படிப்படியாக வளர்ந்து சிறந்த வரலாற்றைக் கூறுவதோடு மனித வாழ்க்கையில் உண்டான முன்னேற்றத்தையும் அவர் சிறப்பாகக் காட்டுகிறார்.

நாகரிகம் அடையாத ஆதிகாலத்தில் காட்டுவாழ் மனிதனாக இருந்தநிலையையும், மனிதன் நாடோடியாக இங்குமங்கும் அலைந்துதிரிந்த நிகழ்ச்சிகளையும் கவிஞர் இயற்கையழகும், இலக்கிய இன்பமும் ததும்பப் பாடியுள்ளார். வரலாற்று நூலார் கூறும் பழைய கற்கால, புதிய கற்கால, வெண்கலக்கால நாகரிக நிலைகளை மனித இனத்தின் வளர்ச்சியில் உண்டான பல்வேறு காலக் கட்டங்களாகப் பிரித்து, நாகரிக வளர்ச்சியோடு மனித வாழ்வின் பல்வேறு நிலையங்களும் பையப்பைய வளர்ந்த வரலாற்றை லுக்கிரிஷஸ் விளக்குந்திறன் போற்றத்தக்கதாகும். சிந்தனை வளர்ச்சிபெறாத காலத்தில், மனிதன் அறநெறியில் ஒழுகியிருப்பானா என்ற ஐயம் நமக்கு எழலாம். கவிஞர் 'இரக்கப்படத்தக்க சைகைகளும் சிதைந்த சொற்களும் அறவாழ்வின் மூலாதாரமான சட்டத்தை அவர்களுக்கு அறிவுறுத்தியிருக்கும்' (1024-1025) என்று குறிப்பிடுகிறார்.

> மனிதன் பொருள்களைச் சேர்த்துவைத்துத் தனியுடைமை நெறியை வளர்க்கத் தொடங்கிய பிறகே, அவன் உள்ளத்தில் பன்னெடுங்காலமாகக் குடிகொண்டிருந்த அமைதி பறிபோயிற்று. பொன்னைக் கண்டுபிடித்த பிறகு, அதன் பகட்டிலே மயங்கிய மனித இனம் அதையே தெய்வமாகப் போற்றி வழிபடத் தொடங்கியது. இதன் விளைவாகப் 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்' தோன்றியது. மனித இனம் மனவமைதியற்று அல்லற்படத் தொடங்கியது; மன அமைதி

யுடைய எளிய வாழ்க்கை அன்றோ உண்மையான செல்வம்! மனித இனம் அதை மறந்து வீணுக அலேந்தலேந்து அழு கின்றதே! (பொ. இ; பகுதி 5, 1100-1102)

என்று அறியாமை நிறைந்த மக்களிடத்து அவர் பரிவு கொள்கிறார்.

பொன்னுக்காகவும் புகழிற்காகவும் எண்ணியேங்கி மனச்சோர்வு அடைபவன் வாழ்க்கையின் உச்சநிலேயை அடைந்தாலும், உடனே அவன் வீழ்ச்சியுற நேருகிறது. அப்பொழுதும் அவன் மனவமைதியின்றி உழலுகின்ருனே என்று லுக்கிரிஷஸ் வருந்துகிருர். அந்நிலேயில்,

பெரியதொரு பேரரசிற்குத் தலேவனுக இருந்து வரம்பற்ற அதிகாரத்தையும் எல்லேயற்ற இன்பத்தையும் நுகர்வதைவிட, அமைதியான மனத்தோடு ஒரு குடிமகனுக வாழ்வதே மேல். (பொ. இ; பகுதி 5, 1108-1109)

என்ற முடிவிற்கு அவர் வருகிருர்.

மனிதனுக்குத் தெய்வங்களிடத்து எப்பொழுது, எவ் வாறு நம்பிக்கை உண்டாயிற்று என்பதையும் இப்பகுதி யில் ஆசிரியர் விரிவாகப் பேசுகிருர் :

அறியாமை நிறைந்த மனிதர்களால் தெய்வத்திடத்து நம்பிக்கை கொள்ளும் பழக்கம் உண்டாயிற்று. அதன் விளே வாக நம் நகரங்களில் எல்லாம் தெய்வங்களின் கோயில்கள் நிறைந்துவிட்டன. அந்நம்பிக்கை பலியிடுமாறு மனிதனேத் தூண்டிற்று. இன்னும் விழாக் காலங்களில் அக்கொடுஞ் செயல் நடைபெறுவதை நாம் காணலாம். (பொ. இ; பகுதி 5, 1161-1163)

சமயச் சடங்குகளும், சமயச்சார்பான நிலேயங்களும் இதையொட்டித் தோன்றி வளர்ந்ததையும், மனிதனுடைய உள்ளத்தை அறியாமை இருள் கவ்விக்கொண்டதனுல் அச்சம் என்ற அரக்கன் அங்கு நிலேயாக வாழத் தொடங்கிய வரலாற்றையும் அவர் எடுத்துரைக்கின்ருர்.

நாகரிகம் மருதநிலத்தில் மலர்ச்சியுற்ற காலத்தில் அரசுகள் எழுந்தன ; வேளாண்மைத் தொழில் செழித்தோங்கியது ; வாழ்வில் வளமும் ஓய்வும் கிட்டியது ; மனிதனுடைய சிந்தனே வளர்ச்சியுற்றது; கலேகள் போற்றி வளர்க்கப்பட்டன என்றும்

> நிலைபெற்று விளங்கக்கூடிய மாவீரர்களின் செயற்கருஞ் செயல்களை முதன்முதலாகக் கவிஞர்கள் கவி புனைந்து போற்றினர். கவிஞர்கள் இலக்கியம் படைக்கத் தொடங்கிய பொழுது எழுத்துமுறை புதிதாகத் தோன்றியது.
>
> (பொ. இ; பகுதி 5, 1148-1152)

என்று அவர் குறிப்பிடுவது நம்முடைய அறிவினை விரிவு படுத்துகிறது. பண்டைத் தமிழ் இலக்கியங்களில் கூறப் பெறும் 'மருதநில' வாழ்க்கையை இது நினைவூட்டுகிறது. இதனால், உலகெங்கும் நாகரிகம் மலர்ச்சியுற்றது மருத நிலத்தில் என்பது புலனாகின்றது. இங்கு வாழ்ந்த மக்களே கலைகளைப் போற்றி வளர்த்தனர். கலைவளர்ச்சிக்கு மனவமைதியும் ஓய்வும் தேவை. மருதநில வாழ்க்கையில் வயிற்றுக் கவலைக்கு இடமில்லை. இயற்கை அன்னையின் அருளினாலும், மனித முயற்சியாகிய உழைப்பினாலும் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள் எளிதில் அங்குக் கிடைத்தன. எனவே, கலைகளின் வளர்ப்புப் பண்ணையாகவும் நாகரிகத்தின் தொட்டிலாகவும் மருத நிலம் மாட்சியுற்றது. இதை, ரோமானியரான லுக்கிரிஷஸ் இலக்கியச் சுவைநலம் கனியப் பாடியுள்ளார். இப் பகுதியின் இறுதி அடிகள் நம் காதுகளில் என்றும் ஒலிக்கத்தக்க சிறப்புடையன.

> மனிதன் தனக்குரிய வழியைத் தானே அமைத்துக்கொண்டான்! வாழ்க்கை அனுபவமும், புதியனவற்றைக் கண்டறிய வேண்டும் என்ற ஆர்வமும் கொண்ட மனித உள்ளத்தின் சலியாத முயற்சியும் முன்னேற்றப் பாதையில் பீடுநடை போட்டு, வெற்றி புன்முறுவலுடன் செல்லுமாறு அவனைத் தூண்டின; வாழ்வின் பரிசுகள் அனைத்தையும், இன்பங்கள் அனைத்தையும் அவன் ஓயாது உழைத்ததனால் பெற்றான். உலகமெனும் கடலிலே வீசிய அனுபவம் என்ற அலைகள், புதியபுதிய பொருள்களைக் காலமெனும் கரையோரத்தில் கொண்டுவந்து ஒதுக்கின. அவற்றைப் பகுத்தறிவெனும் காற்று அறிவொளி பெற்ற மனிதரின் மன மேடைகளில் கொண்டு சென்று குவித்தன. அதனால், மனித உள்ளத்தில் ஒவ்வொரு பொருளும் தெளிவும் ஒளியும் பெற்றது; வாழ்க்கையென்ற மலையின் சிகரமாகிய கலையழகு தன் முழுநிறை வடிவத்தோடு ஒளி வீசலாயிற்று.
>
> (பொ. இ ; பகுதி 5, 1452-57)

**'பொருள்களின் இயற்கை'** என்ற இந் நீதிநூலின் ஆறுவது பகுதியில், வானத்தின் இயற்கை இயல்புகளையும்,

அதையொட்டி மாறிமாறித் தோன்றும் வானிலையின் போக்கிற்குரிய காரணங்களையும் ஆசிரியர் விளக்குகிறார். வானவெளியில் நம் ஆர்வத்தைத் தூண்டும் மின்னல், இடி, மேகக்கூட்டம், சுழல்காற்று, மழை போன்றவற்றையும், மண்ணகத்தில் தோன்றும் நிலநடுக்கங்கள், கடல் கொந்தளிப்புகள், எரிமலைகள், பேராறுகள், தீராநோய்களை உண்டாக்கும் நீர்நிலைகள், வியப்பூட்டும் ஊற்றுக்கள் முதலியவற்றோடு காந்த சக்தி போன்ற அறிவியல் ஆராய்ச்சிக்குரிய பல பொருள்களின் இயல்புகளைப் பற்றியும் அவர் பேசுகிறார். இவற்றின் உச்சநிலையாகக் கொள்ளை நோய்களைப்பற்றிய செய்திகளைச் சொல்லுமிடத்து, ஆதென்சு மாநகரில் கோரதாண்டவம்புரிந்த பிளேக்கின் (Plague) கொடுமைகளை, அச்சமும் அருவருப்பும் அடையும் வகையில் லுக்கிரிஷஸ் நம் மனக்கண் முன்னால் கொண்டுவந்து நிறுத்துகிறார்.

இக்கவிதையின் இறுதிப் பகுதி, சமய நம்பிக்கையின் பகட்டு ஆரவாரத்தினாலும், எல்லாம் விதிப்படியே நடக்கும் என்ற நம்பிக்கையாலும், சடங்குகளின் மூலம் தெய்வங்களின் சீற்றத்தைத் தணித்துவிடலாம் என்ற மூட நம்பிக்கையாலும் உண்டான கொடியதொரு காட்சியைப் படம்பிடித்துக் காட்டுகிறது. இளவேனிற்காலத்தின் ஒளிப் பிழம்பைப் போன்று விளங்கும் வீனசின் வெற்றியைப் போற்றும் 'போற்றித் திருவகவலாகத்' தொடங்கிய இக் கவிதை, இறப்பின் அச்சுறுத்தும் கோரக்கூத்தோடு முடிவடைவது நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. ஒருகால் தன்னை மறந்த நிலையில் உண்டான மனச்சோர்வில் கவிஞன் மூழ்கிக்கிடந்ததை எதிரொலிப்பதாக இம் முடிவு இருக்குமோ என்ற எண்ணம் நம் உள்ளத்தில் எழுகிறது.

ஒருசில ஆராய்ச்சியாளர்கள் 'எல்லாம் இன்பமயம்' என்ற நோக்கோடு வாழ்ந்த கவிஞர், இப்படிப்பட்டதொரு முடிவினையுடைய கவிதையைப் படைத்து இருக்கமாட்டார் என்று கூறுகின்றனர். மனிதன் இறப்பைக் கண்டு அஞ்சுவதையும், இறப்பைக் கண்டு அஞ்சுவதாலேயே தெய்வங்களை அவன் நம்ப நேருகிறது என்ற கொள்கையையும் அவர் தகர்த்தெறிய முயலுகிறார். அம்முயற்சியினுடைய

கடைசிக் கட்டத்தின் ஒரு பகுதியாகவே ஆதென்சு மாநகரத்தில் பிளேக்கு நோயால் உண்டான கொடுமையைச் சித்திரித்து, மனிதனுடைய மூடநம்பிக்கையும், தெய்வப் பக்தியும் இவ்வவலத்திற்குக் காரணம் என்பதை அவர் சுட்டிக்காட்டுகிருர். பின்னர் மனிதன் இன்பமாக வாழ்வதற்குரிய வழியைக்காட்ட அவர் திட்டமிட்டிருக்க வேண்டும். நூலினை முடிப்பதற்குள் ஆசிரியர் இறந்து விட்டதால், அந்நூலின் இறுதிப்பகுதி செம்மையான வடிவம் பெருமல் போய்விட்டது என்று மற்றொரு சாரார் கூறுகின்றனர்.

## லுக்ரிஷஸின் கவித்திறன்

இலத்தீன் மொழிக் கவிஞர்களுள் காப்பியப் புலவன் வர்ஜிலுக்கு அடுத்த நிலையில் நம்முடைய கருத்தைக் கவரும் கவிஞர் லுக்கிரிஷஸ் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை. அவருடைய கவிதையில் நாம் உணர்ச்சியின் வாய்மை தவருத ஆழத்தைப் பார்க்கிருேம். அத்துடன் நேர்முகமாக எடுத்துரைக்கும் புதியதொரு இலக்கியத் திறனைக் கையாளுவதால் உண்மையானதொரு மனிதன் நேரிடையாக நம்மிடம் பேசுவதைப் போன்று நமக்குத் தோன்றுகிறது. அதனுல், அது உடனே நம்முடைய உள்ளத்தைக் கவர்ந்து விடுகிறது.

'சமயம் என்பது என்ன?' என்ற வினவிற்கு விடை சொல்வது மிகவும் கடினம். நம்முடைய கவிஞர் 'உண்மையான சமயம் எது?'வென்று விளக்கும் பகுதி, இருபதாம் நூற்ருண்டின் சிந்தனையாளர்களுடைய சிந்தனைக்கும் தூண்டுகோலாக அமைந்துள்ளது எனலாம்.

> தலையை முக்காடிட்டுக் கொண்டு, ஓயாது கல்லின் பக்கம் திரும்பி மண்டியிட்டு வணங்குவதுதான் சமயமா? பலிபீடங்கள் தோறும் சென்று பலியிட்டு வருவதுதான் சமயமா? நிலத்தில் குப்புற விழுந்து வணங்குவதுதான் சமயமா? கோயில்களிலுள்ள தெய்வங்களுக்கு முன்னுல் கைகளைக்கூப்பி நின்று வணங்குவதுதான் சமயமா? கோயில்களில் விலங்குகளின் இரத்தத்தைத் தெளிப்பதுதான் சமயமா? தெய்வங்களின் முன்னுல் நின்று வேண்டுகோளுக்குமேல் வேண்டுகோளை அடுக்கிக்கொண்டே சென்று, 'இவையெல்லாம் கைகூடுமானுல் அதைச் செய்கிறேன், இதைச் செய்கிறேன்' என்று நேர்த்திக்

கடன் செலுத்துவதாகக் கூறித் திரிவதுதான் சமயமா? அல்லது எதையும் அமைதியான மனநிலையுடன் கூர்ந்து நோக்கித் தெரிந்துகொள்ளுவது சமயமா? (பொ. இ; பகுதி 3, 160-68)

என்பவை எபிகூரஸின் வினக்கள். இவற்றிற்கு விடை கூறும் வகையில் அமைந்ததே லுக்கிரிஷஸின் '**பொருள் களின் இயற்கை**' என்ற கவிதையாகும். இந் நீதிநூலில் செறிந்து காணப்படும் அறவுரைகளும், அறிவுரைகளும் கிரேக்க நாட்டு எபிகூரஸின் போதனைகளாகும். அவற் றைக் கலையழகுடன் கற்பவர் உள்ளத்தில் என்றும் நிலைத் திருக்குமாறு செய்த பெருமை ரோமாபுரிக் கவிஞராகிய லுக்கிரிஷஸிற்கே யுரியதாகும்.

எபிகூரஸின் கருத்துக்களாகிய கற்களைக் கொண்டு இலத்தீனென்னும் சுண்ணத்தையும், கற்பனையென்னும் நீரையும், உணர்ச்சியென்னும் வண்ணத்தையும் பயன் படுத்திக் கண்டவர் வியக்கத்தக்க வகையில், தம் குரு நாதருக்கு ஒரு திருக்கோயிலை லுக்கிரிஷஸ் கட்டியுள்ளார். அத்திருக்கோயிலுக்குச் செல்லுகின்றவர்கள் எபிகூரஸின் உண்மையான தெய்வத் திருமேனியைக் காணுமல் திரும்பி வரமுடியாது. இவ்வகையில் எபிகூரஸின் கொள்கைகளை யும், கோட்பாடுகளையும் உலகம் எளிதில் உணர்ந்து போற்றுமாறு செய்த பெருமை வேறு எக்கவிஞருக்கும் கிடையாது. ஏன்? மேலைநாடுகளில் வேறெந்த தத்துவ ஞானிக்கும் இத்தகைய கவியரசன் சீடனுக அமைந்ததே இல்லை என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

லுக்கிரிஷஸின் கற்பனைத்திறம் கற்பவர் உள்ளத்தைப் பேரின்பக் கடலுள் திளைக்கச் செய்வதாகும். 'உலகின் அனற்பிழம்பான சுவர்கள்' என்று அவர் சூரியனைக் குறிப் பிடுவது, அவருடைய படைப்புக் கற்பனையாற்றலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

பகைவரென்றும் நண்பரென்றும் பாராது இரு சாராரையும் தம்முடைய கால்களினுல் மிதித்துக் கொல் லும் போர்க்களிறுகளைப் பற்றிய வருணனை அந்நூலில் உயிர்த்துடிப்புடன் காணப்படுகிறது.

இந்தியாவிற்கு வேலியாக விளங்கும் பாம்புக் கைகளைக் கொண்ட யானைகள், தங்கள் உடலாலேயே மதில் சுவர் அமைத்ததைப் போன்று தோன்றுகின்றன.

(பொ. இ ; பகுதி 5, 1370-75)

என்று குறிப்பிடும் பகுதி இந்திய யானைகளைப் பற்றிச் செவி வழியாக அறிந்த செய்திகளை அவர் கலை நயத்தோடு எடுத்துரைப்பதாகும். பறவைகள், விலங்குகள் இயற்கைப் பொருள்களான மலை, காற்று, பருவங்கள், வெள்ளப் பெருக்கு போன்ற பலவற்றைச் சிறிய சொற்களால் உணர்ச்சித் துடிப்புடன் அவர் சொற்சித்திரங்களாகத் தீட்டியுள்ளார். ரோமாபுரியின் வால்ட்விட்மன்[23] என்று புகழப்படும் அளவிற்கு லுக்கிரிஷஸ் இயற்கைப் பொருள் களிடத்து அளவற்ற காதல் கொண்டுள்ளார். இருவரும் 'இறப்பை' மிக்க மகிழ்ச்சியோடு போற்றி வரவேற்கின்ற னர். இயற்கை அழகில் உள்ளத்தைப் பறிகொடுத்த தோடு அமையாது, இயற்கைப் பொருள்களின் அமைப் பிலும், இயக்கத்திலும் பல அரிய அறநெறிக் கருத்துக் களின் உட்பொருளைக் கண்டு அவர்கள் மகிழ்கின்றனர்.

### லுக்கிரிஷஸின் செய்தி

லுக்கிரிஷஸ் உலகிற்கு வழங்கும் செய்தி என்ன? மக்களாகப் பிறந்தவர்கள் இன்பமாக வாழவேண்டும் என்பதே அவருடைய நற்செய்தி. இன்பமாக வாழ்வதற்கு இறப்பைப் பற்றிய அச்சமும், அதனால் உண்டாகும் தெய்வ நம்பிக்கையும் இடையூறாக உள்ளன. இவ்வச்சத்தை அகற்றுவதற்கு அறியாமையைப் போக்கி, அறவொளியை மனிதன் பெற வேண்டும். அறிவொளியைப் பெற அவன் மண்ணுலகத்தில் உள்ள பொருள்களின் உண்மை யான இயல்புகளைக் கண்டறியவேண்டும். பொருள்களின் உண்மை இயல்புகளை ஆராய்ந்தறிகின்றபொழுது இயற் கையில் மறைந்துகிடக்கும் நெறிமுறை நம் கண்களுக்குப் புலனாகும். அதனால் உலக நிகழ்ச்சிகளின் போக்கைப் புரிந்துகொண்டு, நெறியோடும் முறையோடும் நாம் வாழ லாம். அதனால், நாம் மனவமைதியைப் பெறலாம். மன வமைதியே மனிதனுக்கு இன்பம் பயக்கும்; அதைப் பெற முயலுவதே மனித வாழ்க்கையின் முடிந்த இலட்சியமாகும்.

என்பது மனித இனத்திற்கு அவர் வழங்கும் சிறப்புமிக்க செய்தியாகும்.

மனித இனத்தின் துன்பத்தைத் துடைத்துப் போக்க வேண்டும் என்ற துடிப்பே இக்கவிதையை இயற்றுமாறு லுக்கிரிஷஸைத் தூண்டியது எனலாம். மனித இனத் திடத்து ஆழ்ந்த பற்றும், உண்மையான அன்பும் கொண்ட மனிதஇன நலப்பற்றுளர் (Humanitarian) லுக்கிரிஷஸ் என்று நாம் கூறினல், அது மிகையாகாது.

லுக்கிரிஷஸ் ஒரு நல்ல கவிஞர்; சிறப்பு மிக்க சிந்தனை யாளர். இதில் யாருக்கும் ஐயுறவுகிடையாது. ஆனல், அவரிடத்துத் தெளிவான அறவியல் சிந்தனையைக் காண முடியவில்லை. அது மட்டும் அன்று. அவர் மனித வாழ்க் கையில் மாண்புமிக்க இயல்புகள் பல உள்ளனஎன்பதைப் புரிந்துகொள்ளவில்லை. அவருடைய அறவியல் நோக்கு எபிகூறிய தற்பண்பு வாய்ந்தாகக் காணப்பெறுகிறது. எல்லாவகையான பேராசைபிடித்த கொடுமைகளுக்கும் (அவை அரசியல், சமயம் அல்லது சமூகச் சார்புடையன வாக இருந்தாலும்) எதிராக மனித உரிமைகள் காப்பாற் றப்படவேண்டும் என்ற கொள்கையை அவர் எடுத்துரைக் கிருர். 'மனித உரிமைகள்' என்கின்ற பொழுது, அவர் சாதி, சமய, மொழி, இனம், நாடு ஆகியவற்றைக் கடந்த நிலையில், மனித இனத்தின் நன்மையைக் கருத்தில் கொண்டே அவர் பாடுகிருர். 'அச்சத்திலிருந்து விடுதலை' என்ற கருமுதல் கோட்பாட்டை லுக்கிரிஷஸைத் தவிர வேறு யாரும் இன்றுவரை மேலை உலகிற்கு அளித்ததில்லை.

அவர் ஆன்மாவைப்பற்றிக் கொண்டுள்ள கருத்து, இயற்கையை எபிகூரிய அறிவியல் கண்கொண்டு விளக்கி யுரைத்தமையால் தோன்றியதாகும். விறுவிறுப்பான விவாதத்திற்குப் பிறகு, அவர் ஆன்மா அழியும் தன்மை யுடையது என்ற முடிவிற்கு வருகிருர். இம்முடிவு தெளி வற்ற நிலையில் விரைவாகச் செய்யப்பட்ட முடிவாகத் தோன்றுகிறது. இறப்புவந்தவுடன் நாம் நம்முடைய உணர்வை இழந்துவிடுகிருேம். அதனல் நம்முடைய ஆணவம், ஆன்மா அனைத்தும் செத்துப்போகின்றன. எனவே, உள்ளத்தில் வெறும் பாழிடம் உண்டாகிறது. அதனல் இறப்பைப்பற்றிய அச்சமும் அடியோடு ஒழிக்கப்

பட்டு விடுகிறது; மறுபிறப்புக் கிடையாது. எபிகூரியக் கோட்பாட்டின்படி இது முதல் வெற்றியாகும். சாவினை வரவேற்கும் புதியதோர் உள்ள உறுதியைப் பெறுவதே இரண்டாவது வெற்றி என்பர்.

இல்வாழ்க்கையின் இன்பத்தையும், நல்லியல்பு களையும் லுக்கிரிஷஸ் திறம்பட விளக்குகிறார். அவ் வாழ்க்கையிடத்து அவர் ஆர்வமும், பரிவும் காட்டியுள் ளார். குடும்பத்தலைவன் இறப்பதால் அல்லலுறும் குடும் பத்தின் அவலநிலையைச் சொற்சித்திரமாக்கியுள்ளமை நம் உள்ளத்தை நெகிழ்விப்பதாகும். 'எப்படி வாழ வேண்டும்? எப்படி இறக்கவேண்டும்?'' என்ற சிறந்த பாடத்தை மனிதன் முதலில் கற்கவேண்டும் என்பது அவருடைய அவாவாகும்.

இவற்றைக் காட்டிலும் சிறந்ததொரு செய்தியை அவர் உலகிற்கு வழங்கியுள்ளார். அக்கருத்து அவர் காட்டும் வாழ்க்கை நெறிக்கு அடிப்படையாக அமைந்திருக் கிறது.

> தூய உள்ளம் உடையவர்களே
> உலகில் நலமாக வாழமுடியும்
>
> (பொ. இ ; பகுதி 5, 408)

என்னும் அவருடைய கொள்கை நமக்குப் புதியதன்று. திருவள்ளுவர் " மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்" என்று அறத்திற்குத் தந்துள்ள விளக்கத்தை, லுக்கிரிஷஸ் வேறு வகையாக எடுத்தியம்புகிறார். இக்கருத்து ஸ்டா யிக்கு தத்துவமாகவும் இருக்கலாம். இன்பத்தை நாடு வோரான எபிகூரியவாதிகள் அறத்தைப் புறக்கணிக்க வில்லை என்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

லுக்கிரிஷஸின் கருத்து விளக்கங்கள் யாவும், தீமை களின் பல்வேறு வடிவங்களைக் கடுமையாகத் தாக்குவன வாகவும், அவர் வாழ்ந்த காலத்திய ரோமாபுரியைப் பின்னணியாகக் கொண்டு அமைக்கப்பட்டனவாகவும் உள்ளன. அவர் மனிதப் பண்பின் உண்மையான மதிப் பைப்பற்றிப் புதியதொரு கருத்தைக் கொண்டிருந்தார். அதைப்போன்றே அறத்தைப்பற்றிய புதிய விளக்கம்

அவருடைய உள்ளத்தில் தெளிவின்றிப் படர்ந்து இருந்தது. அவருடைய எழுத்தோவியங்கள் அவரைச் சீர்திருத்தக் காரராகவும், சமுதாயக் கேடுகளை நையாண்டி செய்பவ ராகவும் நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. எனினும், அவர் தம்முடைய குருநாதரின் கோட்பாட்டு நெறியி லிருந்து சிறிதும் விலகிச் செல்லவில்லை. அவருடைய அறநெறிக்கொள்கை இன்ப நலக்கொள்கைச் (Hedonism) சார்புடையது. புலன்கள், உள்ளம், ஆன்மா ஆகியவற்றால் வரம்பில்லா இன்பத்தை நுகர்ந்து மகிழ்வதற்குரிய நெறி முறைகள் அவருடைய தத்துவத்தில் இடம் பெற்றுள்ளன. இதை 'வொலப்டாஸ்' (Voluptas) என்ற தொடரால் குறிப்பிடுவர். இவ்வின்பவியல் அறநெறியை அடைவதற் குரிய வழியை லுக்கிரிஷஸ் தம் நூலில் முறைப்படுத்திக் கூறியுள்ளார். புலனுகர்ச்சியால் பெறுவது மகிழ்ச்சி; உள்ளத்தால் பெறுவது மனநிறைவாகிய இன்பம், இதனை 'மனநலம்' என்று வள்ளுவர் கூறுவர்.

இவ்விரண்டையும் மிகினும், குறையினும் சமன் செய்து, களிப்பும் இன்பமும் சரிசமமாகக் கலந்த மன நலத்தை ஆன்மா மக்களுக்கு அளிக்கிறது என்பது லுக்கிரிஷஸினுடைய அறநெறிக் கொள்கையின் சார மாகும்.

லுக்கிரிஷஸ் பெற்ற புகழிற்கும், நம்முடைய கருத் தைக் கவருவதற்கும் உரிய மற்றொரு காரணம் அவர் வாழ்க்கையை அணுகிய முறையாகும். அவர் அரசியல், பொருளியல், சமூகவியல், கோட்பாடுகளைப் புதியதாக ஒன்றும் உருவாக்கவில்லை. பெரிதும் தனி மனிதனுடைய வாழ்க்கைப் பிரச்சினைகளைப் பற்றியே அவர் கவலைப் பட்டார். மனித சமுதாயம் விடுதலை பெறுவதற்கு மனித னுடைய மதிநுட்பம், மகிழ்ச்சி, அறத்திடத்துக் கொண்ட நம்பிக்கை ஆகியவை நன்கு வளர்ச்சியுற வேண்டும். என்று அவர் கருதினர்.

**லுக்கிரிஷஸும் வள்ளுவரும்**

தனிமனிதன் செம்மையானதும் முழுநிறைவுடையது மான வாழ்க்கையைப் பெற்று இன்பத்தை அடைய

வேண்டும் என்பது லுக்கிரிஷஸின் சித்தாந்தமாகும். மனித வாழ்க்கையின் முடிந்த பயன் மனநலமாகிய இன்பத்தைப் பெறுவதோடு முழுநிறைவு அடைந்துவிடுவதாக இக்கவிஞர் கருதுகிறார். ஆனால், 'அறத்தான் வருவதே இன்பம்' என்ற வள்ளுவரோ, வாலறிவன் நற்றாளைத் தொழுவதன் மூலம், 'பேராஇயற்கைப் பெருநிலையை' அடைவதே வாழ்க்கையின் குறிக்கோள் என்று குறிப்பிடுகிறார். வள்ளுவரும் மனிதன் நலமாகவும் இன்பமாகவும் வாழ்வதற்குத் தேவையான அறநெறியினை வகுத்துக் காட்டியுள்ளார். ஆனால், மனித வாழ்க்கையின் இலட்சியம் இதைவிட உயர்ந்தது என்பதையும் அவர் அறிவுறுத்தியுள்ளார். அதை அடைவதற்குரிய நெறிமுறைகளை வகுத்துக் கூறுவதில் வள்ளுவர் பேரீடுபாடு உடையவராக விளங்குகிறார். இவ்வகையில் வள்ளுவருடைய அறநெறிக் கோட்பாடு ஒப்புயர்வற்று விளங்குகிறது.

> லுக்கிரிஷஸின் அறநெறிக் கொள்கைகளுக்காக அவருடைய நூலினை உலகம் என்றும் போற்றவில்லை; அவரை அறவழி காட்டும் அறவோராக உலகம் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், புதியதோர் உலகைக் காணத் துடித்த அறநெறிச் சார்புடைய இலட்சியவாதியாக உலகம் அவரைப் போற்றுகிறது. அவருடைய இலட்சிய உலகில் மதிநுட்பம், அறம், இன்பம், உரிமை முதலியன சிறப்பிடம் பெற்று விளங்கவேண்டும் என்று அவர் கருதினார்.[24]

இதற்கு நேர்மாறாக வள்ளுவரை, வையத்து வாழும் மக்களுடைய அகவிருளை நீக்குவதற்கு ஞானத்திரு விளக்கை ஏற்றிய ஞானியாகவும், அறங்கூறும் அறவோராகவும் உலகம் போற்றுகிறது. இதற்கு மேலாக, அவர் சிந்தைக்கும், செவிக்கும் இன்பம் பயக்கத்தக்க முறையில் அறநெறிக் கருத்துக்களைக் கலைநயம் குன்றாத வகையில் தெள்ளத் தெளிய எடுத்துரைத்த கவிஞராவர். வள்ளுவருடைய முப்பால் எக்காலத்தவருக்கும், எந்நாட்டவருக்கும், எம்மொழியினருக்கும், எச்சமயத்தினருக்கும் பயன்படத் தக்க உயர்ந்த அறங்களையே எடுத்துரைக்கின்றமையால் 'உலகப் பொதுமறை' என்ற புகழைப் பெற்றுள்ளது. லுக்கிரிஷஸின் 'பொருள்களின் இயற்கை'யை அறநூல் என்பதைவிட 'ஓர் ஆராய்ச்சி நூல்' என்று கூறுதலே

பொருந்தும். அதில் அறத்தைப்பற்றிப் பேசப்பெறும் பகுதி, முழுநூலில் கால் பகுதியாகும். அது ஒரு 'சமூக இயல்' பற்றிய ஆராய்ச்சி நூலாகவே தோன்றுகிறது. இதனால் அதைத் திருக்குறளுக்கு ஒப்பானதோர் அறநூல் என்று நாம் கூறமுடியாது.

மனித இனத்தைத் தெய்வநிலைக்கு உயர்த்தக்கூடியது கல்வியென்று லுக்கிரிஷஸ் நம்பினர்.[25] அறிவு வளர்ச்சியின் பல்வேறு படிநிலைகளான அறம், இன்பம், உரிமை ஆகியவற்றிடத்து மனிதனுக்கு உண்மையான பற்றுதலைக் கல்வி உண்டாக்கும் என்பது அவருடைய நம்பிக்கை.

லுக்கிரிஷஸ் உலகமும், கடலும், வானும், உலகத்திலுள்ள உயிர்களும் அணுக்களின் சேர்க்கையாலேயே உண்டாயின; வேறெந்த ஆற்றலோ, கடவுளோ அவற்றைப் படைக்கவில்லை என்பதில் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டுள்ளார். திருவள்ளுவரின் கருத்தோ முற்றிலும் வேறுபட்டது. 'பரந்து கெடுக இவ்வுலகு இயற்றியான்' என்று கூறும் வள்ளுவர், 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்று நூலின் தொடக்கத்திலேயே இறைவனின் இருப்பை அழுத்தம் திருத்தமாக அறிவித்துள்ளார்.

லுக்கிரிஷஸ் கடவுளின் இருப்பில் கவலைப்படாதவராக இருந்தாலும், அவருடைய நூலின் தொடக்கத்தில் 'கடவுள் வாழ்த்து' ஒன்றை அமைத்திருக்கிறார். அது காதல் தெய்வமான வீனஸைப் (Venus) போற்றிப் பாடுவதாக அமைந்துள்ளதை நாம் காணுகின்றோம். இதனால், தாம் வாழ்ந்த காலத்தின் பழக்கவழக்கங்களுக்குக் கட்டுப்பட்டு இக்கடவுள் வாழ்த்தை அவர் அமைத்திருக்கலாம் என்று கூறுகின்றனர்.

லுக்கிரிஷஸ் காதலைப்பற்றிக் கொண்டுள்ள கருத்து அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று. ஒருவன் ஒருத்தியைக் காதலித்து, அவளோடு தன் வாழ்க்கையை இறுகப் பிணைத்துக்கொண்டு வாழ்வது இக்கவிக்குப் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றுகிறது. வான்மறை தந்த வள்ளுவர் பெருமான், முற்றிலும் இதற்கு நேர்மாறான கருத்துக் கொண்டவராவர். 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற

உயர்ந்த குறிக்கோள் வாழ்வினை அறத்துப்பாலில் மட்டு மல்லாமல், இன்பத்துப்பாலிலும் அவர் வலியுறுத்தி செல்லுகின்றார்.

தெருவில் திரியும் பொதுமகளிர் தரும் இன்பம் எளிதில் கிடைக்கக் கூடியது; துன்பமற்றது என்பது லுக்கிரிஷஸின் சித்தாந்தம். ஆனால், வரைவின் மகளி ரிடத்து ஒருவன் பெறும் இன்பத்தை வள்ளுவர் மிகவும் இழித்துக் கூறியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தக்க தாகும்.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று. (குறள் 913)

### லுக்கிரிஷஸின் சிறப்பியல்புகள்

சில சமயங்களில் லுக்கிரிஷஸின் கவிதை ஆமை வேகத்தில் நகர்ந்து செல்லுகிறது. உடனே பலரால் மிகச் சிறந்தது என்று போற்றத்தக்க அளவிற்கு மாண்புமிக்க உயர்நிலையை அடைந்துவிடுகிறது. லுக்கிரிஷஸ் ஒரு சிறந்த கவிஞர்; இயற்கைப் பொருள்களின் இயல்புகளைப் பகுத்தறிந்து பார்த்த அறிவியலறிஞர்; எதையும் காரண காரியத் தொடர்புபடுத்திச் சிந்திக்கும் சிந்தனையாளர். இம்மூவகைப் பண்புகளும் ஒருங்கே அமைந்த ஓர் அறிஞர் அவர். அவர் தம்முடைய கலையின்மூலம் அறிவியலை மாண்புற்று விளங்கச் செய்துள்ளார். இயற்கையிலும், இயற்கையின் விதிமுறைச் சட்டங்களிலும் கவிதை உள்ளடங்கிக் கிடக்கிறது. அவ்வியற்கைச் சட்டங்களைக் கவிஞன் என்ற முறையில், அவற்றின் உருவினை மாற்றியும், தோற்றத்தை மாற்றியும் செயல்துறைப் பயனில் நாட்டங்கொண்ட புதியதோர் உலகைப் படைக்க லுக்கிரிஷஸ் முயன்றார். பொருளின் உட்கூறுகளான அணுக்களும், அவற்றின் ஆழ்ந்த படைப்பாற்றல் சக்தி இயக்கத்தின் மோதலாலும் கலப்பாலும் இப்பேரண்டமும், அதிலுள்ள அனைத்துயிர்களும் தோன்றி, நின்று, நிலையழிந்து கெட்டுப் போகும் நிலைகளையெல்லாம் அவர் தம்முடைய கவிதையில் உலகத் தோற்றத்தின் முறைகளாகக் காட்டியுள்ளார்.

அவருடைய கவிதையில் இயற்கையின் சிறிய காட்சி களைப் புதியதோர் உணர்ச்சியுடன் அவர் வருணித்துள் ளமை கற்பவர் உள்ளங்களைக் கவருகிறது. அதனால், பண் டைக் காலத்தவருக்கு மட்டுமல்லாமல், இன்று வாழ்கின்ற வருக்கும் அது அழகுமிக்க சிறப்பியல்புகளை யுடையதாகத் தோன்றுகிறது. அழகிய பொருள்களிடத்துக் கவி அள வற்ற ஈடுபாடு கொண்டிருப்பதைப் போன்றே, அவற்றி னிடத்துப் பரிவும் கொண்டிருக்கிறார். அவர் இயற்கைச் யசக்திகளை உருவகப்படுத்திக் கூறுந்திறன் அவருடை அறிவியல் வியப்புக்கள் அனைத்தையும் கடந்துவிடுகிறது; பழைய புராணக்கதைகளின் எல்லைகளைக் கடந்து அப்பால் சென்றுவிடுகிறது. வானமாகிய தந்தைக்கும், நிலமாகிய தாய்க்கும் அவை நன்மைபுரிந்தாலும், அல்லது தீமைபுரிந் தாலும் புதியதொரு ஆற்றலைக்கொடுத்து அவற்றை வாழும் சக்திகளாக்கிக் காட்டுகின்றன. இங்கு அவரிடத்தி லுள்ள அறிவியலறிஞனும் கவிஞனும் ஒன்றாகி அமைதி யைக் காண விரும்புகின்றனர்.[26]

இத்தகைய கவிஞரின் படைப்பாகிய **'பொருள்களின் இயற்கை'** ஒரு மாபேரிலக்கியச் சாதனையாகும். ஆனால், அவருடைய ஆழ்ந்த உள்ளத்தையும் சிறப்புமிக்க மதி நுட்பத்தையும் இருபதாம் நூற்றாண்டின் முதற்பகுதியில் தான் உலகம் நன்குணர்ந்து போற்றத் தொடங்கியது. புதிய அறிவியல் முன்னேற்றத்தின் விளைவாக அவருடைய அறிவியல் ஆராய்ச்சியைச் சிறந்தவொன்றாக அறிஞ ருலகம் இன்று ஒப்புக்கொள்ள முன்வந்திருக்கிறது.

'பொருள்களின் இயற்கை' என்ற இந்நூலை வெறும் இலக்கியமாகக் கருதி ஆராய்கின்றபொழுது, நீதிநூல்களை விட்டுப் பிரிக்கமுடியாத குறைபாடுகள் எல்லாம் இதனிடத் திலும் இடம்பெற்றுள்ளமையை நாம் காணுகின்றோம். அதில் ஒத்திசைவில்லாத பல்வேறு கூறுகள் நிலையற்ற வகையில் கலந்து காணப்பெறுகின்றன. இந்நூல் நீதி நூலாக மட்டுமிருந்தால் பரவாயில்லை. அதில் வழக்கெதிர் வழக்குகளும் கருத்து வேற்றுமைக்குரிய கருத்துக்களும் நிறைந்து காணப்பெறுகின்றன. இவற்றைக் கவிஞர் இயன்றவரை விலக்கி யொதுக்கி யிருப்பாரானால், அல்லது

அவற்றின் வேகத்தைத் தணித்திருப்பாரானால் அவருடைய நூல் மிக்க பெருமையுடைய நீதி இலக்கியமாகச் சிறப்புற்றிருக்கும். அறத்தைப் போதிக்கும் ஆசிரியர் என்ற முறையில், அவர் மிகவும் மெய்யுறுதிப்பாடு உடையவராக விளங்குகிறார். விவாதத்துக்குரியவர் என்ற வகையில் அவருடைய நோக்கமெல்லாம் பிறருடைய கருத்துக்களை மறுத்து, தன்னுடைய கருத்துக்களை நிலைநாட்டுவதிலேயே ஈடுபாடுகொண்டிருக்கிறது. வாதத்தின் முழுவளர்ச்சிக்கு இடையே ஒரு கணப்பொழுதுகூடக் கவிதையின் நயமிக்க அழகியல் கூறுகள் கலக்க அவர் இடம் தருவதில்லை. அறத்திடத்து அவர் கொண்ட காதலுக்கு அடுத்த நிலையிலேயே, கவிதையின் இன்பமும், மாண்பும் அவருடைய உள்ளத்தில் இடம் பெற்றிருக்கின்றன. அறத்தின் இயல்புகளையும், ஏற்றத்தையும் எடுத்துரைக்கும் இடங்களிலேயே அவருடைய கவிதை அழகிலும், நயத்திலும் இலக்கியச் சிறப்பின் கொடுமுடியை எட்டிப்பிடிக்கிறது. தாம் அறத்தைப் பற்றிக் கூறிய கருத்துக்கள் மனித இனத்தின் மன நலிவைப் போக்கிப் புதிய ஆற்றல் அளிக்கக்கூடிய நன் மருந்தாகுமென்று அவர் நம்பினார். மனித இனத்திற்கு அவர் வழங்கிய நற்செய்தியாக அதை இன்றும் உலகம் போற்றி வருகிறது.

**ஜார்ஜிக்ஸ்** (Georgics)

வர்ஜில் (Virgil) என்ற ரோமானிய கவிச்சக்கரவர்த்தி வேளாண்மைத் தொழிலைப்பற்றி இயற்றிய நூலிற்கு 'ஜார்ஜிக்ஸ்' என்பது பெயர். 'ஜார்ஜிக்ஸ்' என்ற இலத்தீன் மொழிச் சொல்லிற்கு 'உழவுத்தொழில்' என்பது பொருளாகும். எனவே, 'உழவுப்பாட்டு' என்ற பெயரால் நாம் அதை அழைக்கலாம்.

இலத்தீன் மொழிப்புலவர்களுள் தலைசிறந்தவராகப் போற்றப் பெறுபவர் வர்ஜில். அவர் கி. மு. 70ஆம் ஆண்டு உழவர் குடியில் தோன்றினார். அவருடைய தகப்பனார் ஒரு சிறிய நிலக்கிழார். அவர் இத்தாலியிலுள்ள பல்வேறு நகரங்களுக்குத் தம் மகனை அனுப்பி, கல்வி கற்குமாறு செய்தார். பின்னர் வர்ஜில் தம்முடைய பண்ணையைப் பராமரிப்பதோடு இலக்கியப் பணியிலும் ஈடுபட்டார்.

கி. மு. 42ஆம் ஆண்டு அளவில் அவர், "எகொலாக்ஸ்" (Ecologues) என்ற 'முல்லைத்திணைப் பாடல்களை' இயற்றிக் கொண்டிருந்தார். அப்பொழுது அந்தோனி (Antony), ஆக்டேவியஸ் (அகஸ்தஸ்) ஆகியோரின் பெரும் படைகள் கலைக்கப்பட்டன. அப்படை வீரர்களுக்கு மானியம் கொடுப்பதற்காக வர்ஜில் முதலியோருடைய பண்ணைகளையும், நிலங்களையும் ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்கள் பறிமுதல் செய்தனர். அதை மீட்பதற்காக வர்ஜில் ரோமாபுரிக்குச் சென்றார். அப்பொழுது அவருடைய புகழ் ரோமாபுரிவரை பரவியிருந்தது. அவருடைய 'முல்லைத்திணைப் பாடல்களை'ப் படித்து மகிழ்ந்த மக்களுள் சிறந்தவர்கள் சிலர் இருந்தனர். அங்கு அவருக்கு போலியோ (Pollio), கேலஸ் (Gallus), மேசினஸ் (Maecenas) என்ற மூன்று நண்பர்கள் இருந்தனர். அவர்களுள் மேசினஸ் என்பவர் பேரரசன் அகஸ்தஸின் முதல் அமைச்சராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். எனவே, வர்ஜில் தாம் மேற்கொண்ட முயற்சியில் வெற்றி பெற்றார். இழந்த பண்ணைக்கு ஈடாக வேறொரு பண்ணையைக் கவிஞர் பெற்றார்.

கி. மு. 43 முதல் 37 வரை 'ஜார்ஜிக்ஸை'ப் பேரரசனின் ஆதரவில் வர்ஜில் பாடினார். அவருடைய இலக்கியத்தின் பெயரும், அதன் கருத்துக்களும் மேற்போக்காக நோக்குகின்ற பொழுது இலக்கிய நயமும், புதுமையும், கவர்ச்சியுமற்றதாகத் தோன்றும். ஆனால், "அந்நூல் எக்காலத்தில் இயற்றப்பட்டது? அந்நூலை இயற்றுமாறு ஆசிரியரைத் தூண்டிய சக்தி யாது? அந்நூல் இயற்றப் பெறுவதற்குரிய நோக்கம் என்ன? அதன் குறிக்கோளில் அந்நூல் வெற்றி பெற்றதா?" என்ற வினாக்களை எழுப்பி, அவற்றிற்கு விடை காண முயன்றால், அந்நூலின் அருமை பெருமைகளை நாம் எளிதில் உணரமுடியும்.

### ஜார்ஜிக்ஸ் புகட்டும் நீதி

நெடுங்காலமாக உள்நாட்டுப் போர்களால் இத்தாலிய நாட்டு உழவுத்தொழில் நலிந்து போயிருந்தது. அதைப் பேரரசன் அகஸ்தஸ் புத்துயிர் பெறச் செய்வதற்கு முயன்று வந்தான். பேரரசனின் உழவுத் தொழில் பற்றிய

திட்டத்தை ஆதரித்துக் கவிபாடுமாறு, வர்ஜிலை ரோமப் பேரரசின் முதலமைச்சர் மேசிஞஸ் வேண்டிக்கொண்டார். அதன் விளைவாக உலகம் "உழவுப்பாட்டை"ப் பெற்றது. பேரார்வம் கொண்ட அகஸ்தஸ் ஆக்கப்பணித் திட்டங்கள் பலவற்றைத் தீட்டினன். அவற்றுள் நாட்டு மக்களிடத்து தேசிய உணர்ச்சியை எழுச்சியுறச் செய்து, அதன் மூலம் தாய்நாட்டுப் பற்றையும், பழைய பண்பாட்டில் ஈடு பாட்டையும் உண்டாக்கவேண்டும் என்பது ஒரு நோக்க மாகும். இதை ஈடேற்றுவதற்குரிய சிறந்ததொரு கருவி யர்க வர்ஜில், 'ஜார்ஜிக்ஸ்' என்ற இலக்கியத்தைப் படைத் தார்.

'உழவுத்தொழிலின் புத்துயிர்ப்புக்கும், தேசிய எழுச் சிக்கும், இலக்கியத்திற்கும் என்ன தொடர்பு இருக்கிறது?" என்று சிலர் கருதலாம். மனித வாழ்க்கைக்கு இன்றியமை யாதது உணவு. உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்க வில்லையாஞல், நாட்டிலே பஞ்சமும் பட்டினியும் தலைவிரித் தாடும். 'மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம் உண்டிகொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' (மணி.11 : 95-6) அல்லவா? உணவிற்கு எங்குப்போவது? நாட்டிலே உற்பத்தி பெருகவேண்டுமென்றல் உழவுத் தொழில் சிறக்க வேண்டும் அன்றே?

> சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் அதனல்
> உழந்தும் உழவே தலை. (குறள் 1031)

என்பதை வர்ஜிலும் நன்குணர்ந்திருந்தார். கடல்கடந்த மாநிலங்களில் அடிமைகள் வேலை செய்த பெரியபெரிய பண்ணைகளின் எழுச்சியால், ரோமானிய உழவன் பெரிதும் அழிந்துகொண்டிருந்தான். போர்க்காலங்களில், ரோமா புரியின் பகைவர்கள் கடல்கடந்த குடியேற்றப் பகுதிகளி லிருந்து இத்தாலிக்கு உணவுப் பொருள்களை ஏற்றிச் சென்ற கப்பல்களைச் சுற்றி வளைத்து விட்டதால், உண் டான உணவுப் பொருள் பற்ருக்குறையால் பஞ்சம் தலை விரித்தாடியது; ரோமானியர் பட்டினியால் செத்தனர். சில சமயங்களில் உணவுப் பொருள் பற்ருக் குறையால், ரோமாபுரி பகைவர்களுக்கு அடிபணியவும் நேர்ந்தது. இந் நெருக்கடிகள் இத்தாலிய மக்களுக்கு நல்லதொரு படிப்

பிணையைக் கற்பித்தன. ரோமாபுரியின் வேளாண்மைப் பொருளாதார முறை உள்நாட்டுப் போர்களினாலும் நிலப் பறிமுதல்களாலும் பாழடையாமல் இருந்திருந்தால், இத் தகைய மானக்கேடும், துன்பமும் தங்களுக்கு வந்திருக்காது என்று ரோமர்களுள் பலர் எண்ணிய வண்ணம் இருந்தனர். அதனால் நிலச்சீர்திருத்தமும் நிலையான பொருளாதார முன்னேற்றமும் நாட்டிற்குத் தேவை என்று சிந்தனை யாளர்கள் கருதினர்.

ரோமாபுரியின் முதுகெலும்பாக இருந்து வந்த உழவர் பெருங்குடி மக்களின் சீரழிவு, நாட்டின் ஒழுகலாற்றிலும், பண்பாட்டிலும் உண்டான வீழ்ச்சிக்கு அறிகுறியாகத் தோன்றியது. எத்துணை அளவிற்கு நடுத்தர இனத்தைச் சேர்ந்த சிறு நிலக்கிழார்களான உழவர்கள் அழிக்கப் பட்டனரோ, அத்துணை அளவிற்கு மேலாகப் பேராற்றலும் செருக்கும் வாய்ந்த புதியதொரு செல்வர் இனம் நாட்டிலே விரைவாக வளர்ச்சியுற்றது. அவர்கள் அவ்வேழை எளிய மக்களின் நிலங்களையெல்லாம் தம் உடைமைகளாக்கிக் கொண்டனர். செல்வர்கள் மிகுதியான அரசியல் ஆதிக்கத் தினைப் பெற்றனர். அதனால் ஈவு இரக்கமின்றித் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ளுவதிலும், கட்டிக்காத்துக் கொள்ளுவதிலும் அவர்கள் கருத்துடையவர்களாக இருந் தனர். அதன் விளைவாக நாட்டுமக்கள் அனைவருடன் சரிநிகர் சமானமான முறையில் குடியுரிமையை சனநாயக முறைப்படி பகிர்ந்து கொள்ளுவதை அவர்கள் வன்மை யாக எதிர்த்தனர். தங்களுக்குத் தனிச் சலுகைகளும், சிறப்புரிமைகளும் தேவை என்பதை உணர்ந்து, அவற் றைப் பெறுவதற்கு அவர்கள் வன்முறைகளில் ஈடுபட லாயினர்.

மேலும், பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களில் இருந்து விரட்டியடிக்கப்பட்ட உழவர்கள், பெரும்பாலும் ரோமா புரிக்குச் சென்று பிழைக்க முயன்றனர். அங்கிருந்த ஊர்பேர் தெரியாத மக்கள் கூட்டத்தின் உறுப்பினர்களாக அவர்கள் மாறினர். அதனால், அவர்கள் உழைப்பை அடியோடு வெறுத்தனர்; அரசின் உதவிப்பொருளால் குறைந்த விலைக்கு விற்கப்பட்ட உணவுகளை உண்டு மகிழ்ந்

தனர்; வன்முறைச் செயல்களில் அடிக்கடி ஈடுபட்டனர். சனநாயக வாழ்க்கை முறையை மேல்மட்டத்தில் இருந்த நிலக்கிழார்களாகிய செல்வர்கள் எப்பொழுதும் அழிக்கப் போவதாக அச்சுறுத்திக் கொண்டிருந்தனர். அதைப் போன்று, கீழ்மட்டத்தில் இத்தகைய கும்பல் ஒன்று என்றும் சட்டமும் ஒழுங்கும் நிலைநாட்டப்படுவதற்கு இடையூறாக இருந்து வந்தது. இந்நிலையில் ஆட்சிப் பொறுப்பையேற்ற அகஸ்தஸின் முதற்பணியாகப் பெரிய பெரிய பண்ணைகளில் முடக்கப்பட்டிருந்த நிலத்தைத் திரும்பப் பரவலாகப் பகிர்ந்தளிக்கும் பொறுப்பு அமைந்தது. அடுத்துத் தலைநகரத்திலிருந்த உழவர்களைத் தங்கள் ஊர்களுக்குத் திரும்பிச் சென்று உழவுத்தொழிலைச் செய்யுமாறு தூண்ட வேண்டியதாயிற்று. இவ்வாறு பேரரசன் அகஸ்தஸ் மேற்கொண்ட வேளாண்மைச் சீர்திருத்தமும் பசுமைப் புரட்சியும் நாட்டின் பொருளாதாரப் புத்துயிர்ப்புக்கு மட்டுமல்லாமல், மக்களுடைய ஒழுக்க நெறிப் புத்துயிர்ப்புக்கும் அடிகோலின.

இவ்வடிப்படையில் வர்ஜிலின் ‘உழவுப்பாட்டை’ நோக்கினல், அது நாட்டு மக்களின் அறவாழ்விற்கு வழிகாட்டியாக அமைந்த அறநூலாகத் திகழ்வதை நாம் உணரமுடியும். பொதுவாகப் பார்க்கின்றபொழுது இந்நூல் உழவுத் தொழிலைச் செம்மையாகச் செய்வதற்குரிய செயல்முறை வழிகாட்டியாக விளங்குகிறது. தம்முடைய நூலை நான்கு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு வர்ஜில் வேளாண்மைத்தொழிலின் வளர்ச்சிக்குரிய வழி வகைகளை விரித்துரைக்கிருர். அவை நிலத்தை உழுது பயிரிடும் முறை, பழத்தோட்டங்களும் கொடி முந்திரிப் பண்ணைகளும் அமைத்தல், கால்நடைப் பராமரிப்பு, தேனீ வளர்த்தல் என்பனவாகும். இந்நூல், மக்கள் இயற்கையோடு இயைந்துவாழ்ந்த கிராமச்சூழலை அடிப்படையாகக் கொண்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். இத்தகைய உள்ளுறைகளைக் கொண்ட ‘உழவுப்பாட்டை’ வர்ஜில் தம் கற்பனையாற்றலாலும், இலட்சிய நோக்காலும், கலையுணர்வாலும் கவின்மிகு இலக்கியமாகப் படைத்து அளித்திருக்கிருர். அதனல், மனித இயற்கையைப்பற்றி வர்ஜில் கொண்ட கருத்தின் ஒரு பகுதியாகிய மனித வாழ்க்கை

யின் இலட்சியம் உழைப்பின் புனிதத் தன்மையோடும், ரோமாபுரியின் வீரார்ந்த புகழோடும் இணைந்தும் இழைந்தும் காணப்பெறுகிறது. அவருடைய அறவுரைகளுக்கு இடையே தேசிய, சமய, கற்பனைச் சார்பான தற்பண்புடைய கூறுகள் பல கலந்து காணப்பெறுகின்றன.

**ஜார்ஜிக்ஸின் உள்ளுறை**

வர்ஜில் தம்முடைய கவிதையை உலகத்தின்தோற்றத்தில் தொடங்குகிறார். நாகரிகம் எவ்வாறு வளர்ச்சியுற்றது என்பதை விரிவாக அவர் விளக்குகிறார். நாடோடியாக இருந்த மனிதன் நிலையாக ஓரிடத்தில் வாழக் கற்று, நிலத்தை உழுது பயிரிட்டு, முன்னேற்றம் அடையத் தொடங்கிய வரலாற்றைத் தெளிவாக அவர் எடுத்துரைக்கின்றார்:

> உழைப்பே நாகரிக வளர்ச்சிக்கு மூலதனம்; நெருக்கடி மிக்க தேவையால் உண்டான ஆற்றலே முன்னேற்றத்திற்கு மூல காரணம். (உ. பா. பகுதி I, 175-178)

என்பது அவருடைய கொள்கையாகும். இதன் அடிப்படையிலேயே நாகரிகத்தின் பல்வேறு படிநிலைகளும் வளர்ச்சியுற்றதை அவர் விளக்குகிறார். மனிதன் நிலத்தை உழுது பயிரிடத் தொடங்கிய காலத்தில், வளம் நிறைந்த நிலமகள் தாயாக இருந்து மக்களுக்கு உதவி புரிந்தாள். ஆனால், யார் பாடுபட்டு உழைத்தனரோ அவர்களுக்கே அவள் உதவிபுரிந்தாள் என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

நிலத்தை எவ்வாறு உழுது பயிரிடவேண்டும் என்பதைப் பற்றி அவர் விளக்குந்திறம் அவருடைய அனுபவ அறிவை நமக்குக் காட்டுகிறது.

> ஆண்டின் தொடக்க மாதங்களில் மண் ஈரக்கசிவுடையதாக இருக்கும். அப்பொழுது அது பசுவாகக் கூட இருக்கும். எருதுகளைக் கொண்டு நன்கு ஆழமாக உழுது, அதைக் கீழ் மண்ணுக மாற்றிவிடவேண்டும். கோடையில் சூரிய வெப்பத்தால் அது நன்ருகக் காய்ந்து தூளாகிவிடும். அதனல் நிலத்திற்குப் புதியதொரு சக்தி உண்டாகிறது.[27]
>
> (உ. பா. பகுதி I, 107-110)

என்று கூறும் பகுதி நிலத்தை எவ்வாறு உழவேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது.

பின்னர், மாறிமாறி வரும் பருவ காலங்களைக் குறிப்பிட்டு அக்காலங்களில் மேற்கொள்ளவேண்டிய உழவுத் தொழில் முறைகள் யாவை என்பதை வர்ஜில் முறைப்படுத்திக் கூறுகிறார் :

வேனிற் காலமும் இலையுதிர் காலமும் வேலைகள் மிகுதியான நாள்களைத் தொடர்ந்துவரும். அவை இருள்செறிந்த இராக் காலத்தில் விளக்கின் ஒளிச்சுடர் நடுங்குதலைப் போன்று தோன்றும். பொன்மயமான அருணோதயமும், அதைத் தொடர்ந்து தோன்றும். செக்கர் வானமும் அழகுடன் விளங்கும். (உ. பா. பகுதி III, 78-82)

என்று அவர் வருணிக்கும் திறம் இன்பம் பயப்பதாகும்.

விதைகளைத் தேர்ந்தெடுக்கும் வழியையும், விதைக்க வேண்டிய முறைகளையும் (238-245) எவ்வெப் பருவங்களில் எந்தெந்தத் தானியங்களைப் பயிரிடலாம் என்பதைப் பற்றியும் அவர் குறிப்பிடுகிறார். இவற்றிற்கு இடையே வான நூல் கருத்துக்களும் இடம் பெறுகின்றன. விதை விதைப்பதற்குரிய நல்ல நாள் எதுவென்பதையும் ஆசிரியர் கூறுவது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

தென்றல் வீசுகின்றபொழுது உண்டாகும் வானிலை மாறுதலையும், கோள்களின் இருப்பையும், இயக்கத்தையும் அவர் வருணிக்கின்றபொழுது,

தெய்வங்களிடத்துப் பயபக்தியோடு இருக்கவேண்டும். குளிர்காலத்தில் புயல் ஓய்ந்தவுடன் அத்தெய்வங்களுக்குப் பலியிடுக! அப்பொழுதுதான் கன்றுகள் கொழுத்து வளரும்; கொடி முந்திரிகள் இனிக்கும்; உறக்கமும் இன்பமாக இருக்கும்; மலையின் நிழலும் நன்றாக அமையும்.

(உ. பா. பகுதி I, 397-405)

என்று அறிவுரை கூறுகிறார்.

இறுதியாக உலகம் கெட்டுவிட்டது என்பதை மிகுந்த வருத்தத்தோடு வர்ஜில் குறிப்பிடுகிறார் :

உலகத்தில் தீமை நன்மையைத் தோற்றோடச் செய்கிறது; போர்களோ ஓயாமல் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன; கொடுமையோ ஆயிரம் முகங்களைக் கொண்டதாகத் தோன்றுகிறது; உழவுத் தொழிலுக்குரிய மதிப்பினை, அத்தொழிலுக்குத்

தருவதில்லை; போரிடுவதற்கு உழவர்கள் போய்விட்டமையால் வயல்வெளிகளெல்லாம் தரிசாகக் கிடக்கின்றன......எங்கும் போர்முரசு கேட்கிறது! மக்களும் தலைவர்களும் 'போர்! போர்!' என்று முழக்கமிடுகின்றனர். இப்போது நடைபெறும் போர்களெல்லாம் அறப்போர்களல்ல!

(உ. பா. பகுதி I, 592-602)

உழவுப் பாட்டின் இரண்டாம் பகுதி செடி, கொடி, மரங்களைப் பற்றியதாகும். கொடி முந்திரியைப் பயிரிடு வதைப் பற்றி இப்பகுதியில் ஆசிரியர் விரிவாக விளக்கு கிறார். மற்றும் பிற செடிகளையும், மரங்களையும் எவ்வெப் பருவங்களில் பயிரிடுவது என்பதையும், எவ் வாறு பயிரிடுவது என்பதையும் ஆசிரியர் அனுபவ அறி வோடு கலந்த உண்மைகளை எடுத்துரைக்கின்றார்; மண் வளத்தை அறிந்து, அதற்கேற்பச் செடி கொடிகளைப் பயிரிடவேண்டும் (உ. பா. பகுதி II, 211-215) என்பதைச் செயல்முறைக்கேற்ற வண்ணம் கூறுகிறார். நாற்று நடுவதி லிருந்து எருவிட்டு நீர்ப்பாய்ச்சுவது வரையிலுள்ள பல செயல்களையும் படிப்படியாக எல்லாருக்கும் புரியும் வண்ணம் அவர் விளக்குகிறார்.

இப்பகுதியில் லுக்கிரிஷஸின் 'பொருள்களின் இயற் கையில்' கூறப்பட்ட இறப்பைப் பற்றிய செய்திகளும், இறப்பை வெல்லுவதற்குரிய வழிவகைகளையும் (585-590) வர்ஜில் தமக்கேயுரிய பாணியில் கலைநயம் தோன்றப் பாடியுள்ளார்.

மூன்றும் பகுதி, கால்நடைகள் எவ்வாறு உழவுத் தொழிலுக்குத் தேவைப்படுகின்றன என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. அதில் அவற்றின் அருமை பெருமைகளை வர்ஜில் அறிவிக்கின்றார். விலங்குகள்கூடக் காதலிக் கின்றன என்ற ஒரு கருத்தை அவர் அழகாக வருணித் துள்ளார்.

உழவன் ஒருவன் தன்னுடைய உற்ற துணையாகிய எருது ஒன்று இறந்துவிட்டால் அடையும் துன்பத்தை ஆசிரியர் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டுகிறார்:

காய்ச்சலின் கொடுமை தாங்காது எருது சுருண்டு விழு கிறது. அதன் வாயில் நுரை தள்ளுகிறது; மூக்கிலும் நுரை

> வெளிப்படுகிறது; சிறிது நேரம் எமனோடு அது போராடுகிறது: துன்பத்தைத் தாளாமல் வேதனைக் குரல் எழுப்புகிறது. செய்வது அறியாமல் கண்கலங்கி நிற்கிறான் சமுதாயத்தினரால் புறக்கணிக்கப்பெறும் உழவன்; தன்னுடைய தோழன் இறந்துவிட்டதைக் கண்ட (அதனுடன் ஏர் உழுது பழகிய) மற்றோர் எருது புலம்புகிறது; வேலை மேல் மனம் செல்லாமல் சோர்ந்து நின்று சுற்றுமுற்றும் பார்த்துக் கத்துகிறது.
>
> (உ. பா. பகுதி III, 632-640)

இந்நூலின் இறுதிப் பகுதியில் தேனீக்களைப் பற்றிய செய்திகள் பேசப் பெறுகின்றன. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, செயற்கை முறையில் எவ்வாறு தேனீக்கள் வளர்க்கப்பட்டன என்பதை வர்ஜில் மிக நுட்பமாக எடுத்துரைக்கின்றார். 'தேனீக்களுள் பலவகை இருந்தாலும், அவை ஆயிரக் கணக்கானவையாக இருந்தாலும் அவை ஒரு தலைவனுடைய ஆணைக்குட்பட்டு வாழுகின்றன (உ. பா. பகுதி (IV, 254—255) என்ற செய்தி நமக்கெல்லாம் நல்லதொரு படிப்பினையாகும்.

தேனீக்களிடத்துக் காணப்படும் சிறந்த இயல்புகளைக் கண்டு வியக்கும் கவிஞர்,

> தேனீக்களிடத்தில் உலக உயிர்த்தத்துவமும், புனிதமான உள்ளமும் இருப்பதாகச் சிலர் கூறுகின்றனர். அவர்கள் கடவுள் எல்லாப் பொருள்களிலும் இருப்பதாகச் சொல்லுகின்றனர்; கடலிலும், நிலத்திலும், வானிலும் அவன் பரந்து விளங்குவதாகக் கூறுகின்றனர். பறவைகளும், விலங்குகளும், கட்டுப்பாடில்லா இயற்கையும், மனித இனமும் பிறக்கின்ற பொழுது அவனிடமிருந்து ஆன்மாவைப் பெறுகின்றன; இறுதியில் அவையெல்லாம் அவனிடமே சென்று ஒடுங்கிவிடுகின்றன. அதனால் இறப்பு என்பது அஞ்சத்தக்கது அன்று. உலகில் மறைந்தவுடன் அவை வானில் நட்சத்திரங்களாக மாறி விடுகின்றன. (உ. பா. பகுதி IV, 263-274)

என்று குறிப்பிடுகிறார். இப்பகுதி இந்திய தத்துவ ஞானக் கருத்தைப் போன்றதொரு மெய்யறிவுக் கோட்பாட்டினை ரோமானியர்கள் போற்றினர் என்பதை நமக்குத் தெரிவிக்கிறது.

இறுதியாக, ஊழ்வினையின் ஆற்றலையும் இறப்பின் இயல்பையும் கவிஞர் விளக்குகிறார்:

> கொடிய ஊழ் என்னை அழைக்கிறது ; சுழலும் என் கண்கள் மூடிக்கொள்ளுகின்றன ; இப்பொழுது நான் விடைபெறுகிறேன்; ஆழங்கண்டறியப்படாத இரவு என்னை அணைத்துக் கொள்ளுகிறது.
> (உ. பா. பகுதி IV, 593-596)

வர்ஜிலுக்குத் தாய் நாட்டிடத்து அளவுகடந்த பற்றுதல் இருந்தது. அதைப் போன்றே அதன் தலைநகரத்திடத்தும் அவர் பேரீடுபாடு கொண்டிருந்தார். தாயகத்தின் தட்பவெப்ப நிலையும், வளமும் அவருடைய உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. அகஸ்தஸின் ஆட்சியில்,

> உலகிலேயே மிக அழகுடையதாக ரோமாபுரி மாறிவிட்டது !
> (உ. பா. பகுதி II, 533)

என்று பெருமிதத்தோடு வர்ஜில் கூறுகிறார். இங்கு, கவிஞரின் உள்ளம் பூரிப்படைவதை நாம் காணுகின்றோம்.

இவ்வுழவுப்பாட்டு வர்ஜில் இயற்கையிடத்துக் கொண்ட ஈடுபாட்டை அறிவிக்கிறது. அவருடைய கவிதையில் இரண்டு கொள்கைகள் போட்டியிடுகின்றன. ஒன்று மெய்யுணர்வுக் கோட்பாடாகும்; மற்றொன்று கட்டற்ற கற்பனைப் (Romanticism) பண்பாகும். இவ்விரு கொள்கைகளின் திறத்தையும் வர்ஜில் நன்குணர்ந்திருந்தார். எனவே, அவையிரண்டையும் அவர் நன்கு பயன்படுத்தியுள்ளார். அதனால், 'உழவுப்பாட்டு' வெறும் நீதி நூலாகாது, கற்பனை வளமிக்க கவிதையாகத் தோன்றுகிறது.

அவர் அலக்சாண்டிரிய நீதிக் கவிஞர்களை முன்மாதிரியாகக் கொண்டு தம் நூலைத் தொடங்கினார். ஆனால், அவருடைய அறிவும், ஆற்றலும் அதை நீதி நூலினும் சிறப்பு மிக்க இலக்கிய வளமுடையதாக்கிவிட்டது. அரேதஸூம், நிகாண்டரும் அணுகமுடியாத அளவிற்கு, வர்ஜில் புகழ் மிக்க கவித்திறன் உடையவராகக் காட்சி அளிக்கிறார். உழவுத்தொழில் பற்றிய செய்திகளுள் பல நமக்குச் சுவையற்றனவாக இருக்கலாம். ஆனால், அவ்விடங்களில் எல்லாம் கவிஞர் தம் கவித்திறத்தால் அவற்றைக் கவர்ச்சியுடையதாக்கிவிடுகிறார். பலதிறப்பட்ட எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் கலந்து, அவர் சொல் நயமும் பொருள் நயமும் தோன்றுமாறு உழவுப்பாட்டைப் பாடியுள்ளார்.

இவ்வாறு ஒப்புயர்வற்ற காப்பியக் கவிஞனாகிய வர்ஜில், அறம் கூறும் ஆசானாகத் தோன்றி, சிந்தைக்கினிய உழவுப் பாட்டைப்படைத்து, ரோமாபுரியின் 'பசுமைப் புரட்சிக்குப்' பேராதரவு தேடினார்.

### வர்ஜிலும் வள்ளுவரும்

இவ்விரு கவிஞர்களும் தங்கள் நாட்டின் பொற் காலத்தில் வாழ்ந்தவர்களாவர். ரோமாபுரியின் பொற் காலம் அகஸ்தஸின் ஆட்சிக்காலமாகும். தமிழகத்தில் பொற்காலம் சங்ககாலமாகும். வர்ஜில் காப்பியப் புலவ ராக உலகிற்கு அறிமுகமானவர்; வள்ளுவரோ நீதி இலக்கி யப் புலவராக உலகிற்கு அறிமுகமானவர். ரோமாபுரிப் புலவர் தம்முடைய காலத்தில் வாழ்ந்த தம்முடைய நாட்டு மக்களுக்குப் பயன்படவேண்டும் என்பதற்காகவே, 'உழவுப்பாட்டை' இயற்றினார். வேளாண்மைத் தொழி லின் சிறப்பு, நிலத்தை உழுதல், எருவிடுதல், இறப்பு, ஊழ்வினை போன்ற சில கருத்துக்கள் இடத்தையும், காலத் தையும் கடந்து எல்லா மக்களுக்கும் பயன் தருவனவாக அதில் அமைந்துள்ளன. திருவள்ளுவர் இயற்றிய முப் பாலின் கருத்துக்களோ பெரும்பாலும் எக்காலத் தவருக்கும், எந்நாட்டவருக்கும் பயன்படக்கூடிய வாழ் வியல் நெறிமுறைகளாக உள்ளன.

வர்ஜில் ஒரு பிறவிக் கவிஞர். வள்ளுவர் கவிஞராக மட்டுமல்லாமல் செம்பொருள் கண்ட சான்றோராகவும் விளங்குகிறார். வர்ஜில் செயல்முறைகளுக்கு உகந்தவற்றை எடுத்துரைக்கும் செயல்வீரர்; வள்ளுவர் ஓர் இலட்சிய வாதி; அவர் மனிதவாழ்க்கை மாண்புற்று விளங்குவதற்குத் தேவையான வாழ்வியல் கருத்துக்களைக் குறிக்கோள் களாக அமைத்துக்காட்டுகிறார். தாம் வாழ்ந்த காலத்து நிகழ்ச்சிகளைத் தம் நூலில் வள்ளுவர் குறிப்பிடவில்லை. வர்ஜில் தம் காலத்து அரசனுடைய பெயரையும், அவன் செய்த போர்களையும் தம் நூலில் குறிப்பிடுகின்றார். அவர் குறுகிய நாட்டுப்பற்றுடையவராகக் காணப்படுகின்றார். பண்பாட்டில் வீழ்ச்சியுற்ற ரோமானியருக்காகவே தம் நூலை வர்ஜில் இயற்றியிருக்கிறார். வள்ளுவரோ தமிழ் மக்களுக்கு மட்டுமல்லாமல், எல்லாருக்கும் பயன்படும்

வகையில் தம் நூலை இயற்றியுள்ளார். வர்ஜில் ‘போரே வேண்டாம்’ என்று அவலக்குரல் எழுப்புகிறார். வள்ளுவரோ போருக்கு வேண்டிய படைகளின் மாட்சியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இருவரும் வேளாண்மைப் பொருளாதாரத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர். அதனால், அவர்களிருவரும் உழவுத்தொழிலின் முக்கியத்துவத்தையும், அதைச் செய்யும் முறைகளையும் விளக்கியுள்ளனர். வர்ஜில் தம் நூலின் கால்பகுதியை உழவுத்தொழிலுக்கு ஒதுக்கியுள்ளார். வள்ளுவரோ, தம் நூலிலுள்ள நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களுள், ஓரதிகாரத்தை ‘உழவிற்குத்’ தந்துள்ளார். இவ்விருவருடைய கருத்துக்களில் காணப் பெறும் ஒத்த கருத்துக்களைப் பின்வரும் அட்டவணையில் நாம் காணலாம்.

| உழவுப்பாட்டு | திருக்குறள் |
|---|---|
| 1. நிலத்தினை நன்றாக உழுது காற்றாட விட்டு, பின்னர் எருவிடுதல் நல்லது. (பகுதி I, 93-95) | தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும் வேண்டாது சாலப்படும். (1037) |
| 2. வயலினை அகல உழுவதோடு ஆழ உழுதல் வேண்டும். (பகுதி I, 118-120) | ஏரினும் நன்றால் எருவிடுதல். (1038) |
| 3. முளையாக இருக்கின்ற பொழுதே களையெடுக்க வேண்டும். (பகுதி I, 136) | பைங்கூழ் களை கட்டல். (550) |
| 4. அன்பே அவர்களை ஆளுகிறது. (பகுதி III, 307) | அன்பின் வழியது உயிர்நிலை. (80) |
| 5. எல்லையில்லா இரவில் ஆழ்ந்து உறங்குவதைப் போன்றதே இறப்பு. (பகுதி IV, 595-6) | உறங்குவது போலும் சாக்காடு. (339) |

**வானவியல்**

வர்ஜிலின் நீதி இலக்கியமான ‘ஜார்ஜிக்ஸு’க்குப் பிறகு இலத்தீன் மொழியில் தோன்றிய அறநூல் ‘அஸ்டிரானமிக்கா’ (Astronomica) எனப்படும் ‘வான

வியல்' நூலாகும். இதனை மெனிலஸ் (Manilius) என்பவர் இயற்றியுள்ளார். அவருடைய வாழ்க்கையைப்பற்றி ஒன்றும் நாம் தெரிந்துகொள்ள முடியவில்லை.

அவருடைய 'வானவியல்'[28] ஐந்து பகுதிகளைக் கொண்டிருக்கிறது. ஆருவது பகுதியும் இருந்திருக்கவேண்டும் என்றும், அது பிற்காலத்தில் அழிந்து போயிருக்கக்கூடும் என்றும் அந்நூலின் அமைப்பு முறையை ஆராய்ந்த அறிஞர்கள் கூறுகின்றனர். பண்டைக் காலத்திய கவிஞர்கள் யாரும் மெனிலஸைக் குறிப்பிடவில்லை ; இலக்கண ஆசிரியர்கள் அவருடைய நூலிலிருந்து மேற்கோள் ஒன்றுகூடக் காட்டவில்லை. அவருடைய நூலில் ஓர் அகச்சான்று மட்டும் காணப்படுகிறது ஜெர்மனியின் மீது ரோமர்கள் படையெடுத்துச் சென்றபொழுது, அது அடியோடு அழிக்கப்பட்டது (வா. பகுதி I, 898-905) என்ற செய்தி அந்நூலின் முதற் பகுதியில் குறிப்பிடப் பட்டுள்ளது. இதனுல், நாம் அவர் வாழ்ந்த காலத்தைப் பற்றி ஒருவாறு அறியமுடிகிறது.

'வானவியல்' என்ற நூல், வானில் இயங்கும் கோள்கள், விண்மீன்கள் ஆகியவற்றின் இருப்பையும் இயல்புகளையும் விளக்குகிறது. அவ்விளக்கம் மிகவும் தொடக்க நிலைச்சார்புடையதாகக் காணப்பெறுகிறது. உயர்ந்த வான நூல் ஆராய்ச்சி முறையில் அமையாது, பாமர மக்களுக்கு அறிவுபுகட்டுகின்ற சோதிட நூலாக அவ்வானவியல் இயற்றப்பெற்றிருக்கிறது லுக்கிரிஷஸிடமிருந்த அறிவியல் மனப்பான்மையும், ஆராய்ச்சி முறையும் மெனிலஸிடத்துக் காணமுடியவில்லை. மூடநம்பிக்கையின் அடிப்படையில் அவர் சாதகத்திடத்துப் பேரீடுபாடு கொண்டுள்ளார். எடுத்த எடுப்பிலேயே 'ஊழ்வினை' மெய்ம்மையானது என்ற நம்பிக்கையோடு அவர் தம்முடைய கவிதையைத் தொடங்குகிருர். "ஊழ்வினையின் கையாளாய் நட்சத்திரங்கள் பணிபுரிகின்றன. அவை மனிதரை இன்பதுன்பங்களை அனுபவிக்குமாறு வினைப்பயனை ஊட்டுகின்றன" என்று அவர் குறிப்பிடுகிருர். இச்சோதிடக் கருத்துக்களைத் தாம் திறம்படக் கையாண்டுள்ளமையால் அது தம்முடைய தனிச் சிறப்பு வாய்ந்த துறையென்றும்,

அத்துறையில் வேறுயாரும் தமக்குப் போட்டியாக வர இயலாதென்றும், அது தமக்கேயுரிய தனித்துறையென் றும் அவர் கூறுகிறார் (வா. பகுதி I, 4-5).

நூலில் முதற்பகுதியில் உலகத் தோற்றத்தைப் பற்றிய பல்வேறு கருத்துக்களை அவர் ஆராய்கின்றார். இப்பேரண்டத்தின் தோற்றம் பற்றிய குழப்பமுதற் கொள்கை, அணு முதற்கொள்கை, தீ முதற்கொள்கை, நீர் முதற்கொள்கை என்ற பல கொள்கைகளையும் சோதித்து ஆராய்ந்து, அவை தவறானவை என்பதை எண்பிக்க அவர் முயலுகிறார். திரும்பத் திரும்ப உலக நிகழ்ச்சிகள் அனைத் தும் 'விதியின் விளையாட்டால்' நடைபெறுகின்றன என்பதை வற்புறுத்த அவர் தயங்கவில்லை.

> உலகப் பொருள்கள் எல்லாம் தெய்விக ஆற்றல் ஒன்றால் நெறிப்படுத்தப் பெறுகின்றன. அவை எல்லாம் தெய்விக சிந்தனையின் போக்கிலே செயல்படுகின்றன.
>
> (வா. பகுதி I, 476-480)

என்பதைப் போன்ற பல கருத்துக்களை அவர் காரண காரியத் தொடர்புபடுத்திக் கூறிச் செல்லுகிறார். மெனிலஸ் எபிகூரிய கோட்பாட்டினரல்லர்; கடுமையான ஸ்டாயிக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் கவிஞராக அவர் விளங்கு கிறார். எனவே, அவர் ஊழ்வினைக் கோட்பாட்டின (Fatalist) ராகத் தோன்றுவதில் வியப்பில்லை.

தம்முடைய கவிதையைப் படித்துப் பலர் பாராட்டு வார்கள் என்று மெனிலஸே எதிர்பார்க்கவில்லை. அதைத் தம் நூலின் மூன்றாவது பகுதியில் வெளிப்படையாகவே அவர் குறிப்பிடுகிறார்:

> ......இன்பமூட்டும் இனிய கவிநயத்தை ஆவலோடு நீங்கள் எதிர்பார்க்கவேண்டாம். நான் எடுத்துக்கொண்ட பொருள் எவ்வாறு அழகுபடுத்தினாலும், அதைப் புறக்கணித்து விடுகிறது. அது அறிவிக்கும் கருத்துக்களைத் தெரிந்துகொண்டு நீங்கள் மனநிறைவடைய முயலுங்கள். (வா. பகுதி III, 38-40)

எனவே, அவருடைய கவிதையில் கலையழகையோ, இலக்கிய இன்பத்தையோ நாம் எதிர்பார்ப்பது தவறாகும். அவர் விண்மீன் குழுக்களையும், கோள்களின் இராசி மண்டலத்தையும், வான்கோளகையின் பாதிப் பகுதியை

யும் விளக்கிக் காட்டும் திறன், நம்முடைய உள்ளத்தைக் கவரவில்லை. இதற்கு நேர்மாருக, அவர் மற்ருென்று விரித்தலாகத் தம்நூலின் இடையே புகுத்தியுள்ள செய்திகளே நமக்குச் சுவை பயக்கின்றன. அவருடைய இலக்கியப் படைப்பில் நாம் கவிதை அழகைக் காண முடியவில்லை. ஆனுல், அதில் இனியதோர் கவர்ச்சி மிக்க சொல்லாட்சித் திறத்தை நாம் காணமுடிகிறது. அவருடைய நூலில் நமக்கு இலக்கிய இன்பத்தை அளிக்கும் பகுதிகள் பாலைவனத்தில் காணப்பெறும் பசுந்திடலைப் போன்றுள்ளது. ஒவ்வொரு பகுதிக்கும் அவர் எழுதியுள்ள முன்னுரைகள் சிறப்புடையன. அவற்றுள் மூன்ரும் பகுதிக்கு எழுதப்பெற்றுள்ள முன்னுரை 'அவரும் ஒரு கவிஞர்' என்ற உணர்ச்சியை நமக்கு ஊட்டுகிறது. அதில் காப்பியக் கவிதை, சுவை யற்ற இலக்கிய நெறியாகப் போய்விட்டதை அவர் எள்ளி நகையாடுகிருர். இரண்டாம் பகுதியின் முடிவுரை யில், 'பகுத்தறிவின் மாண்பினை'ப் பற்றிப் பேசும் பகுதி யில் கருத்தைக்கவரும் ஆற்றலுடன் அவருடைய கவிதை ஏறுநடை போடுகிறது. பேராசையால் உண்டாகும் கேடு களை எடுத்துரைக்குமிடத்து (நான்காம் பகுதி, முன்னுரை) மெனிலஸின் கவிதையில் உணர்ச்சித் துடிப்பும் கற்பனை வளமும் கைகோத்துச் செல்லுகின்றன.

இதைவிடச் சிறந்த முறையில் நம் கருத்தைக் கவரும் பகுதி ஒன்று அதில் இருக்கிறது. வடமீன் குழுக்களுள் ஒன்ருன 'ஆண்டிரோமீடா' (Andromeda) என்ற நட்சத் திரத்தை விளக்குவதைவிட்டு, பெர்ஸியஸ் கன்னி ஆண்டி ரோமீடாவை மீட்டுக் காத்ததைப் (பகுதிV, 538-60) பற்றிய புராணக் கதையைக் கூறத் தொடங்குகிறபொழுது, கவிஞன் கற்பனைச் சிறகடித்து வானத்தின் உயரப்பறந்து செல்ல நம்மையும் அழைக்கிருன். இக்கிளைக் கதை நூலிலுள்ள பலவகையான கிளர்ச்சியின்மைகளைப் போக்க முயலுகிறது. இக்கவிதையில் நயமிக்க பகுதி பெர்ஸியஸ் ஆண்டிரோமீடாவைக் கண்டதும் காதல் வயப் படும் காட்சியாகும்.

மாலைநேரம்; மலையடிவாரத்தில் ஒரு பாறை; பாறை அருகே ஒரு மங்கை! அவளுடைய தளிர்போன்ற கைகள் சங்கிலி

யால் பிணைக்கப்பட்டுப் பாறையோடு கட்டப்பட்டிருக்கின்றன. அவளோ புனையா ஓவியமாகத் தோன்றுகிருள்; இரண்டு நாள்களாகத் தன்னை விடுவிக்க யார் வருவார்கள் என்று எண்ணி ஏங்கி, அவள் கண்ணீர் வடித்துக் கலங்கிக் கொண்டிருக்கிருள். அந்நிலையில் மாவீரன் அக்கன்னியைக் காண்கிறன். வாடியமேனியாள் வாள்விழியால் அவனை நோக்கு கிருள். உடனே அவனுடைய உள்ள உறுதிகுலைகிறது; உணர்ச்சி வயப்படுகிருன்; தன்னை மறக்கிருன்; தான் வந்த கடமையை யும் சிறிது மறந்து அவளுடைய அழகைப் பருகுகிருன்; அப் பாறையின் கூர்முகட்டைக் கண்டு பொருமையால் அவன் பெருமூச்சு விடுகிருன். "அவளைச் சுற்றிக் கட்டப்பட்டிருக்கும் சங்கிலிகள் கொடுத்துவைத்தவை; அவளை அணைத்துத் தழுவிக் கொள்ளும் பேற்றை அவைபெற்றுள்ளனவே!" என்று அவன் முணுமுணுக்கிருன். அவளுடைய கனியிதழ்களில் மின்னல்கள் தோன்றி மறைகின்றன; தன்னுடைய துன்பக் கதையை அவள் மெல்ல வெளியிடுகிருள். உடனே அவன் கடல் போரிலே வாகை சூடுவதுடன், அவளுக்கு மாலை சூடுவதாகவும் உறுதி மொழி அளிக்கிருன். (வா. பகுதி V, 570-580)

இவற்றைத் தவிர இவருடைய நூலில் யாதொரு சிறப்பும் இருப்பதாகத் தெரியவில்லை. இலத்தீன் இலக் கியத்தின் பொற்காலம் மாறி, வெள்ளிக்காலம் வெளிக் கிளம்பியபொழுது, மெனிலஸ் இந்நீதி இலக்கியத்தைப் படைக்க முன்வந்தார். இவரோடு லுக்கிரிஷஸ் தொடங்கி வைத்த நீதி இலக்கிய மரபு ஒரு முடிவிற்கு வந்துவிட்டது எனலாம். இவருக்குப் பிறகு ஒரு சில நீதி நூல்கள் இலத்தீனில் தோன்றியுள்ளன. அவை பொருட்சிறப் பும், நடையழகும், கவித்திறனும் அற்றனவாக இருந்தன. அதனல் காலவெள்ளம் அவற்றை யெல்லாம் அடித்துக் கொண்டு சென்று விட்டது.

**ரோமானிய நீதி இலக்கியத்தின் இயல்புகள்**

இலத்தீன் மொழியின் இலக்கியப் படைப்புகளுக்கு மூலாதாரமாய் இருந்தது கிரேக்கப் பண்பாடு. அதன் தூண்டுதலால் இலத்தீன் மொழியில் நீதிநூல்கள் சில தோன்றின. அவற்றுள் லுக்கிரிஷஸின் 'பொருள்களின் இயற்கை' சிறந்ததோர் நீதி இலக்கியமாக விளங்குகிறது. அதில் மூன்றில் ஒரு பகுதி அறிவியல் ஆராய்ச்சியைப் பற்றியதாக இருந்தாலும், எஞ்சிய பகுதியில் மனிதன் நல்ல முறையில் வாழ்வதற்குரிய வழிவகைகள் கோடி

காட்டப்பெறுகின்றன. அதில் அறநெறிக் கருத்துக்கள் உயிரற்ற வெறும் உடலாக விளங்கவில்லை. அவை உணர்ச்சியும், உயிர்க்களையும் வாய்ந்தவை ; கவிநயமிக்க கற்பனை வளமுடையவை; கற்பார் உள்ளத்தைக் கவரும் ஆற்றலுடையவை எனலாம்.

மாண்புமிகு காப்பியப் புலவன் வர்ஜிலின் 'ஜார்ஜிக்ஸ்' ஒரு நீதி நூலாகும். அதில் கற்பனைத் திறனும், உணர்ச்சி வேகமும் ஒன்றையொன்று விஞ்சுவதற்குப் போட்டியிடு கின்றன. எளிய, இனிய சொற்களால் வர்ஜில் உழவர் களுடைய வாழ்க்கையின் பல்வேறு இயல்புகளைச் சொற் சித்திரங்களாகத் தீட்டிக் காட்டுகிருர். மக்கள் வாழ்க் கைக்கு இன்றியமையாத உழவுத்தொழில் முதற்கொண்டு தேனீ வளர்த்தல் ஈருகப் பலவகையான தொழில்களைப் பற்றிக் கலையழகு குன்ருத வகையில் அவர் எடுத்துரைக்க முயன்றுள்ளார். அம்முயற்சியில் கவிஞர் வெற்றியும் பெற்றிருக்கிருர். வர்ஜிலின் நீதி இலக்கியத்தில் அறி வுறுத்தும் பகுதிகளே மிகுதியாக இருக்கின்றன. இதற்குக் காரணம், இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்த ரோமானிய மக்களின் நாட்டுப்புற வாழ்க்கையைப் புலவர் நன்கறிந்தவராக இருந்தமையாகும். அதனுல், அவற்றில் தாம் கண்ட குறைகளைச் சுட்டாமல் சுட்டி, அவர்களுடைய தொழில்களை எவ்வாறு செய்தால் ஆதாயம் அதிகமாகக் கிடைக்கும் என்பதை அவர் விளக்குகிருர். இந்நீதி இலக்கியத்தைப் படைத்து, உள்ளமும் உணர்ச்சியும் நன்கு பண்பட்ட பிறகு, பெருங்காப்பியமாகிய 'ஏனியத்' (Aeneid)தைப் படைத்தமையால்தான் வர்ஜில் பொன்ருப் புகழைப் பெற முடிந்தது என்று நாம் கூறலாம்.

ரோமாபுரியின் பொற்கால வாழ்க்கை மெலிந்து நலிந்து நடைப்பிணமாக மாறிக்கொண்டிருந்த நேரத்தில் தோன்றியவன் மெனிலஸ். அவனிடத்தில் அறிவுத்திறன் இருந்தது. ஆனுல், கற்பனைத்திறனே, உணர்ச்சித் துடிப்போ, அழகுணர்ச்சியில் ஈடுபாடோ இருந்ததாகத் தெரியவில்லை. அதனுல்தான் அவன் படைத்த 'வான வியல்' வானத்தைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி நூலாகத் தோன்றுகிறது. இலக்கியத்தின் சாயல் சிறிதுகூட அதில் பதியாமல் போய்விட்டது.

இலத்தீன் மொழி இலக்கியத்தில் உள்ள மூன்று நீதி நூல்களுள் லுக்கிரிஷஸின் 'பொருள்களின் இயற்கை' தனிச்சிறப்புடையது. அது நீதி நூலாக விளங்குவதோடு அறிவியல் நூலாகவும் சிறப்புற்றிலங்குகிறது. மற்றவை யெல்லாம் அதற்கு அருகில்கூட வர இயலாத நிலையில் உள்ளன.

மேலைநாட்டார், நீதிப்பாடல்கள் (Didactic Poetry) என்று போற்றுவனயாவும் அறநெறியைப் போதிக்கும் நீதி இலக்கியங்களாகத் தோன்றவில்லை. யாதாகிலும் ஒரு கருத்தை அல்லது பொருளைப்பற்றி விளக்கியுரைக்கும் செய்யுள் நூல்களை நீதி நூல்கள்' என்று மேனுட்டினர் கருதுவதாக டி. எஸ். எலியட் (T. S. Eliot) குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது. "இன்புறுத்துவதைக் காட்டிலும் அறிவுறுத்தும்பண்பே இந்நூல்களில் முதன்மையிடம் பெற்றுள்ளமையால் இவற்றை 'நீதி நூல்கள்' என்று கொண்டனர் போலும். இக்காலத்தில் 'நீதி நூல்கள்' (Didactic Literature) என்னும் தொடருக்குரிய பொருள் சிறிது மாற்றம் அடைந்திருக்கிறது. அறத்தைப் போதிப்பது என்ற பொருளில் மட்டுமல்லாமல், 'செய்தியைத் தெரிவிப்பது' (Conveying Information) என்ற பொருளிலும் இச் சொல் பயன்படுத்தப்படுகிறது. சில சமயங்களில் வர்ஜிலினுடைய 'ஜார்ஜிக்ஸைப்' போன்று அறத்தை அறிவிப்பதோடு செய்திகளைத் தெரிவிக்கும் நூல்களையும் 'நீதி நூல்கள்' என்று நாம் வழங்குகிறோம்."[29]

இப்பாகுபாடு இந்தியர்களாகிய நமக்குப் புதுமையானதாக இருக்கிறது. சென்ற நூற்றுண்டின் இடையில், ஐரோப்பாவில்'கலைகலைக்காக' என்று தோன்றியபுதுமைக் கோட்பாட்டிற்கு இணங்கவே, மேலை நாட்டினர் கிரேக்க, இலத்தீன் மொழி இலக்கியங்களுள், 'நீதி நூல்கள்' என்ற பாகுபாட்டைச் செய்துள்ளனர். அதனுல்தான், இக்குறை நேர்ந்துள்ளது என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். கீழ்த்திசை நாட்டினர் இக்கருத்தை முழுவதும் ஒப்புக் கொள்ள இயலாத நிலையில் இருக்கின்றனர். நம்முடைய முன்னோர்கள் மனிதனுடைய ஒழுகலாற்றை விளக்கியுரைப்பதே நீதி நூல்கள் என்று போற்றியுள்ளனர்.

இவ்வடிப்படையில் நோக்குகின்றபொழுது இலத்தீன் மொழி 'நீதி நூல்கள்' எல்லாவற்றையும் நாம் நீதி இலக்கியங்களாக ஏற்றுக்கொள்ள இயலாது.

## 4. சீனமொழி நீதி இலக்கியம்

உலகத்தின் பழம்பெரும் நாடுகளுள் சீனவும் ஒன்று. அது எழுச்சிமிகு எண்ணத்தாலும், மலர்ச்சிமிகு இதயத்தாலும் சிறந்ததொரு நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணையாக இருந்துவருகிறது. சீனமொழி பழைமையானது. ஆனல், அதனுடைய எழுத்து வடிவம் நமக்கெல்லாம் புதுமையானது. கருத்துக்களை உணர்த்தும் ஓவியங்களே அம்மொழியில் எழுத்துக்களாகப் பயன்படுத்தப்பெறுகின்றன.

சீனமொழி பன்னெடுங் காலமாக எத்தகைய மாற்றமும் திரிபுமின்றி ஒரே மாதிரியாக இருந்துவந்தது. அதனல் எழுத்துக்கும் மொழிக்கும் இடையே வேற்றுமை வளர்ந்தது; பழமையைப் போற்றும் பண்பு அதற்குரிய தனிச்சிறப்பாயிற்று. "இலக்கியத்திலும், எண்ண வளர்ச்சியிலும் சீனர்களின் சிறப்பியல்புகள் உண்டானதற்குக் காரணம், ஓரசைச் சொற்களைக் கொண்ட மொழியை அவர்கள் பெற்றிருப்பதேயாகும். இதனலேயே சீனர்களின் எண்ணக் கட்டுக்கோப்பில் பழமை விருப்பம் நிலைபேறு அடைந்ததோடு அல்லாமல், அது ஆதிக்கம் செலுத்தவும் முடிந்தது"[80] என்று சீனநாட்டு அறிஞர் ஒருவர் கூறும் கருத்து இங்குச் சிந்திக்கத் தக்கதாகும்.

### சீன மக்களின் மனப்போக்கு

இலக்கியத்தைச் சீனர்கள் இருவகையாகப் பிரித்துள்ளனர். ஒன்று அறிவுறுத்தும் இலக்கியம்; மற்றொன்று இன்புறுத்தும் இலக்கியம். அவர்கள் உண்மைகளைக் கற்பிக்கும் இலக்கியங்களை வேருகவும், உணர்ச்சியை வெளிப்படுத்துகின்ற இலக்கியங்களை வேருகவும் பாகுபடுத்தியுள்ளனர். முதலில் கூறப்பட்டது புற நிகழ்ச்சிகளையோ, கருத்துக்களையோ விளக்குவது என்றும், இரண்டாவது வகையைச் சேர்ந்தது அகத்தெழும் உணர்ச்சி

களையும், அதனல் உண்டாகும் நிகழ்ச்சிகளையும் வெளிப் படுத்துவது என்றும் அவர்கள் கருதுகின்றனர். இவ்விரு வகை இலக்கியத்துள் பின்னதைவிட, முன்னதே சிறந்த தென்று பெரும்பான்மையான சீனர்கள் நம்புகின்றனர். அறிவுறுத்தும் இலக்கியங்கள் மக்களுடைய மனத்தைப் பண்படுத்தி வளர்ப்பன என்றும், சமுதாயத்தின் ஒழுக்க நிலையை உயர்த்துவன என்றும் அவர்கள் கருதுகின்றனர். இவ்வடிப் படையிலேயே, அண்மைக்காலம் வரையில் சீனர்கள் இலக்கியங்களை மதிப்பிட்டு வந்தனர். அதனல், அவர்களுடைய பேரிலக்கியப் பூங்காவில் நாடகங்களும், நாவல்களும், சிறுகதைகளும் இடம்பெறத் தகுதியற்றன வாகக் கருதப்பெற்றன. கவிதை ஒன்றைமட்டும் அவர்கள் சிறப்பாக அன்றுமுதல் இன்றுவரை போற்றி வரு கின்றனர்.

கருத்துக்காக அல்லாமல், கற்பனைக்காகவே இலக் கியத்தைப் போற்றிப் படிக்கும் பழக்கம் அந்நாட்டில் இருபதாண்டுகளுக்கு முன்னர்வரை இருந்ததில்லை. ஏறக் குறைய இந்நிலையே நமது தமிழகத்திலும் தொன்று தொட்டு இந்நூற்ருண்டின் இடைப்பகுதி வரையில் இருந்து வந்தது. எனினும், அவர்களுடைய இலக்கியச் சிந்தனை யில் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு தோன்று வது இலக்கியம் என்ற எண்ணமும், அது ஆன்மிக வெளிப் பாடாக அமைவது என்ற நம்பிக்கையும் ஒன்ருேடொன்று பின்னிப் பிணைந்துள்ளன.

### இலக்கியத்தின் தோற்றம்

சீனவின் மஞ்சள் ஆற்றங்கரைப் பகுதியில் 'ஷாங்' அல்லது 'இன்' என்ற இனத்தைச் சேர்ந்த மக்கள் நெடுங் காலம் வாழ்ந்து வந்தனர். அவர்கள்மீது கி. மு. 1100ஆம் ஆண்டளவில் 'சூ' (Chou) என்ற இனத்தைச் சேர்ந்த மக்கள் படையெடுத்து வந்தனர். அவர்களால் நிறுவப்பெற்ற 'சூ' அரசமரபு, சீனவின் வரலாற்றிலேயே நெடுங்காலம் ஆட்சிபுரிந்த மரபாகும். அவ்வரச மரபினருடைய ஆட்சிக் காலத்தில் சீன இலக்கியம் அரும்பியது. அக்காலத்தில் தான் முதன்முதலாக மெய்யுணர்வாளர்களும், சிந்தனைச் சிற்பிகளும் கவிஞர்களும் சீனவில் தோன்றினர்.

கன்பூசியஸ், மென்சியஸ், சுங்-சூ, லவோ-ட்ஸூ போன்ற சிந்தனையாளர்களும், கவிதைகள் பலவற்றைப் படைத்துத்தந்த கவிஞர்களும் பண்டைச் சீன இலக்கிய வானில் தோன்றிய செங்கதிர்களாவர். அக்காலத்தில் மலர்ந்த இலக்கியங்களே இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரையில் சீனமக்களின் சிந்தனைக்குத் தூண்டுகோல்களாகவும், அறிவாராய்ச்சிக்கு வழிகாட்டும் துருவ நட்சத்திரங்களாகவும் இருந்துவந்துள்ளன. சீனா வின் சிறப்பிற்கு நிலைக்களனாக விளங்கும் பேரறிவாளன் கன்பூசியஸ் (கி. மு. 551-478) காலம் முதல் சீன இலக்கியம் சீரும் சிறப்பும், வடிவும் வண்ணமும் பெற்று விளங்கத் தொடங்கியது.

கன்பூசியஸினால் முறைப்படுத்தித் தொகுக்கப்பெற்ற இலக்கியங்களையும், அவர் காலம் முதற்கொண்டு இயற்றப்பட்ட இலக்கியங்களையும் 'தொன்மைச் சிறப்பு மிகு செம்மொழி இலக்கியங்களாக'ச் (Classical Literature) சீனர்கள் போற்றிவருகின்றனர்.[31] தம்முடைய காலத்திற்கு முற்பட்ட பழம்பாடல்களையும் நூல்களையும் முறைப் படுத்தித் தொகுத்து, இலக்கிய வடிவில் அவற்றை உலகிற்குக் கன்பூசியஸ் வழங்கினார். அதனால், அவரையே அந் நூல்களின் ஆசிரியராகப் போற்றும் மரபு உண்டாயிற்று. அவருடைய காலத்திற்கு முந்திய இலக்கியங்கள் எல்லாம் பேரளவிற்கு அவற்றின் பண்டை வடிவிலேயே போற்றிக் காக்கப்பட்டு வருகின்றன. இதற்கு மூலகாரணமாக இருந்தவர் கன்பூசியஸ். கி. மு. மூவாயிரம் முதல் கி. மு. அறு நூறு வரை வளர்ச்சியுற்ற சீனமொழி இலக்கியங்களைக் கன்பூசியஸ் முறைப்படுத்தி ஐந்து நூல்களாகத்தொகுத்துத் தந்தார். அவற்றை 'ஐந்து தொன்மைச் சிறப்புமிகு இலக்கியங்கள்' என்று குறிப்பிடுவர். அவையாவன:

1. பழம்பாடல் தொகுதி (ஷி-கிங்)
2. வரலாற்றுத் தொகுதி (ஷூ-கிங்)
3. மாற்றத் தொகுதி (யீ-கிங்)
4. வினைமுறைத் தொகுதி (லீ-கி)
5. இளவேனிலும் இலையுதிர்காலமும் (சுன்-ட்ஸூ)

ஐந்தாவதாகக் குறிப்பிடப்பெற்ற நூல் கன்பூசியஸால் இயற்றப்பட்டது. மற்றவை அவரால் தொகுக்கப் பெற்றவையாகும். அவற்றுள் 'மாற்றத் தொகுதி', 'வினைமுறைத் தொகுதி' என்பன கி. மு. ஆயிரத்திற்கு முற்பட்டவை. அதனால், அவை பொருள் தெளிவற்றனவாக உள்ளன என்பர்.

சீன இலக்கியத்திற்குக் கன்பூசியஸ் ஆற்றியுள்ள அரும்பணியைப் 'பழம்பாடல் தொகுதி' உலகிற்கு இன்றும் எடுத்தியம்புகிறது. சீனுவில் காலத்தால் முற் பட்டதும், இலக்கிய நலம் கனிந்த நூலாக விளங்குவதும் இப்பழம் பாடல் தொகுதியேயாகும். இதில் இலக்கிய நயம் மிகுந்த நாட்டுப்பாடல்களும், இனிய இசையோடு பாடத்தக்க பாசுரங்களும் இடம்பெற்றுள்ளன. இப் பாடல்களைப் பாடிய புலவர்கள் நாட்டுமக்களின் அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளை உணர்ச்சிக் கனிவு மிக்க சொல் ஓவியங்களாகத் தீட்டியுள்ளனர். திறந்த வயல் வெளி களில் பணிபுரியும் உழவர்களின் உள்ளத்து உணர்ச்சி களும், செயல்களும் அப்பழம்பாடல் தொகுதியில் முதன்மையிடம் பெற்று விளங்குகின்றன.

மலைச்சாரலில் மழலை மாருத இளஞ்சிறுவர்கள் மலர்களையும் கனிகளையும் கொய்து விளையாடும் கவினுறு காட்சிகளும், இளமைத் துடிப்புமிக்க மைந்தரும் மங்கை யரும் இளவேனிற் பருவத்தில் ஆற்றங்கரை யோரங்களில் காதல் களியாட்டத்தில் மூழ்கித் திளைக்கும் நிகழ்ச்சிகளும் நவில்தோறும் நூல்நயம் பயக்கும் வகையில், எளிமையும் இனிமையும் நிறைந்த சொற்களால் படம்பிடித்துக் காட்டப்பெற்றுள்ளன. சிறப்பாகக் காதல் பாடல்கள் மென்மையும் உணர்ச்சிக்கனிவும் நிறைந்து, கற்பவர் உள்ளத்தைக்கவரும் ஆற்றல் உடையனவாக உள்ளன. இவ்வாறு மக்களுடைய வாழ்க்கை, எண்ணம், உணர்ச்சி ஆகியவை 'பழம் பாடல் தொகுதி'யில் சிறப்பிடம் பெற்றுள்ளன. இந்நூல், வரலாற்றுக்காலம் நெடுக சீன மக்களின் போற்றுதலுக்கும், பாராட்டுதலுக்கும் உரிய இலக்கியமாக இருந்து வருகிறது.

பழம்பாடல் தொகுயின் சிறப்பை ஒரு முறை கன்பூசியஸே தம் சீடர்களுக்கு எடுத்துரைத்துள்ளார். அந்நூலைப்பற்றி அவர் வெளியிட்டுள்ள கருத்துக்களை, அந்நூலிற்கு அவர் வழங்கிய மதிப்புரை என்று நாம் கூறலாம்.

> என் அருமை இளைஞர்களே! நீங்கள் ஏன் பழம்பாடல்களைப் படிக்கக்கூடாது? கவிதை உங்களை உயர்த்தும்; கூர்ந்து நோக்குமாறு தூண்டும்; மற்றவர்களோடு மனம்திறந்து உறவாடி மகிழத் துணையாகும்; உங்களுடைய உள்ள உணர்ச்சிகளை வெளிப்படுத்த ஒரு வழியை அமைத்துக் கொடுக்கும். அவற்றிலிருந்து உங்கள் பெற்றோருக்குப் பணிபுரியும் வழியையும், இறுதியில் உங்கள் அரசருக்குற்ற அதிகாரியாக விளங்கும் விதத்தையும் அவை கற்பிக்கும். மேலும், பறவைகள், விலங்குகள், செடிகொடிகள் ஆகியவற்றின் பெயர்களைத் தெரிந்துகொள்ளப் பழம்பாடல்கள் உதவிபுரியும்.
>
> (முது. 17-9)

என்பது கன்பூசியஸின் மதிப்புரையாகும்.

'வரலாற்றுத் தொகுதி' என்னும் நூல் பெரிதும் பண்டைய அரசுகள் போற்றிப் பின்பற்றிய அன்றாட அரசியல், நிர்வாக விதிமுறைப் பதிவேடுகளின் தொகுதியாகத் தோன்றுகிறது. அது சீனாவின் அரசியல் சிந்தனையை ஓரளவிற்கும், வரலாற்று நிகழ்ச்சிகளைப் பேரளவிற்கும் அறிந்துகொள்ள உதவுகிறது.

'மாற்றத் தொகுதி' என்பது கி. மு 1140 அளவில் இயற்றப்பட்டது என்பர். அதில் அறுபத்து நான்கு அறுகோண நட்சத்திர வடிவங்கள் வரிசையாக அமைக்கப் பட்டுள்ளன. எதிர்காலத்தைப்பற்றி எடுத்துரைப்பதற்குப் பயன்படத்தக்க வழிவகைகளைக்கூறும் சிறுபாடல்கள் அவை ஒவ்வொன்றின் கீழும் எழுதப்பெற்றுள்ளன. இவற்றைச் சீனமக்கள் தெய்விக ஆற்றல் வாய்ந்தவை என்றும், ஆழமான தத்துவக் கருத்துக்களைக் கொண்டவை என்றும் நம்பி வந்தனர்.

'வினைமுறைத் தொகுதி' என்ற நூல் கி. மு. 1150 அளவில் 'சூ' கோமகனால் தொகுக்கப்பெற்றது என்று சிலர் கருதுகின்றனர். எனினும், அதை நூல்வடிவில்

அமைத்துக் கொடுத்தவர் கன்பூசியஸ் என்பதைப் பலர் ஒப்புக்கொள்ளுகின்றனர். இந்நூலுள் பழைய பழக்க வழக்கங்களும், ஆசாரங்களும் மிக விரிவாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. சீன நாட்டில் அரசர் முதல் கடைநிலை ஊழியர் வரையிலுள்ள ஒவ்வொருவரும் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும், எவ்வாறு பிறருடன் பழகவேண்டும் என்பதை முறைப்படுத்திக் கூறுவது வினைமுறைத் தொகுதியாகும். மக்கள் வாழ்க்கையின் பல்வேறு நிலைகளையும், செயல்களையும் கட்டுப்படுத்தி நெறிப்படுத்தும் நூலாக இது விளங்குகிறது.

சீனுவின் ஐந்து தொன்மைச் சிறப்புமிகு இலக்கியங்களுள், ஐந்தாவதாகப் போற்றப்பெறுவது 'இளவேனிலும் இலையுதிர்காலமும்' என்ற இலக்கியமாகும். இதனை இயற்றியவர் கன்பூசியஸ் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அவர் 'லூ' என்ற குறுநில அரசில், வேளாண்மைத் துறை அமைச்சராகச் சிறிது காலம் பணியாற்றினுர். அக்காலத்தில் தாம் பெற்ற அனுபவங்களையும், அரசியல் தொடர்புகளையும் அந்நூலினுள் அவர் விரித்துரைக்கின்றுர். அந்நூலுள் அவர் போற்றிப் பாராட்டியுள்ளவை இளவேனிலைப் போன்று மனத்திற்கு மகிழ்ச்சியையும் புத்துணர்ச்சியையும் ஊட்டுகின்றன என்றும், அவர் கடிந்துரைத்தவை வாடைக்காற்று வீசும் இலையுதிர் காலத்தைப் போன்று நடுக்கத்தை உண்டாக்குகின்றன என்றும் கருதிய அவருடைய சீடர்கள், அந்நூலுக்கு 'இளவேனிலும் இலையுதிர்காலமும்' என்ற பெயரிட்டதாகக் கூறுவர்.

மேற்கண்ட நூல்களுள் பழம்பாடல் தொகுதியைத் தவிர, மற்றவை எல்லாம் உரை நடையில் எழுதப் பெற்றுள்ளன. இவற்றின் நோக்கும் போக்கும் நீதிநூல்களுள் காலத்தால் முந்தியதாக விளங்கும் 'மூதுரை' வகையைச் சேர்ந்தனவாக உள்ளன. அதனுல், அவற்றில் கலையழகையும் கற்பனை வளத்தையும் காண்பது அரிதாக இருக்கிறது. பழம்பாடல் தொகுதியில் நாட்டுப்பாடல்களைப் போன்ற அமைப்பும் ஒலிநயமும் வாய்ந்த குறும்பாடல்களும் நெடும்பாடல்களும் உள்ளன. அவை நம் கருத்தைக்கவரும் இயல்புடையனவாகும்.

**கன்பூசியஸ்**

கன்பூசியஸ் சீனுவின் சிறப்புமிக்க சிந்தனையாளர். அவர் கி.மு. 551 முதல் கி.மு. 478 வரை வாழ்ந்தார். சீன மொழியில் குவங்கு-பூ-ட்ஸ (K'ung Fu Tze) என்பது அவருடைய பெயராகும். அதற்குத் தலைவர் குவங்கு என்பது பொருள். இப்பெயரை இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்தவர்கள் 'கன்பூசியஸ்' என்று வழங்கலாயினர். அவர் சீனுவில் இருந்த லூ மாநிலத்தில் (இன்றைய ஷான்துங்கு மாநிலம்) பிறந்தவராவர். தம் தந்தையின் இரண்டாம் மனைவிக்கு அவர் மகவாகத் தோன்றினுர். அவருடைய தந்தை அஞ்சா நெஞ்சம் படைத்த போர் வீரராகச் சிறப்புற்று விளங்கியவர். கன்பூசியஸினுடைய பாட்டனும், அவருடைய மூதாதையரும் சிறந்த புலவர்களாக விளங்கியவர்களாம். அவர்களுக்கு முந்தியவர்கள் பிரபுக்களாக இருந்தனராம். பதினைந்தாம் வயது முதற் கொண்டு கன்பூசியஸ் தம் பாட்டனுடைய வழியைப் பின் பற்றத் தொடங்கினுர். 'கற்பதையே' தம்முடைய வாழ்நாள் பணியாக அவர் மேற்கொண்டார். இருபத்தைந்தாம் வயதளவில் 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கை' ஆசானுக அவர் சிறப்புற்ருர்.

கன்பூசியஸை 'செம்பொருள் கண்ட காட்சியர்; மெய்யுணர்வு பெற்ற மெய்ஞ்ஞானி' என்று உலகம் போற்றுகிறது. அவரைத் தத்துவஞானி என்பதைவிட, மூதறிஞர் (Sage) என்று கூறுவதே சாலவும் பொருந்தும். அவர் ஒரு சிறப்புமிக்க ஆசிரியராக விளங்கினுர். ஆனுல், அவர் உண்மையில் எந்தப்பள்ளிக்கூடத்திலும் ஆசிரியராகப் பணியாற்றவில்லை. அன்றைய சீனு அவரைப் புகழ்மிக்க ஓர் ஆசிரியராகவே போற்றியது. குறிப்பிட்ட ஒரு சமயத்தில், மூவாயிரம் மாணவர்கள் அவரிடத்தில் கல்விகற்றதாக ஒரு மரபுவழிச் செய்தி கூறுகிறது. அவர் வரலாற்றையும், ஆட்சிக்கலையையும், கவிதையையும், இசையையும் நன்கு கற்றுத் தேர்ச்சியுற்றிருந்தார்.

சிறந்த ஆட்சியாளர் என்று அவர் பெற்ற புகழையும், செல்வாக்கையும் கண்டு பொருமையுற்ற குறுநிலத்

தலைவர்களும், பிரபுக்களும் அவரை ஒழித்திட முயன்றனர். அப்பொழுது அவர் தம் மாநிலத்தைவிட்டு வேறொரு மாநிலத்திற்குச் சென்று தலைமறைவாக வாழ்ந்தார். அக் காலத்தில் அவர் பல நாடு நகரங்களுக்குச் சென்று வந்தார். அவர் ஊரூராகச் சுற்றித்திரிந்த காலத்தில், அவரிடம் ஈடுபாடு கொண்ட சீடர்களின் கூட்டம் எப்பொழுதும் அவரைப் பின்தொடர்ந்து சென்றது. அவருடைய சிறப் பைக் கேள்வியுற்றிருந்த பிரபுக்கள் சிலர் அவரை அந் நிலையில வரவேற்றுப் போற்றிப் பாராட்டினர். சில சமயங்களில், அவரே தாம் சென்றிருந்த ஊரிலுள்ள பிரபுக்களைக்கண்டு அளவளாவினர். அவர்கள் மூலம் தம் முடைய தனிவாழ்க்கையில் கற்பித்துவந்து அறநெறிக் கருத்துக்களும், அரசியல் கோட்பாடுகளும் பல்வேறு மாநிலங்களிலுள்ள மக்களுக்கும் பயன்படக்கூடும் என்று அவர் நம்பினர். அதற்காக அவர் ஊர்ஊராகச் சுற்றித் திரிந்து, பல பிரபுக்களைச் சந்தித்துத் தம்முடைய கருத் துக்களை அவர்களிடம் எடுத்து விளக்கினர். பதின் மூன்றாண்டுகள் தம் நாட்டைவிட்டு வெளியே சென்று அவர் வாழ நேர்ந்தது. பின்னர் தம்முடைய அறுபத்தெட்டாம் வயதில் அவர் தாயகத்திற்குத் திரும்பினர். பின்னர், எஞ்சிய வாழ்நாளை அங்கு அவர் அமைதியாக இலக்கியப் பணிபுரிவதில் கழித்தார். அப்பொழுது சீனமொழியின் பழைய பாடல்களையும், வரலாற்றுக் கருவூலங்களையும் அவர் தொகுத்தும், வகுத்தும், முறைப்படுத்தியும் கொடுத் தார். சீன இலக்கியத்திற்குக் கன்பூசியஸ் செய்த இவ்வரும் பணியைச் சீன மக்கள் நன்றியுணர்வோடு பன்னெடுங்காலமாகப் போற்றி வருகின்றனர்.

கன்பூசியஸின் வாழ்நாள்களில் நெடுங்காலமாகச் சீனுவில் நிலைபெற்று விளங்கிய நிலமானியப் படைமுறை அமைப்பு பையப்பையச் சிதைந்துகொண்டிருந்தது. இம் முறையின் கீழ் சூ (Chou) அரசமரபை நிறுவியவர் தம் முடைய நாட்டைப் பல குறுநில அரசுகளாகப் பிரித்து, அவற்றிற்குத் தமக்கு உதவியாக இருந்த உறவினர்களை ஆளுநர்களாக அமர்த்தினர். இவ்வாளுநர்கள் தம்மிடத்து

ஈடுபாடுடைய தலைவர்களுக்குத் தம்முடைய மாநிலத் தினைப் பல வட்டங்களாகப் பிரித்துக்கொடுத்தனர். இவ் வாறு, சீனப் பேரரசு உண்மையில் ஏதோ ஒருவகை யில் விரிவுபடுத்தப்பட்ட குடும்பமாகவே விளங்கியது. ஒரு குடும்பத்தில் நிலவக்கூடிய பற்றும் பாசமுமே, வட்டத் தலைவர்களுக்கும் மாநிலத் தலைவர்களுக்கும் இடையிலும் மாநிலத் தலைவர்களுக்கும் பேரரசருக்கும் இடையிலும் நின்று நிலவியது. அதனால், அவர்கள் எல்லாரும் பேரரசரிடம் கடமையுணர்வோடு கூடிய குடும்பப் பொறுப் பினால் கட்டுண்டு கிடந்தனர். ஆனால், முதல் பேரரசர் மறைந்த பின்னர், குறுநில மன்னர்களுள் முதல் பேரரச ரால் நியமிக்கப்பட்ட சிலர் மத்திய அரசிற்கு எதிராகத் தங்கள் உரிமையை நிலைநாட்ட முயன்றனர். அதை யொட்டிப் பதவிப் போராட்டங்களும், தன்னலவெறியும் தலைவிரித்தாடின. அதன் விளைவாகக் காலப்போக்கில் 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்' தோன்றின. போரும் பூசலும், கொலையும், கொள்ளையும், முடிகவர்தலும் முடிதுறத்தலும் பெருகின; குடும்ப அமைப்பைப் போன்ற ஆட்சிமுறை அழிந்தொழியலாயிற்று.

இத்தகைய அரசியல் நிலையைப் பின்னணியாகக் கொண்டே கன்பூசியஸின் ஒவ்வொரு சொல்லையும் செயலை யும் நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். அன்பும், மதிப்பும், மரியாதையும் பொருந்திய குடும்ப அமைப்பின் நிலை பேற்றை மீண்டும் நிலைநாட்டுவதைத் தம் குறிக்கோளாகக் கொண்டே அவர் எழுதியும், பேசியும், கற்பித்தும் வந்தார்.

அரச மரபில் அமைந்த குடும்ப உறவுகளின் சிறப்பு மிக்க இயல்புகளைச் சீனமக்கள் உணர்ந்துபோற்றுமாறு வரலாற்று அறிஞர் என்ற முறையில், கன்பூசியஸ் பல நடைச் சித்திரங்களை மக்களுடைய மனக்கண் முன்னால் கொண்டுவந்து நிறுத்தினர்.

சமய போதகர் என்ற முறையில் இயற்கையிகந்த நிகழ்ச்சிகளிலோ, இறையியலிலோ அவர் நம்பிக்கை கொண்டிருக்கவில்லை. மூதாதையர் வழிபாட்டை மனித

வாழ்க்கையின் ஆற்றல்மிக்க சக்தியாக நிலைபெற்று விளங்குமாறு செய்வதற்கு அவர் முயன்றார். அதைப் போற்றிப் பின்பற்றுமாறு மக்களை அவர் வேண்டினார்.

ஆட்சிக்கலை ஆசிரியர் என்ற முறையில் மீண்டும் மீண்டும் குடிமக்களுக்கும் பேரரசனுக்கும் இடையே, தந்தைக்கும் மகனுக்கும் இடையே இருக்கவேண்டிய அன்பும் ஆர்வமும், பற்றும் பாசமும் நிலவவேண்டியதன் இன்றியமையாமையையும், இருசாராரும் கூடிப்பணிபுரிய வேண்டியதன் தேவையையும் அவர் அறிவுறுத்திவந்தார். தம்முடைய பிள்ளைகள் நல்ல பழக்கவழக்கங்களையுடைய அறவோர்களாக விளங்க வேண்டுமானால், தந்தை அப் பண்புகளுக்கு நல்லதொரு எடுத்துக்காட்டாக விளங்க வேண்டும் என்பதில் கன்பூசியஸ் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தார்.

அறநெறிக் கருத்துக்களைப் புகட்டிய ஆசான் என்ற முறையில், 'தன்னை அறியத் தனக்கொரு கேடுமில்லை' என்ற கொள்கையைக் கடைப்பிடிக்குமாறு அவர் மனிதர்களை வேண்டினார். மனித உள்ளத்தைத் தன்னலப் பேய் தவறான வழியில் செலுத்துவதற்கு முன்னரே அதைச் செம்மைப்படுத்த அவர் முயன்றார். 'நல்லவர்களாக வாழ வேண்டும்' என்ற அடிப்படை விருப்பமும், 'நேர்மையானவர்களாகவும் பிறரிடத்து அன்புடையவர்களாகவும்' வாழவேண்டும் என்ற வேட்கையும் மனித உள்ளத்தில் குடிகொண்டிருப்பதைக் கண்டுணருமாறு ஒவ்வொரு மனிதனையும் அவர் வேண்டினார். இந்நல்ல பண்புகள் இயற்கையாகவே குடும்பத்தில் ஆழ வேரூன்றியிருப்பதைக் கன்பூசியஸ் கண்டறிந்தார். அவற்றை நண்பர்களுக்கும், பட்டணங்களுக்கும், பேரரசிற்கும் இடையே உள்ள உறவு முறைகளில் எவ்வாறு கொண்டு செலுத்துவது என்பதற்குரிய வழிமுறைகளை அவர் காட்டினார்.

தம் மாணவர்களோடு அடிக்கடி மெய்ப்பொருள் பற்றியும், அறவியல் கொள்கைகளைப்பற்றியும், அரசியல் கோட்பாடுகளைப்பற்றியும் கிரேக்க நாட்டு சாக்ரடிஸைப் போன்று கன்பூசியஸ் ஆராய்ந்துவந்தார். அவ்வாராய்ச்சி பெரிதும் உரையாடல்களாக அமைந்தன. தங்கள் ஆசா

னுடைய மறைவிற்குப் பிறகு, அவ்வுரையாடல்களை யெல்லாம் அவருடைய சீடர்களுள் சிலர் தொகுத்தும், வகுத்தும், உரைவிளக்கம் எழுதியும் உள்ளனர். அவற்றை நான்கு பெரும் நூல்களாக அவர்கள் முறைப்படுத்தியும் உள்ளனர்.[32] அவை.

1. முதுமொழிகள் அல்லது இலக்கியத் துணுக்குகள் (Aphorisoms or Analects)
2. சிறப்புமிக்க கல்வி (The Great Learning)
3. நடுவழிக் கோட்பாடு (The Doctrine of the Mean)
4. மென்சியஸ் (Mencius)

என்பனவாகும்.

### கன்பூசியஸின் முதுமொழிகள்

கன்பூசியஸின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் 'முதுமொழிகள்' என்ற அவருடைய நூல் தெளிவாக எடுத்துரைக்கின்றது. அந்நூல் திட்ப நுட்பம் வாய்ந்த தாயும் பொருட்செறிவு மிக்கதாயும், உரையாடல் முறை யில் இயற்றப்பட்டுள்ளது.

அந்நூலில் இருபது இயல்கள் உள்ளன. ஒவ்வோர் இயலிலும் மூன்றுக்குக் குறையாத முதுமொழிகள் இடம் பெற்றுள்ளன. சில இயல்களில் நாற்பத்தேழு முது மொழிகள் காணப்பெறுகின்றன. அந்நூலில் மொத்தம் நானூற்றுத் தொண்ணூற்றொன்பது முதுமொழிகள் உள்ளன. அந்நூலினைச் சீன மக்கள் கன்பூசிய சமயத்தின் வேதமாகப் போற்றுகின்றனர்.

கன்பூசியஸின் முதுமொழிகள் இன்றும் சீன நாட்டு மக்களின் உதடுகளிலெல்லாம் உலாவிக்கொண்டிருக் கின்றன. கன்பூசியஸின் இனிய பண்புகளும், சம காலத்தில் வாழ்ந்தவர்களைப்பற்றி அவர் வெளியிட்டுள்ள கருத்துக்களும், வாழ்க்கை வரலாற்று நூலிற்குரிய கவர்ச்சியும் அதில் இடம்பெற்றுள்ளன. அதனால், அந்நூல் அழியாப் புகழ்பெற்றது எனலாம். கன்பூசியஸ் ஒரு மாபெரும் சான்றோர் என்பதை,

என்னை மனிதர்கள் அறிந்து கொள்ளாமைக்காக நான் சிறிதும் வருந்துவதில்லை; என்றால் மனிதர்களைப் புரிந்து கொள்ள முடியாமைக்காகவே நான் பெரிதும் மனம் வருந்துகிறேன். (முது. 1 : 16)

என்னும் அவருடைய முதுமொழி அறிவிக்கிறது.

இத்தகைய மனிதாபிமானம் மிக்க பெரியாராகிய கன்பூசியஸ், "மனிதனை அளப்பதற்குரிய சிறந்த அளவுகோல் மனிதனே"[33] என்ற கோட்பாடுடையவராக விளங்கியதில் வியப்பில்லை. அவர் மனிதன் மனிதனாக வாழ வேண்டும்; மனச்சான்றுடைய மனிதனாக, மனிதப்பண்புகள் அனைத்தும் நிறைந்த மனிதனாக வாழவேண்டும் என்று விரும்பினார். அதற்காகத் தம்முடைய அறிவு, ஆற்றல், உழைப்பு ஆகிய அனைத்தையும் அந்நற்பணியில் ஈடுபடுத்தினார். அந்த மாண்புமிக்க மனிதனை உருவாக்குவதற்கு அல்லும் பகலும் அவர் அயராது பாடுபட்டார்.

தன்னுடைய நற்பண்புகளினால் நாட்டை ஆளுகின்றவன், விண்ணிலே தான் நின்றவிடத்திலிருந்து பெயராது, பிற நட்சத்திரங்களையெல்லாம் தன்னை நோக்கித்திரும்புமாறு ஈர்க்கும் கவர்ச்சி மையமாக விளங்கும் துருவ நட்சத்திரத்திற்கு ஒப்பாவான். (முது. 2 : 1)

என்னும் அவருடைய கருத்து தனிமனிதனுடைய ஒழுகலாறே நாட்டாட்சியை நன்னிலைக்குக் கொண்டுவரும் என்பதைத் தெரிவிக்கிறது.

மனிதன் அறவாழ்க்கையில் அடையக்கூடிய முன்னேற்றத்தை, ஆசிரியர் தம்வாழ்வின் பல நிலைகளாகச் சுட்டிக்காட்டுகின்றார். ஒவ்வொரு மனிதனும் அவற்றை உணர்ந்து போற்றுவதன் மூலம், அவரவர் வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதே அவருடைய நோக்கமாகும்.

பதினைந்து வயதில் நான் கல்வி கற்பதில் கருத்தைச் செலுத்தினேன். முப்பதில் நான் உள்ளவுறுதியுடையவனாக இருந்தேன். நாற்பதில் எனக்கு ஐயங்கள் என்பதே இல்லை! ஐம்பதில் ஆண்டவனுடைய கட்டளைகளை நன்கு அறிந்திருந்தேன். அறுபதில், என்னுடைய காதுகள் உண்மையை வர

வேற்கும் அடக்கமிக்க உறுப்பாகப் பயன்பட்டது! எழுபதில் நீதிநெறியின் வரம்பினைக் கடக்காமல் என்னுடைய உள்ளம் விரும்பியதை என்னால் பின்பற்ற முடிகிறது.

(முது. 2 : 4)

இம்முதுமொழி மனிதன் ஒருவனுடைய உள்ளமும், உயிரும் அடையக்கூடிய பரிபக்குவ நிலையைக் குறிப்பாகப் புலப்படுத்துகிறது.

மனிதருள்ளே சிறந்தவன் யார் என்பதையும், அவன் எத்தகைய பண்புகள் உடையவனாக இருப்பான் என்பதையும் சீனாவின் முதுபெரும் புலவர் விளக்கும் திறத்தை நாம் காண்போம் :

பேசுவதற்கு முன்பு செயலில் அதை செய்து காட்டுபவன் சான்றோன். பின்னர், தன்னுடைய செயல்களுக்கேற்ப அவன் பேசுவான். சான்றோன் எப்பொழுதும் காழ்ப்பு உள்ள மற்றவன்; விரிந்த மனப்பான்மையுடையவன். அவன் என்றும் எதிலும் குருட்டுத்தனமான ஈடுபாடுடையவனாக இருக்கமாட்டான். (முது. 2: 8, 9)

இவ்வரிய பண்புகளையுடைய பெரியவர்களை, நம்முடைய முன்னோர்கள் 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்' என்று குறிப்பிட்டுள்ளமை இங்கு நினைவு கூர்தற்குரியதாகும்.

நம்முடைய மூதாதையர் தங்கள் உள்ளக் கருத்துக்களை உலகிற்குத் தம் உரையின் மூலம் உபதேசம் செய்வதற்குத் தயங்கினர். ஏன் தெரியுமா? தாங்கள் சொல்லிய வண்ணம் வாழ்ந்துகாட்ட இயலாமற் போனால் என்ன செய்வது என்பதற்காகவே அவர்கள் அஞ்சினர் (முது. 4 : 21)

என்னும் முதுமொழி சீனாவின் பண்டைச் சான்றோர்களுடைய உள்ளப் பண்பாட்டினைப் படம்பிடித்துக் காட்டுகிறது. இக்கருத்தை நம்முடைய வள்ளுவர், 'வினைத் திட்பம்' என்ற அதிகாரத்தில்,

சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல் (குறள் 664)

என்று அறிவுறுத்தியுள்ளமை இங்குக் கருதத் தக்கது.

தம்மைப் பேரறிஞர் என்றும், அறியாமை இருளில் மூழ்கிக்கிடக்கும் மக்களுக்கு அறிவொளியைத் தந்துதவும் பேராசான் என்றும் மாணவர்கள் போற்றிப் புகழ்ந்த பொழுது, கன்பூசியஸ் மொழிந்துள்ள கருத்துரைகள் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன :

> நான் புதிதாக எதையும் படைத்துத் தருபவன் அல்லன் ; முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோல் போற்றி, அவற்றை அடுத்த தலைமுறையினரிடத்து ஒப்படைத்துச் செல்லுகிறேன். நம்முடைய பண்டைச் சான்றோர்களிடத்து நான் நம்பிக்கையும், அன்பும், ஈடுபாடும் கொண்டவன்.

> ஆசிரியன் என்பவன் யார்? அறிவினை அமைதியாகத் தேடிச் சேர்ப்பவன் ஆசிரியன் ; போதும் என்று மனநிறைவு அடையாது, தீராத அறிவுப்பசி உடையவன் ஆசிரியன் ; உரைக்கப்போகும் பொருளை உள்ளத்தில் கொண்டு, மாணவர் நன்கு புரிந்துகொள்ளுமாறு மனச்சோர்வு கொள்ளாமல் அறிவுறுத்துபவனே ஆசிரியன். இவற்றுள் எப்பண்பு என்னிடத்து இருக்கிறது? (முது. 7 : 3, 4)

இவை யாவும் கன்பூசியஸ் குணமென்னும் குன்று ஏறிநின்ற சான்றோர் என்பதை எடுத்தியம்புகின்றன. 'இன்பம் என்பது எது?' என்ற வினவினை எழுப்பாமல்,

> உண்பதற்கு மட்டமான அரிசியும், பருகுவதற்கு நீரும், படுத்து உறங்குவதற்கு என்னுடைய கையே தலையணையாகவும் கிடைக்குமாலுல்கூட, நான் அவற்றிடையே மனமகிழ்ச்சியுடன் வாழ்வேன். தீயவழியில் தேடிய செல்வத்தையும், செல்வாக்கையும், மதிப்பையும் நான் மிதக்கும் மேகங்களாக மதிக்கின்றேன். (முது. 7 : 14)

என்று உணர்த்துகிறார். அதனால், கன்பூசியஸ், 'அறத்தான் வருவதே இன்பம்' என்ற கோட்பாட்டைக் கடைப்பிடித்தொழுகியவர் என்பதை நாம் அறிய முடிகிறது.

தனி மனிதன் பின்பற்ற வேண்டிய ஒழுக்க நெறியின் பல்வேறு இயல்புகளைப் பகுத்துப்பகுத்து தெளிவுறுத்தும் சீனப்பேரறிஞர்,

> ஒழுக்கத்தின் நெறிமுறைகளைப் பின்பற்றாது அதைப் போற்றுவது வெறும் ஆரவாரமாகப் போய்விடும் ; ஒழுக்கத்தின் நெறிமுறைகளைப் பின்பற்றாத அக்கறை உணர்ச்சி, பயங்கொள்ளித் தனமாக மாறிவிடும் ; ஒழுக்கத்தின் நெறி

முறைகளைப் பின்பற்றாத துணிச்சல், கீழ்ப்படிந்து ஒழுகாத மனநிலையை வளர்த்துவிடும்; ஒழுக்கத்தின் நெறிமுறைகளைப் பின்பற்றாமல் நேர்மையை மட்டும் கடைப்பிடிக்கும் மனிதர்களை அது முரட்டுத்தனம் உடையவர்களாக்கிவிடும். (முது. 8 : 2)

என்று நவின்றுள்ள நல்லுரைகள் நாம் அனைவரும் உணர்ந்து போற்றத்தக்க உண்மைகளாகும்.

உணர்ச்சியின் ஊற்றாக இருக்கும் கலைகளும், ஒழுக்க நெறிக் கொள்கைகளும் ஒன்றாக இணைந்தால், நல்லதொரு மனித சமுதாயத்தை நாம் உருவாக்கமுடியும் என்ற கருத்தில்,

கவிதை மனிதனுடைய உள்ளத்தை எழுச்சியுறச் செய்கிறது. ஒழுக்க நெறியின் விதிகள் மனிதனுடைய பண்புநலனை உருவாக்குகிறது இசையின் மூலம் மனிதன் தன்னுடைய பண்பாட்டின் முழுநிறைவான வடிவத்தைப் பெறுகிறான். (முது. 8 : 8

என்று கன்பூசியஸ் கூறுவன சிந்திக்கத் தக்கனவாகும்.

உலகின் பல்வேறு நாடுகளில் தோன்றிய சிந்தனையாளர்கள் பலர், என்றும் விடைகாணமுடியாத வினாக்கள் சிலவற்றிற்கு விடைகாண முயன்றுள்ளனர். சீனநாட்டு சிந்தனையாளரான கன்பூசியஸிடம், "இறப்பு என்பது யாது? மரணத்தின் பின் மனிதனுடைய நிலை யாது?" என்ற கேள்விகளைச் சிலர் கேட்டனர். உடனே, அவர் சிறிதும் தயக்கமின்றி,

வாழ்க்கையைப் பற்றியே ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை! இந்நிலையில் மரணத்தைப்பற்றி நீ எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்? (முது. 11 : 11)

என்று திருப்பிக் கேட்டார். இதனால், "வாழ்க்கையின் பொருளைப் புரிந்துகொள்ளுவதற்கே ஒருவனுடைய வாழ்நாள் போதவில்லை. இந்நிலையில் வேறொன்றைப்பற்றி ஏன் கவலைப்படவேண்டும்?" என்ற எண்ணம் உடையவராகக் கன்பூசியஸ் வாழ்ந்தமை புலனாகின்றது.

நாட்டாட்சியில் கருத்தைச் செலுத்திய கன்பூசியஸ், நல்லதோர் 'அரசு'க்குத் தேவையான பண்புகள் எவை என்பதையும் எடுத்துரைத்துள்ளார்:

உணவுப்பொருள்களில் தன்னிறைவும், போதிய படை பலமும், தங்கள் அரசனிடத்தில் மக்களுக்கு நம்பிக்கையும் உடைய அரசே சிறந்துவிளங்க முடியும். (முது. 12 : 7)

சீனநாட்டின் சிறப்புமிக்க அரசிற்கு மட்டுமல்லாமல், எந்நாட்டினுடைய அரசிற்கும், எத்தகைய அரசிற்கும் இன்றியமையாது தேவைப்படும் பண்புகளையே இம் முதுமொழி உணர்த்துகிறது.

அரசனாகவோ, அமைச்சனாகவோ பதவியேற்று நாடாளுவது மகிழ்ச்சியுடன் வரவேற்கத் தக்கவொன்றாக உலகம் கருதுகிறது. ஆனால், அறிஞர் பெருமக்கள் 'ஆட்சிப் பொறுப்பினை ஒரு பெருஞ்சுமையாகவே' கருதி வந்துள்ளனர். சீனாவின் சிறப்புமிக்க சான்றோராகிய கன்பூசியஸ்,

அரசனாகப் பிறப்பது மிகவும் துன்பமாகும்; அமைச்சனாக இருப்பது எளிய செயலன்று என்பது பழமொழி அல்லவா? (முது. 13 : 15)

என்று தம் மாணாக்கரைக் கேட்கிறார். இக்கருத்து, நம் நாட்டின் அரசகுடியில் தோன்றிய இளங்கோவடிகள்,

மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயிரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்லென

(சிலப். 25 : 100-104)

என்று மொழிந்துள்ளதை நினைவுபடுத்துகிறது.

கல்வி கற்பது எதற்கு? மனிதன் அறியாமை இருளிலிருந்து விடுபட்டு அறிவொளி பெறுவதற்கும், ஆன்மிக வளர்ச்சியை அடைவதற்குமே மனிதன் கல்வியைக் கற்க வேண்டும் என்பது பண்டை உலகின் நம்பிக்கை. இன்று இந்நிலை மாறிவருகிறது. ஆனால், கன்பூசியஸ் காலத்தில் போலி அறிஞர்கள், கல்விமான்கள் நாட்டிலே செல்வாக்குற்றனர். அவர்களைக் கண்டிக்கும் வகையில் அவர்,

> பண்டைக்காலத்தில் மனிதர்கள் தங்கள் ஆன்மிக முன்னேற்றத்திற்காகக் கல்வி கற்றனர். இக்காலத்திலோ பிறர் தம்மைப் போற்றிப் பாராட்டவேண்டும் என்பதற்காகவே கல்வி பயிலுகின்றனர். (முது. 14 : 25)

என்று குறிப்பிட்டுள்ளமை இக்காலத்திற்கும் பொருந்துகின்ற உண்மையாகும்.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, உலகின் பல்வேறு நாடுகளில் 'கல்வி' கற்பது அரசகுடும்பத்தினருக்கும், மேட்டுக்குடி மக்களுக்குமேயுரிய தனியுரிமையாக இருந்து வந்ததை சரித்திரம் பேசுகிறது. திருவள்ளுவர், "மக்களாகப் பிறந்த எல்லாருக்கும் எண்ணும், எழுத்தும் இரு கண்களாகும்" என்று கூறியதோடு அமையாமல், "ஒருவனுக்கு அழிவில்லாத செல்வம் கல்வியே" என்றும் தெளிவுறுத்தியுள்ளார். கல்வி கற்பதற்கு சாதி, சமயம், செல்வம், இனம், மொழி முதலியவற்றின் அடிப்படையில் எத்தகைய் வேற்றுமையும் கிடையாது என்பது வள்ளுவர் கருத்து. ஆனால், இக்கருத்தை உலகின் பல்வேறு நாடுகள், அண்மைக் காலத்தில்தான் உணர்ந்து போற்றத் தொடங்கின. இக்கருத்தைச் சங்ககாலச் சான்றோர்கள் பலர் நன்குணர்ந்திருந்தனர் என்பதைப் புறநானூற்றுப் பாடலாலும்[34] நாம் நன்குணரலாம். இதே கருத்தை, கன்பூசியஸ் பன்னெடுங்காலத்திற்கு முன்பு கூறியுள்ளதைக் கண்டு, சென்ற நூற்றூண்டில் வாழ்ந்த மேலைநாட்டினர் பெருவியப்புற்றனர்.

> வேற்றுமை பாராட்டாது அனைவருக்கும் கல்வி கற்பிக்க வேண்டும். (முது. 15 : 28)

என்பது அவருடைய பொன்மொழி. அவருடைய காலத்தில் கல்வி என்பது அரசர்களுக்கும், பிரபுக்களுக்கும், செல்வர்களுக்கும் மட்டும் கிடைக்கக்கூடிய அருஞ்செல்வமாக இருந்தது. இந்நிலையில் முதுபெரும் புலவராக விளங்கிய கன்பூசியஸ் எத்தகைய வேற்றுமையும் பாராட்டாமல், அறிவுப்பசியோடு தம்மை நாடிவந்த சிறுவர் முதல் முதியோர் வரையிலுள்ள அனைவருக்கும் இலவசமாகக் கல்வி கற்பித்தார். தம் மாவட்டத்தில் ஒரு பள்ளியை அவர் நிறுவியிருந்தார். அதில் மூவாயிரம் மாணவர்கள் கல்வி

பயின்றதாகத் தெரிகிறது. இதைக் கண்டு வெறுப்புற்ற பழமைப் பற்றாளர்களும், பொறாமை கொண்ட புலவர்களும் கன்பூசியஸைத் தூற்றினர் என்பது இங்கு நினைவு கூர்தற்குரியது. சீனாவிலேயே முதன்முதல் ஆசிரியராகத் தொழில் செய்தவர் கன்பூசியஸ். அவர் காலத்திலும், அதற்கு முன்பும் அரசர்கள், அமைச்சர்கள், பிரபுக்களின் குருமார்கள் போன்றவர்களே கல்வி கற்பிக்கும் உரிமையுடையவர்களாக இருந்தனர். தங்களுக்கு வேண்டியவர்களுக்குத் தாங்கள் அறிந்த கல்வியை அவர்கள் கற்பித்துவந்தனர். ஆனால், முற்போக்குக் கொள்கைகளைக் கொண்ட கன்பூசியஸ், கிரேக்கத்தின் சாக்ரடிஸைப் போன்றும், தமிழகத்தின் சங்ககாலச் சான்றோர்களைப் போன்றும் "வேற்றுமை பாராட்டாது அனைவருக்கும் கல்வி கற்பிப்பதைத்" தம்முடைய இலட்சியமாகக் கொண்டொழுகினர்.

உலகிலுள்ள மனிதர்களை அவர் நான்கு வகையாகப் பாகுபடுத்தியுள்ளார்.

> இயல்பாகவே மதிநுட்பம் உடையவர்களாகப் பிறந்தவர்கள் மனித இனத்தில் உயர்ந்தவர்களாவர். அடுத்த நிலையில் நூல்கள் பலவற்றைப்படித்து எளிதில் அறிவைப் பெறுகின்றவர்கள் பாராட்டப் பெறுகின்றனர். மூன்றாவது இனத்தைச் சார்ந்தவர்கள் மந்த மதியுடையவர்களாவர். எனினும், அவர்கள் கல்விகற்பதில் நாட்டமுடையவர்களாக இருப்பர். நான்காவது பிரிவைச் சேர்ந்தவர்கள் முட்டாள்களாக இருப்பதோடு, கல்வி கற்கவும் விரும்பமாட்டார்கள். இவர்களே மனித இனத்தின் கடைநிலையைச் சேர்ந்தவர்களாவர்.
>
> (முது. 16 . 9)

இப்பாகுபாடு உளவியல் அடிப்படையில் செய்யப்பட்ட சிறந்ததொரு பாகுபாடாகப் போற்றப்பெறுகிறது. நம் நாட்டில் இத்தகைய பாகுபாடு ஒன்று நெடுங்காலமாக வழக்கில் இருந்துவருகிறது. ஆனால், அப்பாகுபாட்டில் மனித இனத்தை சாத்துவிகப் பண்பு இராசதப்பண்பு தாமசப்பண்பு என்ற மூவகைப் பண்புடையவர்களாகப் பாகுபாடு செய்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

மனிதன் காலத்தின் அருமையை நன்குணர்ந்து அதை நல்லமுறையில் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற கருத்தைக் கன்பூசியஸ்,

> நாள்களும் மாதங்களும் கழிந்துகொண்டே இருக்கின்றன.
> ஆண்டுகள் நமக்காகக் காத்துக்கொண்டு இருப்பதில்லை.
> (முது. 17 : 1)

என்று எடுத்துரைக்கிறார்.

பேரறிஞராக விளங்கிய அப்பெரியாருக்குப் புரியாத புதிராக ஒன்று இருந்து வந்திருக்கிறது. அது என்ன? அவரே சொல்லுகிறார்:

> மனிதர்களுள் இளம் பெண்களிடத்தும் வேலையாட்களிடத்தும் எவ்வாறு பழகுவது என்பதே எனக்குப் புரியவில்லை. நான் அவர்களிடத்து தாராளமாகப் பழகினால், அவர்கள் பணிந்து நடப்பதை மறந்து விடுகின்றனர். அதற்கு மாறாக அவர்களிடத்து அளவாகப் பழகினால், மனக்குறையுடையவர்களாக மாறிவிடுகின்றனர். (முது. 17 : 25)

இவ்வாறு தம் மாணவர்களிடத்தில் அவர் மொழிந்துள்ளார்.

ஆட்சிப்பொறுப்பில் உள்ளவரிடத்தில் இருக்கலாகாத தீய பண்புகள் நான்கினையும், அவற்றின் அடிப்படையில் உண்டாகும் நால்வகைத் தீயசெயல்களையும் கன்பூசியஸ் மிக வன்மையாகக் கண்டிக்கின்றார்.

> கொடுமை, அநீதி, இன்னாசெய்தல், கஞ்சத்தனம் ஆகிய நான்கும் தீய பண்புகளாகும். 'குறிப்பிட்ட ஒரு தவற்றைச் செய்தால் கொலைத்தண்டனை விதிக்கப்படும்' என்பதை மக்களுக்கு முன்னரே அறிவிக்காமல், ஏதோ தவறு செய்தார்கள் என்பதற்காக அவர்களுக்குக் கொலைத்தண்டனை விதிப்பது கொடிய செயலாகும்.
>
> முன்னர் எச்சரிக்கை செய்யாது, ஒரு நாள் திடீரென்று குறிப்பிட்ட மக்கள் என்ன வேலை செய்துள்ளனர் என்பதைத் தெரிவிக்குமாறு சொல்லுவது அநீதி.
>
> கட்டளை பிறப்பிக்கின்றபொழுது உடனடியாகச் செய்ய வேண்டும் என்று அறிவிக்காமல், வாய்ப்பு கிடைக்கின்ற பொழுது 'உடனடியாக ஏன் முடிக்கவில்லை' என்று கண்டிப்பாக மிரட்டுவது இன்னா செய்வதாகும்.

பொதுவாக மனிதர்களுக்குக் கூலியோ, பரிசோ கொடுக்கின்ற பொழுது கஞ்சத்தனமாகக் கொடுப்பது மனிதப் பண்பு இல்லாத அதிகாரியாக நடந்துகொள்ளுவதாகும்.

(முது. 20 : 2)

இத்தீய பண்புகள் நாடாளும் தலைவர்களிடத்து இருந்தால், நாடு அமைதியான முறையில் வளம் கொழிக்கும் நாடாக வளர்ச்சியுற முடியாது. அதைப் போன்றே தனிமனிதனிடத்தில் அவை காணப்பெற்றால், அவற்றின் பயனாக அல்லற்பட்டு ஆற்றாது கண்ணீர் வடிக்கும் அவலநிலை அவனுக்கு உண்டாகிவிடும் என்பதை அவர் அறிவுறுத்துகிறார்.

'அறம் என்பது யாது?' என்ற ஐயம் மக்களிடத்தில் தோன்றுவது இயற்கை. ஏனெனில், அறத்தை வரையறுத்து, 'இதுதான் அறம்' என்று தெளிவுறுத்துவது எளிய செயலன்று. ஒரு சமயம் கன்பூசியஸின் சீடர்களுக்கு இத்தகைய ஐயம் உண்டாயிற்று. 'முழுநிறைவு பொருந்திய அறம் எது?' என்பது அவர்களுடைய ஐயமாகும். அவர்கள் தங்கள் குருநாதரிடம் தங்கள் ஐயத்தைத் தெரிவித்தனர். உடனே, அவர் இவ்வுலகில் எங்கிருந்தாலும் எவனொருவன் ஐந்து பொருள்களைக் கடைப்பிடித்து ஒழுகுகின்றானோ அவன் முழுநிறைவு பொருந்திய அறத்தின் வடிவத்தைக் கண்டுணர முடியும் என்றார். அதைக் கேட்ட மாணவர்கள் அவற்றை விளக்கியுரைக்குமாறு வேண்டினர். அவர்,

அமைதியுடைய நடத்தை, தாராள மனப்பான்மை, நேர்மை, முனைப்பார்வம், அன்புடைமை ஆகிய ஐந்தும் அறத்தின் நிலைக்களன்களாகும். நீ அமைதியாக நடந்துகொண்டால், யாரும் உன்னை அவமதிக்க மாட்டார்கள். நீ தாராள மனப்பான்மை யுடையவனாக இருந்தால், எளிதில் பிறருடைய அன்பை நீ பெற்றுவிடலாம்; நீ நேர்மையாக நடந்துகொண்டால் மக்கள் உன்னிடத்தில் நம்பிக்கை வைப்பார்கள். நீ முனைப்பார்வம் உடையவனாக இருந்தால் எதிலும் நீ மிகுதியாகத் தேர்ச்சி பெற்று விளங்கலாம். நீ அன்புடையவனாக இருந்தால் பிறருடைய உதவியை எளிதில் பெறலாம்.

(முது. 17 : 6)

என்று வழக்காற்று ஒழுக்கநெறியின் இயல்புகளைச் சுட்டி, அவற்றால் விளையக்கூடிய பயன்களையும் அவர் கோடி

காட்டியுள்ளார். இவ்விளக்கத்தில், கன்பூசியஸ் 'அறம் என்ருல் என்ன' வென்பதை வரையறுத்துக் கூறவில்லை. அறத்தின் அடிப்படைப் பண்புகளைக் குறிப்பிட்டு, அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகினுல் ஒருவன் அடையக் கூடிய ஆதாயத்தைமட்டும் அவர் விரித்துரைத்துள்ளார். இதனுல் அறம் என்பது மனிதன் கடைப்பிடித்து வாழ வேண்டிய ஒழுக்கநெறி என்பது புலனுகின்றது.

மனிதன் நலமாகவும் வளமாகவும் வாழவேண்டும் என்பதில் ஆர்வம் கொண்ட கன்பூசியஸ், சீனமக்களுக்குச் சிறந்ததோர் அறவழியை 'முதுமொழிகள்' என்ற நூலின் மூலம் வகுத்துத் தந்துள்ளார். அவர் அமைத்துத்தந்த அந் நல்வழியிலேயே சீனமக்கள் நெடுங்காலமாக வாழ்ந்து வருகின்றனர்.

தனிமனிதனுடைய வாழ்க்கை நன்கு அமைந்தால்தான் நாட்டாட்சி நல்லமுறையில் சிறக்கமுடியும் என்ற கருத் தினைக்கொண்டு வாழ்ந்தவர் கன்பூசியஸ். இத்தகைய கோட்பாட்டை, நாம் இந்திய தத்துவ ஞானிகளிடத்தும், சீனப் பேரறிஞர்களிடத்துமே காணமுடிகின்றது. ஆனுல், மேலை நாட்டிலோ சமுதாய வாழ்க்கை செம்மைப்பட்டால் தான் தனிமனிதனுடைய வாழ்க்கை ஒழுங்காக அமைய முடியும் என்ற கருத்து பிளேட்டோவின் காலம் முதல் போற்றப்பட்டு வருகிறது.

கீழ்த்திசை நாடுகளுள் ஒன்ருன சீனு, நம் இந்தி யாவைப் போன்றே தனிமனிதனுடைய வாழ்க்கையைப் பற்றிப் பெரிதும் கவலைப்படுவதைக் காணுகின்ருேம்.

> இளைஞர்கள் வீடுகளில் நல்ல பண்புடையவர்களாக வளர்க்கப் பெறவேண்டும்; சமுதாயத்தில் பண்பாளர்களாகவும், மதிப் புடையவர்களாகவும் பழகவேண்டும். அவர்கள் தங்கள் நடத்தையில் கருத்துடையவர்களாகவும், நாட்டு மக்களின் நம்பிக்கைக்குரியவர்களாகவும் மக்களிடத்து அன்புடையவர் களாகவும் பழகவேண்டும். இவை அனைத்தையும் அவர்கள் கற்றுக்கொண்ட பிறகு, அவர்களிடத்தில் ஆற்றலும் ஆர்வமும் இருக்குமானுல் நூல்களைக் கற்கலாம். (முது. 1:6)

இந்த அறிவுரை எக்காலத்திற்கும் எந்நாட்டிற்கும் பயன் படத்தக்கதாகும்.

### சிறப்புமிக்க கல்வி

இந்நூல் கன்பூசியக் கோட்பாடுகளை அறிவதற்குப் பயன்படும் 'அரிச்சுவடி' போன்றதாகும். இது அறத்தைப் பற்றிப் போதிப்பதோடு அமையாமல், சீனாவின் பண்டைக் கால மக்கள் எவ்வாறு கல்வி கற்றனர் என்பதையும் நமக்குத் தெரிவிக்கிறது. சீனர்களுடைய கல்விக்கொள்கையை அறிய விரும்புகின்றவர்கள் இந்நூலைத் தவறாமல் படித்தாக வேண்டும் என்று கூறுகின்றனர்.[35]

'சிறப்புமிக்க அறநெறி எது?' என்பதை மக்களுக்குச் சுட்டிக்காட்டுவதே இந்நூலின் நோக்கமாகும். இதில் ஓர் இயல்தான் இருக்கிறது. இந்நூலிற்கு டிஸாங்கு (Tsang) என்ற கன்பூசியஸின் மாணவர் சிறந்ததொரு விளக்கவுரையைப் பத்து அதிகாரங்களில் வரைந்துள்ளார்.

நாம் முதலில் கன்பூசியஸின் கருத்துரையைக் காண்போம் :

> பொருள்கள் ஒவ்வொன்றிற்கும் அடியும் முடியும் உள்ளன. செயல்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் தொடக்கமும் முடிவும் உள்ளன. இவற்றுள் எவை முதலில் தோன்றின? எவை முடிவில் தோன்றின? என்பதை அறிய முயலும் அறிவாராய்ச்சி, சிறப்புமிக்க கல்விக்கு அருகில் நம்மை அழைத்துச் செல்லும்.
>
> நாடு முழுவதிலும் சிறப்புமிக்க அறத்தை விளக்கியுரைக்க விரும்பிய நம் முன்னோர்கள் முதலில், தங்கள் மாநிலங்களை ஒழுங்குபடுத்தினர். மாநிலங்களைச் செம்மைப்படுத்த விரும்பியவுடன், அவர்கள் முதலில் தங்கள் குடும்பங்களைத் திருத்தி அமைத்தனர். தங்கள் குடும்பங்களைச் செம்மைப்படுத்துவதற்கு முன்பு, அவர்கள் தங்களுடைய ஒழுகலாற்றினைச் செம்மைப்படுத்திக் கொண்டனர். தங்கள் ஒழுகலாற்றைத் திருத்தி அமைக்க விரும்பியவுடன், அவர்கள் முதலில் தங்கள் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொண்டனர். உள்ளத்தைத் திருத்திக் கொள்ள நினைப்பதற்கு முன்பே, தங்கள் எண்ணங்களை நேர்மையானவையாக இருக்குமாறு அவர்கள் செய்து கொண்டனர். தங்கள் எண்ணங்களை மாசற்றதாக்கிக் கொள்ளுவதற்கு அவர்கள் இயன்றவரையில் தங்கள் அறிவை வளர்த்துக் கொண்டனர். அத்தகைய பரந்துபட்ட அறிவு, பொருள்களின் இயற்கையைத் துருவித்துருவி ஆராய்வதில் அமைந்து கிடக்கிறது.

> விண்ணுலகத்தின் திருமகன் (சீனாவின் முதல் பேரரசன்) வழியில் வந்துள்ள அரசர்கள் முதற்கொண்டு பொதுமக்கள் அனைவரும் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக இருக்கின்ற தனிமனிதனுடைய ஒழுகலாற்றைப் பண்படுத்திச் சிறப்புற்றோங்கச் செய்வதில் கருத்தைச் செலுத்த வேண்டும்.[36]

என்பது இந்நூலின் மூலபாடமாகும்.

'சிறப்புமிக்க கல்வி', என்னும் இந்நீதி நூல், 'மனத்துக் கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்று நம் திருவள்ளுவர் அறிவுறுத்திய கருத்தினையே விளக்கியுரைக்கிறது. மேலும், தனிமனிதன் திருந்தினாலொழிய, நாட்டாட்சி நல்லமுறை யில் அமையமுடியாது என்பது வள்ளுவரின் நம்பிக்கை. அதைக் காரணகாரியத் தொடர்புபடுத்தி கன்பூசியஸ் எடுத்தியம்பும் திறன் நம் கருத்தைக் கவருகிறது.

கன்பூசியஸின் திருநூல்களைச் செம்மையான வடிவில் நாட்டு மக்களுக்கு வழங்க முன்வந்த சீன அரசர்கள் பலராவர். அவர்கள் எல்லாரும் அவற்றைக் கற்பலகைகளில் பொறித்து, தலைநகரிலிருந்த பேரரசன் கலைக் கழகத்தில் வைத்துக் காப்பாற்றியுள்ளனர். ஹான் அரச மரபின் காலத்தில் (கி. பி. 175-183ஆம் ஆண்டுகளுக்கு இடையில்) கல்லூரி ஒன்றின் வாயில் சுவரில், 'சிறப்புமிக்க கல்வி' என்னும் இந்நூல் நாற்பத்தாறு கற்பலகைகளில் பொறிக்கப்பட்டிருந்ததாம். இப்பொழுது அதனுடைய சிதைந்த துண்டுகள் முந்நூறு கிடைத்துள்ளன. அவற்றை அடிப்படையாகக் கொண்டே 'இந்நூல்' புத்தகமாக வெளியிடப்பெற்றிருக்கிறது.[37]

இச்செய்தியிலிருந்து கன்பூசியஸின் 'சிறப்புமிக்க கல்வி' என்ற நூலுக்கும், அதன் விளக்கவுரைகளுக்கும் எத்துணை மதிப்பு அந்நாட்டில் இருந்துவந்தது என்பது புலனாகின்றது. அத்துடன் கன்பூசியக்கொள்கை எவ்வாறெல்லாம் சீனநாட்டின் பண்பாட்டை உருவாக்குவதற்கு உறுதுணையாக இருந்திருக்கிறது என்பதும் தெரிய வருகிறது.

இந்நூலில் எடுத்துரைக்கப்பெற்ற கொள்கைகளைப் பேரரசுகள் புறக்கணித்தபொழுது நாட்டிலே குழப்பங்

களும் கொந்தளிப்புக்களும் உண்டாயின. அவற்றைத் தொடர்ந்து பேரரசுகள் விரைவில் வீழ்ச்சியுமுற்றன. நல்லதொரு சமுதாய அமைப்பை நிறுவமுயன்ற அரசியல் விரகர்களும் சிந்தனைச்சிற்பிகளும் கன்பூசியஸினுடைய இந்நூலினைத் தங்களுக்கு வழிகாட்டும் ஒளிவிளக்காகக் கொண்டு போற்றியுள்ளனர்.

**நடுவழிக் கோட்பாடு**

கன்பூசியஸின் கொள்கைகளை விளக்கும்நீதி இலக்கியங்களுள் மூன்றாவதாகச் சிறப்புற்று விளங்கும் நூலை, '**நடுவழிக் கோட்பாடு**' (The Doctrine of the Mean) என்று அழைப்பர். இந்நூல் கன்பூசியஸின் அடிப்படைத் தத்துவத்தை (Metaphysics) விளக்குவதாகும். இந்நூலினை மூன்று பகுதிகளாகப் பாகுபாடு செய்துள்ளனர்.

முதல் பகுதியில் பதினேர் அதிகாரங்களும், ஐம்பத்திரண்டு அறவுரைகளும் உள்ளன. இரண்டாவது பகுதியில் பத்து அதிகாரங்களும், ஐம்பத்திநான்கு அறவுரைகளும் உள்ளன. மூன்றாவது பகுதியில் ஆறு அதிகாரங்களும் பதினேழு அறவுரைகளும் இடம் பெற்றிருக்கின்றன. இந்நூலினைத் தொகுத்து முறைப்படுத்தியவர் ட்ஸே-ஸே (Tsze-Sze) என்பவராவர். அவர் கன்பூசியஸின் பேரனுவார்.[38] இந்நூலிற்குப் பண்டைக் காலத்திலேயே சூ-ஷி என்பவரால் நல்லதொரு முன்னுரை வரையப்பட்டுள்ளது.

> என்னுடைய குருநாதர், 'சுங்யுங்' (Chungyung) என்ற தொடரின் பொருளை நன்கு தெளிவுறுத்தியுள்ளார். 'சுங்' என்பதற்கு இருபக்கமும் சாராத 'நடுவழி' என்பது பொருள். 'யுங்' என்பதனை 'மாறா இயல்புடையது' என்று அவர் விளக்குகிறார். அளவு கருவியின் இருபக்கங்களுக்கும் இடையே நடுவு நிலையில் தொங்குகின்ற ஈயக்குண்டைப்போல இப்பேரண்டமும் நடுவில் தொங்கிக்கொண்டிருக்கிறது. அது எப்பொழுதும் அலைவதோ, ஊசலாடுவதோ கிடையாது. அதனுடைய நிலை நேர்மையானதாம். அது ஆடாமலும் அசையாமலும் நடுவு நிலையை விட்டுப் பிறழாமலும் நிற்பது அதன் இயக்கத்தில் அமைந்து கிடக்கும் அமைதியானவொரு கொள்கையைப் புலப்படுத்துகின்றது.

என்பது அவர் 'நடுவழிக் கோட்பாட்டிற்குத்' தரும் விளக்கமாகும். மேலும், அவர் எழுதியுள்ளவை வருமாறு:

இந்நூலின் மூலம் கன்பூசியஸிடமிருந்து வருகிறது. உள்ளத்து உணர்ச்சி கொண்டு உணரவேண்டிய இந்நெறி முறைகள் வாய்மொழி வழியாகப் பல தலைமுறைகள் ஆசிரியரிடமிருந்து மாணவர்களுக்குக் கற்பிக்கப்பட்டுவந்தன. மாணவர் அவற்றை மனப்பாடம் செய்தும், கலந்து உரையாடியும் அவற்றின் பொருளைப் புரிந்துகொண்டனர். தங்கள் ஒழுகலாற்றை நெறிப்படுத்துவதற்கு அவற்றைக் கருவிகளாக அவர்கள் பயன்படுத்திவந்தனர். காலப்போக்கில் அம்மரபு அழிந்துவிடுமோ என்று அஞ்சிய 'ட்ஸு-ஸு', அவற்றை மூங்கில் பலகைகளின்மீது எழுதிவைத்தார். இவ்வாறு அவை மென்ஷியஸுக்கு வந்து சேர்ந்தன.

தொடக்கத்தில் அது ஒரு கொள்கையைப்பற்றிப் பேசுகிறது. பின்னர் அது பலவகைப்பட்ட பொருள்களைப் பற்றிப் பொதுவாக ஆராய்கிறது; இறுதியில் அப்பொருள்கள் அனைத்தையும் ஒன்ருகச் சேர்த்து ஒரு கொள்கையாக உருவாக்கித் தருகிறது. விலைமதிக்கமுடியாத மணிகளைப் போன்ற அரும்பெரும் கருத்துக்களை இந்நூல் தன்னகத்தே கொண்டுள்ளது. அதனால் அதை நாம் அறிவுக் களஞ்சியம் எனலாம். அவற்றை ஒருவன் உள்ளத்தால் பொய்யாது, இறுதிவரை கடைப்பிடித்து வந்தால் அவனுக்கு எந்நாளும் இன்பமே உண்டாகும். அப்பொழுதுதான் அவன், அவற்றின் உண்மைப் பொருளை உணர முடியும்.[33]

எதிலும் நாம் அளவாக இருக்கவேண்டும்; இரு எல்லைகளுக்குச் சென்றுவிடக்கூடாது என்பதே இக்கோட்பாட்டின் அடிப்படைக் கருத்தாகும். 'எதிலும் மிதமிஞ்சிப் போகக்கூடாது' என்ற கிரேக்கரின் முதுமொழியும், மன்னரைச் சேர்ந்தொழுகுவார் 'அகலாது அணுகாது தீக்காய்வார் போல் வாழவேண்டும்' என்ற வள்ளுவர் வாய்மொழியும் சீனரின் நடுவுநிலைக் கோட்பாட்டோடு ஒப்புமையுடையன. சீனமொழியில் 'சுங்ஹோ' என்னும் சொல்லிற்குப் 'பொறுமை' என்பது பொருள். இதை "மிதமிஞ்சிப் போகாமல், இசைவுடன் பொருந்தியிருப்பது" என்று அந்நாட்டு அறிஞர்கள் விளக்குவர். அடக்கம் என்பதற்குச் சீனத்தில் 'சியெ' என்ற சொல் வழங்கப்படுகிறது. அதற்குச் "சரியான அளவுக்குக் கட்டுப்பாட்டுடன் இருப்பது" என்பது பொருளாகும். தொல் பழங்காலத்திய சீன அரசியல் பதிவேடுகளைக் கொண்டுள்ளதாகக் கருதப்படும் ஷுகிங் (வரலாற்று நூல்) என்ற

சுவடியில், முடிதுறந்த பேரரசர் 'ஹியாவோ', பட்டத்திற்கு வந்த ஹுன்னைப் பார்த்து, "நடுவழி நில்" என்று அறிவுரை கூறியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.[40] இவ் வறிவுரையே பின்னர் சிறப்புமிக்கதோர் கோட்பாடாக வளர்ச்சியுற்றது என்பர்.

இதனால், இக்கோட்பாடு, கன்பூசியஸுக்குப் பன்னெடுங்காலத்திற்கு முன்பிருந்தே சீனமக்களால் போற்றப் பட்டு வருவதாகத் தெரிகிறது. அளவுகடந்த ஆடம்பர ஆரவாரமும், பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும், பசியும் பட்டினியும் சீனாவின் சமுதாயத்தைச் சீர்குலைத்துக் கொண்டிருந்த காலத்தில் கன்பூசியஸ் தோன்றினார். எதிலும் எல்லைக்குச் சென்றுவிடும் மனவியல்பே சீனாவின் வீழ்ச்சிக்குக் காரணம் என்பதை அவர் நன்குணர்ந்தார். எனவே, நடுவழிக் கோட்பாட்டின் மூலம் சீனாவைக் காப்பாற்றிவிடலாம் என்று அவர் நம்பினார்; முயன்றார். அந்நம்பிக்கையில் அவர் பெருவெற்றியும் பெற்றார்.[41] இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்குச் சீனமக்கள் அவர் காட்டிய வழியிலேயே வாழ்ந்துவந்தனர் என்று சீனநாட்டு வரலாறு அறிவிக்கிறது.

இத்தகையதொரு சூழ்நிலையில்தான், நடுவழிக் கோட்பாட்டைப் பற்றிய தம்முடைய சித்தாந்தத்தைக் கன்பூசியஸ் வகுத்தளித்தார். அவருடைய 'நடுவழிக் கோட்பாடு' (சுங்யுங்) என்ற நூல் மனிதனிடத்து உண்டாகும் மனவெழுச்சிகள் ஏழு என்று கூறுகிறது. அவை அனைத்திலுமே அவன் பொறுமையுடன் இருக்க வேண்டும் என்பதை அது வலியுறுத்துகிறது.

> புறத்தே தெரியக்கூடாது என்று மனிதன் மறைத்து வைப்பனவற்றைப் போன்ற மனத்தின் மறைபொருள்கள் வேறில்லை. ஆனால், அவை எளிதில் புறத்தே உள்ளவருக்குப் புலனாகிவிடுகின்றன. எனவே, நல்லியல்பு வாய்ந்த மனிதன் தனிமையில் இருக்கின்ற பொழுது நேராகத் துருவித்துருவி தன்னுள்ளத்தை ஆராய்ந்து பார்க்கின்றான்.
>
> மனநலம் (Happiness), சீற்றம், துன்பம், மகிழ்ச்சி என்னும் உணர்ச்சிகளால் மனிதனுடைய உள்ளம் நிலைகுலைந்துவிடக்

> கூடாது. அது நடுப்பகுதியில் உள்ள அச்சினைச் சார்ந்தே நிற்க வேண்டும். புலன் உணர்ச்சிகளால் ஒருவன் உறுதி குலைவானுல், அவை ஒவ்வொன்றும் தம்மால் இயன்றவகையில் மனவமைதியை—ஒத்திசைவைக் கெடுத்துவிடும். நடுப்பகுதியில் உள்ள அச்சு இப்பேரண்டத்தின் பெரிய வேராகும். இப்பேரண்டம் நிலைபெற்றிருப்பதற்கு இவ்வொத்திசைவே காரணமாகும். இவ்வேரையும், ஒத்திசைவையும் மூலாதாரமாகக் கொண்டே மண்ணகமும் விண்ணகமும் அவ்வவற்றிற்குரிய இடத்தில் நின்று சிறிதும் பிறழாது இயங்கி வருகின்றன; உலகத்தில் உள்ள உயிர்க் கூட்டங்கள் அனைத்துமே அவற்றின் ஆற்றலால் போற்றி வளர்க்கப்படுகின்றன. அதனுல், அவை நிலைபெற்று விளங்குகின்றன (நடு. 1 : 3-4)

என்பது 'நடுவழிக் கோட்பாடு' என்ற நூலின் அடிப்படைக் கொள்கையாகும். இதை அடுத்துள்ள பத்து இயல்களிலும், இக்கோட்பாட்டை விளக்குவதற்குக் கன்பூசியஸின் வாய்மொழிகள் மேற்கோள்களாகக் காட்டப் பெற்றுள்ளன.

மனிதன் அறநெறியில் எவ்வாறு ஒழுகவேண்டும் என்பதைச் சிறந்ததோர் உவமையின் மூலம் கன்பூசியஸ் விளக்குகிருர் :

> வில்வீரன் ஒருவன் தான் வைத்த குறி தவறிவிட்டால், உடனே குறி தவறியதற்குரிய காரணங்களை ஆராய்ந்து அறிய முயலுவான். அதைப்போன்று நற்பண்புடைய மனிதன், தான் கடைப்பிடிக்கும் அறநெறியில் தவறுகின்றபொழுது தன்னுடைய தோல்விக்குரிய காரணத்தைக் கண்டறிந்து தன்னிடத்திலுள்ள குறைபாட்டைப் போக்கிக்கொள்ள முயலவேண்டும். (நடு. 14 : 5)

வில்வீரன் சிறந்த பயிற்சியின் மூலமே தன் தொழிலில் வெற்றி பெறுகிருன். தப்பித்தவறி தோல்வியுண்டானுல், அதற்குரிய காரணத்தைக் கண்டறிந்து, அவன் தன் குறையைப் போக்கிக் கொள்ளுகின்ருன். அதைப்போன்று அறநெறியில் வாழ விரும்புவோர் ஒல்லும் வகையெல்லாம் ஓயாது ஒழுக்கம் உடையவர்களாக ஒழுகவேண்டும். ஒழுக்கம் தவறுகின்றபொழுது, அதற்குரிய காரணத்தை அறிந்து தங்களைத் திருத்திக்கொள்ளவேண்டும் என்பது கன்பூசியஸின் கருத்தாகும். இதனுல், அறநெறியில் வாழ விரும்புகின்றவர்கள் தம்மைத்தாம் அறிந்து கொள்ளும் அகமுக நோக்கம் உடையவர்களாக இருக்க

வேண்டும் என்பதும், பயிற்சியாலும் பழக்கத்தாலும் மனிதன் ஒழுக்கமுடையவனுக வாழமுடியும் என்பதும் புலனுகின்றன.

> ஒழுக்க நெறியில் ஒழுகுகின்ற மனிதனுடைய வாழ்க்கை எதைப் போன்றது? நெடுந்தொலேவில் உள்ள நாடு ஒன்றை நோக்கி ஒருவன் மேற்கொள்ளும் பயணத்தைப் போன்றது. முதலில் அவன் அருகிலுள்ளதைக் கடந்து செல்லவேண்டும்; செங்குத்தான மலேமீது ஏறுபவன் எவ்வாறு முதலில் மலேயடி வாரத்திலிருந்து பையப்பைய மலேமீது ஏறுவானே, அதைப் போன்று அறநெறியில் ஒழுகுகின்றவன் அடிப்படை ஒழுக்க விதிகளேத் தன் வாழ்க்கையில் கடைப்பிடிப்பதன் மூலம் வாழ்க்கைப் பயணத்தை தொடங்க வேண்டும். (நடு. 15 : 1)

தனிமனிதன் உள்ளத்தைத் தூய்மையாக்கிக் கொள்ளு வதோடு,பொதுவான ஒழுக்க விதிகளேக் கடைப்பிடிப்பதன் மூலம்தான் மெல்லமெல்ல அறநெறியில் முன்னேற்றம் காணமுடியும். இதை மேற்கண்ட உவமை வாயிலாக அனேவரும் புரிந்துகொள்ளத்தக்க வகையில் கன்பூசியஸ் தெளிவுறுத்துகிருர்.

பின்னர், வழக்காற்று ஒழுக்கநெறியின் சிறப்பியல்பு களே அவர் விளக்குகின்ருர். 'பெற்ருேரைப் பேணல்' என்பது முதன்மையான இடத்தைப் பெறுகின்றது. உயிருடன் உள்ளவர்களே அன்போடும், பண்போடும் கருத்தாகப் போற்றிக் காக்கவேண்டியதன் முக்கியத்து வத்தைக் கன்பூசியஸ் பலவகையாக எடுத்துரைக்கிருர். இறந்தோர்க்கு எப்படி வழிபாடு செய்யவேண்டும் என்பதையும் அவர் குறிப்பிடுகிருர்.

> பெரிய அதிகாரி இறந்துவிட்டால் ஓராண்டிற்கு இழவு காக்கவேண்டும். பெற்ருேர்களுக்கும் பேரரசருக்கும் மூன்று ஆண்டுகள் துக்கம் காக்கவேண்டும். (நடு. 18 : 3)

என்பது அந்நாட்டின் வழக்கமாகும்.

தம்முடைய தாயார் இறந்தபொழுது, மூன்ருண்டுக் காலத்திற்குத் தாடி வளர்த்துக் கொண்டும், வேறு எப் பணியும் செய்யாமலும், புதியவர்களாக வருகின்ற எவரையும் சந்திக்காமலும், தம்முடைய ஊரை விட்டு

வெளியே செல்லாமலும் தனிமையில் படித்துக் கொண்டிருந்ததாக, அவரே வேறோர் இடத்தில் குறிப்பிட்டுள்ளது இங்கு நினைவுகூர்தற்கு உரியதாகும்.[42]

இதற்கு அடுத்து, 'நடுவழிக் கோட்பாடு' என்ற நூலில், கன்பூசியஸ் அறத்திற்கும் அரசியலுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை விளக்குகின்றார். அறமும் அரசியலும் ஏன் இணைந்து இருக்கவேண்டும் என்பதை மிக நுட்பமாக அவர்,

> அரசு மனிதனை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அதன் வேர்கள் மனித உள்ளத்தில் ஆழப் பதிந்துள்ளன. எனவே, ஒருவன் தன்னைத் துணையாகக்கொண்டே பிற மனிதர்களைப் புரிந்துகொள்ளுவதற்குரிய கருவியாக அரசு விளங்குகிறது.
>
> நீ அறத்தினைக்கொண்டு உன்னைச் செம்மைப்படுத்திக் கொள். அறம் பெரிதும் மனிதத்தன்மை உடையதாகும். மனிதனை முழுநிறைவு உடைய மனிதனாக ஆக்குவது அறம். அது சான்றோரிடத்து நிறைந்துள்ளது (நடு. 20 : 4)

என்று எடுத்துரைக்கின்றார். சீனமக்கள் 'அறநெறி முதற்றே அரசு' என்ற கோட்பாடுடையவர்களாக வாழ்ந்தனர் என்பதற்குக் கன்பூசியஸின் இம்மணிமொழி சான்று பகருகிறது. 'அரசு' மனிதனை அடிப்படையாகக் கொண்டது; மனிதனுடைய நலத்தை நாடுவதையே முதன்மையான குறிக்கோளாகக் கொண்டது. மனிதர்கள் தங்களைத் தாங்களே அறிந்துகொள்ளுவதற்கும் புரிந்துகொள்ளுவதற்கும் ஒரு கருவியாக உதவுவது அரசு. அவ்வரசு நன்முறையில்-நலம்பயக்கும் வகையில்-செயல்படவேண்டுமானால், மனிதன் அந்நெறியில் ஒழுகுபவனாக இருக்க வேண்டும் என்ற விழுமிய கருத்தைக் கன்பூசியஸ் இவ்வறவுரையின் மூலம் உலகிற்கு உணர்த்துகிறார்.

புலனடக்கம் உடையவனாக மனிதன் வாழ்வதன் மூலம்தான் சமுதாயத்தில் அமைதியும் இன்பமும் நிலவ முடியும் என்பதை அவர் எடுத்து விளக்குகிறார்.

> மண்ணுலகில் மிக முக்கியத்துவம் வாய்ந்த செயல்கள் ஐந்து உள்ளன. அவற்றை மூன்று வகையான அறநெறிக் கொள்கை

களின் மூலம் மக்கள் கடைப்பிடிக்கின்றனர். அரசருக்கும் அமைச்சருக்கும் இடையிலும், தந்தைக்கும் மகனுக்கும் இடையிலும், கணவனுக்கும் மனைவிக்கும் இடையிலும், அண்ணனுக்கும் தம்பிக்கும் இடையிலும், நண்பர்களுக்கு இடையிலும் உள்ள கடமையுணர்ச்சியைத்தான் நான் குறிப்பிடுகின்றேன். இவ்வைந்து கடமைகளும் சிறந்த விளைவுகளை உண்டாக்கக் கூடியனவாகும். திறமை வாய்ந்த மூன்று அறநெறிப் பண்புகளாக அறிவு, மனிதப் பண்புகள், ஆற்றல் என்பனவற்றைப் போற்றுகிறோம். நடைமுறையில் அவை ஒன்றாக இணைந்து விடுகின்றன. எனவே, அவற்றைப் பிரித்து வேறுபடுத்த முயல வேண்டாம்.

கல்வியைக் காதலிப்பதே அறிவுக்கு அருகில் இருப்பதாகும். ஆற்றல் அறச்செயலுக்கு நெருக்கமானது. நாண உணர்ச்சி துணிச்சலுக்கு அருகாமையில் இருப்பது.

இம்மூன்று அறநெறிப் பண்புகளையும் அறிந்து கொண்டவன் புலனடக்கத்திற்குரிய வழியை அறிந்தவனாவான். எவனொருவன். தன்னுடைய உணர்ச்சிகளை அடக்கியாளுகின்றானோ, அவன் மற்றவர்களை ஆள முடியும் ; எவனொருவனால் பிறரை எளிதில் ஆளமுடிகிறதோ, அவன் பேரரசை நன்கு ஆட்சி புரிய முடியும். (நடு. 20 : 5)

என்று நாடாள விரும்புவோருக்கு அவர் நல்லுரை பகருகின்றார்.

பின்னர், அடிப்படைத் தத்துவ ஆராய்ச்சியில் அவர் ஈடுபடுகிறார் ; விண்ணிற்கும் மண்ணிற்கும் இடையேயுள்ள தொடர்பினை விளக்குகின்றார். மண்ணில் வாழ்பவர்கள் நெறியோடும் முறையோடும் வாழ்ந்தால், விண்ணில் உள்ளபொருள்கள் தம் கடமையை ஒழுங்காகச் செய்யும் என்று குறிப்பிடுகிறார். அதாவது பருவமழை முதலியன தவறாமல் பெய்யும் என்ற கருத்தினைக் கோடி காட்டுகிறார்.

நடுவழிக் கோட்பாடு என்ற இந்நூலில் ஏழெட்டுப் பாடல்கள் "பழம்பாடல் தொகுதி"யிலிருந்து எடுத்து ஆளப்பட்டுள்ளன. அவற்றில் கவிதையழகும் கற்பனைச் சிறப்பும் காணப்பெறுகின்றன. மற்றச் செய்யுள்களெல்லாம் வெறும் மூதுரைகளாக, உரையாடல் பாணியில்

அமைந்துள்ளன. கன்பூசியஸின் நீதி நூல்களுள், நடுவழிக் கோட்பாடு ஒன்றே பாவடிவில் இயற்றப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

**மென்ஷியஸ்** (Mencius)

கன்பூசியக் கொள்கையைத் தழுவியவர்களுள் பேரும் புகழும் பெற்று விளங்கியவர் மெங்-ட்ஸு என்று சீன மொழியில் குறிப்பிடப் படுபவராவர். அப்பெயரை மேலைநாட்டினர் 'மென்ஷியஸ்' என்று திரித்துக் கொண்டனர். அவர் கி. மு. 372 முதல் 289 வரை வாழ்ந்தவராவர். அறநெறிக் கொள்கைகளை மக்கள் நடைமுறையில் கடைப் பிடிப்பதைப் பற்றியே மென்ஷியஸும் கவலைப்பட்டார்.

மென்ஷியஸின் 'மெய்யறிவு நூல்' ஏழு பகுதிகளைக் கொண்டது. கன்பூசியஸின் 'முதுமொழிகளை' விட விரிவானது. கன்பூசியக் கோட்பாட்டினருள் பழமைப்பற்று மிக்க மரபுவழிவந்த 'பழைய நூல்வழிக் கோட்பாட்டினர் களுள்' (Old Text School) மென்ஷியஸ் சிறந்தவர். அவருடைய நூலினைப் படிப்பதன் மூலம் ஒருவர் கன்பூசியக் கோட்பாட்டினை நன்கு புரிந்துகொள்ளமுடியும். கன்பூசியஸின் கருத்துக்களும் அறவுரைகளும் பரந்தும், விரிந்தும் இருந்தன. அவருடைய கோட்பாட்டைப் பின் பற்றிய சீடர்களுக்குத் தம் குருநாதரின் கருத்துக்கள் அனைத்தையும் போற்றிப் பின்பற்றுவது என்பது இயலாத செயல் என்று தோன்றியது. அத்துடன் அவை அனைத்தை யும் கற்றுத் தெளிந்த அறிவுபெறுதலும் மிகக் கடினமான செயலாகும். எனவே, கன்பூசியஸிடம் நேரடியாகத் தொடர்புகொண்டிருந்த சீடர்களும், அச்சீடர்களுடைய மாணவர்களும், தங்கள் அறிவுத்திறனுக்கும், மனப் பக்குவத்திற்கும் உகந்ததாகத் தோன்றிய கன்பூசியக் கொள்கைகளைத் தேர்ந்தெடுத்தனர். அவற்றிற்குத் தங்கள் மனப்போக்கிற்கு இசைந்தவகையில் விளக்கங்களையும் பேருரைகளையும் அவர்கள் வரைந்தனர். அவர்களுள் மென்ஷியஸ் என்பவர் முதன்மையானவர். அவர் கன் பூசியஸின் பேரப்பிள்ளையான ட்ஸு-ஸு என்பவரின் சீடராவர்.

கன்பூசியஸின் குடும்பத்தோடு தொடர்புகொண்ட மாணவராக விளங்கியமையால், மென்ஷியஸ் மரபுவழிக் கோட்பாடுகளைப் போற்றிப் பின்பற்றியுள்ளார். எனவே, அவருடைய 'மெய்யறிவு நூல்', கன்பூசியஸின் பொன் மொழிகளோடு பொருந்திய விளக்கவுரைகளைக் கொண்ட நூலாகப் போற்றப் பெறுகிறது. இதைக் "கன்பூசியக் கொள்கைகளை விளக்கியுரைப்பதிலே, தூய்மையிலும் மிகத் தூய்மை வாய்ந்தது"[43] என்று பண்டைக் கால சீன நாட்டு அறிஞர் ஒருவர் பாராட்டியுள்ளார். கன்பூசியக் கொள்கைகளை விளக்குகின்றபொழுது மென்ஷியஸ் தம் முடைய கருத்தையே ஆசிரியருடைய கருத்தாகத் திணித்துக் கூறுவதில்லை. இயன்றவரையில் தம் சமயத் தலைவரின் கொள்கைகளோடு, புதிதாக இவர் எதையும் இடைச் செருகலாகச் சேர்க்காமல் எடுத்துரைத்துள்ளார் என்பதே இதற்குப் பொருளாகும்.

இக்காரணங்களால் மென்ஷியஸின் "மெய்யறிவு நூல்" கன்பூசியக் கோட்பாடுகளை விளக்கும் தலை சிறந்த நூலாகப் போற்றபெறுகிறது. இந்நூல் உரை நடையிலேயே இயற்றப் பெற்றிருக்கிறது.

மென்ஷியஸின் கொள்கைகள் 'மக்களாட்சிப் பண்பு மிகு' கருத்துக்கள் கொண்டவை என்பர். 'இவ்வாறு கூறுவது பொருந்துமா?' என்ற ஐயம் நமக்கு எழலாம். ஆனால், அவருடைய அறிவுரைகளில் முக்கியமான சில வற்றைக் கண்டால் அவ்வையம் அகன்று விடும்.

மனிதர்கள் எல்லோரும் சமமானவர்கள் என்ற கருத் தமைய,

> "நம்மைப் போன்ற மனித இனத்தைச் சேர்ந்தவர்களே ஞானிகள்" (மெ. பகுதி 4 : பிரிவு 1 : இயல் 7, க. 3)[44]

என்று மென்ஷியஸ் குறிப்பிட்டுள்ளார்.

அவர் அரசுக்கு உரியன மூன்று உறுப்புக்கள் என்று எடுத்துரைக்கிறார். அவை மக்கள், நாடு, மன்னர் என்பன வாகும். அவற்றுள்

> "மக்களே முதன்மையான உறுப்பாகக் கருதப்படுகின்றனர். அரசு என்ற இயந்திரத்தை இயக்கும் ஒரு பணிமகனகவே அரசனை" (மெ. பகுதி 7 : பிரி 2 : இயல் 14, க 1)

அவர் கருதுகிறார்.

ஒருவருக்குப் பதவி உயர்வு அளிப்பதற்கும், தண்டனை கொடுப்பதற்கும் அரசாங்க அதிகாரிகள் அவரைப்பற்றிச் சொல்லுவதைப் போற்ருமல், நாட்டு மக்கள் எல்லாரும் அவரைப்பற்றி என்ன சொல்லுகிருர்கள் என்பதையே நாம் கருத்தில் கொள்ளவேண்டும்.

(மெ. பகுதி 1 : பிரி 2 : இயல் 7, க. 4-5)

என்பது மென்ஷியஸின் அறிவுரையாகும்.

இனி, அரசனைப்பற்றி அவர் தெரிவித்துள்ள கருத்துக்கள் சிறப்புமிக்கன. "மக்களின் நலனுக்காகவே அரசு நிறுவப்பெற்றுள்ளது. எனவே, அரசன் இசை இன்பத்தில் திளைத்தல், சோலைகளில் உலாவுதல் முதலிய புலனுகர் இன்பங்களை மக்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும்" (மெ. பகுதி 1, பிரிவு 1) என்பதும், "எப்பொழுது அரசன், அமைச்சர்களைத் தன்னுடைய கைகளாகவும், கால்களாகவும் கருதுகின்ருனே, அப்பொழுது அவர்கள் அரசனைத் தங்களுடைய வயிருகவும் இதயமாகவும் கருதுவர். இதற்குமாருக அரசன் அவர்களை நாய்களாகவும், குதிரைகளாகவும் கருதுவானுைல், அவர்கள் அவனைப் பொதுவானதொரு குடிமகனுகவே கருதுவர். அரசன் அவர்களைப் புல்லாகக் கருதுவானுைல் அவர்கள் அவனைக் கொள்ளைக்காரனுகவும், பகைவனுகவும் கருதுவர்" (மெ. பகுதி 4, பிரிவு 2; இயல் 3, க. 1) என்பதும், மக்களுக்கும் அரசனுக்கும், அமைச்சர்களுக்கும் அரசனுக்கும் இடையே இருக்க வேண்டிய தொடர்பினைத் தெளிவுறுத்துகிறது. மேலும், அவர் "தெய்விகக் கட்டளைகளை மண்ணுலகில் நிறைவேற்றுபவனே அரசன்" (மெ. பகுதி 5; பிரிவு 1; இயல் 5, க. 8) என்ற கருத்தினை மிக விரிவாக விளக்கியுள்ளார். இக்கருத்துக்கள் மென்ஷியஸின் ஜனநாயக மனப்போக்கினை நமக்குப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

இக்கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு அவர் "செங்கோலாட்சி அமைப்பு" என்ற கோட்பாட்டினை உருவாக்கினுர். மேலும், குடிமக்களைத் தம்முடைய குழந்தைகளாகக் கருதிப்போற்றும் "அருள்மிகு அரசநெறியையும்", "நானே அரசு நானே எல்லாம்" என்ற செருக்குமிக்க "எதேச்சாதிகார நெறியையும்" அவர் நன்கு வேறுபடுத்திக் காட்டியுள்ளார். அவருக்குப் பின்னர் இவ்விருகருத்துக்

களும் நாட்டாட்சியிலும், சீன அரசியல் சிந்தனையிலும் முதன்மையான இடத்தைப் பெற்றன.

மென்ஷியஸின் சிந்தனையில் தோன்றிய கருத்துக்களுள் சில, காலத்தையும் இடத்தையும் கடந்து அறிவொளி பரப்பும் சுடரொளிகளாக விளங்குகின்றன. "குழந்தை உள்ளத்தை இழக்காதவனே மாண்பு மிக்க மனிதனாவான்"[45] என்னும் பொருளாழமிக்க அவருடைய பொன்மொழி, இன்றும் பொய்யாமொழியாக விளங்குகிறது. இயல்பாகவே தூய்மையான உள்ளத்தை-மாசற்ற உள்ளத்தைப் பெற்றவர்கள் குழந்தைகள் என்பது அனைத்துலக அறிஞர்களும் ஒப்புக்கொண்டுள்ள ஓர் உண்மை. மாசற்ற உள்ளமே அறத்தின் ஊற்றாகப் போற்றப்படுகிறது. எனவே, குழந்தைகளின் உள்ளம் இயல்பாகவே அறத்தின் நிலைக்களனாக விளங்குகிறது. அத்தகைய குழந்தை உள்ளத்தைப் பெற்றவர்களே அறவோர்கள் என்றும், மாண்புமிக்க மனிதர்கள் என்றும் மென்ஷியஸ் மொழிந்துள்ளமை என்றும் மறுக்கமுடியாத உண்மையாகும்.

மனிதன் மனவமைதியுடன் வாழ்வதற்கு உரிய வழியை,

> உன்னுடைய ஆசைகளைக் குறைத்துக்கொள். அப்பொழுது தேவைகள் குறைந்துவிடும். ஆதலால், மனத்திற்கு நல்ல அமைதியும், வலிமையும் உண்டாகும். மிகக் குறைந்த அளவிற்கு ஆசைகளையுடைய மனிதனைக் கூர்ந்து காண்க! சில நேரங்களில், அவன் தன்னுடைய உள்ளத்தை அமைதியுறச் செய்ய முடியாமல் தத்தளிக்கலாம். ஆனால், அப்படித் துன்புறுத்தும் நிகழ்ச்சிகள் மிகச் சிலவாக இருக்கும். ஆசைகள் பலவற்றைக்கொண்டு அல்லற்படும் மனிதனைக் கூர்ந்து காண்க! சில நேரங்களில் மட்டும் அவன் மன நிறைவடைய முடியும். ஆனால், அவை விரல்விட்டு எண்ணக்கூடிய மிகச் சிலவாகவே இருக்கும்[46]

என்று அவர் வகுத்துக் காட்டுகிறார்.

உலகில் மனிதன் இன்னல்களையும் இடர்ப்பாடுகளையும் அனுபவித்துத்தான் ஆகவேண்டும். அப்பொழுது

தான் அவனுடைய உள்ளம் பண்படும்; ஆன்மிக அறிவொளி அவனுக்குக் கிட்டும் என்ற நம்பிக்கையுடைய வராக மென்ஷியஸ் விளங்கினார்.

> ஒரு மனிதனுக்குப் பெரும் பொறுப்புமிக்க ஓர் உயர்நிலையை அளிப்பதற்கு முன்னர், இறைவன் அவனுக்குப் பொறுத் தற்கரிய துன்பத்தைக் கொடுக்கிறான். அதனால் அவன் எதையும் தாங்கும் இதயத்தைப் பெறுமாறு செய்கிறான்; உடலை வாட்டிவதைப்பதன் மூலம் எதையும் தாங்கக் கூடிய உடல் வலிமையைத் தருகிறான்[47]

என்ற கருத்தினை, இன்றைய அறிஞர் உலகம் அப்படியே ஏற்றுக் கொள்ளத் தயங்குகிறது. எனினும், அதில் ஓரளவு உண்மை இல்லாமல் போகவில்லை.

சீன நாட்டு சிந்தனையாளர்களும் 'அருளைப்பற்றியும்' 'மன்னுயிர்க்கு இரக்கம்'காட்டும் பண்பைப் பற்றியும் சிந்தித்துள்ளனர் என்பதற்கு மென்ஷியஸ் ஒருவரைத் தான் கன்பூசியக் கோட்பாட்டினருள் நாம் சான்றாகக் காட்ட முடியும். "இரக்க உணர்வு அற்றவனை நாம் மனித னாகக் கருத முடியாது" என்பது அவருடைய நம்பிக்கை.

> இரக்க உணர்வு எல்லா மனிதரிடத்திலும் இருக்கிறது. இதைப்போன்றே நாண உணர்ச்சியும் எல்லாரிடத்திலும் இருக்கிறது. பிறரை மதித்துப் போற்றும் பண்பும், இணக்க வணக்கமும் எல்லாரிடத்திலும் உள்ள பண்புகளாகும். இவற்றைப் போன்றே நல்லதன் நலனையும், தீயதன் தீமையை யும் பகுத்துணரும் பண்பும் எல்லா மனிதரிடத்திலும் இயல் பாக அமைந்துகிடக்கின்றன.[48]

இப்பண்புகளை மனிதன் பிறப்பிலேயே பெற்றிருக் கிறான். ஆனால், வாழ்நாளில் வேறுபட்ட முறையில் அவன் தோன்றுகிறான். அதற்கு அவனுடைய சூழ் நிலையும், நற்பேறின்மையுமே காரணங்களாகும் என்று மென்ஷியஸ் கருதுகிறார். தன்னுடைய உள்ளத்தில் உறுதி யோடு நன்னெறியைக் கடைப்பிடித் தொழுகினால், மனித னாகப் பிறந்த ஒவ்வொருவனும் மாண்புமிக்க மனிதனாக விளங்க முடியும் என்பதில் அவர் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்ததாகத் தெரிகிறது.[49]

மனித வாழ்க்கைக்குத் தேவையான நல்லறங்களை நுட்பமாகவும், தெளிவாகவும் பகுத்துக் கூறுவதில்,

மென்ஷியஸ் கன்பூசியக் கோட்பாட்டினருள் சிறப்பிடம் பெறுகிருர். எதையும் அவர் கன்பூசியத் தத்துவக் கண்கொண்டு நோக்குகிருர். எக்கருத்தையும் தம்முடைய சமயத்தலைவரான கான்பூசியஸினுடைய கொள்கைகளின் அடிப்படையிலேயே அவர் விளக்கிச் செல்லுகிருர். தனி மனிதனிடத்தும், நாட்டிடத்தும், அரசுகளிடத்தும் உண்டாகும் இன்பதுன்பங்களுக்குரிய காரணங்களை வள்ளுவரைப்போன்று எளிய நடையில் அவர் தெளிவுறுத்தியுள்ளார்.

மென்ஷியஸ் காலத்தால் பிற்பட்டவராஞலும், கன்பூசியக் கோட்பாட்டின் திருமறைகளுள் ஒன்ருக அவருடைய நூலும் போற்றப்பெறுகிறது. அக்காரணத்திஞலேயே அவருடைய நூலையும் கன்பூசியஸின் நூல்களோடு நாம் ஒன்ருகச் சேர்த்து ஆராய்ந்தோம். அவருடைய நூல் கன்பூசியஸின் நூல்களைப் போன்றே பெரிதும் உரைநடையில் எழுதப் பெற்றது. சிற்சில இடங்களில் பழம் பாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. கருத்துச் செறிவுமிக்க, தற்சார்புடைய உரையாடல் நடை அவருடைய நூலை அணிசெய்கிறது. அதஞல், நம் கருத்தை எளிதில் அது கவருகிறது. ஆஞல், மெய்ப்பொருள் ஆராய்சியைப்பற்றிய பகுதிகளுள் கருத்தாழம் இருக்கின்றதே யொழிய, கலைநயம் சிறிதும் காணப்படவில்லை. கன்பூசியஸின் நூல்களோடு ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது, மென்ஷியஸின் நூலினை ‘இலக்கியம்’ என்று நாம் ஒப்புக்கொள்ள இயலாது.

### கன்பூசியஸும் திருவள்ளுவரும்

இரு பழம்பெரும் நாடுகளின் அறிவுத்திறனையும், இலக்கிய வளர்ச்சியையும், சிந்தனை ஊற்றத்தையும், நாகரிகச் சிறப்பையும், பண்பாட்டின் முதிர்ச்சியையும் உலகிற்கு உணர்த்தும் உலகப் பேரறிஞர்களாக இவ்விருவரும் போற்றப் பெறுகின்றனர். நாகரிகத்தின் கொடுமுடியில் சீரு வீறுடன் விளங்கிய காலத்தில் மக்கள் நன்ருக வாழ்வதற்கு வழிகாட்டவேண்டும் என்ற குறிக்கோளுடன் கன்பூசியஸ் வாழ்ந்தார். மனிதனுடைய அக

வாழ்க்கையில் சிறந்ததொரு பண்பாட்டையும், புற வாழ்க்கையில் ஒப்புயர்வற்ற நாகரிகத்தையும் போற்றி வளர்த்த தமிழகத்தில், அனைத்துலக மனிதனைப்பாடும் பாவலனாகத் திருவள்ளுவர் திகழ்ந்தார். இவ்விரு நாடு களின் பண்பாட்டினை உருவாக்குவதில் அப்பெரியார் களின் அறவுரைகளும் அறிவுரைகளும் முதன்மையிடம் பெற்றுள்ளன.

கன்பூசியக் கொள்கைகள் சமயக் கோட்பாடுகளாகப் போற்றப் பெற்றன. கன்பூசியஸை ஒரு சமயத் தலைவ ராக்கிச் சீனமக்கள் சழக்கிட்டனர். நல்லகாலமாகத் திருவள்ளுவரை மதத்தலைவராக மதித்துப் போற்றாது, 'சமயக்கணக்கர் மதிவழிகூறாது உலகியல் கூறிப் பொருள் இது என்ற வள்ளுவன்'[50] என்று எச்சமயத்தவரும் தத்தம் சமயத்தவராக வள்ளுவரை ஏற்றுப் போற்றி யுள்ளனர். ஹான் அரசமரபினர் காலத்தில் கன்பூசிய சமயம் அரசின் சமயமாக ஏற்றம் பெற்றது. அக்காலம் முதற்கொண்டு அண்மைக்காலம் வரையில் கோயில்களில் கன்பூசியஸின் சிலைகளை வைத்து வழிபாடு செய்து வந்தனர். தமிழ் நாட்டில் வள்ளுவரை ஒரு தெய்வப் புலவ ராகவே எல்லாச் சமயத்தினரும் கருதி வருகின்றனர். ஆனால், வள்ளுவரின் குறிக்கோளியல்புமிக்க கோட் பாடுகள் எக்காலத்திலும் ஒரு சமய நெறிக்குரிய தத்துவ மாக மலர்ச்சியுறவில்லை. அதனால், நல்லதொரு வாழ்க்கை நெறியை வகுத்துத்தந்த அறவோராகவே அன்று முதல் இன்றுவரை தமிழ்கூறும் நல்லுலகம் திருவள்ளுவரைப் போற்றிவருகிறது.

கன்பூசியக் கருத்துரைகள் எல்லாம் உதிரிப் பூக்கள் போன்றவை. அவற்றை ஒன்றாகக்கட்டி மணமிக்க மாலை யாக்குவது அரிய செயலாகும். அவருடைய அறவுரைகள் அனைத்தும் முதுமொழிகளாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. அவை பல்வேறு பொருள்களைப்பற்றி, வேறுபட்ட பல சூழ்நிலைகளில் அவர் திருவாய் மலர்ந்தருளிய திருமொழி களாக உள்ளன. எனவே, அவற்றில் கருத்து இயைபோ, ஒருமைப்பாடோ, ஒழுங்கு முறையோ காண்பதரிதாகிறது. ஆயினும், அவற்றிடையே மனித வாழ்க்கையைச் செம்

மைப் படுத்த முயலும் கருத்து இழையோடிச் செல்வதை நாம் காணலாம். பல கோணங்களில் மனித வாழ்க்கையை நோக்கிய கன்பூசியஸ், அதைத் திருத்தி நல்லதொரு சமுதாயத்தை அமைப்பதில் நாட்டம் கொண்டார். அவர் இலட்சியமனிதன் ஒருவனைக்கற்பனையில் கண்டார். அவன் எப்படி இருக்கவேண்டும் என்பதைப் பற்றி அவர் ஆழ்ந்து சிந்தித்தார். ஆனல், நடை முறையில் அத்தகைய மனிதனை, ஒழுங்கும் கட்டுப்பாடும் அமைதியுமற்ற நாட்டில் உருவாக்குவது அரிய செயல் என்பதையும் அவர் உணர்ந்தார். ஆகவே, எல்லா வகையான மனிதர்களையும் கொண்டதே மனித சமுதாயம் என்பதை அவர் ஒப்புக் கொண்டார். ஞானி, சான்ருேன், நல்ல மனிதன் பொது மனிதன் முதலியோரைக் கொண்டதே சமுதாயம் என்பதையும், அவர்கள் ஒவ்வொருவருக்கும் சமுதாயத்தில் குறிப்பிட்ட ஓரிடம் இருக்கிறது என்பதையும் கன்பூசியஸ் திட்டவட்டமாகத் தெரிவித்துள்ளார். நாடாளும் தலைவர்களுக்கும், அமைச்சர்களுக்கும், அறிஞர்களுக்கும், பொது மக்களுக்கும் பொருந்தக்கூடிய ஒரு நெறியை அவர் வகுத்தளித்தார். அந்நெறியே 'அறநெறி' என்பதாகும். சீனமக்கள் அவரவர்களுக்குரிய அறநெறியில் வாழ வேண்டும். அப்பொழுது சீன சமுதாயத்தினை அறத்தின் அடிப்படையில் அமைக்க முடியும். அவ்வாறு அமைக்கப் படும் சமுதாயமே சிறப்புமிக்க சமுதாயமாக விளங்க முடியும் என்று அவர் நம்பினர். அச்சமுதாயத்தை அமைப் பதற்காக அவர் அரும்பாடுபட்டார்.

கன்பூசியஸின் கொள்கைகளும் கோட்பாடுகளும் தற் சார்புடையனவாக உள்ளன. சீனநாடு, சீனநாட்டு மக்கள் பற்றிய பல செய்திகள் அவற்றில் இடம் பெற்றுள்ளன. பண்டை வரலாற்று நிகழ்ச்சிகளையும், படிப்பினைகளையும், அடிப்படையாகக் கொண்டனவாக அவைவிளங்குகின்றன. அவற்ருேடு வரம்பற்ற கல்வியறிவின் பயனையும் அவை எளிதில் வழங்குகின்றன. சிக்கலான கருத்துக்களை நகைச் சுவை கலந்த உரையாடல்களின் மூலம் தெள்ளத்தெளிய விளக்கிக்கூறுந்திறன் கன்பூசியஸிற்குக் கைவந்த கலையாகும்.

அவராக ஒரு நூலையும் எழுதவில்லை. எனினும், மக்கள் மனத்தில் காலந்தோறும் அவர் அழியாத செல்வாக்கைப் பெற்று உயர்ந்தார். பழம்பாடல் தொகுதி போன்ற சில நூல்களை அவர் முறைப்படுத்தித் தொகுத்துத் தந்தார் என்பது உண்மை. 'இளவேனிலும் இலையுதிர் காலமும்' என்ற இலக்கியத்தில் சுவைமிக்க நிகழ்ச்சிகளையும், கற்பனை வளமிக்க கருத்துக்களையும் எழில்மிகு எழுத்தோவியங்களாக அவர் வரைந்துள்ளார் என்பதும் உண்மை. ஆனால், அவருடைய பொன்றுப் புகழிற்குக் காரணமான நீதிநூல்கள் அனைத்தும், அவருக்குப் பின்னர் அவருடைய சீடர்களாலும், அவ்வழி வந்த மாணவர்களாலும் மாற்றருஞ் சிறப்பின் மரபு கெடாது எழுத்திலே வடித்துத்தரப்பட்டமை மறுக்க முடியாத உண்மையாகும்.

மேலும், அவருடைய வாழ்க்கை வரலாற்றின் பெரும் பகுதியை அவருடைய நூல்களிலிருந்து நாம் நன்குணர முடிகிறது. அவர் தம்மைப்பற்றி அவையடக்கத்தோடு பல இடங்களில் மொழிந்துள்ள கருத்துக்கள் அவருடைய பண்பு நலனைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. சுருங்கச் சொல்லுவது என்றால், கன்பூசியஸை ஒரு நிகழ்வியல் பாங்குக் (Realist) கொள்கையாளர் எனலாம். தலைசிறந்த இலட்சியவாதியாக வள்ளுவர் விளங்குகிறார். புலன் அழுக்கற்ற அறவோராகிய வள்ளுவர் ஒரு சிறந்த சிந்தனையாளர். அவர் மதி நுட்பத்தோடு கனிந்த அனுபவமும் வாய்க்கப் பெற்றவர். தாம் கூறவிரும்பிய கருத்துக்களை அவர் நன்கு வகைப்படுத்தித் தெளிவாகக் கூறியுள்ளார். அதற்கு மேல் மற்றொரு கருத்திற்கு இடமில்லா வகையில் —முழுநிறைவு பெற்ற வகையில் அறம், பொருள், இன்பம் என்ற பாகுபாட்டினுள் தம் கருத்துக்கள் அனைத்தையும் அவர் அடக்கியுள்ளமை அவருடைய மதிநுட்பத்தைக் காட்டுகிறது. 'ஒன்றே செய்தல் வேண்டும்! அதை நன்றே செய்தல் வேண்டும்' என்ற உயர்ந்த குறிக்கோளுடன் தம் வாழ்நாள் முழுவதையும் அவர் அந்நூலை இயற்றுவதற்குப் பயன்படுத்தி இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. அதில் கருத்து இயைபும், கற்பனை வளமும் ஒருங்கு இயைந்து காணப்பெறுகின்றன. ஆனால், அது தற்சார் பற்ற (Objective) தனிப்பெரும் நூலாகத் திகழ்கிறது.

இச்சீரிய பண்புகளால் வள்ளுவர் தந்த வான்மறை காலத்தால் கறைபடாது, இடத்தால் இடருருது, காலத்தை யும் இடத்தையும் கடந்து மண்ணகத்து மாந்தனை விண் ணகத்துத் தேவனுக மாற்றியமைக்கும் மாண்புமிகு பணி யைச் செய்துவருகிறது.

நாட்டில் அறம் நலிந்து கொண்டிருப்பதையும், பயன் மதிப்பின் அளவுகோல்கள் மாறிக்கொண்டு வருவதையும் கன்பூசியஸ் கண்டார்; அதிர்ச்சி அடைந்தார். அச்சிக்கலைத் தீர்ப்பதற்கு அவர் இருவேறு வகையான வழிகளில் தம் முடைய அறிவையும், ஆற்றலையும் பயன்படுத்தினுர். தம்முடைய காலத்து மன்னர்களையும், வேந்தர்களையும், நிலப்பிரபுக்களையும் தலையிடாக் கொள்கையைப் பின் பற்றுவதன் மூலம் நாட்டிலே ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டும்படி அவர் வேண்டினுர். அவ்வாறு மன்னர்கள் பண்டைக்காலத்தில் வாழ்ந்தமைக்கு வரலாற்று ஏடுகளி லிருந்து அவர் சான்றுகள் பல காட்டினுர். அவ்வரசர்கள் எவ்வாறு மக்களுக்கு எடுத்துக்காட்டாகவும், வழிகாட்டி யாகவும் வாழ்ந்தனர் என்பதை அவர் சுட்டிக்காட்டினுர். அதனுல்தான் அன்றைய குடிமக்கள் பண்பாட்டில் நிறை வுடையவர்களாகச் சிறந்து விளங்க முடிந்தது என்பதை யும் அவர் எடுத்துரைத்தார். இவ்வாறு தம்முடைய காலத்து அரசர்களை, அந்நெறியைக் கடைப்பிடித்தொழுகு மாறு செய்வதற்குக் கன்பூசியஸ் அரும்பாடுபட்டார். உள்ளுணர்வே (Intuition) அறநெறிவழுவா வாழ்க்கைக்கு வழிகாட்டி என்று அவர் நம்பினுர். அதனுல், அவர் நடை முறை ஒழுகலாற்றின் மூலம் அறநெறியைப் போற்றி வாழுமாறு மக்களை வற்புறுத்தினுர். பொதுவாக எல்லா ராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட அறநெறி மேல்வரிச் சட்டங்கள் இல்லையென்ருல், ஒரு மனிதனுடைய உள் ளுணர்வு, மற்ருெரு மனிதனுடைய உள்ளுணர்வுக்கு நேர் மாருக வேலை செய்யும். அதனுல், சமுதாய அமைப்புப் பாழடைந்து போய்விடும். எனவே, ஒவ்வொருவரும் அன்ருட ஒழுகலாற்று முறைகளைக் கடைப்பிடிப்பதன் மூலம் உள்ளுணர்வுக்கு உரமூட்டவேண்டும் என்று அவர் அறிவுறுத்தி வந்தார்.

இவ்வகையில் வள்ளுவர் கன்பூசியஸோடு ஓரளவிற்கு ஒப்புமை உடையவராகக் காணப்பெறுகிறார். அவர் தமிழகத்தில் வாழ்ந்த காலம் வரலாற்றுச் சிறப்புமிக்க காலமாகும். அக்காலத்தில் தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் முழுவளர்ச்சியுற்றிருந்தன. பல்வேறு நாட்டைச் சேர்ந்த மக்களுடைய வருகையாலும், தொடர்பாலும் புதுமைப் பண்புகள் பல தமிழர் நாகரிகத்தில் நுழையத் தொடங்கிய காலம் அது.

> தமிழ் மக்கள் தம் நாட்டில் வந்து தங்கும் அயல் நாட்டாரோடு அன்புடன் கலந்து பழகும் இயல்பினர் என்பது யாவரும் அறிந்ததொன்று. கடைச் சங்க காலத்தில் யவனர், வட வாரியர், கடார நாட்டினர், அருமணதேயத்தார், சோனகர் முதலானோர் தமிழகத்திற்கு அடிக்கடி வந்து தங்கியிருந்த செய்தி, சங்கத்துச் சான்றோர் பாடல்களாலும் உரையாசிரியர் களின் குறிப்புக்களாலும் நன்கறியக் கிடக்கின்றது. அந்நாட் களில் அவ்வயலாரோடு நெருங்கிப் பழகி வந்த தமிழ்மக்களுள் சிலர் தம் நாகரிக நிலையினின்று மாறி ஒழுக்கங்களிலும் தவறுவார் ஆயினர்; எனவே, அவ்வயலாருடைய தீய இயல்பு களையும் தீயொழுக்கங்களையும் அன்னோர் மேற்கொள்ளத் தொடங்கியமை தெள்ளிது. அத்தகையோரைத் திருத்தி நல்வழிப்படுத்துவதும், தமிழருடைய தொன்றுதொட்டுவந்த அறவொழுக்கமும் நாகரிகமும் சிதைந்தொழியாதவாறு காப் பாற்றுவதும், அக்காலத்தில் தூய வாழ்க்கை நடத்திவந்த தொல்லாணை நல்லாசிரியன்மாரின் மாபெருங் கடமையாகி விட்டமை அறியற்பாலதாம். கடைச் சங்ககாலத்தில் நிலவிய பேரறிஞராகிய ஆசிரியர் திருவள்ளுவனார் அக்கடமையை நிறை வேற்றும்பொருட்டுத் திருக்குறள் என்ற சிறந்த நீதி நூலொன்று இயற்றி, அதன் மூலமாகத் தமிழ் மக்கட்குப் பல அரிய உண்மைகளை அறிவுறுத்தி, அன்னோர் தம் அற வொழுக்கங்களிலும் நாகரிக நிலையிலும் தவறாதவாறு அரண் செய்வாராயினர்.[51]

என்று வரலாற்றுப் பேரறிஞர் தி. வை. சதாசிவ பண்டா ரத்தார் வரைந்துள்ளார். இக்கருத்துரை திருக்குறள் இயற்றப் பெற்றமைக்குரிய காரணத்தை ஓரளவிற்கு விளக்கமாக உரைக்கிறது.

இத்தகைய அரும்பணியை மேற்கொண்ட வள்ளுவர் மனிதன் மனிதனாக வாழ்வதற்கு உதவும் ஒப்புயர்வற்ற கருத்துக்களைத் தற்சார்பற்ற முறையில் எடுத்துரைத்தார்.

கன்பூசியஸ் எத்துணையளவிற்கு உள்ளுணர்வை முதன்மையானதாகப் போற்றினரோ அத்துணையளவிற்கு நம் திருவள்ளுவர் அறிவிற்கே முதன்மையிடம் கொடுத்துள்ளார்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள் 355)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு (குறள் 423)

என்னும் குறட்பாக்கள் இதற்குப் போதிய சான்றுகளாகும்.

கன்பூசியஸின் அறிவியல் போதனைகளும் அரசியல் கொள்கைகளும் எளிமையானவை. மனிதர்களிடத்து இல்லாத அல்லது மனிதர்களுடைய ஆற்றலுக்கு அப்பாற்பட்ட எதையும் (உலகப் பெருஞ்சமயத் தலைவர்களைப் போன்று) மக்களிடம் அவர் காண விழையவில்லை. அவர் காட்டிய நெறியும் குறிக்கோளியல்பு மிகுதியாக உடையது என்று சொல்லுவதற்கில்லை. ஞானிகளாலும், சான்றோர்களாலுமே அந்நெறியைப் பின்பற்ற முடியும்; மற்றவர்களால் இயலாது என்றும் நாம் கூறமுடியாது. பின்பற்றுகின்றவர்களுடைய திறனுக்கேற்ற அறத்தினையே கன்பூசியஸ் வகுத்துரைத்துள்ளார். அவர் மக்கள் எல்லாரும் அறிஞர்களாக மாறவேண்டும் என்று விரும்பினர். எனவே, அவர் தம்மை நாடிவந்தவர்களுள் சிறந்தவர்களை அறிஞர்களாகவும், அறவோர்களாகவும் மாற்ற முயன்றார்.

திருவள்ளுவர் மனித சமுதாயத்தில் கடைநிலையில் உள்ளவனும் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழிகாட்டியுள்ளார். தம் நூலினை முப்பாலாகப் பாகுபடுத்தியுள்ள முறையும், ஒவ்வொரு பாலையும் பல அதிகாரங்களாக முறைப்படுத்தியுள்ள வகையும், ஒவ்வோர் அதிகாரத்திலும் தாம் கூறவந்த கருத்துக்களை அறிவு ஆற்றல், உடல் நலம், மனநலம் முதலியவற்றால் வேறுபட்ட பல நிலைகளில் உள்ள மக்களைக் கருத்தில் கொண்டு பலநிலை அறத்தினை அவர் அறிவுறுத்தியுள்ள அழகும் இக்கருத்தை அரண் செய்கின்றன. வள்ளுவர் இலட்சிய

நோக்குடைய ஒரு பகுத்தறிவுவாதி. மனிதனுடைய மனச் சான்றுதான் அவருடைய கொள்கையின் உரைகல். அதனுல்தான் தனி மனிதனுடைய ஒழுகலாற்றிற்குத் தேவையான கருத்துக்களை விளக்கிக் கூறுவதில் அவர் பேரீடுபாடு கொண்டு விளங்குகிருர். அவர் நிலையங்களை நிறுவுவதன் மூலம் தம் கொள்கைகளை விளக்க முயல வில்லை. இதனுல்தான் அவர் ஒரு சான்ருேராகவும், ஞானி யாகவும் போற்றப்படுகின்ருர்; சமயத் தலைவராக யாரும் அவரைக் கருதுவதில்லை.

கன்பூசியஸ் மறைந்த சில நூற்ருண்டுகளுக்குப் பின்னர், அவருடைய கோட்பாட்டைத் தழுவியவர்கள் கன்பூசியஸை ஒரு சமயத் தலைவராகக் கருதிப் போற்ற லாயினர்; நாட்டு மக்களிடத்துத் தெய்வமாக அவரை அறிமுகப்படுத்தி வைத்தனர். இந்நிலை வள்ளுவருக்கு இன்றுவரை உண்டாகவில்லை. கன்பூசியஸிற்குக் கிடைத்த சீடர்களைப் போன்று, நம் திருவள்ளுவருக்கு யாரும் கிடைக்காமல் போனது இதற்கு ஒரு காரணமாகலாம். வள்ளுவருடைய மிதமிஞ்சிய இலட்சிய நோக்கும் அனைத் துலகக் கோட்பாடும் இதற்குத் தடையாகவும் இருந் திருக்கலாம்.

மனிதனை மதிப்பிடுவதற்கு மனிதனே சிறந்த அளவு கோல் என்று கருதியவர் கன்பூசியஸ். இக்கொள்கையின் அடிப்படையில் தோன்றியதே 'தனக்கின்ஞ இன்ஞ பிறர்க்கு'[52] என்னும் பொன்மொழியாகும். உண்மை யான மனிதன் இக்கருத்திற்கு இலக்கியமாக விளங்குவான் என்று அவர் நம்பினர். அவருடைய போதனைகளில் இக்கொள்கையே இழையோடிச் செல்லுகிறது. இதை அவரே பலமுறைச் சுட்டிக்காட்டியுமுள்ளார்.

திருவள்ளுவரும் மனிதன் மனிதனுக வாழவேண்டும் என்ற நோக்குடையவராக இருந்தமை அவருடைய நூலால் நன்கு புலனுகின்றது. தீய இயல்புகளிலிருந்து விடுதலை பெற்று அவன் நல்ல மனிதனுக வாழவேண்டும் என்பதே அவருடைய அவா. அதற்குரிய நெறிமுறைகளையே அவர் தம் நூலில் வகுத்தளித்தார். தனக்குத் துன்பம் தருவன வற்றை, வெறுப்பு உண்டாக்குவனவற்றை ஒருவன் பிறருக்

குச் செய்வது அறிவுடைமையாகாது என்பதை வள்ளுவர் ‘இன்னு செய்யாமை’ என்ற அதிகாரத்தில் மிக விரிவாக எடுத்தியம்பியுள்ளார். அவற்றுள்,

அறிவினுன் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்ப்போல் போற்ருக் கடை (குறள் 315)

இன்னு எனத்தான் உணர்ந்தவை துன்னுமை
வேண்டும் பிறன்கண் செயல் (குறள் 316)

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணுசெய் யாமை தலை (குறள் 317)

தன்னுயிர்க்கு இன்னுமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னு செயல் (குறள் 318)

என்னும் குறட்பாக்கள் கன்பூசியஸின் கருத்திற்கு விளக்கம் தருவனவாக அமைந்துள்ளன.

மனிதர்கள் எல்லாரும் அறநெறியில் ஒழுகுவதன் மூலம் மாண்புமிகு மனிதர்களாகச் சிறப்புற முடியும் என்று கன்பூசியஸும் வள்ளுவரும் நம்பினர். கன்பூசியஸ் காண விரும்பிய மாண்புமிகு மனிதனுக்கு ‘சுன் ஸு’ (Chun-tse) என்பது பெயர். வள்ளுவர் காணவிரும்பிய மாண்புமிகு மனிதன் ‘சான்ருேன்’ என்பவனுவான். இவர்கள் இருவரும் காணவிரும்பிய மாண்புமிகு மனிதர்கள், பிளேட்டோவின் இலட்சிய மனிதனுகிய தத்துவஞானி அன்று; அரிஸ்டாட்டில் காணவிரும்பிய பெருந்தகையாளனும் அன்று; நீட்ஸே கனவு கண்ட பேராற்றலுடைய மனிதனும் (Super Man) அன்று. கன்பூசியஸ் காணவிரும்பிய இலட்சிய மனிதன் அன்பும் பண்பும் நிறைந்த அறவோனுகச் சித்தரிக்கப்பட்டுள்ளான். அறநெறியில் ஒழுக விரும்பும் அவன், கல்வியைக் காதலிப்பவனுகவும், அமைதியான மனநிலை யுடையவனுகவும், தன்னுடைய நடத்தையில் என்றும் கருத்துடையவனுகவும் காணப்பெறுகிருன். தான் பிறருக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவதன் மூலம், சமுதாயத்தில் பெருஞ்செல்வாக்கைப் பெறமுடியும் என்ற நம்பிக்கை யுடையவனுக அவன் விளங்குகிருன். போதுமென்ற மனமும், எளிமையில் நாட்டமும் கொண்டு வாழவிரும்பும் மனிதனுக நமக்கு அவன் காட்சியளிக்கின்ருன்.[53] கன்பூசியஸின் அறவுரைகள் அனைத்தும்

இத்தகைய மனிதனை உருவாக்குவதையே நோக்கமாகக் கொண்டுள்ளன. இத்தகைய மனிதர்களால்தான் சீனு ஏற்றமும் எழிலும் பெற்று விளங்கமுடியும் என்று அவர் மனமார நம்பினுர்.

பண்டைத் தமிழ் மக்களும் தங்களுடைய மக்களைச் சான்ருேராக்க விரும்பினர். சான்ருேனுக்குதல் தந்தையினுடைய கடமையாகக் கருதப்பட்டதைப் புறநானூற்றுப் பாடலால் நாம் அறிகிருேம்.[54] நம் வள்ளுவரும் மக்கள் எல்லாரும் சான்ருேர்களாக வாழவேண்டும் என்ற வேட்கையுடையவராக இருந்தார். பொருட்பாலில் 'சான்ருண்மை' என்ற அதிகாரத்தில், சான்ருேர்களுக்கு உரிய பண்புகள் யாவை என்பதை வள்ளுவர் தெளிவுறுத்தியுள்ளார். ஒரு மனிதனுக்குத் தேவையான நற்பண்புகள் அனைத்தும் நிறைந்து விளங்குபவரே சான்ருேர் எனப் பட்டனர். மக்களிடத்து அன்புடையவராகவும், பழிக்கு அஞ்சுபவராகவும், உலகத்தோடு ஒத்தொழுகுபவராகவும், இரக்கமுடையவராகவும், உண்மை பேசுவோராகவும் வாழ்ந்தவர்களே 'சான்ருேர்' என்று அழைக்கப் பெற்றனர்.

வள்ளுவர் கண்ட இலட்சிய மனிதன் வெறும் கற்பனை மனிதன் அல்லன். அவன் மனச்சான்றினை மதித்துப் போற்றும் மண்ணுலக மனிதன்; அவனுடைய கால்கள் இம்மண்ணுலகில் ஆழப்பதிந்துள்ளன. அவன் எதிலும் இரண்டு எல்லைகளுக்குப் போகாமல் இடைப்பட்ட அற நெறியில் நின்ருெழுகும் அன்பின் திருவுருவம். அத்தகைய மாண்புமிகு மனிதர்கள், தமிழகத்தில் வள்ளுவர் காலத்தில் பலர் வாழ்ந்தனர். அவர்களை, 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்ருேர்' (புறம். 191) என்று சங்ககாலப் புலவர்கள் பாராட்டியுள்ளனர்.

கன்பூசியஸ் கல்வியின் சிறப்பையும், அதைக் கற்க வேண்டியதன் இன்றியமையாமையையும் பலவிடங்களில் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார். எனினும், நாம் அவருடைய கல்விக்கொள்கையை முறைப்படுத்தியுரைக்க இயலவில்லை. பழம்பாடல்கள் மனிதருக்கு எழுச்சியூட்டுகின்றன. சடங்குகள் பழக்க வழக்கங்களை ஒழுங்கு

படுத்துகின்றன. இசை மனித உணர்ச்சிக்கு முழுமைத் தன்மையை அளிக்கிறது; எனவே அவற்றை மனிதன் கற்க வேண்டும் என்பது அவர் கருத்தாகும். அவர் கல்வியின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்தவராவர். அதன் பயனை யும் நன்கு அவர் அறிந்திருக்கிறார். மக்களிடத்து மண்டிக் கிடக்கும் அறியாமை இருளை அகற்றுவதற்கு, அவர் கல்வி யெனும் ஒளிவிளக்கை ஏந்தித் தம் வாழ்நாள் முழுவதும் அயராது அரும்பணியாற்றி இருக்கிறார். அதனால், ஹான் அரசமரபினர் காலத்தில் கன்பூசியஸை சீனாவின் இலட்சிய ஆசானாகவும், அறிஞர்களுக்கும் பண்டிதர்களுக்கும் சிறந்த தோர் முன்னோடியாகவும் மக்கள் போற்றத் தொடங்கினர். அவரோடு தொடர்புடைய நூல்கள் பாடப் புத்தகங்களா கப் போற்றப்பட்டன. அதுமுதல், இருபதாம் நூற் றாண்டு வரை சீனாவின் ‘கல்வியுலகத் தந்தையாக’ப் பாராட்டப்பெறும் பேற்றினை அவர் பெற்றிருந்தார்.

கல்வியின் தேவையையும், பயனையும் நன்குணர்ந்தவர் நம்முடைய திருவள்ளுவர். திருக்குறளின் பொருட்பாலில் கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, புல்லறி வாண்மை என்ற ஐந்து அதிகாரங்களின் மூலம் அவர் இவற்றை அறிவுறுத்தியுள்ளார். கல்வியைப்பற்றித் தெளி வான ஒரு கொள்கையை வள்ளுவர் வகுத்துள்ளார். மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் கல்வி கற்கும் உரிமை உண்டு என்பது அவருடைய கருத்தாகும். அவ் வடிப்படையில், அவர் எழுதுதல், படித்தல், கணக்குப் போடுதல் என்ற முக்கலைகளை முறையாகக் கற்றுத் தேர்ச்சிபெற வேண்டியதன் இன்றியமையாமையை நன்கு தெளிவுறுத்தியுள்ளார்.

கல்வி கல்லாத மக்கள் விலங்கை ஒப்பர்; அவர்தம் முகத்தில் உள்ள கண்கள் இரண்டும் புண்களாகவே கருதப் பெறும் என்பதை,

> விலங்கொடு மக்கள் அனையர், இலங்குநூல்
> கற்றாரோடு ஏனை யவர் (குறள் 410)

> கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு
> புண்ணுடையர் கல்லா தவர் (குறள் 393)

என்றும் திருவள்ளுவர் அறிவித்துள்ளார்.

இவற்ருல் மக்களாகப் பிறந்தவர் அனைவரும் மக்கள் என்றும், கண்கள் உள்ளவர் என்றும் மதிக்கப் பெறுவதற்குக் கல்விகற்றல் இன்றியமையாதது என்பதும், மக்களாகப் பிறந்தும் கல்வி கல்லாதவர் மக்களாகார்; கண்கள் இருந்தும் கண்ணுடையவராகார் என்பதும் பெறப்படுகின்றன.

அவர் இயற்றியருளிய திருக்குறள் கல்விக் களஞ்சியமாகப் போற்றப்பெறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி ைேடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம் (திரு. மா. 16)

என்னும் பாடல் தமிழ்க்கல்வியின் கருவூலமாகத் திருக்குறள் விளங்குவதை நமக்கு அறிவிக்கின்றது. இதைப் போன்று திருவள்ளுவரே தமிழ்ப்புலவர்களுக் கெல்லாம் தந்தையைப் போன்றவர் என்ற கருத்தும் நம் நாட்டில் தொன்றுதொட்டு நின்று, நிலவி வருகின்றது. இதனை,

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்கிருள்மா லைக்கும் பெயர்

என்ற திருவள்ளுவ மாலைச் செய்யுளாலும் (34),

அவனே புலவன் அவனே அறிஞன்
அவனே தமிழை அறிந்தோன்—சிவனறிய
வள்ளுவ தேவன் வசனத்தை மெய்யாக
உள்ளுவ தேவன் உளன்[33]

என்ற பழம்பாடலாலும் நாம் நன்குணரலாம்.

பழமைப் பற்றில் கன்பூசியஸிற்கு இணையாக, உலக வரலாற்றில் வேருெருவரைச் சுட்டிக்காட்ட நம்மால் இயலாது. முன்னேற்றத்தை அவர் வெறுத்தது இல்லை. அவருடைய கருத்துப்படி முன்னேற்றம் என்பது வெறும் மாற்றம் அன்று; வளர்ச்சியுடன் கூடிய மாற்றமே உண்மையான முன்னேற்றமாகும் என்று அவர் கருதினர்.

பண்டைக்காலத்தில் அறநெறி பிறழாது மக்களும் மன்னர் களும் வாழ்ந்தனர் என்று அவர் நம்பினர். பழமையைப் போற்றவேண்டும் என்று அவர் மக்களை வற்புறுத்தி யமைக்கு அந்த நம்பிக்கையே காரணமாக அமைந்தது. பண்டைக்காலமே அவருக்குப் 'பொற்காலமாகத்' தோன்றி யது. எனவே, அப்பொற்காலம் மீண்டும் தோன்றுவதற் குரிய வழிவகைகளை வகுத்துரைக்கும் முறையிலேயே அவருடைய அறநெறிக் கருத்துக்கள் அமைந்தன.

இவ்வகையில் திருக்குறளை நாம் நோக்குகின்ற பொழுது, வள்ளுவர் ஒரு புரட்சிக்காரராகவும் புதுமையைப் போற்றி வரவேற்ற முன்னேற்றக் கொள்கையாளராகவும் தோன்றுகின்றார். பழமையிலிருந்தே புதுமை மலர்கிறது என்பதை வள்ளுவர் நன்குணர்ந்திருந்தார். ஆயினும், பழமையானவை என்பதற்காகத் தீமை பயப்பனவற்றைப் போற்றுவதற்கு அவருடைய உள்ளம் இடம் தரவில்லை. அன்றைய தமிழ்ச் சமுதாயத்தில் ஊறிப்போயிருந்த தீய பழக்கவழக்கங்கள் பலவற்றை அவர் வன்மையாகக் கண்டிக்கின்றார். மனிதன் நலமாகவும் வளமாகவும் வாழ்வ தற்கு அவை தடையாக இருந்தமையால் அவற்றைச் சமுதாயத்திலிருந்து களைந்தெறிய அவர் முற்படுகிறார். நட்பு முதலிய துறைகளில் மனிதன் பழமையைப் பாராட்ட வேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகின்ற வள்ளுவர், மனிதனுடைய முன்னேற்றத்திற்குத் தடையாக இருக் கின்ற புரையோடிப் போன பழக்க வழக்கங்களைத் தகர்த் தெறியத் தயங்கவில்லை.

தனி மனிதனுடைய வாழ்க்கையில் கொல்லாமை, புலாலுண்ணாமை ஆகிய இரண்டும் மிகச் சிறந்த அறம் என்பதை,

> கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
> எல்லா உயிரும் தொழும். (குறள் 260)

என்று அவர் அறிவிக்கிறார். திருவள்ளுவருக்கு முற்பட்ட காலத்திய தமிழ்ச் சான்றோர்கள் இதனை அறியாதவர்கள் என்று நாம் கூறினால், அது தவறாகாது.

நாட்டின் முன்னேற்றத்திற்கும், சமுதாய நல்வாழ்விற்கும் தடைகளாக இருந்துவந்த இருமனப் பெண்டிராகிய வரைவின் மகளிரையும், கள்ளுண்டு களித்தலேயும், சூதாடுதலேயும் கடிந்துரைத்த வள்ளுவரை, மாபெரும் சீர்திருத்தக்காரர் என்று நாம் கூறலாம். ஏனெனில், அக்காலத்திய தமிழ்ச் சமுதாயத்தில் அன்ருடப் பழக்க வழக்கங்களாக இருந்துவந்த கள்ளுண்ணுதலேயும், சூதாடுதலேயும், பரத்தையரை நாடிச் செல்லுதலேயும் அருவருப்போடு அவர்,

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு (குறள் 920)

என்று வெறுத்தொதுக்குவதும், கடிந்துரைப்பதும் எளிய செயலன்று.

ஒருவனும் ஒருத்தியும் கூடிவாழும் காதல் வாழ்க்கையில் 'மருதத்திணை ஒழுக்கம்' என்ற ஒன்று தமிழருடைய பண்பாட்டிற்கு மாசு உண்டாக்குவதாகும். அதைப் பற்றிப் பேசும்பொழுது, வள்ளுவர் தொன்றுதொட்டு நிலவிவரும் அகப்பொருள் இலக்கிய மரபைப் பின்பற்ருது, தாமே புதியதொரு முறையைப் படைத்துக்கொண்டமை பாராட்டத்தக்க செயலாகும்.

கன்பூசியஸ் மக்களிடையே ஏற்றத்தாழ்வுகள் இருப்பது இயல்பு என்று கருதுகிருர். அவர்கள் அனைவரும் சரிநிகர் சமானமானவர்கள் என்ற சமத்துவ நோக்கு அவரிடம் கல்வித் துறையில் மட்டும்தான் இருந்தது.

கல்வி கற்பிப்பதில் எத்தகைய
வேறுபாடும் இருக்கக் கூடாது (முது. 15 : 28

என்று அவர் குறிப்பிட்டுள்ளார். ஆனல், ஏழை பணக்காரன், தொழிலாளி முதலாளி, ஆண்டான் அடிமை போன்ற வேறுபாடுகளும், குலம், குடி முதலியவற்ருல் உண்டாகும் வேறுபாடுகளும் சமுதாயத்தின் கட்டுக்கோப்பிற்குத் தேவை என்று அவர் கருதுகிருர். "ஒவ்வொருவருடைய வாழ்க்கை நிலேகளுக்கேற்பக் கடமைகள் வேறுபடுகின்றன" என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டதே சமூகத்தைப்பற்றி அவர்

கொண்ட கொள்கையாகும். சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் உள்ளவர்களைக் கண்டு, அவர்களைப்போல் தாங்களும் வாழவேண்டும் என்ற கருத்து உடையவர்களாகப் பொதுமக்கள் அவர்களைப்பின்பற்றி வாழமுயலவேண்டும். அப்பொழுதுதான் சமுதாயத்தின் கடைநிலையில் உள்ளவர்களுடைய வாழ்க்கையில் முன்னேற்றம் உண்டாகும் என்று கன்பூசியஸ் நம்பினர். மனித சமுதாயத்தில் காணப்படும் படிநிலை இனவேற்றுமைகளைப் போக்க வேண்டும் என்ற கருத்தை அவர் போற்றி ஆதரிக்க வில்லை. அவர் நாடாளும் தலைவர்களுக்கு,

ஆற்றலுடையவர்களை முன்னேறச் செய்க!
முன்னேற இயலாதவர்களுக்கு உதவிசெய்க!

என்று அறிவுரை வழங்கியுள்ளார். இதனால், மனிதருடைய திறமைகளிலே இயற்கையாகக் காணப்படும் வேற்றுமைகள் எல்லாம் இருந்துதீரவேண்டும் என்ற கொள்கையை உடன்பட்டவர் கன்பூசியஸ் என்பது தெளிவாகிறது. மனிதனுக்கு ஏதோ சில நன்மைகளைக் கல்வி அளிக்கலாம். ஆனால், திறமையும் ஆற்றலும் அற்றவர்களுடைய குறைகளைப் போக்கி அவர்களை நிறைவுடைய மனிதர்களாகச் செய்ய வெறும் கல்வியறிவால் முடியாது. எனவே, கன்பூசியஸின் கல்விக் கொள்கையிலோ, சமுதாயக் கோட்பாட்டிலோ சமுதாயத்தின் உறுப்பினர்களிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகளைச் சமன்செய்து, புதியதொரு சமுதாயத்தை அமைப்பதற்குரிய அறிவுரைகள் ஒன்றுகூட இடம்பெறவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

திருவள்ளுவரின் நோக்கும் போக்கும் பெரிதும் இதற்கு நேர்மாருகக் காணப் பெறுகின்றன. ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு படைத்த மனிதன் ஈருக உள்ள எல்லா உயிர்களுக்கும் பிறப்பினுல் வேற்றுமை இல்லை. ஆனால், அந்தந்த உயிர்களின் செயல்களால் உண்டாகும் வேற்றுமையால் உயர்வு தாழ்வுகள் உண்டாகின்றன என்பதே வள்ளுவருடைய கருத்தாகும்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான் (குறள் 972)

உயிர்களின் செயல்களை மூவகையாகப் பாகுபடுத்திக் கூறுவர். அவை உடல் உழைப்பு, மன உழைப்பு, அறிவு உழைப்பு என்பனவாகும். இம்மூவகை உழைப்புக் களாலும் மனிதன் வாழ்க்கையில் முன்னேற்றத்தைக் காணுகின்றான். அம்முன்னேற்றத்திற்கேற்ப உயர்வு தாழ்வுகள் மக்களிடையே உண்டாகின்றன. எனவே, ஒருவன் செய்கின்ற தொழிலை அளவுகோலாகக் கொண்டு ஒருவனைச் சிறப்புடையவன் என்றும், மற்றொருவனைச் சிறப்பற்றவன் என்றும் கருதுதல்கூடாது என்பது வள்ளுவர் கருத்து. அதாவது ஒருவன் குப்பை கூட்டும் தொழிலைச் செய்வதால் அவன் சிறப்பற்றவன் என்று கூறுவதோ, மற்றொருவன் நீதிமன்றத்தில் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் நீதிபதியாகப் பணியாற்று கிறான் என்பதால் அவன் சிறப்புடையவன் என்று போற்றுவதோ கூடாது என்பதே இதற்குப் பொருளாகும். எவன் எத்தொழிலைச் செய்தாலும், அத்தொழிலைச் செம்மை யாகவும் சிறப்பாகவும் செய்கின்றானா என்பதை அளவு கோலாகக் கொண்டுதான் அவனுடைய நிலையை நாம் மதிப்பிடவேண்டும். அவ்வாறு அல்லாமல் ஏதோ சில சூழ்நிலைகளாலும், வாய்ப்புக்களாலும் ஒருவன் ஒரு தொழிலைச் செய்ய நேர்வதை அளவுகோலாகக் கொண்டு அவனைப் போற்றுவதோ, தூற்றுவதோ கூடாது என்பது இக்குறளின்மூலம் வள்ளுவர் உலகிற்கு வழங்கும் நற் செய்தியாகும்.

இக்கருத்தைத் தெளிவுபடுத்தக் கருதிய முப்பால் மொழிந்த முனிவர்,

> மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
> கீழல்லார் கீழல் லவர் (குறள் 973)

என்றும் அறிவுறுத்தியுள்ளார். மேல்நிலையில் இருக்கும் ஒருவர் மேன்மையான செயல்களுக்கு உரியவராக விளங்க வில்லை என்றால், அவரை நாம் மேலானவர் என்று மதிக்க முடியாது. அதற்கு நேர்மாறாகக் கீழ்நிலையில் உள்ள ஒருவர் கயமைத்தனமான செயல்களைச் செய்யாமலும், தீய செயல்களைச் செய்யாமலும் வாழ்வாரானால், நாம் அவரை மதிப்பிற்குரிய சிறந்த மனிதராகக் கருதிப்போற்ற

வேண்டும் என்பதே இக்குறட்பாவின் உட்கிடையாகும். இதிலுள்ள மேல், கீழ் என்ற சொற்கள் சமுதாயத்தின் மேல்மட்டத்தையும், கீழ்மட்டத்தையும் குறிப்பதாகக் கொள்ளலாம். மேல்நிலை என்பது சாதியால், பணத்தால், பட்டத்தால், பதவியால், செல்வாக்கால் மேல் நிலையில் உள்ளவர்களையும், கீழ்நிலை என்பது அடக்கியொடுக்கப் பட்ட மக்களையும், தாழ்த்தப்பட்ட மக்களையும், வறுமை யால் வாடுவோரையும், வயிற்றுப் பிழைப்பிற்காக அரு வருக்கத்தக்க தொழிலைச் செய்பவர்களையும் சுட்டுவதாகக் கூறலாம். அப்படியானல் 'ஒருவனுக்குச் சிறப்பு உண்டா வது எப்படி?' என்ற ஐயம் நமக்கு எழலாம். ஒருவர் செய்யும் செயலைக்கொண்டே நாம் ஒருவரை பெருமை யுடையவர், சிறப்புடையவர் என்றும், மற்றொருவரைப் பெருமையற்றவர், சிறப்பற்றவர் என்றும் தெளிதல் வேண்டும் என்று வள்ளுவர் அறிவுறுத்துகிருர்.

> பெருமைக்கும், ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
> கருமமே கட்டளைக் கல் (குறள் 505)

மக்களின் பெருமையை அறிவதற்கும் அவர்தம் சிறுமையை அறிவதற்கும் அவரவர் செய்யும் செயல்களே உரைகல்லாக இருக்கின்றன என்ற இக்கருத்தை உலகம் உணர்ந்து போற்றும் நாள்தான், மனித இனத்தின் உள்ளக் குமுறல் ஓயும் திருநாளாகும். இதனல்தான் அனைத்துலக மனிதனைப்பாடிய தமிழ்ப் பாவலரை, உலகைத் திருத்து வதற்குத் தோன்றிய உத்தமர்களுடைய முதல் வரிசையில் வைத்து உலகம் போற்றுகிறது.

அரசன் தெய்விகப் பிறப்புரிமை உடையவன் என்று கன்பூசியஸ் நம்பினர். அவனுடைய அதிகாரங்கள் அனைத்தையும் அவன் கடவுளிடமிருந்து பெற்றிருப்பதாக அவர் கருதினர். அறவியல் பயன்மதிப்புக்களும், அரசுக்கும் மக்கள் சமுதாயத்திற்கும் இடையே உள்ள தொடர்புகள் அனைத்தும் கடவுளின் திருவுள்ளக் குறிப் பினல் உண்டாவதாக அவர் அறிவித்துள்ளார்.

இறைவனுடைய இருப்பில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்த வள்ளுவர், எவ்வகையிலும்

அரசன் தெய்விகப் பிறப்புரிமை உடையவன் என்றோ, தெய்விக ஆற்றல்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றவன் என்றோ குறிப்பாகக்கூடத் திருக்குறளில் குறிப்பிடவில்லை. ஓர் எளிய குடிமகனைப் போன்று அரசனும் அறநெறியினைப் போற்றிப் பின்பற்றவேண்டும்; சிறிதளவு அறநெறியிலிருந்து பிறழ்ந்தாலும், மன்னவன் தாழ்ந்த நிலையினை அடைந்து (பகைவரில்லாமலும்) தானே கெடுவான் என்பதை,

> எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
> தண்பதத்தான் தானே கெடும் (குறள் 548)

என்று ஆசிரியர் கூறுகிறார்.

ஒரேவொரு குறளில் மட்டும் அரசன் 'இறை' என்ற சொல்லால் குறிக்கப்பெறுகிறான். "நீதிமுறை செய்து குடிமக்களைக் காப்பாற்றும் மன்னவன், மக்களுக்கு இறையென்று சிறப்பாகக் கருதிப் போற்றப்பெறுவான்" என்னும் பொருள்பட,

> முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும் (குறள் 358)

என்று வள்ளுவர் அறிவிக்கிறார்.

'இறை' என்னும் சொல்லிற்குப் பரிமேலழகர், "பிறப்பான் மகனே ஆயினும், செயலால் மக்கட்குக் கடவுள் என்று வேறு வைக்கப்படும்" என்று குறிப்பிடுகிறார். மணக்குடவர் 'இறை' என்னும் சொல்லிற்கு, 'மனிதர்க்கு நாயகன்' (தலைவன்) என்றே பொருள் கொள்ளுகிறார்.

பரிமேலழகர் உரையில்கூட அரசன் பிறப்பால்-அரச குடியில் பிறந்தவன் என்ற ஒரே காரணத்தால்-தெய்விகத் தன்மை உடையவன் என்று கூறப்படவில்லை. அவர் 'பிறப்பான் மகனே ஆயினும்' என்ற அடை கொடுத்திருப்பதிலிருந்தே இவ்வுண்மையை நாம் நன்குணரலாம். எனவே, அறநெறி பிறழாது செங்கோலோச்சும் மன்னவன், தன்னுடைய சீரிய பண்புகளாலேயே இறைவன் என்று கருதப்பெறுவானே யொழிய, அவன் வகிக்கின்ற பதவியினால் அன்று என்பதே இக்குறளின் உட்கிடை

யாகும். இவ்வகையில் திருக்குறள், கன்பூசியஸின் கருத்திலிருந்து வேறுபட்டு விளங்குகிறது. மேலும், அந்நூல் தோன்றிய காலத்தைச் சேர்ந்த பிறநாட்டுப் பேரறிஞர்களின் கருத்துக்களிலிருந்தும் இக்கருத்து வேறு பட்ட முற்போக்குக் கொள்கையுடையதாக இருப்பதை நாம் காணுகின்றோம்.

கன்பூசியஸின் கடவுட் கொள்கையைப் பற்றித் தெளிவாக நாம் ஒன்றும் அறியமுடியவில்லை. அவர் பேராற்றலும் பெருஞ்சிறப்பும் வாய்ந்த தெய்வம் ஒன்று இருப்பதை நம்பினர். அத்தெய்வம் 'முன்னோர் வழிபாட்டின்' (Ancestor worship) மூல முதலாகக் கருதப்பெற்றமை அவருடைய கருத்துரைகளிலிருந்து நமக்குப் புலனாகின்றது. அவர் முன்னோர்களுக்குச் செய்யப்பெறும் வழிபாடும், சடங்குகளும் நெறியோடும் முறையோடும் தவறாமல் நடைபெற்றால்தான், மண்ணுலகில் மனிதன் நலமாகவும் வளமாகவும் வாழமுடியும் என்று நம்பினர். அவ்வழிபாடும், சடங்குகளும் வெறும் ஆரவாரமாக அமையாமல், உண்மையான உள்ள உணர்ச்சியோடும் பக்தியோடும் நடத்தப் படவேண்டும் என்று கன்பூசியஸ் குறிப்பிட்டுள்ளார். மறுபிறப்பைப் பற்றிய ஆராய்ச்சியில் அவர் ஈடுபடவில்லை; சூழ்நிலைக்கேற்பத் தங்களைச் சரிப்படுத்திக் கொள்ளுவதற்கு உதவிபுரிவதன் மூலம் இப்பிறவியின் பொருளை மனிதர்கள் நன்குபுரிந்து கொள்ளுமாறு தூண்டுவதையே அவர் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்.

இக்கோட்பாட்டின் சுருக்கத்தை 'முதுமொழிகள்' என்ற அவருடைய நூலின் இறுதி இயலில் நாம் காணுகின்றோம்.

> இறைவனின் ஆணையை அறியாத ஒருவன் சான்றோனாவதற்கு வழி கிடையாது. முன்னோர் வழிபாட்டில் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்வதற்கு அறியாமல், ஒருவன் வாழ்க்கையில் தனக்குரிய இடத்தைப் பெறமுடியாது. சொற்களின் பொருள்களை அறியாத ஒருவன் மனிதர்களை அறிவதற்கு வழியே கிடையாது. (முது. 20 : 3)

இவ்வடிப்படையிலேயே, அவர் புதியதொரு சமுதாயத்தையும், பொற்காலத்தையும் உருவாக்க அரும்பாடு பட்டார்.

திருவள்ளுவர் தெளிவான கடவுட்கொள்கையுடையவர். ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் இடையேயுள்ள தொடர்பினையும், இருள்சேர் இருவினையையும், பற்றற்றான் பற்றினைப் பற்றுவதற்குரிய வழியையும் எளிய முறையில் யாவரும் தெளிவாகப் புரிந்து கொள்ளும் வகையில் அவர் விளக்கியுள்ளார். இப்பிறப்பிற்குப் பிறகு வேறு பிறவிகள் உண்டு என்பதை,

மனநலத்தின் ஆகும் மறுமை (குறள் 459)

எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் (குறள் 107)

என்று அவர் குறிப்பிடுவதால் நாம் அறியலாம். பிறவியற வேண்டுமானால் 'ஆரா இயற்கை அவாவினை' மனிதன் நீக்கவேண்டும் என்று அவர் அறிவிக்கிறார். இறைவனுடைய திருவடிகளைச் சேர்ந்தவர்களே பிறவியாகிய பெருங் கடலை நீந்துவர் என்று வள்ளுவர் கூறுகிறார். இக்கருத்துக்கள் அனைத்தும் அவருடைய கடவுள் கொள்கையைக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றன.

தீமையை நேர்மையால்தான் வெல்லவேண்டுமே ஒழிய, அன்புகாட்டுவதன் மூலம் அதைப் போக்கிவிடலாம் என்று கருதுவது தவறு என்று கன்பூசியஸ் குறிப்பிட்டுள்ளார். இக்கொள்கையைத் தனி மனிதனுடைய வாழ்க்கையில் கடைப்பிடிப்பதோடு அமையாது, நாட்டு ஆட்சியிலும் கண்டிப்பாகப் பின்பற்றவேண்டும் என்பது அவருடைய அறிவுரையாகும்.[56]

குடிமக்கள் நலன் கருதி நாடாளும் அரசர்கள்,

குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல் (குறள் 549)

கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் (குறள் 550)

ஆகிய செயல்களை மேற்கொள்ளுதல் அரச நீதியாகும் என்று போற்றுகின்ற வள்ளுவர், தனிமனிதருடைய வாழ்க்கையில், தீமை செய்தவரைப் பழிவாங்காமல், அன்புடன் அவருக்கு நன்மை செய்யவேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள் (குறள் 312)

*இன்னுசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண*
*நன்னயம் செய்து விடல்* (குறள் 314)

இக்கருத்துக்களைச் சீனநாட்டின் மூதறிஞர் கன்பூசியஸ் எள்ளி நகையாடியதை நாம் எளிதில் மறக்க வியலாது.

மேற்கண்ட சில கருத்து வேற்றுமைகளைத் தவிர, கன்பூசியஸினுடைய அறவுரைகளுள் பல திருவள்ளுவருடைய கருத்துக்கள் பலவற்றோடு ஒப்புமையுடையனவாகக் காணப்பெறுகின்றன. அவற்றுள் சிறப்பு மிக்க சிலவற்றைப் பின்வரும் அட்டவணையில் நாம் காணலாம்.

| கன்பூசியஸ் | திருவள்ளுவர் |
|---|---|
| 1. உள்ளத்தை ஊற்றுக் கண்ணுகக் கொண்டு வெளிப்படுவதே வாய்மை. (நடு. 13) | "அகந்தூய்மை வாய்மையால் காணப்படும்." (குறள் 298) |
| 2. பட்டினியால் வாடும் மாண்பு மிகு மனிதன், ஒருவேளை உணவு கிடைக்கிறது என்ருல்கூட அதற்காக அவன் அறநெறியிலிருந்து பிறழ மாட்டான். (முது. 4 : 5) | ஈன்ருள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க சான்ரேர் பழிக்கும் வினை. (குறள் 656) |
| 3. நாவடக்கம் இல்லாமையால் உண்டாகும் நன்மை யாது? அதனல் அவர்கள் அடைவது வெறுப்பும் மனச்சோர்வும் அல்லாமல் வேறு ஒன்றும் இல்லை! (முது. 5 : 4) | யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (குறள் 127) |
| 4. சிறந்தவை என்று அறிந்தவற்றை உடனடியாகச் செயலில் கடைப்பிடிக்க வேண்டும். (முது. 11 : 21) | புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும். (குறள் 538) |
| 5. அறநெறி பிறழாது ஆட்சி புரிய அரசனுக்கு உதவி செய்பவனே சிறந்த அமைச்சனுவான்; அவ் | அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான் எஞ்ஞான்றுந் திறனறிந்தான் தேர்ச்சித் துணை. (குறள் 635) |

| கன்பூசியஸ் | திருவள்ளுவர் |
|---|---|
| வாறு உதவி புரிய முடியாமல் போனால் பதவியிலிருந்து விலகிவிடுகின்றவனே மிகச் சிறந்த அமைச்சனவான். (முது. 11 : 23) | |
| 6. உணவுப் பொருள்களில் தன்னிறைவும், போதிய படைபலமும், மக்களுடைய நம்பிக்கையும் உடைய அரசு (நாடு) சிறந்து விளங்கும். (முது. 12 : 7) | தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்<br>செல்வரும் சேர்வது நாடு. (குறள் 731) |
| 7. நல்லாட்சி நடத்த விரும்புகின்றவர்கள் கொலைத் தண்டனையே விதித்தல் கூடாது. நற்பழக்கமாகிய காற்று வீசத்தொடங்கினல் தீயவராகிய புற்கள் தாமாகவே தலைவணங்கி நிற்பர். தீமை செய்தவனுடைய உள்ளத்தைத் திருத்துவதன் மூலமே நாடு நலம்பெற முடியும். (முது. 12 : 19) | தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்<br>ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து. (குறள் 561)<br><br>கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்<br>நீங்காமை வேண்டு பவர். (குறள் 562) |
| 8. அறச்செயல் விருப்பம் என்பது யாது? மனிதர்கள் அனைவரிடத்தும் அன்பு செலுத்துவதே அறச் செயல் விருப்பமாகும். (முது. 12 : 22) | நல்லாற்றல் நாடி அருளாள்க! (குறள் 242)<br><br>அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு<br>என்போடு இயைந்த தொடர்பு. (குறள் 73) |
| 9. உயர்ந்த மனிதன் தேவை உண்டாகின்ற பொழுதும் மனச்சான்றிற்கு மாறான வழியில் அதை அடைவதற்கு முயல மாட்டான். ஆனல், கயவனே எப்படியாகிலும் அதை அடைய முயலுவான். (முது. 15 : 1) | எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்<br>விற்றற்கு உரியர் விரைந்து. (குறள் 1080) |

| கன்பூசியஸ் | திருவள்ளுவர் |
| --- | --- |
| 10. எதைப் பிறர் நமக்குச் செய்யக்கூடாது என்று நினைக்கின்றோமோ, அதை நாம் பிறருக்குச் செய்யாமல் இருப்பதே எல்லா நிலைகளிலும் நாம் பின்பற்றத்தக்க சிறந்த அறமாகும். (முது. 15 : 23) | இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை வேண்டும் பிறன்கண் செயல். (குறள் 316) |
| 11. உயர்ந்த மனிதன் சிறப்பு மிக்க செயல்களைச் செய்வதன் மூலம் உலகிற்கு அறிமுகமாகிறான். கயமகன் இழிந்த செயல்களைச் செய்வதன் மூலம், உலகிற்குத் தன்னைத்தானே அறிமுகப் படுத்திக் கொள்ளுகின்றான். (முது. 15 : 33) | செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர் செயற்கரிய செய்கலா தார். (குறள் 26) |
| 12. இயற்கை அமைப்பில் மனிதர்கள் பெரிதும் ஒப்புமையுடையவர்களாகக் காணப் பெறுகின்றனர். ஆனால், பழக்கவழக்கத்தில் அவர்களிடையே பெருத்த வேற்றுமை உண்டாகிவிடுகிறது. (முது. 17 : 2) | உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. (குறள் 993) |
| 13. உலகில் எங்கிருந்தாலும் அமைதி வாய்ந்த நடை, பெருந்தகைமை, வாய்மை, மெய்யார்வம், அன்புடைமை என்ற ஐந்தையும் கடைப்பிடித்து ஒழுகுவதன் மூலம் முழுநிறைப் பண்பாகிய அறத்தை (சான்றாண்மையை) அடைய முடியும். (முது. 17 : 7) | அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு ஐந்துசால் பூன்றிய தூண். (குறள் 983) |
| 14. ஒரு மனிதனுடைய செயல்களைக் கூர்ந்து நோக்குக. | பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் |

| கன்பூசியஸ் | திருவள்ளுவர் |
|---|---|
| அவற்ருல் விளைவன யாவை என்பதைக் கருதுக! பின்னர் அவன் எத்தகையவன் என்பதை முடிவு செய்க! (முது. 2 : 10) | கருமமே கட்டளைக் கல். (குறள் 505) |
| 15. கடவுளால் மனிதனுக்குப் பரிசாகக் கொடுக்கப்பட்டுள்ள பண்பினை, நாம் 'மனித இயற்கை' என்று அழைக்கிறேம். நம்முடைய மனித இயற்கையை முழுமையுறச் செய்வதே அறநெறிச் சட்டமாகும். அவ்வறநெறிச் சட்டத்தை நாம் போற்றி வளர்ப்பதால் பெறும் பயனே பண்பாடு. அத்தகைய பண்பாடு உடையோரை உலகம் போற்றுகிறது. (நடு. 1 : 1) | நயனொடு நன்றி புரிந்த பயனுடையார் பண்புபா ராட்டு முலகு. (குறள் 994) |

இக்கருத்துக்களைச் சீர்தூக்கிப் பார்க்கின்றபொழுது, கன்பூசியஸ் அறநெறியைப் போதிக்க வந்த அறவோராகத் தோன்றுகிருர். அவரைச் சமயத் தலைவர் என்று கூறுவது நம் நாட்டு வழக்கிற்குப் பொருந்தாத ஒன்ருகும். இக்காலச் சீனர்களுள் சிலர், "கன்பூசியக் கோட்பாடுகளைச் சமயச் சார்பான தத்துவங்கள் என்று நாம் வரையறுத்துக்கூற இயலா. அவற்றில் வாழ்க்கையைப் பற்றிக் குறிப்பிட்ட சில உணர்வுகளைக் காணுகின்ேறம். அவ்வாறே சமய உணர்வின் எல்லையைச் சேர்ந்த பேரண்டத்தைப்பற்றிய எண்ணங்கள் சில அதில் இடம் பெற்றுள்ளன. ஆனுல், அவை சமயக் கோட்பாடுகளாகா. எனவே, அவற்றை நாம் ஒரு சமயமாகப் போற்றி வருவது முற்றிலும் பொருந்தாது"[57] என்று கருதுகின்றனர்.

சீனுவில் முதன்முதலாக ஆசிரியத் தொழில்புரிந்த அறிஞர் கன்பூசியஸ். அவர் பண்பாட்டையும், கல்வியையும் மக்களிடையே பரப்பிவந்தார். பிற்காலத்தில் நடமாடும் கல்வி நிலையங்களாக விளங்கிய அறிஞர்களுக்கும்,

மெய்யுணர்வாளர்களுக்கும் அவர் நல்லதொரு வழிகாட்டியாக அமைந்தார். கி. மு. ஆறும் நூற்றாண்டுவரை சீனவில் வாழ்ந்த அறிஞர்கள் உழவர்களாகவோ, கைத்தொழில் வினைஞர்களாகவோ, வாணிகர்களாகவோ, அதிகாரிகளாகவோ தொழில் புரிந்தனர். ஆசிரியப் பணியைத் தொழிலாகக் கொண்டு வாழ்க்கை நடத்தமுடியும் என்பதைச் சீனமக்கள் உணருமாறு கன்பூசியஸ் செய்தார். அவருக்குப் பிறகு, அவரைப் பின்பற்றி ஏராளமான இளைஞர்கள் அத்தொழிலில் ஈடுபட்டனர்.

கன்பூசியஸின் அறநெறிக் கருத்துக்கள் காலத்தால் பழமையானவை; அனுபவத்தின் வாயிலாகக் கனிந்த முதுமொழிகள்; மனித இனத்தின் முன்னேற்றத்திற்கு வழிகாட்டும் வாய்மொழிகள் எனலாம்.

கன்பூசியஸின் மொழிநடை பொதுவாகச் சிறப்புடையது. ஆயினும், அது அணிநலனும் சொல்லாட்சிச் சிறப்பும் வாய்ந்த அழகிய நடையாக அமையவில்லை. ‘நடுவழிக் கோட்பாடு’ என்ற நூல்தான் பாடல்களைக் கொண்ட நூலாகும். மற்றவை எல்லாம் உரைநடை நூல்களே. அவற்றில் கலையழகு இல்லை. கருத்துக்களும் கொட்டப்பட்ட செங்கற்களாக உள்ளன; கட்டப்பட்ட மாளிகையாகத் தோன்றவில்லை. அவருடைய கருத்துக்களிலும், அறவுரைகளிலும் மெய்ம்மை நிகழ்ச்சிகளோடு கூடிய ஏராளமான செய்திகளும், சூழ்நிலைக்கேற்ற வரலாற்று நிகழ்ச்சிக் கதைகளும் நிறைந்து காணப்பெறுகின்றன. ஆனல், ஆழ்ந்த சிந்தனையின் உலகளாவிய முத்திரைகளாக ஒன்றைத்தான் நாம் அவற்றில் காண முடிகிறது. படைப்புத்திறன் வாய்ந்த உள்ளத்தைக் காட்டிலும், அவரிடத்துக் கருத்துக்களை வாங்கி ஏற்றுக் கொள்ளும் திறமையே மிகுந்திருந்தது எனலாம். அவரிடத்துப் பரந்துபட்ட நூலறிவு நிறைந்திருந்தது. ஆனல், மதிநுட்பத்தோடு கூடிய அகத்தூண்டுதல் அவரிடத்தில் இல்லை அவரிடத்து நுட்பமான அறிவாற்றல் இருந்தது. அவருடைய அறிவாராய்ச்சி முறை சிக்கலான கருத்துக்களைப் புரிந்துகொள்ள முயலும் இயல்புடையதாகத் தோன்றுகிறதே ஒழிய, மயக்கத்தைப் போக்கும் சுட

ரொளியாக அமையவில்லை. தமக்குக் கிடைத்த வாய்ப்புக்கள் ஒவ்வொன்றையும் அவர் நன்முறையில் பயன்படுத்திக் கொண்டார். அதனுல் தம்முடைய அறிவை அவர் வளர்த்துக்கொண்டார். அதன்மூலம் உலகத்தையும், அதன் பிரச்சினைகளையும் புரிந்துகொள்ள அவர் வாழ்நாள் முழுவதும் முயன்ருர் என்று நாம் கூறினுல், அது தவருகாது.

கன்பூசியஸ் உலகிற்கு வழங்கியுள்ள செய்திகள் மூன்று. அவற்றுள் "எப்பொழுதும் மனிதன் இரண்டு எல்லைகளுக்கும் செல்லாமல், நடுவழியில் வாழ முயல வேண்டும்" என்பது முதலாவதாகும். இக்கருத்து எக்காலத்திற்கும், எந்நாட்டினருக்கும் பொருந்திவரக் கூடியதாகும். "அளவுக்கு மிஞ்சினுல் அமுதமும் நஞ்சாகும்" என்பது நம்முடைய சான்ருேர்கள் கண்ட அனுபவ உண்மையாகும். எதிலும் அளவாக இருத்தலும், உணர்ச்சி வயப்படாமல் நடுவழியில் ஒழுகுதலும் மனிதன் மன நலத்தோடு வாழ்வதற்குரிய சிறந்த நெறிமுறையாகும். இதை நன்குணர்ந்த சீனப்பேரறிஞர் அதைப்பற்றி விரிவாக மக்களுக்கு எடுத்துரைத்துள்ளார்.

இனி, இரண்டாவதாக 'உண்மை என்பது என்ன?' என்பதைப்பற்றி அவர் தந்துள்ள விளக்கம் விழுமியது; என்றும் பயன் தரத்தக்கது. "மனித இயல்புக்கு உண்மை மாறுபட்டதன்று. நாம் உண்மையென்று கருதியுள்ளது எதுவும் மனித இயல்புக்கு மாறுபட்டதாக இருக்குமானுல், அதை நாம் உண்மையென்று கொள்ளத் தேவை இல்லை"[58] என்னும் கருத்து அவர் ஒரு பயன்வழி உண்மைக் கொள்கை (Pragmatist) யாளர் என்பதை நமக்கு அறிவிக்கிறது.

"கல்வி கற்பிப்பதில் எத்தகைய வேறுபாடும் காட்டக் கூடாது" என்பது கன்பூசியஸ் உலகத்திற்கு வழங்கிய மூன்ருவது செய்தியாகும். மனித இனத்தின் அடிப்படை உரிமைகளுள் ஒன்ருக அண்மைக் காலத்தில்தான் இதை உலகம் உணர்ந்து போற்றத் தொடங்கியிருக்கிறது.

இத்தகைய அறநெறிக் கருத்துக்களை உலகிற்கு உணர்த்திய காரணத்திஞல்தான் கன்பூசியஸ் பொன்ருப்

எண்பத்தோராவது பாடல் முதல் நூருவது பாடல் வரை அறுவகைப் பருவங்களை அவர் அழகுற வருணித்துள்ளார். இப்பகுதியில் கற்பனை வளமும், இலக்கியச் சுவை நலமும் செறிந்த பாடல்கள் சிலவற்றை நாம் காண முடிகிறது. இளவேனில் பருவம் வந்துவிட்டது என்பதை ஆசிரியர் அறிவிக்குந்திறன் படித்து இன்புறத்தக்கது.

*மாவின் இளந்தளிரால் மந்தஇள மாருதத்தால்
கூவு குயிலின் குரலாலே—மேவுமிள
வேனில் விரகரை வீட்டுமகா லத்திலமு
தேனும் விடமாம் இழிந்து. (சிருங். ச. 82)

இனி, இதற்கு நேர்மாருன காட்சிகளைக் கார் காலச் சிறப்பினைப் புனைந்துரைக்கும் பகுதியில் ஆசிரியர் சித்திரித்துள்ளார். கார்காலம் பெண்களைப் போன்று இன்பமளிக்கிறது என்பதைக் கூறவந்த ஆசிரியர், மகளிரைப் போன்று கார்காலம் மனங்கனிந்த மகிழ்ச்சியைத் தராது என்று தெரிவிக்கும் திறன் நம் சிந்தனைக்குச் சிறந்த விருந்தாகும்.

*மல்லிகையின் பூமணக்கும் மன்மதற்கு வாழ்வுதரும்
சொல்லும் பயோதரங்கள் தோயுமிக—நல்ல
தெனினுங்கார் காலம் இலங்கிழையார் போல்
கனிவாய்த் தராது களிப்பு. (சிருங். ச. 90)

## பர்த்ருஹரியின் கவித்திறன்

நீதி நூல் ஆசிரியராகிய பர்த்ருஹரியின் நீதி சதகமும் வைராக்கிய சதகமும், சிருங்கார சதகமும் வடமொழி நீதி இலக்கியத்துறையில் தலைசிறந்த படைப்புகளாகப் போற்றப் பெறுகின்றன. சிறப்பாக 'நீதி சதகம்' கவித்திறனும், கற்பனை வளமும் உடைய இலக்கியமாகத் திகழ்கிறது. அதில் கருத்துச் செறிவும் கலைநயமும் சரிசமமான நிலையில் கலந்து காணப்பெறுவதால், அது சுவையற்ற நீதி நூலாகத் தோன்ருமல் கற்பனைச் சிறப்பும், கருத்தாழமும், நடையழகும் வாய்ந்த இலக்கியமாக இலங்குகிறது. அதில் அழகிய சொல்படிமங்களும், ஆழ்ந்த பொருளை உணர்த்தும் அணிகளும் கற்பவர் உள்ளத்தைக் கவரும் வகையில் கவினுற்று விளங்கு

கின்றன. இவ்வாசிரியருடைய நடையில் எளிமையும், இனிமையும், தெளிவும், ஒலிநயமும், இசைச் சிறப்பும் இணைந்துள்ளன.

வைராக்கிய சதகத்தில் உலக வாழ்க்கையின் நிலையின்மையும் சிறப்பின்மையும் நன்கு விளக்கப் பெற்றுள்ளன. அதன் மூலம் மனிதனை ஆன்மிக விடுதலையைப் பெற முயலுமாறு ஆசிரியர் அறிவுறுத்துகிறார். நீதி சதகத்திலும் வைராக்கிய சதகத்திலும், உணர்ச்சித்துடிப்பு மிக்க வாழ்க்கையும், உலகத் துன்பங்களிலிருந்தும் ஆரவாரங்களிலிருந்தும் விலகி நிற்கும் துறவு வாழ்க்கையும் இடம் பெற்றுள்ளன. இவ்விருவகை வாழ்க்கை இயல்புகளையும் பர்த்ருஹரி சிறந்த கவிதைகளின் மூலம் சித்திரித்துக் காட்டுகிறார்.

சிருங்கார சதகத்தின் முற்பகுதியில் சொல் நயமும், பொருள் நயமும், கவிதைச்சுவையும் கற்பனையழகும் நிறைந்த நேர்த்திமிகு கவிதைகளை நாம் காண முடிகிறது. ஆனால், 'சென்று தேய்ந்திறுதல்' என்ற குற்றத்திற்கு இடம் தரும்வகையில் பிற்பகுதிப் பாடல்கள் பையப் பைய சுவையற்றுப் போகின்றன.[81] இதனால், வயது முதிர, முதிர ஆசிரியரின் அறிவுநலமும் கவித்திறனும் ஆற்றல் குன்றிப் போய்விட்டதாக அறிஞர்கள் கூறுவர்.

சமஸ்கிருத மொழியில் தன்னுணர்ச்சிப் பாடல்களைப் பாடிய கவிஞர்களுள், பர்த்ருஹரி நீதி நூல் ஆசிரியராகவும், மெய்ப்பொருள் காணும் வேட்கையுடைய மனிதராகவும் சிறப்புற்று விளங்குகிறார். அவர் கவிதைக் கலையின் மூலம் மக்களுக்கு இன்பம் நல்க முயன்றதைப் போன்றே, மனித வாழ்க்கை மாண்புற்று இலங்குவதற்குத் தேவையான கருத்துக்களைக் கற்பிக்கும் கலைஞராகவும் காட்சிதருகிறார்.

> உலகின் மயக்கத்திலே சிக்கியமையால் நான் மங்கையர் இன்பத்தைநாடி அவர்களிடத்திற்குத் திரும்பிச் சென்றேன். இப்பொழுது புலனுகர் இன்பத்தின் முழுநிறைவைப் பெற்றுவிட்டமையால் நான் துறவுக்கோலம் பூணுகின்றேன்[82]

என்று தம்மைப் பற்றி அவர் கூறியுள்ள கருத்து, அவருடைய மனநிலையையும், கலையுணர்வையும் தெளிவுறுத்துகின்றன.

### பர்த்ருஹரியும் வள்ளுவரும்

மனித இனம் நலமாக வாழவேண்டும் என்ற மனித நலக்கோட்பாட்டினராக இருவரும் விளங்குகின்றனர். இவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளும் இருள் செறிந்து காணப்படுகின்றன. பர்த்ருஹரியும் வள்ளுவரும் சிறந்த சிந்தனையாளர்களாக விளங்குவதைப் போன்றே, கவித்திறன் மிக்க கவிஞர்களாகவும் திகழுகின்றனர். வள்ளுவர் தாம் உலகிற்கு வழங்க முன்வந்த செய்திகளை மூவகையாகப் பாகுபாடு செய்து 'முப்பாலாக' இயற்றியுள்ளார். சற்றேறக் குறைய பர்த்ருஹரியும் வள்ளுவரைப் போன்றே முப்பெரும் சதகங்களின் மூலம், தம்முடைய கருத்துக்களை எடுத்துரைத்துள்ளார். இதில் இருவரிடத்திலும் ஒரு வேறுபாடு காணப்படுகிறது. வள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றைப் பற்றிப் பாடியுள்ளார். வள்ளுவர் அறத்துப்பாலில் பாயிரத்திற்கு அடுத்து இல்வாழ்க்கையின் ஏற்றத்தை இல்லற இயலிலும் இளமை, யாக்கை, செல்வம், உலகம் ஆகியவற்றின் நிலையாமைகளைச் சுட்டி 'யான், எனது' என்னும் பற்றறுத்து,'பேரா இயற்கைப் பெருநிலை' யாகிய வீடுபேற்றை அடைவதற்குரிய ஒழுகலாற்றைத் துறவற இயலிலும், அதற்கடுத்து ஊழின் ஆற்றலை ஊழியலிலும் உணர்த்துகின்றார். பொருட்பாலில் தனிமனிதன் சமுதாயத்தில் ஒழுகவேண்டிய ஒழுக்கநெறிகளையும், இராச நீதியையும் அவர் எடுத்துரைக்கின்றார்.

தனி மனிதனுடைய ஒழுகலாற்றை வள்ளுவர் அறத்துப் பாலின் இல்லற வியலில் விளக்கியுள்ளார். அப்பாலின் இறுதியில் ஊழைப் பற்றியும் அவர் பேசுகிறார். அக்கருத்துக்களை யெல்லாம் பர்த்ருஹரி, தம்முடைய 'நீதி சதகத்தில்' முறைப்படுத்திக் கூறுகின்றார். மேலும், பொருட்பாலில் வள்ளுவர் வகுத்துரைக்கும் இராச நீதியையும் பர்த்ருஹரி 'நீதி சதகத்'திலேயே இங்கொன்றும் அங்

கொன்றுமாகச் சுட்டிச் செல்லுகிறார். ஆனால், வள்ளுவர் அறத்துப்பாலின் துறவறவியலில் கூறியுள்ள கருத்துக்களுள் பெரும்பாலானவற்றைப் பர்த்ருஹரி வைராக்கிய சதகத்தில் விளக்கியுள்ளார்.

மேற்போக்காக நோக்குகின்றவர்களுக்குப் பர்த்ருஹரியின் சிருங்கார சதகமும், வள்ளுவரின் காமத்துப்பாலும் ஒற்றுமை உடையனவாகத் தோன்றும். ஆனால், இரண்டு நூல்களையும் ஆழ்ந்து படித்தால், இரண்டிற்கும் இடையே பெருத்த வேறுபாடு உள்ளதை நாம் அறியலாம். வள்ளுவருடைய காமத்துப்பால் ஒருவனும், ஒருத்தியும் கண்டு, காதலித்துக்கூடி இன்புற்று வாழும் சிறந்ததோர் இன்பஅன்பு வாழ்க்கையைப் பண்டைத் தமிழிலக்கண (அகப்பொருள்) மரபிற்கேற்பப் படம்பிடித்துக் காட்டுகிறது. அதில் வரும் தலைவனும் தலைவியும் நல்ல பண்பாடு வாய்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ; ஒழுக்கத்தை உயிரெனப் போற்றுகின்றவர்கள். வள்ளுவரின் தலைவி குடும்ப விளக்காக ஒளிர்கிறாள்.

மேலும், காமத்துப்பாலில் நுட்பமான உள்ளத்துணர்வே சிறப்பிடம் பெறுகிறது. தலைவன் தலைவியைப் பாராட்டும் 'நலம் புனைந்துரைத்தல்', 'காதற் சிறப்புரைத்தல்' என்ற அதிகாரங்களில் தலைவியின் புற அழகைப் புனைந்துரைக்கும் பொழுது நயமிக்க பண்பாடு இழையோடிச் செல்லுகிறது. அங்கும் நுட்பமான உள்ளத்து உணர்ச்சிகளுக்கே சிறப்பிடம் தரப்பெற்றுள்ளதை நாம் பார்க்கிறோம்.

பர்த்ருஹரியின் 'சிருங்கார சதகம்' எண்வகைச் சுவைகளுள் ஒன்றான 'உவகைச் சுவையை' அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பெற்றது. 'மனிதன் நுகர்கின்ற இன்பங்களுள் சிறந்தது மகளிரிடத்தில் பெறும் இன்பம்' என்று தொடங்கும் சிருங்கார சதகம் அழகிய பெண்களின் தோற்றத்தைச் சில பாடல்களில் கவர்ச்சியூட்டும் வகையில் விளக்குகிறது. பின்னர், பொதுமகளிருடைய ஒப்பனை அலங்காரங்களும், கவர்ச்சிக்கருவிகளும் ஆடவரை எவ்வாறு அறிவிழக்கச் செய்கின்றன என்பதைப் பற்றி அது விரிவாக எடுத்துச் சொல்லுகிறது. மேலும்,

அவர்களிடம் மிகுதியான இன்பத்தைப் பெறுவதற்குரிய வழிவகைகளை இந்நூல் காட்டுகிறது. அறுபத்தோராவது பாடல் முதல் "பெண்கள் ஒரு மாயை; அவர்களிடம் சிக்கினால் மனிதன் கடைத்தேற முடியாது. எனவே, விழித்தெழு! வீடுபேற்றை அடைய முயல்க!" என்று பர்த்ருஹரி அறிவிக்கிறார்.

வள்ளுவர் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கோட்பாட்டை நாடகப் பாங்கிலே காமத்துப்பாலில் விளக்கியுள்ளார். அவர் 'பெண்ணின் பெருமையை'ப் பாடிய பாவலர். பர்த்ருஹரி பெண்களுக்கு மதிப்புக் கொடுக்கத் தயங்குகிறார். மேலும், நெறிகெட்டு வாழும் ஆடவர்களைத் திருத்தி நெறிப்படுத்துவதற்காக 'சிருங்கார சதகத்தை' அவர் இயற்றினார் என்று நாம் சொல்லலாம். இதற்குப் பொதுமகளிருடைய வாழ்க்கையை இழித்துப் பேசும் பகுதிகள் சிறந்த சான்றுகளாகும்.

இனி, பர்த்ருஹரியும் வள்ளுவரும் அறிவுறுத்திய அறநெறிக் கருத்துக்களில் காணப்பெறும் ஒற்றுமைப் பண்புகளுள் சிறப்பான சிலவற்றை இங்கு நாம் காணலாம்.

| | பர்த்ருஹரி | வள்ளுவர் |
|---|---|---|
| 1. | அறிவில் முதிர்ந்தோரது அவைக்கண்ணே அறிவிலார் மௌனமே கொண்டிருப்பாராயின், அம்மௌனமே அவருக்கு அணிகலனாகும். (நீதி. ச. 7) | கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்<br>சொல்லா திருக்கப் பெறின்.<br>(குறள் 403) |
| 2. | தாவாக் கலைத்திருவால் தாம், பிறரோடின் புறுவர் நாவால் உலகை நடாத்துவர். (நீதி. ச. 10) | உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்<br>அனைத்தே புலவர் தொழில்.<br>(குறள் 394) |
| 3. | கல்வி கற்றோர் விலை மதிக்க முடியாத மாணிக்கமாகப் போற்றப்படுவர். நீதி. ச. 11) | கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு<br>மாடல்ல மற்றை யவை.<br>(குறள் 400) |

| பர்த்ருஹரி | வள்ளுவர் |
|---|---|
| 4. புலவரைப் போற்றுது பகைத்துக் கொண்டால் அல்லல் உண்டாகும். (நீதி. ச. 12) | வில்லேருழவர் பகைகொளினும் கொள்ளற்க சொல்லேருழவர் பகை. (குறள். 872) |
| 5. அறனின்பங் கல்வி யழகு குலனுண்மை யறிவுண்டாம் செல்வமுளதேல். (நீதி. ச. 22) | பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு. (குறள் 247) அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து தீதின்றி வந்த பொருள். (குறள் 754) |
| 6. கல்விகுரு நல்லார் கடவுளிவர் பாலன்பும், புல் வினைஞர் தீமை பொறுத் தியலுஞ் செல்வமுறின் ஏமுறலிலாமை யின்மைக் கின்னலுரு தேயமைதலா மிவைமேலோர் நெறியே யாம். (நீதி. ச. 33) | அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு ஐந்துசால்பு ஊன்றிய தூண். (குறள் 983) |
| 7. தன்னோடு தோழமை கொண்டவனிடத்து, இன்பத்திலும், துன்பத்திலும் பங்கு கொள்பவனே நண்பனாவான். (நீதி. ச. 39 | அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண் அல்லல் உழப்பதாம் நட்பு. (குறள் 786) உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு. (குறள் 788) |
| 8. மேலோர் பொருளை ஈட்டுதல் பிறர் திறத்துப் பயன் படுத்தற் பொருட்டாகும். (நீதி. ச. 41) | தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு. (குறள் 212) |
| 9. பிறவிப்பயனாகிய புகழைத் தேட முயலும் பெரியோர் அழுதொக்கும் அறச் செயலுடையராய்ப் பிறருக்கு உதவி வாழ்வதையே பெரிதாகப் போற்றுவர். (நீதி. ச. 46) | ஈதல் இசைபட வாழ்தல் அது வல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு. (குறள் 231) |
| 10. வெங்கனலும் தண்புனலாம் வேலைவிடந் தெள்ள | ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா |

| பர்த்ருஹரி | வள்ளுவர் |
|---|---|
| மூதாம் சிங்கமுமோர் நல்ல சிறுமானும் தங்கருமத்து ஊக்கமுடையாருக்கு அவ் வூக்கமே நன்மையெலாம்; ஆக்குமிது தைரிய நெறியாம். (நீதி. ச. 47) | ஊக்க முடையா னுழை. (குறள் 594) |
| 11. மேலான செயலையே இடையீடின்றி முயன்று செய்தால் ஆக்கம் பெருகும். (நீதி. ச. 49) | முயற்சி திருவினை யாக்கும். (குறள் 616) |
| 12. உலகமெலாம் முயற்சிக்கண் ஊக்கமுடைய பெரியாரது குறிப்பின் கீழ்ப் பட்டனவாகும். இத்தகைய பெருமை அன்னார்க்கு அவர் தம் முயற்சியினுனே எய்துகின்றது. (நீதி. ச. 50) | பெருமைக்கும் ஏனைச்சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல். (குறள் 505) |
| 13. ஒருவனுக்குத் தன் பகைவரினும் மிக்க உடல் வலிமை உள்ளதெனினும், ஊக்கமொன்றிலனாயின் அவ் வூக்கத்தையுடைய ஒன்னலரையஞ்சி இன்னலுறுவான். (நீதி. ச. 51) | பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை வெரூஉம் புலிதாக் குறின். (குறள் 599) |
| 14. 'ஊழின்படியனைத்துமாகும் இது தெய்வநெறியாம்' (நீதி. ச. 52) | ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான் முந்துறும். (குறள் 380) |
| 15. விதியும் வினையடியே வேண்டுபயன் ஈயும். (நீதி. ச. 58) | வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. (குறள் 377) |
| 16. கதிரவன் நாளும் தோன்றி மறைவதோடு, மனிதனின் வாழ்நாளும் தேய்ந்து கொண்டு போகின்றது. (வை. ச. 42) | நாளென ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும் வாளது உணர்வார்ப் பெறின். (குறள் 334) |

கருத்துக்களை எடுத்துரைப்பதற்கு நாட்டுமக்கள் நன்கறிந்த உவமைகளையும், பழமொழிகளையும், உருவகக் கதைகளையும் இடையிடையே பர்த்ருஹரி பயன்படுத்துவதால் அவருடைய நூல்கள் மூன்றிலுமே பொதுவாக இலக்கிய மணம் கமழுகின்றது.

### பிற நீதி நூல்கள்

பர்த்ருஹரியின் சதகங்களையடுத்து, வடமொழியில் சிறப்புற்று விளங்கும் நீதி நூல்களுள் சிலவற்றை இங்கு நாம் காணலாம்.

தமிழகத்து மதுரையைச் சேர்ந்த சுந்தரபாண்டியன் என்ற பாண்டிய மன்னன் இயற்றியதாகக் கூறப் பெறும் 'நீதி திவிசாஷ்டிகம்' மிகவும் பழமையான நூலாகப் போற்றப்பெறுகிறது. கி. பி. 750 அளவில் பாண்டிய நாட்டை ஆண்ட அரிகேசரியின் மூதாதையாக இந்நூலாசிரியன் குறிப்பிடப் பெறுகிறான். பிற நூல்களிலிருந்து எடுக்கப்பெற்ற பல நீதிப்பாடல்கள் இந்நூலில் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இந்நூலில் நூற்றைம்பது பாடல்கள் ஆரிய சந்தத்தில் இயற்றப்பட்டுள்ளன. பல திறப்பட்ட நீதிக்கருத்துக்களைப் பற்றிப் பாடப்பட்ட பாடல்களாக அவை உள்ளன. அவற்றில் இலக்கிய நயத்தைக் காண்பது அரிது.[88]

காஷ்மீரை ஆண்ட சங்கர வர்மனுடைய (883-902) அவையிலிருந்த பல்லட கவி இயற்றிய 'பல்லட சதகம்' நம்முடைய கருத்தைக் கவருவதாகும். எளிய நடையில் கவிநயத்துடன் கருத்தை எடுத்துரைப்பதில் இக்கவிஞர் வல்லவராக விளங்குகிறார்.

> தாமரை மலரின் அகத்தே பரந்த இடமும் புறத்தே பல முட்களும் உள்ளன; தாமரையின் தண்டுமட்டும் உறுதியுடையதாக இருந்தால் அதனுடைய மதிப்பு வியக்கத்தக்கதாக இருந்திருக்கும்.

என்று தாமரை மலரின் அருமைபெருமைகளை உணர்த்துவதன் மூலம், எத்துணைப் பெரிய மனிதராக இருந்தாலும், நல்லவராக இருந்தாலும் அவரிடத்து ஒரு சிறு குறையாகிலும் இருக்கத்தான் செய்யும் என்பதைக் கவிஞர்

அறிவுறுத்துகிறுர். 'பூ வெனப்படுவது பொறிவாழ் பூவே' என்று சிறப்பிக்கப் பெறும் தாமரை மலரின் தண்டு உறுதி யானதாக இருந்திருக்குமானுல் எத்துணைப் பயனுடைய தாக அது இருக்கும். அதனுல், அதன் சிறப்பு எத்துணை அளவிற்கு மிகுதிப்பட்டிருக்கும் என்றெல்லாம் எண்ணிப் பார்க்குமாறு கவி நம்மைத் தூண்டுகிறுர்.

தூசைப்பற்றிய உருவகக் கதையொன்றின் மூலம் ஒப்பற்றதோர் உண்மையை அவர் உணர்த்த முயலுகிறுர்.

> தூசு இயல்பாகவே இலேசாக இருப்பது; இல் பொருளாகக் கருதப்பெறுவது அன்று; நாள்தோறும் நம்முடைய கால் களினுல் மிதிக்கப்பட்டு நிலத்திலே உழலுவது. ஆனுல், நிலே யற்ற காற்று அதை மிக உயரத்திற்குக் கொண்டுசென்று மிக உயர்ந்த மலேகளின் கொடுமுடியில் நிலேக்கும்படி செய்வதைப்பார் நண்பனே![84]

என்ற பகுதியில் ஏழை எளிய மக்களே இழிவாகக் கருதுவது தவறு என்றும், அவர்களுக்கு வாய்ப்பும் வசதியும் கிடைக்குமானுல் உலகில் தலேசிறந்த மக்களாக அவர்கள் விளங்குவர் என்றும் பல்லட கவி தெரிவிக்கிறுர்.

இப்பொழுது அச்சாகியுள்ள நூலில் நூற்றெட்டுச் செய்யுட்கள் உள்ளன. அவை பலவகை யாப்புக்களில் இயற்றப்பட்டுள்ளன. அவற்றுள் இடைச்செருகலாகச் சில பாடல்கள் இருக்கவேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

பன்னிரண்டாம் நூற்ருண்டில் சில்ஹணர் என்ற கவிஞர் காஷ்மீரில் வாழ்ந்தார். பர்த்ருஹரியின் நூல்களேப் பின்பற்றி, வடமொழியில் 'சாந்தி சதகம்' என்ற நூலே அவர் இயற்றியுள்ளார். அவர் வைணவ சமயத்தைச் சேர்ந்தவராக இருந்திருக்க வேண்டும் என்று தோன்று கிறது. அவருடைய கவிதைகளில் ஒருவகையான ஏக்கத்தின் எதிரொலியை நாம் கேட்கிறேரும்.

> ஓ வயிறே! வெறும் காய்கறிகளோடு நீ நிறைவு அடைந்து விடுகிருய்! எனவே, நீயே அறிவில் சிறந்தவன் என்று நான் கருதுகிறேன். ஆயிரக்கணக்கான ஆசைகளேக் கொண்ட மனம் இருக்கிறதே அதை எப்படியும் நிறைவுறச் செய்ய என்னுல்

> இயலவில்லை. மேலும், அது குறைகளை வளர்த்துக் கொண்டே போகிறது. எனவே, அது அறிவில்லா மடையனாக எனக்குத் தோன்றுகிறது

என்ற பாடலின் கருத்து, உள்ளத்தின் இயல்பினை ஆசிரியர் தெளிவுறுத்தியுள்ள முறை இன்பம் பயப்பதாகும். மேலும் அவர் உள்ளத்தின் இயல்பினை,

> குற்றங்கள் உள்ளத்தில் நிறைந்து இருக்கின்றவரையில் புலனுகர்ச்சி நம்மை மகிழ்விக்கின்றது. ஆனால், மெய்ப்பொருள் கண்டவர் உள்ளமே உண்மையான மகிழ்ச்சியை அடைகிறது. அப்பொழுது ஈட்டும் ஆர்வம் ஒன்றும் இல்லாமல் போய் விடுகிறது

என்று கூறுகிறார். 'ஏழைகள் ஏன் பிச்சை எடுக்க வேண்டும்?' என்ற கேள்வியைக் கவிஞர் உலகை நோக்கி வினவுகிறார்.

> ஆடையாக மரப் பட்டைகள் உள்ளன. படுக்கையாகச் சுள்ளிகள் உள்ளன. வீடாக மரத்தின் நிழல்கள் உள்ளன. உணவாகக் கிழங்குகள் உள்ளன. நீராக மலையருவிகள் பயன் படுகின்றன. விளையாட்டிற்கு மான்கள் உள்ளன. நண்பர்களாக பறவைகள் உள்ளன. விளக்காக இரவில் நிலவொளி பயன்படுகிறது. இச்செல்வங்களைத் தங்கள் விருப்பத்திற் கேற்பப் பெற்றிருந்தும், ஏழைகள் ஏன் பிச்சை எடுக் கின்றனர்?[85]

என்ற கேள்வி கற்பவர் சிந்தனையைத் தூண்டுகிறது.

சில்ஹணரின் கவிதைகளில் இத்தகைய நோக்கும் போக்கும் சிறப்பிடம் பெற்றிருக்கின்றன. அவர் சமுதாயத்தின் சீர்கேடுகளை எல்லாம் கூர்ந்து நோக்கு கிறார். அக்கேடுகளுக்கெல்லாம் காரணம் மனிதன் அற நெறியில் ஒழுகத் தவறியமையே என்பதை அவர் குறிப் பாகக் காட்டுகிறார்.

பதினோராம் நூற்றாண்டில், க்ஷேமேந்திரர் வாழ்ந்தார். நாடகங்கள், கதைகள், கவிதைகள், நீதிப்பாடல்கள், எள்ளல் கவிதைகள் போன்ற பலவற்றை அவர் இயற்றி யுள்ளார். அவருடைய 'நீதி கல்பம்' பெயரளவில் நீதி நூலாகத் தோன்றினாலும் அதனுடைய உட்பொருள் யாப்பு, பேச்சுக்கலை, காதல் போன்றவற்றைப் பற்றியனவாக

உள்ளன. எனினும், அவருடைய 'கலாவிலாசம்' அறவியல் சார்புடையதாகத் தோன்றுகிறது. அதில் ஒரு பாட்டின் கருத்தை நாம் பார்ப்போம்.

> நிலவுலகத்திற்கு நெடுந்தொலைவிற்கு அப்பால் மேரு (பொன்) மலை இருப்பதற்குக் காரணம் என்ன? பொற்கொல்லர் களாகிய திருடர்கள் எங்கே தன்னைத் திருடிக்கொண்டு போய் விடுவார்களோ? என்ற அச்சத்தால் மனித நடமாட்டமே இல்லாத இடத்தில் மேருமலை இருக்கிறது! எனவே, திருடர் களும் கொள்ளைக்காரர்களும் நாட்டில் அருகிப்போனவுடன், அரசர்கள் தங்கள் அதிகாரத்தைக்கொண்டு பொற்கொல்லர் களை அடக்கியொடுக்க முயலவேண்டும்[86]

என்று நயமாகப் பொற்கொல்லர்களின் நயவஞ்சகச் செயல்களை அவர் அம்பலப்படுத்துகிறார்.

பர்த்ருஹரியினுடைய சதகங்களின் முறையைப் பெரிதும் பின்பற்றி, ஜகந்நாத பண்டிதர் என்பவர் அறு நூறு ஆண்டுகட்கு முன்பு 'பாமனி விலாசம்' என்ற ஒரு நூலை இயற்றியுள்ளார். அவர் நம்முடைய கருத்தைக் கவரத்தக்க கவிதைகளைப் பாடியுள்ளார். அவர் மொகலாயப் பேரரசன் ஷாஜகானுடைய அவைக்களப் புலவராக விளங்கியவராவர். ஷாஜகானுடைய மக்களுள் ஒருவரான தாரா-ஷுகோ சிறந்த சமஸ்கிருதப் புலவனும் ஜகந்நாதப் பண்டிதரின் நண்பனுமாவான். அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி ஜகந்நாதர் 'பாமனி விலாசத்தை' இயற்றினர் என்பர்.

பாமனி விலாசத்தில் நான்கு பகுதிகள் உள்ளன. அவை அங்யோக்தி, சிருங்காரம், கருணை, சாந்தம் என்ற பெயர்களுடன் விளங்குகின்றன. அங்யோக்திப் பகுதியில் ஒரு கருத்து வெளிப்படையாகச் சொல்லப்படுகின்ற பொழுது அதிலிருந்து நாம் குறிப்பாகப் பெறக் கூடிய வேறொரு பொருளைப்பற்றி விளக்கப் பெற்றிருக்கிறது. 'சிருங்காரம்' என்ற தலைப்பில் காதலைப்பற்றிய கருத்துக் களும் உணர்ச்சிகளும் மிகவும் நேர்த்தியுடன் வருணிக்கப் பெற்றுள்ளன. 'கருணை' என்ற பகுதியில் அருளுணர்ச்சி, கழிவிரக்கம் ஆகிய உணர்ச்சிகளும் அவற்றிற் குரிய மெய்ப்பாடுகளும் பேசப்படுகின்றன. சாந்தம் என்ற பகுதியில் மனவமைதிக்குரிய வழிகள் சுட்டிக்காட்டப் பெறுகின்றன.

'அந்யோபதேசம்' என்ற மற்ருெரு வகையான நீதி நூல்கள் வடமொழில் இயற்றப்பெற்றுள்ளன. அவை மனிதனுடைய நல்லொழுக்கத்தையே கருப்பொருளாகக் கொண்டுள்ளன. ஒரு கருத்தை வெளியிடுவதற்கு, வேறு ஏதோ ஒன்றை வெளிப்படையாகச் சொல்லுவது என்பது இதற்குப் பொருளாகும். இதனை நாம் உள்ளுறை எனலாம். இந்நூல்கள் சமுதாய வாழ்க்கையில் ஒருவன் நடந்து கொள்ளவேண்டிய நெறி முறைகளைக் கொள்கைகளாக வரையறுத்துக் கூறுகின்றன. பல புலவர்கள் இத்தகைய நூல்களை வடமொழியில் இயற்றியுள்ளனர். கவர்ச்சிமிக்க சொல் படிமங்களின் மூலம், அழகிய மொழிநடையில் நீதிக்கருத்துக்களைத் திறம்பட இக்கவிஞர்கள் எடுத்துரைத்துள்ளனர். வாழ்க்கைக்குரிய அறநெறிக் கொள்கைகளை விளக்குவதற்கு இயற்கையிலுள்ள உண்மைகளை ஏராளமாகப் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

மேலும், வடமொழியில் நீதிக் கருத்துக்களை உணர்த்தும் நீதிக்கதை இலக்கியங்கள் நிறைய உள்ளன. அவற்றுள் பஞ்சதந்திரக் கதைகளும், இதோபதேசக் கதைகளும் சிறப்புடையன. இவற்றைத் தவிர சிறப்பாகப் போற்றத்தக்க நீதி நூல்கள் வடமொழியில் இல்லை.

### வடமொழியில் நீதி நூல்கள் பெறுமிடம்

இலக்கியத்தின் களஞ்சியமாக விளங்கும் வடமொழியில் நீதி நூல்கள் கி. பி. ஏழாம் நூற்ருண்டையொட்டித் தோன்றின. அதற்கு முன்பு தோன்றிய அறத்தைப் போதிக்கும் நூல்கள் 'தரும சாத்திரங்கள்' என்று அழைக்கப் பெற்றன. எனவே, தொன்மைச் சிறப்புடையன என்று குறிப்பிடத்தக்க நீதி இலக்கியம் வடமொழியில் இல்லை என்று நாம் கூறினுல், அது தவருகாது. காலத்தால் முற்பட்டது பர்த்ருஹரியின் மூன்று சதகங்களாகும். அவை கி. பி. ஏழாம் நூற்ருண்டிற்கு முற்பட்டவை அல்ல ஆனுல், அவை பழமைச் சிறப்புடன் இலக்கியச் சிறப்பும் வாய்ந்தனவாகும். அவற்றிற்கு ஈடாகப் பிற்காலத்தில் நீதி இலக்கியங்கள் வடமொழியில் ஒன்றுகூட தோன்றவில்லை. தோன்றிய நூல்கள் எல்லாம்

அக்காலத்தின் தேவைகளுக்கு இரைபோடும் இயல் புடையனவாக உள்ளன; தரத்திலும் சிறப்பு இல்லாதன வாகத் தோன்றுகின்றன.

பர்த்ருஹரியின் இலக்கியப் படைப்புகளில் 'நீதி சதகம்' ஒன்றே ஏற்றமிகு இலக்கியச் சிறப்புகளைக் கொண்டு ஒளிர்கிறது. மற்ற இரண்டு சதகங்களும் கருத்துக்களின் கருவூலமாக உள்ளனவே யொழிய, சிறப்பு மிக்க இலக்கியப் பெட்டகங்களாக அமையவில்லை.

இக்கருத்துக்களை மனத்தில் கொண்டு நாம் வடமொழி இலக்கியத்தை ஆராய்கின்ற பொழுது, நீதிநூல்கள் தமிழ் மொழியில் பெற்றுள்ள சிறப்பிடத்தை வடமொழியில் பெறவில்லை என்பது புலனாகின்றது. மேலும், அளவாலும் தரத்தாலும் திருக்குறளுக்கு அருகில்கூட வர இயலாதன வாக அவை உள்ளன. வடமொழியிலுள்ள பெரும் பாலான நீதி நூல்கள் 'மூதுரைகளாக' உள்ளமையால், அவை இலக்கியச் சிறப்பை எய்த முடியவில்லை. 'தரும சாத்திரங்கள்' என்ற கையேடுகளும், சட்ட நூல்களும் வட மொழியில் பெருவாழ்வு பெற்றுவிட்டமையால், அம் மொழியில் திருக்குறளுக்கு ஒப்பான 'நீதி இலக்கியம்' தோன்றவில்லை என்று நாம் கூறலாம்.

## 6. தமிழ் மொழியில் நீதி இலக்கியம்

அறத்தின் மாட்சியைப் பன்னெடுங் காலத்திற்கு முன்பே தமிழ்மக்கள் நன்கு அறிந்து போற்றியுள்ளனர். நம்முடைய முன்னோர்கள் மனிதனின் நடத்தை, ஒழுக்கம், வாழ்க்கையின் நோக்கங்கள் முதலியவற்றை ஆராய்ந்து வகைப்படுத்தி யுள்ளனர். அதன் விளைவாகத் தமிழில் பல நீதி நூல்கள் தோன்றியுள்ளன. இந்நீதிநூல்களின் சிறப்பை உணர்ந்தவர்கள், தமிழ்மக்களையே 'அறவர்' என்றும் போற்றியுள்ளனர். இதைப்பற்றி டாக்டர் கால்டு வெல் கூறும் கருத்தொன்று இங்குக் குறிப்பிடத்தக்கது:

டாக்டர் குண்டர்ட் என்பவர் 'அரவம்' என்ற சொல்லை அறம் எனக்கொண்டனர்; கொண்டு தமிழிலக்கியமே ஏனைய மொழி

இலக்கியங்களைக் காட்டினும் அற நூல்களும், அறத்துறைகளும் நிறைந்ததாகக் காணப்படுகின்றதாகலின், 'அறம் மலிந்த' கொள்கையினரையே அது குறிக்கும்[87].

இதனால், தமிழர் அறநெறியில் சிறந்து விளங்குபவர் என்ற நம்பிக்கை உலகில் இருந்துவந்தமை புலனாகின்றது. இத்தகைய சிறப்புக்குரிய தமிழ்மக்கள் அறத்தைப்பற்றிப் பல நூல்களை நெடுங்காலத்திற்கு முன்னரே இயற்றி யுள்ளனர். அவர்களுடைய உள்ளப் பண்பாட்டை அது அறிவிக்கிறது.

### நீதி இலக்கியத்தின் கருமுதல்

மனித வாழ்க்கைக்குப் பயன்தரத்தக்க ஒழுகலாறு களைத் தேர்ந்த அறிவுடனும், தன்னுரிமை யுணர்வுடனும் பண்டைத் தமிழ்ச்சான்றோர் நன்கு சிந்தித்துள்ளனர். மனித வாழ்க்கையின் பல்வேறு இயல்புகளையும் உலகப் பொருள்களையும் நுட்பமாக ஆராய்ந்து, அவற்றை 'அகம்' என்றும், 'புறம்' என்றும் அவர்கள் பாகுபாடு செய் துள்ளனர். 'அகம்' என்பது ஒருவனும் ஒருத்தியும் தம் உள்ளத்தால் உணரக்கூடிய உணர்வும், அதன் பயனா கிய இன்ப அனுபவமுமாகும். 'புறம்' என்பது புறத் தார்க்குப் புலனாகக்கூடிய அறஞ்செய்தலும், மறஞ் செய்தலும், அவற்றின் பயனுமாகும். இப்பாகுபாட்டின் அடிப்படையிலேயே பண்டைத்தமிழ் இலக்கியங்கள் இயற் றப் பெற்றுள்ளன. அவற்றுள் அறத்தை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்ட அறநூல்கள் பல தொல்காப் பியர் காலத்திற்கு முன்பே தமிழில் இயற்றப்பட்டு இருந்தன. அவற்றை முதுமொழி, வாயுறை வாழ்த்து செவியறிவுறூஉ என்று அறிஞர்கள் பாகுபாடு செய்திருந் தனர் என்பதைத் தொல்காப்பியம் உணர்த்துகிறது. இவற்றைப்பற்றி விரிவாக, 'நீதி இலக்கியம்' என்ற தலைப்பில் நாம் கண்டோம்.

அவை நன்கு வளர்ச்சியுற்ற நீதி இலக்கியங்களாக இருந்திருக்க இயலாது என்பது அவற்றைப்பற்றித் தொல்காப்பியனார் கூறும் கருத்துக்களால் தெரியவரு கிறது. வழக்காற்று ஒழுக்க நெறியை அடிப்படையாகக்

கொண்டு நாட்டிலே வழங்கிவந்த பழமொழிகள், அறிவுரைகள், கருத்துரைகள் முதலியவற்றின் தொகுப்புகளாக அவை இருந்திருக்க வேண்டும் என்று நாம் கூறலாம்.

. தனி மனிதனின் ஒழுகலாற்று நெறிகளையும், அவன் சமுதாயத்தில் ஒழுகவேண்டிய முறைகளையும், தொல்காப்பியத்தின் புறத்திணை இயலில் வாகைத்திணையிலும் காஞ்சித்திணையிலும் விரிவாக ஆசிரியர் தொல்காப்பியனார் விளக்கியுள்ளார். ‘கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை’ (தொல். பொருள். 75) என்ற தொடரின் மூலம் அன்றைய தமிழர்கள் போற்றிய ஒழுக்க நெறியின் சிறப்புகளைத் தொல்காப்பியனார் அறிவுறுத்துகிறார்.

அறத்தின் இயல்பையும் அது மக்கள் வாழ்க்கையில் பெற்றுள்ள சிறப்பையும் தொல்காப்பியனார்,

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் (தொல். 1038)

அன்பே அறனே இன்பம் நாணொடு (தொல். 1161)

அந்நிலை மருங்கின் அறமுதலாகிய
மும்முதற் பொருட்கும் உரியஎன்ப (தொல். 1361)

அறம்புரி நெஞ்சமொடு (தொல். 1093)

அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
(தொல். 1138)

என்னும் நூற்பாக்களில் தெளிவுறுத்தி யுள்ளார்.

தொகை நூல்களாகிய பத்துப் பாட்டிலும், எட்டுத் தொகையிலும் அறநெறிக் கொள்கைகள் பல நுட்பமாகவும், அழகாகவும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. பத்துப் பாட்டில் இல்லறத்தார்க்கும், துறவறத்தார்க்கும், அரசர்க்கும் உரிய அறநெறிக் கருத்துக்கள் நூலின் இடையிடையே இடம் பெற்றிருக்கின்றன. எட்டுத்தொகையில் புறப் பொருள்பற்றிய ‘புறநானூறு’ என்ற நூலில், குறிப்பிடத் தக்க அளவிற்கு அறத்தை உணர்த்தும் பாடல்களே மிகுதியாக உள்ளன. சிறப்பாகப் பாடாண் திணையில் ‘செவியறிவுறூஉ’ துறையில் அமைந்துள்ள பாடல்களும், காஞ்சித்திணையில் ‘பொருண்மொழிக் காஞ்சி, ‘பெருங்

யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான், உலகமும் கெடுமே! (புறம். 184)

என்ற நயமிக்க உவமையின் வாயிலாக எடுத்துரைக் கின்றார்.

அரசன் குடிமக்கள் தாங்கும் அளவிற்கு மேலாக வரி விதிக்காது, முறையான அளவிலேயே பகுதிப்பொருளை வாங்குதல் வேண்டும் என்பதும், அதை அன்போடும் பண்போடும் தண்டுதல் வேண்டும் என்பதும் பிசிராந்தை யாரின் கருத்து. ஓர் அரசு நிலைத்து நிற்பது அதன் வரி விதிப்பு முறைத் திட்டத்தைப் பொறுத்தே இருக்கிறது என்பதை, அரசன் முன்னால், 'யானைபுகுந்த வயல்' என்ற உவமையைக் குறிப்பிட்டு, அதனால் உண்டாகக்கூடிய கேடுகளை அஞ்சாநெஞ்சத்துடன் புலவர் சுட்டிக்காட்டு கிறார்.[89] அவர் அதை எடுத்துரைக்கும் முறை அவருடைய அறிவுத்திறனையும், பண்பாட்டையும் புலப்படுத்து கின்றது. இவ்வாறு புகழும், பொருளும் சேர்ந்துவர நய மாகவும் இதமாகவும் அறிவுரை கூறுவதையே 'செவியுறை' என்று சங்கச்சான்றோர்கள் போற்றினர். இத்துறையில் அமைந்த பாடல்கள் எட்டு[90] புறநானூற்றில் காணப் பெறுகின்றன.

இனி 'வசைமொழி' எனப்பொருள்பெறும் 'அங்கதத்' தின் செய்யுள் வகையைக் குறிப்பிடும் இடத்தில், தொல் காப்பியனார் 'செவியுறைச் செய்யுள்' என்று ஒன்றைக் குறிப்பிடுகிறார் :

துகளொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயின்
செவியுரைச் செய்யுள் அதுவென மொழிப.
(தொல். பொருள். 400)

அங்கதம் இருவகைச் செய்யுள்களால் எடுத்துரைக்கப் பெறும். அது செவியுறைச் செய்யுள், அங்கதச் செய்யுள் என்ற இரண்டுவகையாகப் பயின்று வருகிறது. அவற்றுள் 'செவியுறைச் செய்யுள்' என்பது "அரசர்க்குப் பொருள் வருவாயாகச் செய்"யப் பெறுவன.[91] இதனைச் செவியுறை அங்கதமெனலாம் என்பது தொல்காப்பியனார் கருத்து. இந்நூற்பாவிலுள்ள 'துகளொடும்' என்ற தொடருக்குப் பேராசிரியர் நல்லதொரு விளக்கம் தந்துள்ளார் :

துகளாவது : படைகுடி கூழமைச்சு நட்பரணுறும் என்னும் இவற்றைப் பாதுகாவாதிருத்தல். 'அரசியல்' என்பன வற்றுனே தங்கோன் அறியாமல் வகுத்தவை வருமாயின் அவற்றை உள்ளவாறு உரைத்தலுமொன்று. மாற்றரசன் நமரது ஊரடுகின்ற நாட்டவர் யாதிவை நுதலியன வேதுவாகப் போய்ச் சார்ந்தவர்க்கு நாட்டழிவு கூறுதலுமொன்று. அன்ன பிறவும் அவற்கு உறுவகையாகலான் அவற்றை உள்ளவாறு உணர்த்திப் பொருள்செய அவர்க்குப் பொருள் செயல்வகை கூறினமையின் அது செவியுறைபாற்படு மென்பது.[92]

இதனுல், அரசருக்கு அறிவுரைகூறும் உரிமையும் கடமையும் உடைய சான்ருேர்கள் அறிவுறுத்திய செம் மொழிகளைச் 'செவியுறைச் செய்யுள்' களெனப் போற்றும் வழக்கம் இருந்தமை புலனுகின்றது. பாண்டியன் அறி வுடை நம்பிக்குப் பிசிராந்தையார் கூறிய அறிவுரையும் ஓரளவிற்கு இதைப் போன்றதாகும். எனவே, செவி யுறை, செவியுறைச் செய்யுள் என்பன சங்ககாலத் தமிழரிடை வழங்கிய நீதிப்பாடல்களுள் ஒரு வகையாக இருக்கலாம். அவ்வாறு பாடப்பட்ட பாடல்களை ஒன்ருகத் தொகுத்து நீதி நூலாகத் தனியே கொள்ளுவது அன்றைய இலக்கிய மரபிற்கு ஒவ்வாத செயலாகும். பண்டைத் தமிழ்ச் சான்ருேர்கள் அறத்தைப் 'புறப்பொருளின்' ஒரு பகுதியாகக் கருதிப் போற்றினர். அதனுல் அறநெறிக் கருத்துக்களைத் தெரிவிக்கும் பாடல்களைப் புறப்பொருள் நூல்களில் சேர்த்துத் தொகுத்துள்ளதை நாம் காணு கின்ருேம். இதைப் போன்றே பொருண்மொழிக் காஞ்சி, பெருங்காஞ்சி, முதுமொழிக் காஞ்சி என்ற துறைகளில் அமைந்த செய்யுள்களும் அறங்கூறும் அறநெறிப் பாடல் களாக உள்ளமை இங்குக் கருதத் தக்கதாகும்.

புறப்பொருள் இலக்கணத்துள் 'காஞ்சித் திணை' என்பது ஒன்று. அதைத் தொல்காப்பியனுர்,

பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் ருனும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே. (தொல். பொருள். 78)

என்று எடுத்துரைக்கின்ருர். "தனக்கு ஒப்பில்லாத சிறப் பென்னுஞ் செம்பொருளைப் பெறுதல் காரணமாக யாக்கை, இளமை, செல்வம் என்பனவற்ருல் நிலை பேறில்லாத இவ்வுலகியலைப் பற்றிக்கொண்டு அதனுல்

உண்டாகும் பலவகைத் துன்பங்களேயும் பொறுத்து நிற்றலாகிய ஒழுக்கமே" காஞ்சித் திணையாம். நில்லாத வற்ருல் நிலேயுடையதனை அடையும் முயற்சியே காஞ்சித் திணையென்பது தொல்காப்பியனுர் கருத்தாகும்.

இத்திணையினுல் உணர்த்தப்படும் கருத்துக்களுள் பல மனிதனுக்கு இருவகையான உண்மைகளை அறிவுறுத்துகின்றன. முதலாவதாக அவை நிலேபேறில்லாத உலகியல்பை பலவகையிலும் பற்றியொழுகுவதால் உண்டாகும் துன்பத்தைப் புலப்படுத்துகின்றன. அடுத்து, நிலே பேறற்ற இவ்வுலக வாழ்க்கையில் மனிதன் பாங்கருஞ் சிறப்பினைப் பெறுவதற்கு முயலவேண்டும் என்று அவை அறிவுறுத்துகின்றன. எனவே, இப்பகுதி நீதிநெறிக் கருத்துக்களை எக்காலத்தவருக்கும் பயன்படும் வகையில் எடுத்தியம்பும் ஏற்றம் பெற்று விளங்குவதை நாம் காணுகின்ரேம். இவற்றிலிருந்து நீதிநூல்களின் தோற்றத்திற் குரிய எழுச்சிமிகு எண்ணமும், உள்ளார்ந்த உணர்வும் நிலேயாமையை அறிவுறுத்தும் காஞ்சித் திணையினைக் கரு முதலாகக் கொண்டு வளர்ச்சியுற்றுள்ளன என்று நாம் கூறலாம்.

காஞ்சித் திணையில் முதலாவதாகப் பேசப் பெறுவது 'பெருங்காஞ்சி' என்பதாகும். தொல்காப்பியனுர்,

> மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்
> (தொல். பொருள். 79)

என்று அதைக் குறிப்பிடுகிருர். இக்கருத்தைப் புறப் பொருள் வெண்பாமாலே,

> மலேயோங்கிய மாநிலத்து
> நிலேயாமை நெறியுரைத்தன்று (புறப். வெ. மா. 270)

என்று விளக்குகிறது.

இத்துறையின் உட்பொருள் வாழ்க்கை நிலே இல்லா தது என்பதாகும். அதைப் "பிறரால் தடுத்திற்கு அரிய கூற்றம் வருமெனச் சான்ருேர்கள் அறிவுறுத்துவது" என்று தொல்லாணை நல்லாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். இக்கருத்து அமைந்த ஒன்பது பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன.[39] அவற்றுள்,

பல்சான் றீரே! பல்சான் றீரே!
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்
பயனில் மூப்பின் பல்சான் றீரே!
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர் மாதோ;
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே (புறம். 195)

என்பது தலைசிறந்த பாட்டாகும்.

காலத்தை வீணாகக் கழித்துவிட்டவர்களை மெல்ல மெல்ல நற்செயல்களில் ஈடுபடுமாறு தூண்டுவது இப் பாட்டு. அவ்வாறு தூண்டும் முறை நயமிக்கதாகவும், உள்ளத்தில் ஆழப்பதிவதாகவும் அமைந்துள்ளமை கருதத் தக்கது.

ஓ பலராகிய பெரியோர்களே! பலராகிய பெரியோர்களே! கயல்மீனின் முள்ளைப்போன்று நரைமயிர் முதிர்ந்து தோல் திரைத்த தாடையுடைய பயனில்லாத கிழத்தனத்தின் பலராகிய பெரியோர்களே!

இனி விரைவில் கூற்றுவன் வருவான் என்பது உங்களுக்குத் தெரியும். அவன் கடுமையான வலிமையை யுடையவன்; மழு என்னும் கூர்மையான படைக்கருவியையும் உடையவன்; அவன் வந்து உங்களைக் கயிற்றுற் கட்டிக்கொண்டு போகும் போது நீங்கள் மனம் உடைந்து வருந்துவீர்கள்; என்ன செய்யலாம்? நீங்கள் உங்கள் காலத்தை நற்செயல்கள் செய்வதில் கழிக்கவில்லை. இவ்வளவு காலம் அப்படிக் கழிந்து விட்டமையால், இனிமேல் நல்லதைச் செய்வதற்கு நீங்கள் முயலலாம். ஆனால், அதைச் செய்வதற்கு உங்களால் இயலாமல் போனாலும் போகலாம். எனவே, நீங்கள் ஒன்றைச் செய்யலாம்.

இனிமேல் நீங்கள் அப்படி நல்லது செய்தல் ஆற்றீராயினும், தீமையைச் செய்தலையாவது நீக்கிக் கொள்ளுங்கள். அது தான் இனி எல்லாரும் மகிழக்கூடியது. மேலும், நல்லது செய்யும் நெறியில் ஒருகால் உங்களை அது செலுத்தினாலும் செலுத்தும். அதற்குவழி அதுவே!

என்பது இப்பாட்டின் பொருளாகும்.

இதனால் உணர்த்தப்படும் கருத்து "வாழ்க்கை நிலையில்லாதது. எனவே, அவ்வாழ்க்கையை ஒருவன் நல்லனவற்றைச் செய்வதற்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்; நல்லனவற்றைச் செய்யாது வாழ்நாளை வீண் நாளாகக் கழித்து விட்டவர்கள் இனியாகிலும் நல்லவற்றைச்செய்ய முயல்க! இயலாவிட்டால் தீமைகளேனும் செய்யாமல் வாழ்வதற்கு முயல்க! அது அனைவருக்கும் மகிழ்ச்சியைக்கொடுக்கும். அவ்வாறு நடந்து கொள்ளுவீர்களானால், நாளடைவில் அது அறநெறியில் உங்களைக் கொண்டு செலுத்தும்" என்பதாகும்.

இவ்விழுமிய கருத்துக்கள் அனைத்தும் மனிதனுடைய வாழ்க்கையை நெறிப்படுத்துவதற்காகக் கூறப்பெற்றவையாகும். உலகில் அறம் கூறவந்த அறவோர்கள் பலர். அவர்கள் எல்லாம் 'அதைச் செய்க; இதைச் செய்யற்க!' என்று பெரியதொரு பட்டியலே கொடுத்துவிட்டுச் சென்றுள்ளனர். அதைக் கண்டு மனித இனம் திகைப்படைவது உண்டு. ஆனால், இப்பாடலின் ஆசிரியரோ, 'ஒன்றே செய்க; அதை நன்றே செய்க; அதை இன்றே செய்க' என்று எல்லாருக்கும், எக்காலத்திற்கும் பொருந்தி வரக்கூடிய அறவழியைக் காட்டுகின்றார்.

நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்

என்பது அவர் கூறும் அறிவுரை.

"நன்மை செய்யத்தான் முடியவில்லை. தீமையாகிலும் செய்யாமல் இருங்கள்!" என்பது எத்துணைச் சிறந்த கருத்து! நன்மையைச் செய்வதற்கு அறிவு, ஆற்றல், பொருள் வசதி போன்ற பல வாய்ப்புகள் தேவைப்படுகின்றன. அவை எல்லாருக்கும் எளிதில் கிட்டக்கூடியன அல்ல. அதனால் காலந் தாழ்த்தலும், வேறு பல இடர்ப்பாடுகளும் உண்டாகலாம். எனவே, உடனடியாக ஒருவன் எளிதில் செய்யக்கூடியது எதுவென்பதைப் புலவர் நன்கு சிந்தித்துப் பார்த்துள்ளார். விரைவில் எத்தகைய இடர்ப்பாடுமின்றிப் பிறருக்குத் தீமை செய்வது மனித இயல்பாகும். அந்த இயல்பையேனும் மாற்றி அமைத்துக்

கொள்ளுங்கள் என்று அவர் வேண்டுகின்றார். இவ்வாறு எதிர்மறை வகையான் அறத்தைச் செய்யுமாறு ஆசிரியர் உணர்த்துகிறார். தீமையைச் செய்யாமல் இருப்பதே சிறந்த அறம்' என்பது இவ்வாசிரியரின் உள்ளக் கிடக்கை யாகும். இப்பாட்டில் 'நல்லது' என்ற சொல் 'அறம்' என்ற பொருளிலும், 'அல்லது' என்ற சொல் 'அறம் அல்லாத பிற' என்ற பொருளிலும் இப்பாட்டில் பயன் படுத்தப் பெற்றுள்ளன.

அடுத்துள்ள 'முதுகாஞ்சி' என்ற துறை 'இளமை நிலையாமையை' அறிவுறுத்துகிறது. இதனை,

> கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
>
> (தொல். பொருள். 79)

என்று தொல்காப்பியனார் விளக்குகிறார்.

இளமைத் தன்மை கழிந்து முதுமையுற்ற மூதறிஞர் பலர் இளமைத் துடிப்புமிக்க அறிவில்லா மக்களுக்கு முதுமையைக் காட்டி, இளமை நிலையில்லாதது என்பதை அறிவுறுத்துவதாகும். இத்துறையில் அமைந்த புறநா னூற்றுப் பாடல்களுள், இளமை அளிதோ தானே' (புறம். 243) என்று அறிவிக்கும் செய்யுள் சிறப்புமிக்கதாகும்.

முதுகாஞ்சியோடு தொடர்புடைய மற்றொரு துறை 'முதுமொழிக் காஞ்சி' என்பதாகும். மக்கள் தம் வாழ்க் கையில் அடையவேண்டிய அறம், பொருள், இன்பமாகிய மூவகைப் பேறுகளையும் முறையாக எடுத்துரைப்பது 'முது மொழிக் காஞ்சி' என்பர்.

> முதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி
> பலர்புகழ் புலவர் பன்னினர் தெரியும்
> உலகியல் பொருண்முடி புணரக் கூறின்று
>
> (புறப். வெ. மா. 269)

என்பது 'முதுமொழிக் காஞ்சிக்குத்' தரப்படும் விளக்க மாகும். "எல்லாரும் கொண்டாடும் அறிவுடையோர் குற்றம் நீக்கி ஆராயும் உலகியலுள் முடிந்த பொருளாகிய அறம் பொருளின்பத்தை அறியச்" சொல்லுவது என்பது

இதற்குப் பொருள். புறநானூற்றில் ஐந்து பாடல்கள்[94] இத்துறையில் அமைந்துள்ளன. அவற்றுள் சேரமான் கணைக்கால் இரும்பொறை பாடிய,

குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்
'ஆள்அன்று' என்று வாளில் தப்பார்;
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேளல்கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி, வயிற்றுத்தீத் தணியத்
தாம்இரந்து உண்ணும் அளவை
ஈன்ம ரோவிவ் வுலகத்தானே (புறம். 74)

என்ற பாடல் யாவரும் அறிந்ததாகும்.

இனி நாம் 'பொருண்மொழிக் காஞ்சி' என்ற துறையைக் காண்போம். "பொருளாவன அறம் பொருளின்பமும் அவற்றது நிலையின்மையும், அவற்றினீங்கிய வீடுபேறுமாம்"[95] என்பது பண்டைத் தமிழ்ச் சான்றோர் கருத்தாகும். காஞ்சி என்பது நிலையாமை என்று பொருள்படும். எனவே, பொருண்மொழிக் காஞ்சி என்பதற்கு, உயிருக்கு இம்மை மறுமைகளில் உறுதி தருகிற பொருளைச் சான்றோர்கள் ஒருவனுக்குக் கூறுதல் என்று நாம் பொருள் கூறலாம்.

எரிந்தி லங்கு சடைமுடி முனிவர்
புரிந்து கண்ட பொருண்மொழிந் தன்று

என்பது புறப்பொருள் வெண்பாமாலை (271) தரும் விளக்கமாகும்.

இத்துறையைச் சேர்ந்த பதினேழு பாடல்கள்[96] புறநானூற்றில் காணப்பெறுகின்றன. அவற்றுள் கணியன் பூங்குன்றனார் பாடியுள்ள,

யாதும் ஊரே ! யாவரும் கேளிர் !
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவது அன்றே ; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே ; முனிவின்
இன்னாது என்றலும் இலமே ; 'மின்னொடு
வானம் தண்துளி தலைஇ, ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று

*நீர்வழிப் படூஉம்' என்பது திறவோர்*
*காட்சியின் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின்*
*பெரியோரை வியத்தலும் இலமே*
*சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே!* (புறம். 192)

என்ற பாட்டு சிறப்புமிக்கதாகும்.

இப்பாடலில் 'ஒருலகக் கோட்பாடும்', 'அனைத்துலக மனிதனை'ப் பற்றிய செய்தியும் இடம் பெற்றிருக் கின்றன; அவற்றுடன் உயர்ந்த அறநெறிக் கருத்துக்களும் அறிவுறுத்தப் பெறுகின்றன. அவரவர் ஊழின் வழியே அவரவர் வாழ்க்கை அமைகின்றது. தெளிவு பெறுதல் வாழ்க்கையின் பயன். ஊழின் முறைமை தெரிந்து பற்றற்று ஒழுகும் ஒழுக்கத்தால் மேன்மேலும் தெளி வினைப் பெற இயலும். அத்தகைய பண்பினை உடை யோர்க்கு 'எல்லா ஊரும் தம்முடைய ஊரே! எல்லா மக் களும் தமக்கு உறவினரே!' என்ற அனைத்துலக உணர்வு உண்டாகும் என்பது பண்டைத் தமிழ்ச் சான்றோர் உல கிற்கு வழங்கிய செய்தியாகும்.

இவ்வாறு பல்வேறு துறைகளில் நீதிகளைக்கூறும் புறநானூற்றுப் பாடல்களை ஒருங்கு திரட்டிப் பார்ப்போ மானல், அவற்றுள் முப்பத்தொன்பது பாடல்கள் நேரடி யாக நீதிநெறிக் கருத்துக்களை மட்டும் எடுத்தியம்புவது புலனாகும்.[97] இவை அல்லாமல், அறத்தின் ஆற்றலையும் சிறப்பையும் அறிவிக்கும் பாடல்கள் முப்பத்து மூன்றும்[98] நிலையாமை இயல்பை உணர்த்தும் கையறுநிலைப் பாடல் கள் நாற்பதும்[99] அதில் இடம் பெற்றுள்ளதை நாம் காண லாம். இவ்வகையில் நோக்குகின்ற பொழுது புறநா னூற்றில் அறத்தைப்பற்றி அறிவிக்கும் பாடல்கள் சற்றேறக்குறைய நூற்றிருபது உள்ளமை புலனாகிறது.

### மனித இனத்தின் வேதம்

உலகில் இலக்கியம் தோன்றி வளர்ந்த வரலாற்றை மூன்று காலகட்டங்களாக நாம் முன்னர்ப் பாகுபாடு செய்துள்ளோம். அவற்றுள், இரண்டாவது நிலையாகிய 'கவிஞர்களின் காலத்தைச்' சேர்ந்தவை சங்க இலக்கியப்

பாடல்கள். எனவே, அவற்றிலுள்ள நீதிப் பாடல்களும் சிறந்த அறநெறிக் கருத்துக்களை எடுத்துரைக்கும் இலக்கியப் பாடல்களே யாகும் என்பதை இங்கு நாம் நினைவு கூர்தல் வேண்டும்.

அக்காலத்தின் இறுதியில் திருக்குறள் தோன்றியது எனலாம். அது 'அறமென்றே' அழைக்கப்படும் சிறப்புடையது.

அறம்பாடிற்றே ஆயிழை கணவ ! (புறம். 34)

என்பதனுல் இதனை அறியலாம். திருக்குறள் ஒப்புயர்வற்ற அறநூல் என்பதை அறிஞர் பெருமக்கள் பலர் உணர்ந்து போற்றியுள்ளனர். பண்டைக் காலப் புலவர் ஒருவர், வையத்தார் மனத்து இருளைப் போக்குவதற்கு வள்ளுவர் ஏற்றிய திருவிளக்கு திருக்குறள் என்று பாராட்டியுள்ளார் :

அறம் தகளி ; ஆன்ற பொருள் திரி ; இன்பு
சிறந்தநெய் ; செஞ்சொல்தீ ; தண்டு—குறும்பாவா
வள்ளுவனுர் ஏற்றினுர் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு. (திரு மா. 47)

இக்காலத்திய அறிஞர் ஒருவர், அது திருமறைகளுள் சிறந்த திருமறையாகவும், நீதி நூல்களுள் சிறந்த நீதி நூலாகவும், இலக்கியங்களுள் சிறந்த இலக்கியமாகவும் விளங்குவதை,

மனிதஇனத்தின் வேதமாக விளங்கும் திருக்குறளில் மில்டனின் கவி நலனும், தாந்தேயின் காப்பிய அழகும், செகப்பிரியரின் உலகப் பொதுமையும், அரிஸ்டாட்டிலின் தெளிந்த அறிவும், பிளேட்டோவின் இலட்சிய நோக்கும், மார்க்கஸ் அரேலியசின் அறவேட்கையும் ஏற்ற அளவில் இணைந்தும், கலந்தும் காணப்பெறுகின்றன.[100]

என்று குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது. தமிழில் தோன்றியுள்ள நீதி நூல்களுக்கு எல்லாம் முடிமணியாகவும் முன்னேடியாகவும் திருக்குறள் திகழ்கிறது.

**பழைய நீதி நூல்கள்**

திருக்குறளுக்குப் பின்னர் தோன்றிய நீதி நூல்களைத் திருக்குறளோடு சேர்த்துப் 'பதினெண் கீழ்க்கணக்கு' என்ற தொகையில் அடக்கியுள்ளனர். அவற்றுள் நான் மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி என்னும் எட்டு நீதி நூல்களும் 'மூதுரை' என்று சொல்லப்படும் நீதி இலக்கிய வகையைச் சேர்ந்தவையாக உள்ளன; நாலடியார், பழமொழி என்னும் இரண்டும் நீதி இலக்கியங்களாகக் கருதத்தக்கன.

'மூதுரை' வகையைச் சேர்ந்த நூல்களில் கருத்துக் களை எடுத்துரைக்கும் தொடர் மொழிகள் காணப்பெறுமே யல்லாமல், அவற்றில் கவிதை அழகையோ கற்பனைச் சிறப்பையோ நாம் காண்பதரிது. அதற்குச் சான்றாகப் பின் வரும் பாடல்களைக் காட்டலாம் :

> கள்வமென் பார்க்குந் துயிலில்லை; காதலி மாட்(டு)
> உள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை ; ஒண்பொருள்
> செய்வமென் பார்க்குந் துயிலில்லை; அப்பொருள்
> காப்பார்க்கு மில்லை துயில். (நான். 9)

> பார்ப்பாரில் கோழியும் நாயும் புகல்இன்னா
> ஆர்த்தமனை வி அடங்காமை நன்கின்னா
> பாத்தின் புடைவை உடையின்னா ஆங்கின்னா
> காப்பாற்றா வேந்தன் உலகு. (இன்னா. 3)

> ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்
> ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை
> காதலிற் சிறந்தன்று கண்ணஞ்சப் படுதல். (முதுமொழி. 1)

இவற்றைப்போன்றே பிற நூல்களிலிருந்தும் நாம் மேற்கோள் பல காட்டலாம். அவை ஒன்றில்கூட இலக்கிய நயம் சிறிதும் காணப்படவில்லை. அவை எல்லாம் அறத்தை அறிவுறுத்துவதைத்தவிர வேறொன்றும் அறியாதவை. எனவே, நாம் அவற்றை இலக்கியங்களாகப் போற்றுவதற்கு இயலாத நிலையில் இருக்கிறோம்.

இத்தொகையில் திருக்குறளுக்கு அடுத்து நிலையில் இலக்கியச் சிறப்புடைய நூல்கள் நாலடியாரும், பழமொழியுமாகும், 'வேளாண்வேத'மென்று போற்றப்பெறும்

நாலடியாரில் சமண சமயக் கருத்துக்கள் வீறுடன் விளங்கு கின்றன. திருக்குறளை அடியொற்றி, அதன் கருத்துக்கள் பலவற்றை விரித்துரைக்கும் வகையில் பாடப்பட்டுள்ள நூல் நாலடியார். அதில் நானூறு பாடல்கள் உள்ளன. அவற்றுள் நூற்றுப்பத்து பாடல்கள் இலக்கியச் சுவை நலம் வாய்ந்தவை என்பது டாக்டர் ஜி. யூ. போப்பின் கருத்தாகும்.[101] மேன்மக்களின் இயல்பை,

அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்குந்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்—திங்கள்
மறுவாற்றுஞ் சான்றோர் அஃதாற்றார் தெருமந்து
தேய்வர் ஒரு மாசுறின். (நாலடி. 151)

என்று நாலடியார் நயந்தோன்ற எடுத்துரைக்கின்றது.

"அழகிய வானிடத்துத் தோன்றி மிக்க ஒளியினைப் பரப்பும் திங்களைச் சான்றோர்கள் ஒப்பர். சான்றோர் களும் அருள் ஒழுக்கம் உடையவராதலால் தண்மதிக்கு ஒப்பாவர். ஆனால், அவர்களுக்கு இடையே வேற்றுமை யும் உண்டு. சந்திரனே தன்னிடத்திலுள்ள களங்கத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கும்; சான்றோர் தங்களுக்கு மாசுண்டானால் உயிர்வாழ மாட்டார்கள்" என்ற கருத்தும் அக்கருத்தை எடுத்துரைக்கும் முறையும் நம் உள்ளத்தைத் தொடுகின்றன.

சமண சமயத்தைச் சேர்ந்த முன்றுறை யரையனார் இயற்றிய நூல் 'பழமொழி நானூறு' என்பதாகும். இந் நூலிலுள்ள ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ஒரு பழமொழி எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இந்நூல் கருத் தாழமும்இலக்கிய நயமும் வாய்ந்தது. நாம்'நீதி இலக்கியம்' என்ற இயலில், பழமொழிகள் மூதுரைகளைப் போன்றவை யாகும் என்பதைக் கண்டோம். ஆனால், பதினெண் கீழ்க் கணக்கிலுள்ள 'பழமொழி' என்ற இந்நூல் வெறும் பழமொழிகளின் திரட்டு அன்று. சிறந்த பழமொழிகளைத் தேர்ந்தெடுத்து, அவற்றை விளக்கும் வகையில் ஆசிரியர் ஒவ்வொரு பழமொழிக்கும் ஒவ்வொரு வெண்பா இயற்றி யுள்ளார். இயன்ற வகையெல்லாம் சுவை பயப்பதாக அமையுமாறு அரையனார் இந்நூலைப் படைத்துள்ளார்.

அறிவினல் மாட்சியொன் றில்லா ஒருவன்
பிறிதினல் மாண்ட தெவனும்?—பொறியின்
மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன
அணியெல்லாம் ஆடையின் பின். (பழமொழி 26)

என்னும் பாட்டு 'அணியெல்லாம் ஆடையின் பின்' என்ற பழமொழியை அறிவிக்கிறது. அப்பழமொழியை அப்படியே எடுத்துரைத்தால் அதில் கருத்தாழமோ, கலையழகோ இருக்காது. எனவே ஆசிரியர்,

> அறிவினில் ஒருமாட்சியும் இல்லாத ஒருவன் செல்வம், குலம் முதலாயினவற்ருல் மாட்சிமைப் பட்டவற்றைச் செய்ய வல்லவனு? அழகிய மணியும், பொன்னும், சாந்தும், பூமாலையும் என்று சொல்லப்பட்ட இன்ன அணியெல்லாம் ஒருவருக்குத் தேவையான ஆடையின் பின்னல்லவா விரும்பப் பெறும்?

என்று வினவுகிருர். இப்பாட்டில் சொல்லழகும் பொருள் நயமும் பொருந்தி யிருப்பதால்தான் சிறப்புடையதாகத் தோன்றுகிறது. இதைப்போன்ற பாடல்கள் பல பழமொழியில் உள்ளன.

பதினெண் கீழ்க்கணக்கில் பதினெரு நீதி நூல்கள் உள்ளன. அவற்றுள் திருக்குறள் இலக்கிய இயல்புகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு திகழுகிறது. அதற்கடுத்த நிலையில் நாலடியாரையும், பழமொழியையும் நாம் குறிப்பிடலாம். எஞ்சியுள்ள எட்டு நூல்களும் இலக்கியப் பண்புகள் இரண்டொன்றைக் கொண்ட நீதி நூல்களாக உள்ளன.

### பெருவாழ்வு பெற்ற நீதி நூல்கள்

சமய மலர்ச்சிக் காலத்திற்குப் பிறகு சைவ, வைணவக் கருத்துக்களைக் கொண்ட நீதி நூல்கள் பல இயற்றப் பெற்றுள்ளன. அவற்ருேடு இரண்டொரு சமண சமயச் சார்பான நீதி நூல்களும் தோன்றியுள்ளன.

அவற்றுள், 'அறத்தைப் பாடிய தமிழகத்தின் சாப்போ (Sappho)' என்று போற்றப்பெறும் ஔவையாரின் நூல்கள் நான்கு உள்ளன. அவை பெரும்பாலும் 'மூதுரை' வகையைச் சேர்ந்தனவாகும். இடைக்கால நீதி நூல்களுள் 'மூதுரை' வகையைச் சேர்ந்த நீதி நூல்கள் ஆறு. அவை:

1. ஆத்திசூடி, 2. கொன்றைவேந்தன், 3. உலகநீதி, 4. நறுந்தொகை, 5. நன்னெறி, 6. அறநெறிச்சாரம்.

என்பனவாகும்.

இவற்றுள் ஆத்திசூடியும், கொன்றை வேந்தனும் தமிழ் மூதாட்டி ஒளவை இயற்றியனவாகும். இவை தமிழ் நாட்டில் எழுதப் படிக்கத் தொடங்கும் குழந்தைகள் எல்லாம் ஓதிப் பயன்பெறும் ஒப்புயர்வற்ற நூல்களாகும். இவற்றில் நல்வாழ்க்கைக்குத் தேவையான நல்ல பல கருத்துக்கள், சிலவாகிய சொற்களால் தெளிவாகப் பொருள் புரியுமாறு விளக்கப் பெற்றுள்ளன. இவ்விரு நூல்களும் குழந்தைகளுக்குத் தமிழ் எழுத்துக்களை அகர வரிசையில் அறிமுகம் செய்துவைக்கின்றன. அவை உயிரெழுத்துக்களையும், உயிர்மெய் எழுத்துக்களையும் முதலெழுத்துக்களாகக் கொண்டு தொடங்கும் பாடல்களாக இயற்றப் பெற்றுள்ளன. இங்கிலாந்து நாட்டில் ‘அகர வரிசைப் பட்டியல் பாடல் நூல்கள்’ (Alphabetical Catalogue of Poetry) என்ற பழைய நூல்கள் சில உள்ளன. அவை நம்முடைய ஆத்திசூடியையும், கொன்றைவேந்தனையும் போன்று பாடப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். பெறுதற்கரிய அறிவுக் களஞ்சியத்தை ஒளவையார் மிக எளிய நடையில், எல்லாரும் புரிந்து கொள்ளத் தக்க வகையில் இயற்றியுள்ளார். அவை அவருடைய அறிவின் முதிர்ச்சியையும், உயர்ந்த உள்ளத்தின் சிறந்த பண்பாட்டையும் அறிவிக்கின்றன.

‘உலக நீதி’ என்ற நூலை உலகநாதர் என்பவர் இயற்றியுள்ளார். இது சிறுவர்கள் எளிதாகப் படித்துப்பாடம் பண்ணும் வகையில், எளிய நடையில் இன்னோசை நயத்துடனும் இயற்றப்பட்டுள்ளது. இந்நூல் ஒளவையின் நூல்களுக்கு அடுத்துப் பெருவழக்காக இருந்துவருகிறது. இந்நூல் பதின்மூன்று விருத்தப்பாக்களைக் கொண்டது. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் இந்நூலாசிரியர் ‘மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே’ என்று முருகனைப் போற்றி வழிபடுகிறார். பதினொரு பாடல்களில் ‘செய்யவேண்டாம்’ என்ற இறுதிச் சீருடைய அடிகளை

இந்நூலாசிரியர் அமைத்துள்ளார். 'இன்னவற்றைச் செய்யாதே' என்பதை வலியுறுத்துகின்ற வகையில் இந் நூல் அமைக்கப்பட்டிருக்கிறது.

அதிவீரராம பாண்டியன் இயற்றிய 'வெற்றிவேற்கை' யென்று போற்றப்படும் 'நறுந்தொகை' மூதுரை வகை யைச் சேர்ந்த மற்ருெரு சிறப்புமிக்க நீதி நூலாகும். ஔவையாரின் ஆத்திசூடியை அடியொற்றி இந்நூல் இயற்றப்பட்டது எனலாம். இந்நூல் ஆசிரியர் கி. பி. பதினைந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்தவராவர்.

கற்பனைக் கடலாகக் கருதப் பெறுகின்ற சிவப் பிரகாச சுவாமிகள் இயற்றியது 'நன்னெறி' என்ற நீதி நூலாகும். சான்ருேர் வாழ்ந்து காட்டிய நல்ல நெறியிலே நாம் சென்ருல், வாழ்க்கையில் அறம், பொருள், இன்பம் வீடாகிய நால்வகைப் பேறுகளையும் எளிதில் அடைய லாம் என்ற நோக்கத்துடன் ஆசிரியர் இந்நூலைப் பாடியிருக்கிருர். நாற்பது வெண்பாக்கள் இந்நூலில் உள்ளன.

சமண சமயத்தினருக்கே சிறப்பாக உரிய ஒழுக லாறுகள் பலவற்ருேடு அறம், ஒழுக்கம் பற்றிய பொது வான கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு இலங்கு வது முனைப்பாடியார் இயற்றிய அறநெறிச்சாரமாகும். இந்நூல் 'மூதுரை' வகையைச் சேர்ந்ததாகும். இவ் வாறு கருதுவதற்குரிய இயல்புகள் பல இந்நூலில் இடம் பெற்றுள்ளன. எனினும், சில பாடல்களில் குறிப்பு மொழி வழி ஆசிரியர் கருத்துக்களை உய்த்துணரவைக்கும் முறை நீதி நூல்களுக்குத் தேவையற்ற ஒன்ருகும். வீடு பேற்றை அடைவதற்குரிய வழிகளைச் சுட்டிக் காட்டும் பாடல் ஒன்றை இங்கு நாம் பார்ப்போம்.

நல்வினை நாற்கால் விலங்கு ; நவை செய்யுங்
கொல்வினை யஞ்சிக் குயக்கலம்—நல்ல
உறுதியும் அல்லவும் நாட்பேர் ; மரப்பேர்
இறுதியில் இன்ப நெறி. (அற. சா. 207)

இப்பாடலில் ஆசிரியர்,

"நல்வினையைச் செய்ய முயல்: துன்பத்தைத் தரும் தீவினைகளை யஞ்சி யகல்! சிறந்த ஆன்மிக ஆதாயத்தைப் புல் (தழுவு)! ஆன்மிக ஆதாயமற்றவற்றை முனிந்துவிடு! இவை இறுதியில் வீடுபேற்றை அளிக்கும்" என்ற கருத்தை அறிவிக்கிறார். இப்பாடலில் உற்ற 'குயக்கலம்', நாட்பேர்', 'மரப்பேர்' என்ற தொடர்கள் குறிப்பு மொழிகளாகும். 'குயக்கலம்' என்பது குயவனால் செய்யப்பட்ட மண் பாண்டமாகிய அகற்சட்டி. இங்கு நாம் அகல் என்ற சொல்லுக்குரிய 'விலகு' என்ற பொருளைக் கொள்ள வேண்டும். 'நாட்பேர்' என்பது புல். அனுஷ நட்சத்திரத்திற்குத் தமிழில் 'புல்' என்பது பெயர். இங்கு 'புல்' என்றால் தழுவு என்பது பொருள். 'மரப்பேர்' என்பதற்கு அத்திமரம் என்பது பொருள். அதற்கு 'முனி' என்றொரு பெயரும் உண்டு. அச்சொல்லிற்கு 'வெறு' என்பது பொருள். இப்பொருளை நாம் இங்குக் கொள்ளவேண்டும். இத்தகைய பாடல்கள் சில இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

ஔவையார் இயற்றிய மூதுரை, நல்வழி என்பனவும், இயற்றிய ஆசிரியர் பெயர் அறியப்பெறாத நீதிவெண்பா என்ற நூலும், குமரகுருபரர் இயற்றிய நீதிநெறி விளக்கமும் நீதி இலக்கிய வகையைச் சேர்ந்த நூல்களாகும். நூலின் பெயரைப் பார்க்கின்ற பொழுது, நாம் நீதி நூல்களைப் பாகுபாடு செய்துள்ள 'மூதுரை' எனப்படும் முதல் வகையைச் சேர்ந்ததாக ஔவையாரின் மூதுரை இருக்க வேண்டும் என்ற எண்ணம் நமக்குத் தோன்றும். ஆனால், நூலின் உள்ளே நுழைந்து பார்த்தால் இவ்வெண்ணம் தவறானது என்பதை நாம் உணருவோம். இந்நூலின் எப்பாடலைப் படித்தாலும் அதில் கருத்துச் செறிவும், கற்பனை வளமும் கலந்து கற்பவரை இன்புறுத்தும் இயல்புடையதாக இருப்பதைக் காணலாம். முப்பது செய்யுட்களைக் கொண்ட இந்நூல் இலக்கியச் சுவை மிக்கதொரு நீதி நூலாகும்.

ஔவையாரின் மற்றொரு நூல் நல்வழி. அது 'நீதி வழுவா நெறி முறையை' (நல். 2) உலகிற்கு உணர்த்துகிறது. கற்றாரும், கல்லாதாரும் எளிதில் புரிந்து கொள்ளத் தக்க வகையில் அது இயற்றப்பட்டிருக்கிறது. அன்றாட

வாழ்க்கையில் மக்கள் காணக்கூடிய பொருள்களையும், நிகழ்ச்சிகளையும் பொருளாகக்கொண்டு ஆசிரியர் நாற்பது பாடல்களில் தம் கருத்துக்களை அறிவுறுத்துகிறார். அவை கலைநயத்தோடு கற்பவர் உள்ளத்தைக் கவரும் ஆற்றல் உடையனவாகவும் உள்ளன.

நீதி வெண்பா என்ற நூல் 'மூதுணர்ந்தோர் ஓது சில மூதுரையை' எடுத்துரைப்பதாக அதனுடைய காப்புச் செய்யுள் கூறுகிறது. சொற் சுருக்கமும், கருத்தாழமும், கவிதை நயமும் உடைய இந்நூலில் நூறு பாடல்கள் உள்ளன. அடிக்கடி அறிஞர்கள் மேற்கோளாக் காட்டும் பாடல்கள் பலவற்றை இந்நூலில் நாம் காணுகின்றோம். ஓயாது பேசும் இயல்புடைய பெண்கள் சிலரைக் கருத்தில் கொண்ட ஆசிரியர்,

> பெண்ணொருத்தி பேசிற் பெரும்பூமி தான திரும்
> பெண்ணிருவர் பேசில் விழும்வான்மீன்—பெண் மூவர்
> பேசி லலைசுவறும் ; பேதையே பெண்பலர்தாம்
> பேசிலுல கென்னுமோ பின். (நீதி. 31)

என்று மனங்கலங்குகிறார்.

இவை யாவற்றையும்விட சிறப்பு மிக்கது குமர குருபரர் இயற்றிய நீதி நெறி விளக்கமாகும். 'உலைவிலாது யாரும் தீதெல்லாம் ஒருவி நீதியே புரிய'ப் பயன்படுமாறு ஆசிரியர் இந்நூலைப் பாடியிருப்பதாகப் புலவர்கள் பாராட்டுகின்றனர். இந்நூல் கடவுள் வாழ்த்து உள்பட நூற்றிரண்டு செய்யுட்களைக் கொண்டது.

குமரகுருபரர் கற்பனைத் திறத்திலும், கவிதைச் சுவையிலும் பலவிடங்களில் ஔவையையும் விஞ்சிவிடுகிறார் என்று நாம் கூறினால், அது தவறாகாது.

> கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
> மலரவன் வண்தமிழோர்க் கொவ்வான்—மலரவன் செய்
> வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
> மற்றிவர் செய்யும் உடம்பு. (நீதி. விள. 7)

இப்பாடலில் புலவரையும் பிரமனையும் ஒப்பிட்டு அவர்களுடைய படைப்பில் பொன்றாப் புகழ்கொண்டு விளங்குவது எது வென்பதை எடுத்துரைக்கும் நயம் அவருடைய கவித்திறமைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

### நீதி இலக்கியத்தின் யாப்பு அமைதி

மேற்கண்ட நூல்கள் அல்லாமல், பல திறப்பட்ட நீதி நூல்கள் பதினைந்தாம் நூற்றாண்டு முதற்கொண்டு இன்று வரை தமிழில் இயற்றப் பெற்றுள்ளன. அவற்றுள் வடமொழி இலக்கிய மரபைப் பின்பற்றி இயற்றப்பட்ட 'சதகங்கள்' சிறப்புடையனவாகும். அவையாவும் வழக்காற்று அறநெறியைச் சமயக் கருத்துக்களோடு குழைத்துத் தருகின்றன. பொதுவாக இடைக்காலத்தில் தோன்றிய நீதிநூல்கள் அனைத்தும் சமயச் சார்புடையன. எனினும், மனித வாழ்க்கைக்குப் பயன்படும் நீதிக் கருத்துக்களை எடுத்துரைப்பதையே அவை சிறந்த குறிக்கோளாகக் கொண்டுள்ளன. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த வேதநாயகம் பிள்ளை இயற்றிய நீதிநூலும், இந்நூற்றாண்டில் சுப்பிரமணிய பாரதியார் பாடிய புதிய ஆத்திசூடியும், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் படைத்துள்ள ஆத்திசூடியும் பழைய மரபை யொட்டி, முற்போக்குக் கொள்கைகள் பலவற்றை எடுத்துரைப்பனவாகும்.

திருக்குறளுக்குப் பின்னர் தோன்றிய நீதி நூல்கள் எல்லாம் திருக்குறளின் அமைப்பு முறையை ஓரளவிற்கும், பேரளவிற்கு அதன் கருத்துக்களையும் பொன்னேபோல் போற்றிப் பின்பற்றியுள்ளன. திருக்குறளின் சொற்களையும், கருத்துக்களையும் எடுத்துத் தம் நூல்களில் பயன்படுத்தாத புலவர்களே இல்லை எனலாம்.

இந்நீதி நூல்கள் எல்லாம் வெண்பா யாப்பில் அறக் கருத்துக்களை எடுத்துரைக்கின்றன. கருத்துக்களைத் திட்பநுட்பத்தோடு எடுத்துரைப்பதற்கு வெண்பா ஏற்றதொரு யாப்பாக விளங்குவதே இதற்குக் காரணம். இவ்வுண்மையைத் தமிழகத்தில் கிறித்துவ சமயத் தொண்டாற்றிய டாக்டர் ஜி. யூ. போப் நன்குணர்ந்துள்ளார்.

> நீதிநூல் ஆசிரியர்கள் அனைவரும் வெண்பா யாப்பையே பயன்படுத்தியுள்ளனர். இப்பா உண்மையிலேயே தன்னிகரற்று விளங்குகிறது. இந்தியாவின் பிற மொழிகளில் எல்லாம் வடமொழியிலிருந்து யாப்பு முறையைக் கடன் வாங்கிப் பயன்

> படுத்தியுள்ளனர். ஆனால், தமிழ்ப் புலவர்கள் சமஸ்கிருத மொழியைப் பின்பற்றாது, தங்களுக்கென்று தனிச்சிறப்பு வாய்ந்த யாப்பு முறையைப் போற்றி வந்துள்ளனர்[102]

என்று அவர் மொழிந்துள்ளமை சிந்திக்கத் தக்கதாகும்.

## தமிழ் நீதி இலக்கியத்துள் திருக்குறள்

தமிழ்மொழியில் தோன்றியுள்ள நீதிநூல்கள் பல. அவற்றுள் பெரும்பாலானவை மூதுரை வகையைச் சேர்ந்தவை. அவற்றில் அறிவுறுத்தப்பெறும் கருத்திற்கே முதலிடம் கொடுக்கப் பட்டுள்ளதை நாம் மேலே கண்டோம். அவற்றை இயற்றிய புலவர்கள் கலையழகைப்பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. மேலும், அவர்கள் அறிவுறுத்துவதற்கு எடுத்துக்கொண்ட கருத்துக்கள் வழக்காற்று ஒழுக்க நெறியை அடிப்படையாகக் கொண்டவை. அவற்றில் மனித இனம் முழுமைக்கும் பயன்படத் தக்க அறவுரைகள் அருகியே காணப்பெறுகின்றன.

இவ்வகையில் திருக்குறள் வேறுபட்டு விளங்குகிறது. மனிதன் மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்கு வழிகாட்டுவதே அதன் நோக்கமாக அமைந்திருக்கிறது என்பது உண்மை. ஆனால், அவ்வழியைக் காட்டுவதற்கு அது மேற்கொண்டுள்ள முறைகள் சிறந்தவையாக உள்ளன. கருத்துக்களை எடுத்துரைப்பதற்குத் திருவள்ளுவர் பயன் படுத்தியுள்ள இலக்கியத் திறன்கள் பல. திருக்குறள் மனிதவாழ்க்கையை அடிப்படையாகக்கொண்டு இயற்றப் பட்டுள்ளது. அது வாழ்க்கையைத் திருத்துவதாகவும் திருத்தமுற்று அமைவதற்கு வழிகாட்டுவதாகவும் அமைந்துள்ளது. கற்பனை, உணர்ச்சியைத் தூண்டுதல் ஆகிய இரண்டுடன் ஒன்றிய கருத்துக்கள் திருக்குறளில் இடம் பெற்றுள்ளன. கலையழகு குன்றா வகையில் கருத்துக்களை உணர்த்தும் மாய வித்தையில் வள்ளுவர் வல்லவராக விளங்குகின்றார். இதனை,

> மனிதனால் என்றும் வெளியிடப்படாத மிகவும் நுட்பமான கருத்துக்களைச் சுருக்கி இந்த ஆசிரியர் ஏழே சீர்களில் அமைத்திருக்கிறார். இச்சிறிய இன்னிசைக் கருவியில் அவர் சிறந்த இசை வல்லுநனைப்போல எத்துணை அழகாக இனிய கீதத்தை எழுப்பி இருக்கிறார்! சுடரொளியோடு நகைச்சுவை,

> வற்புறுத்திக் கூறுதல், கற்பனை, முரண்பாட்டு நயம், வினவுதல், ஓவியம் போன்ற உவமைகள் என்ற பல இலக்கியத் திறன்களை அவர் பயன்படுத்தியுள்ளார். இவ்வாறு கருவிலே திருவுடைய கலைஞன் கையாளும் உத்திகள் பலவற்றுள் ஒன்றையும் அவர் இந்த முழுமையான கலைப்படைப்பில் ஆளாமல் விட்டுவிடவில்லை[108]

என்று வ. வே. சு. ஐயர் தெளிவுறுத்தி யுள்ளமை இங்குக் கருதத் தக்கதாகும்.

பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள பிற நீதி நூல்களுள் நாலடியாரும் பழமொழியும் ஓரளவிற்கு இலக்கிய நயத்தோடு இனிய முறையில் கருத்துக்களை அறிவுறுத்த முயலுகின்றன. ஆனால், அம்முயற்சியில் அவை முழு வெற்றி பெற்றுள்ளன என்று நாம் சொல்லுவதற்கு இல்லை. இதற்குக் காரணம் நாலடியாரை இயற்றிய புலவர்கள் பலர் என்று நாம் கூறலாம். நாலடியார் ஒரு தொகைநூல். திருக்குறளின் அமைப்பு முறையைப் பின்பற்றி அது தொகுக்கப் பட்டுள்ளது. அந்நூலின் பாடல்களை இயற்றிய ஆசிரியர்கள் அறநெறிக் கருத்துக்களை அறிவுறுத்துவதையே நோக்கமாகக் கொண்டுள்ளனர். அதனால், அவற்றில் கலையுணர்வுக்கு இடம் இல்லாமல் போய்விட்டது. கூறியது கூறலும், முன்னுக்குப் பின் முரணான செய்திகளும் அந்நூலில் இடம் பெற்றுள்ளன. ஒரே புலவர் அந்நூலை இயற்றியிருப்பாரானால், அது வேறு வகையாக இலக்கிய நலன்கள் மிக்குடையதாக அமைந்திருக்கலாம். இன்றைய நிலையில் அது தொகை நூலாக இருந்தாலும், அதில் உள்ள பாடல்களுள் மூன்றிலொரு பங்கு இலக்கியச்சுவை நலம் கனிந்தவையாக உள்ளமை போற்றத்தக்கதாகும்.

பழமொழி நானூற்றை முன்றுறையரையனார் என்ற புலவர் ஒருவர் இயற்றியுள்ளார். ஆனால், திருவள்ளுவரைப் போல இந்நூலாசிரியர் தமது நூலைத் திட்டமிட்டுப் பல பாவியல்களாக வகுத்துரைக்கவில்லை. இதை,

> அவ்வப்போது கண்டும் கேட்டும் ஊகித்தும் தெளிந்த பொருள்களை ஒவ்வொரு பழமொழியோ டியைத்து ஒவ்வொரு வெண்பாவாகப் பாடிச் சேர்த்து வந்தாராதல் வேண்டும். 'இரு கயலுண்கண்' என்னும் வெண்பாவின் உரையில் உரையாசிரியர், 'முத்தகம் குளகம் தொகைதொடர் நிலையென,

> எத்திறத்தனவும் ஈரிரண்டாகும்' என்பதனல் உலகத்துண்டான செய்யுட்களெல்லாம் நால்வகையான் அடங்கும். இந்த நானூறும் முத்தகச் செய்யுள் ஆதலால் தனியே நின்று ஒரு பொருள் பயந்து முற்றுப்பெற்றன எனவறிக'' என உரைத்திருப்பதே இதற்குச் சான்று. பல முனிவர் இயற்றிய நாலடியாரிற்போல இந்நூலில் கூறியதுகூறல் மாறுகொளக் கூறல் முதலியன இல்லை[104]

என்னும் கருத்துரையால் நாம் அறியலாம்.

இந்நூலின் ஒவ்வொரு வெண்பாவும், முதலிரண்டடியில் ஆசிரியர் கூற விரும்பும் பொருளும், நான்காம் அடியில் ஒரு பழமொழியும், மூன்ரும் அடியில் பெரும்பாலும் ஆடூஉ முன்னிலையும் சிறுபான்மை மகடூஉ முன்னிலையுமாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. ஆடூஉ முன்னிலைகளில் பல அக்காலத்துப் பாண்டியனை நோக்கி விளியாக அமைந்தன என்பர். சில முன்னிலைகளில் உள்ளுறையுவமமும் உள்ளடங்கியுள்ளதை நாம் காணுகின்ரேம். எனவே, இவற்றை 'நின்று பயனின்மை' என்னும் குற்றமுடையனவாகக் கூறுவதற்கு இயலாது. இவற்றை நீக்கிவிட்டால், வீணை வேறு அடைமொழிகள் இந்நூலில் காணப்பெறவில்லை. சுருங்கச் சொல்லுதலும் ஆழமுடைத்தாதலுமான அழகுகள் இந்நூலில் மிகுதியாக உள்ளன. பொருளையும் பழமொழியையும் பல இடங்களில் நயமுறப் பொருத்தி இருப்பது நவில்தோறும் நூல்நயம் பயப்பதாகும்.

இத்தகைய விழுமிய பண்புகள் பல பழமொழியிடத்தும் பொருந்தி இருந்தாலும், திருக்குறளோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றபொழுது அது பேரொளி வீசும் திருவிளக்கின் முன்தோன்றும் மின்மினியாகக் காட்சியளிக்கிறது.

இடைக்காலத்தில் தோன்றிய ஔவையாரும், உலகநாதரும், முனைப்பாடியாரும், அதிவீரராம பாண்டியரும் இயற்றியுள்ள நூல்கள் நீதிக் கருத்துக்களைப் போதிக்கும் சிறந்த நீதிநூல்களாகும். அவர்கள் அனைவருமே கல்வியறிவு இல்லாப் பொதுமக்களுக்கு, 'வழக்காற்று ஒழுக்க நெறியின்' அடிப்படை இயல்புகளை விளக்கிக் கூறுவதையே சிறந்த குறிக்கோளாகக் கொண்டிருந்தனர்.

எனவே, நல்வாழ்க்கைக்குரிய நல்ல பல கருத்துக்களை எளிய நடையில், இனிய முறையில் சிலவாகிய சொற்களால் அவர்கள் எடுத்தியம்பியுள்ளனர்.

'உலக நீதி' என்ற நூலின் ஆசிரியர், உலகத்தில் பண்டைக் காலந்தொடங்கி உயர்ந்தோர்களால் கடைப்பிடிக்கப் பெற்றுவரும் நீதிகளையே தாம் இந்நூலில் உரைப்பதாக மொழிந்துள்ளார். அவர்,

> உலகநீதி புராணத்தை உரைக்கவே[105]

என்று குறிப்பிட்டுள்ளமை கருதத்தக்கது.

'நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை'[106] என்று அதிவீரராம பாண்டியர் தம் நூலை அறிமுகப்படுத்துகிறார். 'நல்லனவாகிய நீதிகளின் தொகை' என்பதே இதற்குப் பொருள். 'நற்றமிழ் தெரிந்த' என்பதனால், பழமையான தமிழ் நூல்கள் போற்றும் நல்ல நீதிகள் பல இந்நூலில் தொகுக்கப் பெற்றுள்ளன என்பது பெறப்படுகிறது.

நீதி வெண்பாவை இயற்றிய ஆசிரியர்,

> மூதுணர்ந்தோ ரோதுசில மூதுரையைப் பேதையேன்
> நீதிவெண்பா வாக நிகழ்த்துவேன்[107]

என்று குறிப்பிடுகிறார்.

அறவுரை கேட்பார் பிறவியை நீக்கும் பேராற்றல் உடையவராவர். அவ்வாற்றலைப் பெறுவதற்கு மறவுரையும் காமத்துரையும் கடியப்படவேண்டும் என்பது முனைப்பாடியாரின் கருத்து[108]

இவற்றால், இடைக்காலத்தில் இயற்றப்பெற்ற நீதி நூல்களுள் பெரும்பாலானவை அறங்கூறுவதையே முதன்மையான நோக்கமாகக் கொண்டிருந்தன என்பது புலனாகின்றது.

ஔவையார் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி என்னும் நான்கு நீதி நூல்களை இயற்றியுள்ளார். அவை அனைத்தும் சிறுவர் சிறுமியர்களுக்காக இயற்றப்பட்டவை என்று கூறினால், அது தவறாகாது. சிறுசிறு

சொற்றொடர்களில் அரிய பல அறிவுரைகளை, இளம் பிள்ளைகள் எளிதில் மனப்பாடம் செய்து நினைவில் வைத்துக் கொள்ளத்தக்க வகையில், ஆசிரியர் அவற்றை இயற்றியுள்ளார். அத்தகைய நூல்களில் நாம் இலக்கிய இயல்புகளை எதிர்பார்ப்பது தவறாகும். மூதுரை, நல்வழி என்ற இரு நூல்களிலும் நல்ல தமிழ்ச் சுவையும், இயல்பான சொற் பொருளொழுக்கமும், உண்மையும் நுண்மையும் நிறைந்துள்ளன.

எனினும், அவற்றில் கருத்துக்களை உணர்த்துவதற்குத் தான் முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கருத்தை எடுத்துரைக்கும் முறையில் கலையழகு அருகியே காணப் படுகிறது. பல பாடல்களில் நீதிக் கருத்துக்கள் ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கப்பட்டுள்ளன. அதனால், அவை வெறும் கருத்துக்களின் பட்டியலாகவே தோன்றுகின்றன. அவற்றோடு திருக்குறளை ஒப்பிட்டுப் பார்த்தால் இவ் வுண்மை எளிதில் புலனாகும். காலந்தோறும் தோன்றி யுள்ள தமிழ் நீதிநூல்களுள் பழமொழிக்கு அடுத்த இடத்தை ஔவையாரின் மூதுரையும் நல்வழியும் பெறத் தக்க சிறப்புடையனவாகும்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றி யருளிய 'நன்னெறி' சிறந்ததொரு நீதிக் களஞ்சியமாகும். சற்றேறக்குறை இருபத்தைந்து சிற்றிலக்கியங்களைப் படைத்த பெருமை அவருக்குண்டு. அத்தகைய மூதறிஞர், இளைஞர்களுக்குப் பயன்படத்தக்க வகையில், அனைவரும் அறிந்த உவமைகளைக் கொண்டு பழகுதமிழில் யாவரும் புரிந்துகொள்ளத்தக்க முறையில் 'நன்னெறி'யைப் பாடி யுள்ளார். திருக்குறளோடு ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது, இந்நூல் அமைப்பாலும், அறநெறிக் கருத்துக் களை உணர்த்தும் முறையாலும் கலையழகு குறைந்த இலக்கியப் படைப்பாகவே காட்சி தருகிறது.

குமரகுருபரரின் 'நீதிநெறி விளக்கம்' இலக்கிய இயல்புகள் நிறைந்ததோர் இலக்கியமாகும். அதில் கருத்துக்களுக்கு முதன்மை இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனினும், ஆசிரியர் கற்பவர் உள்ளத்தைக் கவரத்தக்க முறையில் கலையழகும், கற்பனை வளமும் குன்றாத

வகையில் அதைப் படைத்துள்ளார். தமிழிலுள்ள நீதி நூல்களுள், திருக்குறளுக்கு அடுத்த நிலையில் சிறப்புமிக்க நீதி இலக்கியமாக அது விளங்குகிறது. அதில் சொல் நயமும், பொருள்நயமும், இலக்கிய இன்பமும் இணைந்தும் இழைந்தும் உள்ளன. அதனால், அது கருத்திலே வலிவும், கலையழகிலே பொலிவும் பெற்றுத் திகழ்கிறது.

இவ்வாறு எவ்வகையில் நோக்கினும் திருக்குறளே தமிழ் நீதி இலக்கியத்துள் ஒப்புயர்வற்றதாகத் தோன்று கிறது. இந்நிலையில் 'திருக்குறளின் சிறப்பிற்குரிய காரணம் என்ன?' என்ற எண்ணம் நம்மிடையே எழு கிறது. இக்கேள்விக்கு, இந்நூற்றாண்டின் தொடக்கத்திற்கு முன்பே, மேலைநாட்டு அறிஞர் ஜி.யூ. போப்பு விடையளிக்க முயன்றுள்ளார்:

> திருக்குறள் இத்துணைச் சிறப்பும் மக்களிடை மதிப்பும் பெற்றிருப்பதற்குரிய காரணம், மிகவும் நேர்த்தியான பாட்டு வடிவில் அமைந்திருப்பதுதான். வடிவத்தினால் உண்டான சொற் சுருக்கம் தமிழ் மொழியின் மாண்புமிக்க 'வாய்மொழித் தலைவரின்' கருத்துரைகளுக்குத் தெய்விகத் தன்மையை அளித்துள்ளதைக் காணுகின்றோம். அதனால், அறநெறிக் கருத்துக்களை எடுத்துரைக்கும் நீதி நூல்களுள் தலைசிறந்த வொன்றாக அது விளங்குகிறது'[100]

என்று அவர் அளித்துள்ள விடை பொருத்தமானதாகத் தோன்றுகிறது.

திருக்குறளின் சிறப்பிற்கு அதை இயற்றிய ஆசிரி யரின் ஆளுமையே காரணமாகும். அவர் ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோராக மட்டும் விளங்க வில்லை; செம்பொருள் கண்ட செம்மலாக மட்டும் திகழ வில்லை. அவர் சிறந்த அறிஞராகவும், கலைஞராகவும் காட்சி தருகிறார். அவருடைய ஆளுமையில் அறிஞர்க்கு உரிய மதிநுட்பமும், கலைஞர்க்குரிய கலையுணர்வும் சான்றோர்க்குரிய சான்றாண்மையும் ஒருங்கே வெளிப்படு கின்றன. அவ்வாளுமையின் வெளிப்பாடாக அவருடைய இலக்கியப் படைப்பு அமைந்திருக்கிறது.

தமிழினத்தின் சிந்தனைத்திறன் முதிர்ச்சியுற்றிருந்த காலத்தில் அவர் தோன்றினார். பழைய மரபுகளை

அவருடைய கவிதையுள்ளம் போற்றியது. ஆனால், பழைய கட்டுப்பாடுகளைத் தகர்த்துப் புதிய வழியில் கருத்துக்களை எடுத்துரைக்க அவர் தயங்கவில்லை. அகம், புறம் என்ற பொருள் இலக்கண மரபுகளுக்குக் கட்டுப் பட்டுக் காவலரும் பாவலரும் பாட்டிசைத்த காலத்தில் அம்மரபிற்கு அடிமையாகிவிடாமல், அவர் அறம், பொருள், இன்பம் பற்றிய இலக்கியத்தைப் பல நுட்பமான புதுமைப் பண்புகளுடன் படைத்துள்ளார். நால்வகைப் பாக்களின் நயன்தெரிந்து புலவர்கள் பாக்கள் இயற்றிய காலத்தில், குறுவெண்பாட்டையே தம் நூலுக்குச் சாலச் சிறந்ததாக அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டுள்ளார். 'இதனை இதனால் இவன்முடிக்கும்' என்பதை ஆராயுமாறு அறிவுறுத்திய அறிஞர், 'எதை எவ்வாறு எதன் மூலம்' எடுத்துரைக்கலாம் என்பதை நன்குணர்ந்திருந்தார். ஆகவே, தமக்கென ஒரு புதுமுறையை நூல் நுதல் பொருளிலும், நூலின் வடிவிலும் ஒருங்கே அவர் வகுத்துக் கொண்டார். இதனால், இலக்கிய உலகிற்கு மட்டுமல்லா மல், நீதி இலக்கியத் துறைக்கும் அவர் புதுவழி காட்டிய புலவரேறாகப் புகழ்பெற்று விளங்குகிறார்.

அறத்தைப் பாடவந்த ஆசான் மூதறிஞராக மட்டும் விளங்கவில்லை; சிறந்த கலைஞராகவும் அவர் காட்சி தருகிறார். வெறும் அறிஞராக மட்டும் அவர் இருந்திருந் தால் 'முப்பால்' முதன்மையான இலக்கியப் படைப்பாக மலர்ந்திருக்காது. அவருடைய மென்மையான உள்ள உணர்வும், கவின்மிகு கற்பனை உள்ளமும் கருத்துக்களை எடுத்துரைக்கும் முறைகளிலே இயன்ற இடமெல்லாம் முப்பாலில் இலக்கிய மணம் கமழுமாறு செய்துள்ளதை நாம் பார்க்கிறோம். திருக்குறளின் மூன்று பகுதிகளுள் ஒன்றாகக் காமத்துப்பால் அமைந்திருக்கிறது. அப்பகுதி யில் உள்ள இரு நூற்றைம்பது குறட்பாக்கள், நூலின் மொத்தப் பாக்களுள் சற்றேறக்குறைய ஐந்தில் ஒரு பகுதி யாகும். அவை அனைத்தும் இலக்கியச் சுவை நலம் கனிந்த இன்ப ஊற்றுக்களாக உள்ளன.

வள்ளுவரின் கலையுள்ளம் காமத்துப்பாலைக் கலைக் கோயிலாகப் படைத்து மகிழ்கிறது. திருக்குறளின்

முதலிரு பால்கள் கருத்தை எடுத்துரைக்கும் முறை ஒருவகையாகும். அதிலிருந்து வேறுபட்ட நிலையில், காமத்துப்பாலை வள்ளுவர் படைத்துள்ளார். அறத்துப் பாலைப் போன்றோ, பொருட்பாலைப் போன்றோ காமத்துப் பால் இயற்றப் பட்டிருந்தால் அது காமத்தின் இயல்பை யும், வகையையும், மகளிர் ஆடவரை மயக்குவதற்குக் கையாளும் முறைகளையும், காம உணர்வால் கருத்தழிந்து கெட்ட ஆடவர் நிலையையும் ஆசிரியர் எடுத்துரைத்து இருப்பார். அப்பொழுது, அது சிற்றின்பத்திற்கு வழி காட்டும் கையேடாகவே காட்சிதர நேர்ந்திருக்கும் அல்லது காதல் இன்பத்தை வெறுத்து ஒதுக்கும் நீதி நூலாக அமைந்திருக்கும்.

ஆனால், பண்டை அகப்பொருள் இலக்கிய மரபைப் போற்றிக்காக்க விரும்பிய வள்ளுவர் தூய்மையான உள்ளத்து உணர்ச்சிக்கே காமத்துப்பாலில் இடமளித் துள்ளார். கருத்தொருமித்த காதலரைப் படைத்தும், அவர்கள் வாழ்க்கையில் புதுமையான சிக்கல்களை உண்டாக்கியும், நாடகப்பாணியில் சிந்தைக்கினிய சொல் லோவியங்களை அவர் தீட்டியுமுள்ளார். அவை பேசும் பொற்சித்திரங்களாக அமைந்துள்ளன. கற்பனை உள்ளம் வாய்ந்த சிறந்ததோர் கலைஞனால்தான் இத்தகைய காதல் நாடகத்தைப் படைக்க முடியும். காமத்துப்பாலை இயற்றிய தன் மூலம் ஒப்புயர்வற்ற கலைஞனுக்குரிய முத்திரையை வள்ளுவர் திருக்குறளில் பொறித்துச் சென்றுள்ளார்.

பொருட்பாலில் மதிநுட்பம் நூலோடு உடைய மூதறிஞராக விளங்கும் திருவள்ளுவர், காமத்துப்பாலில் நம் கருத்தைக் கவரும் கலைஞராகச் சிறப்புற்றிலங்கும் திருவள்ளுவர், அறத்துப்பாலில் 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோராக'த் தோன்றுகிறார். அவருடைய சான்றாண்மைப் பண்பு முப்பாலிலும் இழையோடிச் செல்லுகிறது. அதைப்போன்றே, பிற பண்புகளும் குறிப் பிட்ட ஒரு பாலில் முதன்மை இடத்தைப் பெற்று விளங்கி னாலும், மற்ற இரு பால்களிலும் அவை பின்னணியாக அமைந்து, அவற்றைச் சிறப்புறச் செய்துள்ளதை நாம் காணலாம்.

வள்ளுவர் அறிஞராகவும், கலைஞராகவும் திகழ்வ தோடு சான்றோராகவும் விளங்குகிறார். அவருக்குரிய தனிப்பெருஞ் சிறப்பு அவர் சான்றோராக விளங்குவது தான். மேலே சுட்டிய மூவகைப் பண்புகளும் தனிமனிதன் ஒருவனிடத்தில் ஒருங்கே பொருந்துவது அரிது. உலகில் எத்தனையோ அறிஞர்கள் தோன்றியுள்ளனர். அவர்களுள் சிலர் சிறந்த கலைஞராகவும் சிறப்படைந்துள்ளனர். ஆனால், அவர்களிடையே சான்றோர்களைக் காண்பது கடினமாகும்.

அறிவின் சுடரொளியாக விளங்குபவன் அறிஞன்; உணர்ச்சியின் ஊற்றாக விளங்குபவன் கலைஞன்; வாழ்க்கையின் ஒளிவிளக்காக விளங்குபவன் சான்றோன். இம்முப்பெரும் பண்புகளுக்கும் இடையே முரண்பாடுகள் உள்ளன. இம்முரண்பாடுகளைக் கடந்த நிலையில் அறிஞனாக வும், கலைஞனாகவும், சான்றோனாகவும் ஒருவன் விளங்குவது என்பது எளிதில் இயலாத ஒன்றாகும். உலக வரலாற் றில் அத்தகைய பெரியார்கள் விரல்விட்டு எண்ணக் கூடிய ஒரு சிலராகத்தான் காணப்பெறுகின்றனர். அத்தகைய பெரியார்களுள் நம்முடைய திருவள்ளுவர் ஒருவராகக் காட்சியளிக்கின்றார்.

பிற நாட்டு கவிஞர்கள் எல்லாம் மனிதனின் உடற் பசியைப் புனைந்துரைப்பதில் தங்கள் அறிவையும் ஆற்றலை யும் பயன்படுத்திவந்த அக்காலத்தில், வள்ளுவர் மனித உள்ளத்தின் நுட்பமான உணர்ச்சிகளைப் போற்றிக் கலையழகு குன்றாதவகையில் காதல் வாழ்வின் கருத் தோவியங்களைப் படைத்துள்ளார். இதற்குச் சான் றாண்மைப் பண்பில் ஊறிய அவருடைய கலையுள்ளமே காரணமாகும்.

வள்ளுவரின் சான்றாண்மைப் பண்பு காலத்தையும் இடத்தையும் கடந்து, மனிதகுலம் மாண்புற்று விளங்க வழிகாட்டுகிறது. அவர் அனைத்துலக மனிதனைப் பாடிய தற்கும் அவருடைய சான்றாண்மைப் பண்பே முதற் காரண மாகும். அவருக்குப் பிறகு தோன்றிய நீதி நூலாசிரியர்கள் எல்லாரும் அவருடைய வழியையே பின்பற்றியுள்ளனர்.

இயன்ற வழியெல்லாம் அவர்கள் திருக்குறளின் கருத்துக்களைப் பொன்னேபோல் போற்றித் தம் நூல்களில் பயன்படுத்தியுள்ளனர். மேலும், திருக்குறளின் அமைப்பு முறையையும், கருத்துக்களை எடுத்துரைக்கும் முறைகளையும் முன்மாதிரியாகக் கொண்டு தம் நூல்களைப் படைக்க அவர்கள் முயன்றுள்ளனர். அம்முயற்சியில் ஓரளவிற்குத்தான் அவர்கள் வெற்றி பெற்றுள்ளனர் என்பதை அவர்களுடைய நீதி நூல்கள் நமக்கு அறிவிக்கின்றன.

திருவள்ளுவரைப் போன்று பல்வேறு துறைகளில் சிறந்து விளங்கும் அறிவும், ஆற்றலும், பண்பும் பெற்றவர்களாக அவர்கள் விளங்கவில்லை. அவர்களுள் சிலர் அறிஞராகவும் சான்றோராகவும் வாழ்ந்தனர்; மற்றும் சிலர் அறிஞராகவும் கலைஞராகவும் திகழ்ந்தனர். ஆனால், அம்மூவகைப் பண்புகளையும் ஒருங்கே பெற்ற புலவர்களாக அவர்கள் விளங்கவில்லை. இக்காரணத்தினால், அவர்களுடைய நீதிநூல்களுள் மேற்கண்ட பண்புகளில் யாதாகிலும் ஒரு பண்பே முதன்மையிடம் பெறலாயிற்று. அதனால், அவை தலை சிறந்த கலைப்படைப்பாக மாண்புறாமல் போயின. இக்காரணங்களால் தமிழ்மொழியின் நீதிநூல்களாகிய இலக்கிய வானில் வள்ளுவர் இயற்றிய திருக்குறள் தன்னிகரற்ற தண்மதியமாகத் திகழ்கிறது.

## 7. உலகநீதி இலக்கியத்துள் திருக்குறள்

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு கிரேக்கமொழி சிறப்புற்று விளங்கியது. அம்மொழியில் நீதிநூல்கள் சில இயற்றப்பட்டுள்ளன. நீதி இலக்கிய வளர்ச்சியின் தொடக்க காலத்தில் அம்மொழியில் தோன்றிய நூல்களை நீதி இலக்கியங்களாக நாம் கருதுவதற்கில்லை. அவை அனைத்தும் 'மூதுரை' வகையைச் சேர்ந்தனவாகும். கி. மு. ஏழாம் நூற்றாண்டு அளவில் இயற்றப்பட்ட 'வேலையும் நாள்களும்' என்ற நீதி நூல் கிரேக்கமொழி நீதி இலக்கியத்துள் சிறப்புமிக்கதாகும்.

அது வழக்காற்று ஒழுக்க நெறியை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்ட நீதிநூல். அந்நூலில் காணப்

பெறும் உழவுத் தொழிலைச் செய்யும்முறை, அலைகடலில் அஞ்சாது மரக்கலத்தைச் செலுத்தும் கடலோடிகள் பின் பற்ற வேண்டிய நெறிமுறைகள், பருவங்களின் வருணனை, நல்ல நாள் தீயநாள்களைப்பற்றிய குறிப்பு ஆகிய பகுதிகளை நீக்கிவிட்டால் அறத்தை உலகிற்கு அறிவிக்கும் பகுதிகள் அதில் மிகக்குறைவாகத் தோன்றும். அப்பகுதியில் உணர்த்தப்படும் அறமும் முறைப்படுத்தித் தெளிவாக எடுத்துரைக்கப் பெறவில்லை. அன்றாட நடைமுறை வாழ்க்கைக்குத் தேவையான சில கருத்துக்கள் அதில் நயமாகக் கூறப்பெற்றுள்ளன. இவ்வகையில் அந்நூல் நீதி நூலாகக் காணப்பெறுகின்றது. ஆயினும், அறநெறிக் கருத்துக்களை உலகிற்கு உணர்த்துவதில் திருக்குறளைப் போன்ற அனைத்துலகப் பண்பும் என்றும் நிலை பெற்று வாழக்கூடிய உண்மைகளும், காலத்தையும், இடத்தையும் கடந்து விளங்கக்கூடிய கருத்துக்களும் மிகச் சிலவாகவே அதில் இடம் பெற்றுள்ளன. திருக்குறளுக்கும் ‘வேலையும் நாள்களும்’ என்ற நூலிற்கும் இடையே பெருத்த வேறுபாடு உள்ளமையால், அதைத் திருக் குறளுக்கு ஒப்பாக நாம் கூறவியலாது.

இனி, நீதி இலக்கியம் என்ற முறையில் நோக்குகின்ற பொழுது, அதில் ‘மற்றொன்று விரித்தல்’ மிகுதியாக இடம் பெற்றுள்ளதை நாம் காணுகின்றோம். வழக்காற்று ஒழுக்க நெறியை அது விளக்குகின்றது. இக்காரணங் களால், கவிதைச் சுவையும், கற்பனை வளமும் அதில் குறிப்பிடத்தக்க அளவிற்குக் காணப்பெறுகின்றன. திருக் குறளின் இலக்கிய இயல்புகளோடு, ‘வேலையும் நாள்களும்’ என்ற நூலின் இலக்கியப் பண்புகளை நாம் ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது ஒரு சில பகுதிகளே அதில் ‘நவில் தோறும் நூல்நயம்’ பயப்பதாக உள்ளன. மற்றவை யெல்லாம் சிறப்புடையனவல்ல. இவற்றைக் கருத்தில் கொண்டு அதைப் படிக்கின்றபொழுது திருக்குறள் தரும் இலக்கிய இன்பத்துள் கால் பகுதியைத்தான் அதனிடம் பெற முடிகிறது என்று நாம் கூறலாம். ஆகவே, அமைப் பாலும், கருத்துக்களை எடுத்துரைக்கும் முறையாலும் நீதி இலக்கிய உலகில் திருக்குறள் பெறக்கூடிய இடத்தை

'வேலையும் நாள்களும்' பெற இயலாத நிலையில் உள்ளமை இங்குக் கருதத்தக்கது.

'வேலையும் நாள்களும்' தோன்றிய பிறகு, சில உதிரிப் பாடல்கள் நீதிப்பாடல்களாகக் கிரேக்க மொழியில் இயற்றப்பட்டுள்ளன. அவற்றிற்குப் பிறகு தோன்றிய 'நீதிநூல்கள்' அறநெறிக் கருத்துக்களைப் போதிப்பன அல்ல. அரேதஸின் 'இயற்காட்சியும்', நிகாண்டர் இயற்றிய மருத்துவ நூல்களும் நீதி நூல்கள் என்று பெயரளவில் போற்றப் பெறுகின்றன. 'இயற்காட்சி' என்னும் நூல் வானநூல் ஆராய்ச்சியாகும். நிகாண்டரின் நூல்கள் நஞ்சுடைய விலங்குகளின் கடிகளிலிருந்து மனிதனைத் தப்பிப் பிழைக்குமாறு செய்வதற்கு வழிகாட்டுவன. அவற்றில் இலக்கிய நயம் என்பது மருந்திற்குக் கூடக் காணமுடியவில்லை. கருத்திலும், இலக்கியப் பண்பிலும் அவை மிகுந்த குறைபாடுடையன.

ஆகவே, கிரேக்க மொழியில் திருக்குறளுக்கு ஒப்பாக நீதிநூல்கள் இல்லை என்று நாம் உறுதியாகச் சொல்லலாம். ஹெஸியட்டின் 'வேலையும் நாள்களும்', 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பப்பூ சருக்கரை' என்பதைப் போன்று சிறந்தொரு நீதிநூலாக கிரேக்க மொழியில் போற்றப் பெறுகிறது என்று நாம் கூறினால், அது மிகையாகாது.

ஆடம்பர ஆரவாரமிக்க ரோமாபுரியில் நீதிநூல்கள் என்று சொல்லத்தக்க வகையில் மூன்றே நூல்கள் தோன்றியுள்ளன. அவற்றுள் காலத்தாலும் கருத்தாலும் முதன்மையானது 'பொருள்களின் இயற்கையாகும்.' அனைத்துலக நோக்கோடு இயற்றப் பெற்றுள்ள நீதி நூல் என்று இதை நாம் கூறலாம். மனித இனம் மனவமைதியுடன் இன்பமாக வாழ்வதற்கு இந்நூல் வழிகாட்டுகிறது. ஆனால், இது ஒரு பகுத்தறிவுவாளனின் படைப்பாகத் தோன்றுகிறது. 'கடவுளே இல்லை' யென்ற தத்துவம் அதில் இழையோடிச் செல்லுகிறது. மக்களுடைய அறியாமைக்குச் சமயமும் தெய்வங்களுமே காரணம் என்று கூறுவதோடு, அவற்றைப் பற்றிய நம்பிக்கையை ஒழித்துவிட்டால்தான் மனிதன் மகிழ்ச்சி

யுடன் வாழமுடியும் என்று அது அறிவிக்கிறது. இக் கருத்துக்களே நூலின் பாதிக்கு மேற்பட்ட பகுதியில் திரும்பத் திரும்பப் பேசப் பெறுகின்றன. இதையடுத்து உலகப் பொருள்களின் தோற்றத்திற்குக் காரணமான 'அணுக் கொள்கை' நூலின் மூன்றிலொரு பகுதியை அடைத்துவிடுகிறது. எஞ்சிய பகுதிகளே அறத்தைப் போதிக்கின்றன. அவ்வறநெறிக் கருத்துக்களும் ஒப்புயர் வற்றவை அல்ல. வாழ்க்கையில் இன்பத்தைப் பெறு வதையே குறிக்கோளாகக் கொண்டு மனிதன் வாழ்வதற்கு அவை வழிகாட்டுகின்றன. அதில் 'மனித உரிமைகள்,' 'அச்சத்திலிருந்து விடுதலை' என்பனவற்றைப் போன்ற முழக்கங்கள் புதுமையாகவும், போற்றத்தக்கனவாகவும் உள்ளன.

லுக்கிரிஷஸின் கவித்திறன் சிறப்புமிக்கது. எளிய, இனிய சொற்களில் சிக்கலான பல கருத்துக்களையும், கொள்கைகளையும் சிறந்த காட்டுக்களுடன் விளக்கி யுரைப்பது அவருக்குரிய தனிச் சிறப்பு. இயற்கையின் எழிலைச் சிறுசிறு சொற்சித்திரங்களாக அவர் தீட்டிக் காட்டுந் திறன் போற்றத்தக்கது. ஆனால், ஒரு தத்துவ நூலின் வழக்கெதிர் வழக்குகளை அந்நூல் மிகுதியாகக் கொண்டிலங்குகிறது. அதனால், அதனுடைய இலக்கியச் சிறப்பிற்கு ஊறு உண்டாகிறது. நூலில் பாதிப் பகுதிக்கு மேல் வெறும் அளவையியல் முறையில் அமைந்த விளக்கங் களே இடம் பெற்றுள்ளன. அறத்தின் இயல்புகளையும், ஏற்றத்தையும் எடுத்துரைக்கும் இடங்களிலேயே அவ ருடைய கவிதை அழகிலும், நயத்திலும் இலக்கிய வளம் மிக்கதாக விளங்குகிறது.

எனவே, லுக்கிரிஷலை சிறந்ததோர் அறிவியலறிஞர் என்றும், மெய்ப்பொருள் ஆராய்ச்சியாளர் என்றும் நாம் துணிந்து கூறலாம். அதே சமயத்தில் அவர் ஒரு கவிஞ ராகவும் விளங்குகிறார். அவருடைய 'பொருள்களின் இயற்கையை'த் திருக்குறளோடு ஓரளவிற்கு ஒப்புமை யுடைய நூல் என்று நாம் கூறினால், அது தவறாகாது. அதில் திருக்குறளில் காணப்பெறும் கலையழகும், இலக் கிய இன்பமும் குறிப்பிடத்தக்க அளவிற்கு இடம் பெற் றிருக்கின்றன.

அடுத்து வர்ஜில் படைத்த 'ஜார்ஜிக்ஸ்' என்னும் உழவுப்பாட்டு இலத்தீன் மொழியில் சிறப்புடைய நீதி நூலாகும். உணர்த்தும் பொருளாலும், இலக்கிய இயல்பு களாலும் அதைத் திருக்குறளுக்கு ஒப்பான நூல் என்று கருதுவதற்கில்லை. மாண்புமிகு காப்பியக் கவிஞன் வர்ஜில் இயற்றியதாக இருந்தாலும், அது சிறப்புடைய தன்று. திருக்குறளை இமயமலையாகச் சொன்னால், ஜார் ஜிக்ஸை ஒரு சிறு குன்றாகத்தான் கூறமுடியும்.

இலத்தீன் மொழியில் சிறப்புற்று விளங்கும் மற்றொரு நீதி நூல் 'வானவியல்.' அதை நாம் அற நூல் என்று ஒப்புக் கொள்ள இயலாது. ஆகவே, திருக்குறளோடு ஓரளவிற்கு ஒப்புமையுடைய இலத்தீன் மொழி நீதி இலக்கியம் லுக்கிரிஷஸின் 'பொருள்களின் இயற்கை' என்றே உறுதி யாக நாம் கூறலாம்.

சீன மொழியில் நீதி நூல்கள் பல உள்ளன. எனினும், அவற்றுள் கன்பூசியஸின் 'முதுமொழியும்', 'நடுவழிக் கோட்பாடுமே' சிறப்புடையன. மற்ற நூல்கள் எல்லாம் வெறும் தத்துவ ஆராய்ச்சி நூல்களாக உள்ளன. லவோ-ட்ஸுவின் 'வாழ்க்கை நெறி'யில் இலக்கிய இன்பம் பயக்கும் இனிய இயல்புகள் பல உள்ளன. ஆயினும், அந்நூலை நாம் நீதி இலக்கியமாகக் கொள்ளுவதற்கில்லை. அதை இறைமை இணைவுப் பண்புடைய (Mystical) தத்துவ நூலாகவே நாம் கருத நேரிடுகிறது. அறத்தைப் பற்றிய கருத்துக்கள் அதில் இலைமறை காய்கள் போன்றுள்ளன.

கன்பூசியஸின் 'முதுமொழி' நல்லதொரு நீதி நூலா கும். அதில் கருத்துவளம் இருக்கிறது; கற்பனை நலமில்லை; கவிதைத் துடிப்பு இருக்கிறது; கலையழகு இல்லை. இலக் கியத்தின் நறுமணம் அதில் கமழவில்லை. உரைநடையில் இயற்றப் பெற்றிருப்பது அதனுடைய முதற்குறை என்று நாம் கூறலாம். அவ்வுரைநடையும் உரையாடல் முறை யில் அமைந்துள்ளதை நாம் காணுகின்றோம். சிக்கலான கருத்துக்களைத் தடைவிடைகளின் மூலம் விளக்கியுரைப் பதற்குப் பயன்படுத்தப்பெறும் கருவியே உரையாடல். வடமொழியிலுள்ள உபநிடதங்களும், கிரேக்க மொழியி

லுள்ள பிளேட்டோவின் படைப்புகளும் இவ்வுரையாடல் முறையைப் போற்றிப் பயன்படுத்தியுள்ளன. மெய்ப் பொருள் ஆராய்ச்சிக்கு ஏற்றதொரு நடை உரையாடல் என்பதை இவை மெய்ப்பிக்கின்றன. சீனமொழியின் பேச்சு வழக்கினைப் பிரதிபலிக்கும் நடையிலே 'முதுமொழி' இயற்றப் பெற்றிருக்கிறது. எனினும், அந்நடை பொருள் தெளிவுமிக்க எளிய நடையாக அமையவில்லை என்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும். இக்காரணங்களினால் 'முது மொழியை' நாம் சிறந்தொரு நீதி இலக்கியமாகக் கருத முடியவில்லை. அதை நீதிநூல்களுள் 'மூதுரை' வகை யைச் சேர்ந்ததாகவே நாம் குறிப்பிடலாம்.

கன்பூசியஸின் மற்றொரு நூலான 'நடுவழிக் கோட் பாடு' நீதி இலக்கியத்தின் இயல்புகள் சிலவற்றைப் பெற்றுள்ளதாகும். முதலாவதாக அது செய்யுள் நடை யில் அமைந்திருக்கிறது. அந்நூலில் உள்ள தொண்ணூற் றிரண்டு பாடல்களுள் பத்துக்கு மேற்பட்டவை, கன்பூசி யஸ் காலத்திற்கு முற்பட்ட 'பழம்பாடல் தொகுதி'யை சேர்ந்தனவாகும். அப்பாடல் தொகுதியை முறைப் படுத்தித் தொகுத்தவர் கன்பூசியஸ் என்பதை நாம் முன்னர்க் கண்டோம். தம்முடைய கருத்திற்கு ஊற்ற மளிக்கத்தக்க சான்றுகளாகக் கருதிய பழம் பாடல்களை, ஆசிரியர் பத்துக்கு மேற்பட்ட இடங்களில் அப்படியே எடுத்துத் தம் நூலில் சேர்த்துக் கொண்டுள்ளார். அவை சொல் நயமும், பொருள் நயமும், கற்பனை வளமும் கருத்துச் செறிவும் உடையன. அவற்றோடு இடையிடையே கலந்து காணப்படும் பாடல்கள் கன்பூசியஸால் இயற்றப் பட்டனவாகும். எதையும் கன்பூசியஸ் எழுதி வைக்க வில்லை. அவருடைய சீடர்களே தங்களுடைய ஆசிரியரின் கொள்கைகளையும், கருத்துக்களையும் நூல் வடிவில் எழுதி உலகிற்கு உதவினர் என்பதையும் நாம் மறத்த லாகாது.

எனினும், அப்பாடல்களில் ஒளிரும் கலையழகையும், கற்பனை நயத்தையும் நாம் போற்றக் கடமைப்பட்டுள் ளோம். அந்நூலில் "'நடுவழி' என்பது என்ன?" என்ற மையக் கருத்தை விளக்கும் வகையில் பிற கருத்துக்

களெல்லாம் அதைச் சுற்றிச் சுழலுகின்றன. அதனல், பல்வேறு வகையான கருத்துக்களுக்கு அந்நூலில் இடமில்லே. எனவே, கருத்துச் செறிவு இல்லாத அந்நூல் ஓரளவிற்கு இலக்கிய இன்பம் பயப்பதாக அமைந்திருக்கிறது. கருத்தொருமைப்பாட்டிலும், கற்பவர் உள்ளத்தைக் கவரும் திறனிலும் அது திருக்குறளைப் போன்றதொரு நீதி இலக்கியம் என்று நாம் கூறலாம். ஆனல், அதைத் திருக்குறளுக்கு ஒப்பானதொரு நீதி இலக்கியம் என்று யாரும் கூற முடியாது. அதை நீதி இலக்கியம் என்று கருதுமாறு நம்மைத் தூண்டுவது அதில் எடுத்தாளப்பட்டுள்ள 'பழம் பாடல் தொகுதியைச்' (ஷி-கிங்) சேர்ந்த பாடல்களேயாகும். அவற்ருேடு இடையிடையே காணப்படும் செய்யுள்களுள் சில அவற்றை அடியொற்றி இயற்றப்பட்டுள்ளன. இக்காரணங்களால் 'நடுவழிக் கோட்பாடு' நல்லதொரு நீதி இலக்கியமாக விளங்குகிறது என்று நாம் கூறலாம். சீன மொழியின் சிறப்புமிக்க நீதி இலக்கியம் ஈதொன்றேயாகும்.

இந்தியாவின் சிறப்புமிக்க இருமொழிகளுள் ஒன்ருன சமஸ்கிருதத்தில் தொன்மைச் சிறப்பு வாய்ந்த நீதி இலக்கியங்கள் மிகக் குறைவாக உள்ளன. அவற்றுள் பர்த்ருஹரி இயற்றிய சதகங்களே சிறப்புடையன. அவர் இயற்றிய மூன்று சதகங்களுள் நீதி சதகமும், சிருங்கார சதகமும் நீதி இலக்கியங்களாகப் போற்றத்தக்கனவாகும். அவற்றில் நீதிநெறிக் கருத்துக்களும் கவிதைச் சுவையும் இணேந்தும் இழைந்தும் காணப்பெறுகின்றன. எனினும், திருக்குறளோடு பர்த்ருஹரியின் படைப்புகளே ஒப்பிட்டுப் பார்க்கின்றபொழுது அவை இலக்கியப் பண்புகளில் குறைபாடுடையனவாகவே தோன்றுகின்றன.

நாலடியாரை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்ட டாக்டர் ஜி. யூ. போப் என்ற ஆங்கிலேயர், பர்த்ருஹரியின் பாடல்கள் நாலடியாரின் பாடல்களேக் காட்டிலும் தரம் குறைந்தவை என்று தம் முன்னுரையில் அறிவித்துள்ளார்.[110] பர்த்ருஹரியின் சதகங்களேப் படித்தவர்கள் டாக்டர் போப்பின் கருத்தை ஒப்புக்கொள்ளுவர் என்பதில் ஐயமில்லே. நாலடியார்

திருக்குறளைவிடக் கருத்தாலும், இலக்கிய நலத்தாலும் தரம் குறைந்தது என்பதைத் தமிழ்கூறும் நல்லுலகம் நன்கறியும். எனவே, பர்த்ருஹரியின் நீதிசதகமும், சிருங்கார சதகமும் திருக்குறளோடு ஒப்புமையுடையனவாகக் கூற இயலாதனவாகும்.

இவற்றைத் தவிர, வடமொழியில் உள்ள பிற நீதி நூல்கள் எல்லாம் திருக்குறளுக்கு அருகில் வர இயலாதவை. அவை 'மூதுரை' வகையைச் சேர்ந்த நீதி நூல்களாகவே உள்ளன.

நாம் மேற்கண்ட நீதி இலக்கிய ஒப்பியல் ஆராய்ச்சியின் பயனாக உலகத்துச் செம்மொழிகளில் உள்ள நீதி இலக்கியங்களுள், திருக்குறள் ஒன்றே தன்னிகரற்ற நீதி இலக்கியமாகத் திகழ்கிறது என்ற உண்மை புலனாகின்றது. கருத்து வளத்தாலும், அவற்றை எடுத்தியம்பும் முறையாலும், நூலின் வடிவ அமைப்பாலும் திருக்குறள் ஒப்புயர்வற்ற நீதி இலக்கியமாகும். அதற்கு அடுத்த நிலையில் இலத்தீன் மொழியிலுள்ள லுக்கிரிஷஸின் 'பொருள்களின் இயற்கை'யை நாம் குறிப்பிடலாம். உலக நீதி இலக்கியத்துள் மூன்றாவது இடத்தைக் கன்பூசியஸின் 'நடுவழிக் கோட்பாடு' பெறுகிறது என்று கூறினால், அது தவறாகாது. பர்த்ருஹரியின் 'நீதி சதகம்' நான்காம் இடத்தையும், கிரேக்க மொழியிலுள்ள 'வேலையும் நாள்களும்' என்ற நீதி இலக்கியம் ஐந்தாவது இடத்தையும் பெறுவதற்குரிய தகுதியும் சிறப்பும் வாய்ந்தனவாக உள்ளன, எனவே, நடுவுநிலையோடு உலகச் செம்மொழி இலக்கியங்களை ஆராய்ந்து பார்ப்பவர்களுக்குத் திருக்குறளைப் போன்று, மனித இனத்திற்கு வழிகாட்டும் ஒளிவிளக்காகத் திகழும்நீதி இலக்கியம் உலகில் வேறெந்த மொழிகளிலும் தோன்றவில்லை என்பது எளிதில் புலனாகும்.

## குறிப்புகள்

1. தமிழிலக்கியத்துள் முத்தமிழைப்பற்றிக் காணப்பெறும் குறிப்புகளுள் சில :

தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்
(பரி. தி. 4)

முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை
(திருமந். 2115)

முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்
(தேவா. 6483)

குடக்கோ முனிசேரன் தண்டாவுரை முத்தமிழ்
(சிலப். சிறப். பக். 2)

சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண்மூதூர்
(பெரிய. மூர்த்தி. 5)

மோனை முத்தமிழ்
(ஒட்டக்கூத்தர், தனிப்பாடல் திரட்டு, 423)

முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
(கம்ப. இரா. பால. தற். 1)

சங்கத் தமிழ்மூன்றும் தா (நல்வழி, 1)

2. தொல். பொருள். சூ. 313, பேரா. உரை.

3. Murray, Gilbert: The Classical Tradition in Poetry, p. 29, O. U. P., London, 1927.

4. Moulton, R. G.: The Modern Study of Literature, p. 22; University of Chicago Press, Chicago, 1915.

5. ஷை, பக். 32.

6. Aristotle: The Poetics, pp. 8-9, Tr. by W Fy. Fe, Hamilton, William Heinemann Ltd; London, 1927.

7. Aristophanes: Frogs, p. 323. Tr. by Rogers, B. B., Vol. II. William Heinemann; London, 1924.

8. Korte, Alfred: Hellenistic Poetry, p. 246; Tr. from German by Jacob Hammer, C. U. P., N. Y., 1929.

9. Aristotle: Poetics, p. 9.

10. Lucas, F. L.: Greek Poetry for Everyman, p. 195. T. M. Dent & Sons; London, 1931.

11. Hesiod: The Works and Days, pp. 9-10. Tr. by Richmond Lattimore, University of Michigan Press, Ann Arbor, N. Y., 1959.

12. நம்முடைய புராணங்களில் கூறப்பெறும் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்ற நால்வகை யுகங்கள் ஹெஸியட்டின் பாகுபாட்டோடு ஒப்புமையுடை

யனவாகத் தோன்றுகின்றன. இப்பொழுது நடைபெறுவதாகக் கருதப்படும் கலியுகத்தின் கொடுமைகளைப் பாரதத்தின் சாந்திப்பருவம் விளக்கியுரைப்பதைப் போன்று, இந்நூலாசிரியர் இரும்புக்காலத்தின் இயல்புகளை எடுத்துரைக்கின்றார்.

13. Hesiod, The Works and Days p. 3.

14. Chadwick, H. Munro, and Chadwick, N. Kershaw: The Growth of Literature, Vol. I. p. 422., C. U. P., London 1968.

15. Burnet, J.: Early Greek Philosophy, p. 4., London, 1930.

16. Aratus: The Skies and Weather Forecasts, p. 21; Tr. by Poste, E; Macmillan & Co; London, 1880.

17. Karte, Alfred: Hellenistic Poetry, p. 248.

18. ஷை, பக். 249.

19. ஷை, பக். 256.

20. Plato: Republic, Book III, 392c; p. 191. Ed. by Warmington, Eric, H. A., Mentor Book, N. Y., 1956.

21. Aristophanes: Frogs, St. 1030.

22. Winspear, D. Alban (Tr. by): On the Nature of Things, by Lucretius, Classics in Transl. Vol. II; P. 60. University of Wisconsian Press, Madison, 1952.

23. Tyrrell, R. Y: Latin Poetry, p. 72, Macmillan; London, 1898.

24. Hadzsits, G. D: Lucretius and His Influence, George G. Harrap & Co; U. S. A; 1935.

25. Winspear, D. Alban, Tr. by: On the Nature of Things, Part III, ll. 322-23.

26. Hadzsits, G. D: Lucretius and His Influence, pp. 341-342.

27. Virgil: The Eclogues and Georgics, Tr. by Royds, T. F., Dent & Co; London, 1907.

28. Duff, Wight: A Literary History of Rome, Vol. I., p. 45; Ernest Benn Ltd; London, 1953.

29. Eliot, T. S: On Poetry and Poets, p. 16; Faber; London, 1957.

30. Yutang, Lin, : My Country and My People, p. 205; William Heinemann Ltd ; London, 1956.

31. Yulan, Fung. : A History of Chinese Philosophy, p. xix; George Allen & Unwin Ltd ; London, 1937.

32. கன்பூசியஸின் 'முதுமொழிகள்' (Analects), 'சிறப்பு மிக்க கல்வி' (The Great Learning), 'நடுவழிக் கோட்பாடு' (The Doctrine of the Mean) என்ற மூன்று நூல்களையும் ஒன்றாகத் தொகுத்து 'கன்பூசியஸின் மெய்யறிவு' (The Philosophy of Confucius) என்னும் நூல் ஒன்று வெளிவந்திருக்கிறது. அந்நூலில் இருந்தே பெரும்பான்மையான மேற்கோள்கள் இக்கட்டுரையில் காட்டப்பெற்றுள்ளன.

பார்க்க : The Philosophy of Confucius,
Tr. by James Legge,
The Peter Pauper Press,
N. Y., 1956.

33. முதுமொழி, 2 : 9

34. புறம். 183.

35. இந்நூலைப் 'பேரறிவு' (The Great Learning) என்றும், 'பெருமைமிகு சுருக்கம்' (The Great Digest) என்றும் இரு வகையாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர். 'தா-ஸியோ' (Ta-Hsio) என்ற சீனமொழிச் சொல்லிற்குச் 'சிறப்புமிக்க கல்வி' என்பதே பொருளாகும். இந்நூலிற்குப் பல மொழி பெயர்ப்புகள் ஆங்கிலத்தில் வெளி வந்துள்ளன. அவற்றுள் எஸ்ரா பவுண்ட் (Ezra Pound) எளிய நடையில், தெளிவான முறையில் வெளியிட்டுள்ள மொழி பெயர்ப்பு சிறப்பு மிக்கதாகும். அந்நூலில் இருந்தே மேற்கோள்கள் இங்கு எடுத்தாளப் பெற்றுள்ளன. அம் மொழி பெயர்ப்பாசிரியர் 'பெருமைமிகு சுருக்கம்' என்று அதற்குப் பெயரிட்டுள்ளார். ஆனால், அதைச் 'சிறப்புமிக்க கல்வி' என்ற பெயராலேயே குறிப்பிடுவது பொருத்த மென நான் கருதுகிறேன்.

பார்க்க : Confucius, The Great Digest & Unwobbling Pivot, New Directions Books, N. Y., 1951.

36. ஷை, பக். 25

37. ஷை, பக். 25

38. Yutang, Lin : The Wisdom of China, p. 330 ; Jaico Publishing House, Bombay, 1956.

39. ஷை பக். 332
40. Yutang, Lin: The Wisdom of Confucius, p. 148; The Illustrated Modern Library, U. S. A; 1943.
41. ஷை, பக். 149
42. ஷை, பக். 112
43. Yutang, Lin: The Wisdom of Confucius, p. 251.
44. Legge, James (Tr): The Philosophy of Mencius, p. 72; Clarendon Press, Oxford, 1885.
45. ஷை, பக். 190
46. ஷை, பக். 48
47. ஷை, பக் 73
48. ஷை, பக். 127-8
49. ஷை, பக். 172
50. கல்லாடர்: கல்லாடம், செ. 14; மர்ரே ராஜம் வெளியீடு, சென்னை, 1957.
51. சதாசிவ பண்டாரத்தார், T. V.: தமிழ் இலக்கிய வரலாறு (கி. பி. 250—கி. பி. 600), பக். 23; அண்ணமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1957.
52. Confucius: Analects, 15 : 23.
53. ஷை, 4 : 11; 5 : 15; The Doctrine of the Mean, 2 : 1, 2; 14 : 5.
54. புறம். 312.
55. பெருந்தொகை, 2001; மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு, 1935-36.
56. Confucius; Analects, 14: 37.
57. Yutang, Lin: My Country and My People, p. 99.
58. Yutang, Lin: The Wisdom of China, p. 313.
59. Shi-Lien Han, Leonard: The Political Philosophy of Confucianism, p. xxi; London, 1932.
60. Lao-Tzu: The Way of Life, A new translation of the Tao-Te-Ching by R. B. Blackney, p. 22; Mentor Book, N. Y.; 1955.
61. ஷை, முன்னுரை, பக். 9

62. ஷை, செ. 25
63. ஷை, செ. 21
64. ஷை, செ. 33
65. ஷை, செ. 71
66. ஷை, செ. 48
67. ஷை, செ. 20
68. ஷை, செ. 19
69. தாயுமானவர் பாடல் திரட்டு, செ. 66; தருமையாதீன வெளியீடு, 1965.
70. Lao-Tzu: The Way of Life, Vs. 10, 55
71. ஷை, செ. 48
72. ஷை, 80
73. Yulan, Fung.: A History of Chinese Philosophy, p. 190.
74. Lao-Tzu: The Way of Life, V. 81.
75. Besent, Annie: Universal Text-Book of Religion and Morals, Part II, p. 41; Theosophical Publishing House, Adayar, 1901.
76. ராதாகிருஷ்ணன், எஸ்: இந்தியாவின் இதயவொலி, பக். 45; த. மொ.: வி. எஸ். வி. இராகவன், ராதா பதிப்பகம், சென்னை, 1968.
77. Keith, A. B.: A History of Sanskrit Literature, p. 228, Clarendon Press, Oxford, 1928.
78. ஷை, பக். 229-230.
79. Das Gupta, S. N.: A History of Sanskrit Literature, Classical Period, Vol. I, p. 399; University of Calcutta, Calcutta, 1962. சென்னை, 1968.
80. பர்த்ருஹரியின் நீதி சதகத்தை, 'நீதி இயல்' என்ற பெயரில் 1902ஆம் ஆண்டு, கா. ஸ்ரீகோபாலாசாரியர் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார். புலவர் மாணிக்கவாசகம் பிள்ளை என்பவர் பர்த்ருஹரியின் நீதி சதகத்தையும், சிருங்கார சதகத்தையும் தமிழில் மொழிபெயர்த்து 1925 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். வைராக்கிய சதகமும் தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது. இது ஸ்ரீசுப்பையா சுவாமிகள் என்பவரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, 1912ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றுள்ளது. சாந்த

லிங்க சுவாமிகள் இயற்றியருளிய 'வைராக்கிய சதகம்' பர்த்ருஹரியினுடைய 'வைராக்கிய சதகத்தின்' தமிழாக்கம் அன்று.

இப்பகுதியில் உடுக்குறியுடன் மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ள செய்யுட்கள் புலவர் மாணிக்கவாசகம் பிள்ளை அவர்களுடைய மொழிபெயர்ப்பாகும். உடுக்குறியின்றி மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ள பாடல்கள் கா. ஸ்ரீ. கோபாலாசாரியாரின் தமிழாக்கமாகும்.

81. "நீதி சதகத்தை இயற்றிய பர்த்ருஹரி வேறு; வைராக்கிய சதகத்தையும், சிருங்கார சதகத்தையும் இயற்றிய பர்த்ருஹரி வேறு" என்ற கருத்து அறிஞர்களிடையே இருந்துவருகிறது.

பார்க்க: தாஸ் குப்தாவின் 'A History of Sanskrit Literature', பகுதி I, பக். 670.

82. Das Gupta: A History of Sanskrit Literature, Vol. I, p. 672.

83. Niti Divisastica, Ed. by Markandeya Sarma, Kilpauk, Madras, 1928.

84. Keith, A. B.: A History of Sanskrit Literature, p, 232.

85. ஷை, பக். 233.

86. ஷை, பக். 240.

87. Caldwell, R.: A Comparative Grammar of Dravidian Languages, p. 15; University of Madras, 1956.

88. தொல்காப்பியம், பொருள். சூ. 419, இளம். உரை.

89. ஷை, சூ. 433, இளம். உரை.

90. பார்க்க: புறநானூறு, 2, 3, 5, 6, 35, 40, 55, 184.

91. தொல்காப்பியம், பொருள். சூ. 440, பேரா. உரை.

92. ஷை, சூ. 440, பேரா. உரை.

93. பார்க்க: புறநானூறு 194, 357, 359, 360, 362, 363, 364, 365, 366.

94. பார்க்க: புறநானூறு 18, 27, 28, 29, 74.

95. தொல்காப்பியம், பொருள். சூ. 1, நச்சி. உரை.

96. பார்க்க: புறநானூறு 5, 24, 75, 121, 182, 183, 185, 186, 187, 188, 189, 190, 191, 192, 193, 195, 214.

97. பார்க்க: குறிப்பு 89, 92, 93, 95.

98. பார்க்க : புறநானூறு 9, 20, 31, 34, 35, 39, 44, 55, 58, 62, 93, 108, 134, 145, 159, 166, 175, 210, 211, 224, 230, 237, 255, 263, 336, 362, 366, 377, 381, 390, 395, 397, 399.

99. பார்க்க : புறநானூறு 112-190; 217-227; 230-243; 260, 261, 263-265; 270.

100. திருவள்ளுவர் திருநாள் மலர், பக். 62; சென்னை, 1937.

101. Pope, G. U. (Tr): Naladiyar, p. xii; Clarendon Press, Oxford, 1893.

102. Pope, G. U.: The Poets of Tamil Land, Tamilian Antiquary, Vol. II, p. 40; Madras, 1912.

103. Aiyar, V. V. S. (Tr): The Kural or The Maxims of Tiruvalluvar, Intr. p. xii; Amudha Nilayam, Madras, 1961.

104. முன்றுறையரையனார்: பழமொழி நானூறு, தி. செல்வக் கேசவராய முதலியார் பதிப்பு, பக். 33-34; சென்னை, 1929.

105. நீதிநூற் கொத்து, முதற்பாகம், கழக வெளியீடு; உலகநீதி காப்புச்செய்யுள்; சென்னை, 1964.

106. ஷை, நறுந்தொகை, நூற்பயன், செய்யுள்.

107. ஷை, நீதிவெண்பா, காப்பு.

108. ஷை, அறநெறிச்சாரம், பாயிரம்.

109. Pope, G. U (Tr): The Sacred Kural, p. vi; Henry Frowde, London, 1886.

110. ஷை: Naladiyar, p. xi; F. N.;

# 6. இலக்கிய உலகில் திருக்குறள் பெறுமிடம்

இலக்கண வழுக்கள் இல்லாமல் எழுதப் பெற்றவை அனைத்தும் 'இலக்கியம்' என்று கருதிய காலம் மறைந்து விட்டது. இன்று 'இலக்கியம்' என்ற சொல்லிற்கு அறிஞர்கள் தரும் விளக்கம் மிக விரிந்த ஒன்றாகும். உள்ளத்திற்கு இன்பம் ஊட்டும் கற்பனையோடு, அணி நலன் நிறைந்த நூல்களைப் பொதுவாக இலக்கியம் என்று நாம் குறிப்பிடுகிறோம். படிக்குந்தோறும் நமது மனத்தைக் கவரும் நடையும், நெஞ்சத்திற்கு மகிழ்ச்சியையும் இன்ப உணர்ச்சியையும் உண்டாக்கும் கருத்துக்களும், நம்மைச் சிந்திக்கத் தூண்டும் நயமிகு மொழிகளும் தொடர்களும் இலக்கியத்தை ஏற்றமுறச் செய்கின்றன. ஒரு முறை படித்தபின் வீசி எறிந்து விடாமல் மீண்டும் படிக்க வேண்டும் என்ற எண்ணத்தை எழுச்சியுறச் செய்யும் இயல்பும், அவ்வாறே மீண்டும் படிக்கத் தூண்டும் உணர்வும், படித்தவுடன் அந்நூல்களிலுள்ள பல கருத்துக்கள் நம்முடைய உள்ளத்தில் பதிந்துவிடும் தன்மையும், நமது வாழ்க்கையில் தவறு நேராமல் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டும் என்று உள்ளத்திற்கு உரமூட்டும் ஆற்றலும், பலவகைப்பட்ட பொருள்களை நாம் அறிந்து இன்புறச் செய்யும் பண்பும் இலக்கியத்தின் உள்ளார்ந்த பண்புகளாக உள்ளன.

### நால்வகைப் பேறுகள்

மனிதவாழ்க்கை நான்கு வகையான குறிக்கோள்களை உடையது. அவை அறநெறியில் நின்று பொருளை ஈட்டுதலும், ஈட்டிய பொருளை அறநெறியில் பயன்படுத்தி இன்பம் துய்த்தலும், பின்னர் வீடுபேற்றை அடைய

முயலுதலுமாகும். இவற்றுள் யாதாகிலும் ஒன்றைக் குறிப்பிட்ட ஒரு சமயத்தில் ஒருவன் பெரிதும் போற்றிப் பின்பற்றலாம். ஆனல் இவற்றுள் சிலவற்றை முழுமையும் புறக்கணித்தால் மனிதனுக்கு இன்னல்களும் இடையூறுகளும் உண்டாகும் என்று சான்றோர்கள் கருதினர். மனிதன் ஒருவன் வாழ்க்கையில் அடையவேண்டிய இந்நால்வகைப் பேறுகளும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையன என்பது அவர்களுடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

> *அறம்பொருள் இன்பம்வீ டடைதல்நூற் பயனே*
> (நன். 10)

என்னும் கருத்து இதனைத் தெளிவுறுத்துகிறது.

இலக்கியம் கற்பவருக்கு இந்நால்வகைப் பயனையும் அளிப்பதாக அமையவேண்டும் என்று அவர்கள் எண்ணினர். இவற்றுள் ஒரு குறிக்கோளினை மட்டும் அடைய முயலுவது இயலாத செயல் என்பது அவர்களுடைய எண்ணமாகும். தமிழருடைய அழகியல் ஆராய்ச்சியில் இலக்கியமும் அறநெறியும் முரண்பட்டதாகக் கருதப் பெறவில்லை என்பதற்கு மேற்கண்ட நூற்பாவே போதிய சான்ருகும்.

நால்வகைப் பேறுகளை அடைவதற்குரிய வழிவகைகளை இலக்கியத்தைக் கற்பவர் நன்குணர முடியும். இலக்கியம் நம்மை அறத்தின் அருகே அழைத்துச் செல்லுகிறது. அறம் என்பது வாழ்க்கை நெறியின் சட்டம். அது ஒரு மனிதனுடைய ஆளுமையின் முதன்மைப் பண்போடு ஒத்தியங்கும் நற்பண்பாகும். இதையுணர்ந்து போற்றுமாறு நம்மைத் தூண்டுவதே இலக்கியத்தின் தலையாய கடமை என்பது நம் முன்னோர்களின் கருத்தாகும். இவ்வகையில் நோக்குகின்றபொழுது இலக்கியம் புனிதமான மறையாகவும் தோன்றலாம். ஆனல், புனித மறைகளுக்கு இல்லாத சிறப்பை இலக்கியம் பெற்றிருக்கிறது. அவை நம்மை இன்புறுத்துகின்றன. மறை நூல்கள் அறிவுறுத்துவதோடு அமைதி கொள்ளுகின்றன. இதனல் தான் வடமொழியில் அபிநவகுப்தன், 'கவிதை (இலக்கியம்)

என்பது இனிப்புப் பூசப் பெற்ற மருந்துருண்டை' என்று குறிப்பிட்டுள்ளான்.[1] அறநெறிக் கருத்துக்கள் இலக்கியத்தில் இடம் பெறுவதால் அது இயல்பாகவே கசப்புடையதாக இருக்கிறது என்பது அபிநவ குப்தனின் கருத்தன்று. அவற்றை விழுங்குமாறு தூண்டுவதற்குச் சுவையென்னும் பயன்மதிப்பு அதன்மீது பூசப்பெற்றிருப்பதாகவே அவன் கருதுகிறான். இலக்கியம் தன்னுடைய அறநெறிப் பயனை உள்ளத்தால் உணரமுடியாத வகையில் இன்பத்தோடு கலந்தூட்டுகிறது என்று நாம் கூறலாம்.

'அறம்பொருள் இன்பம் வீடடைதல் நூற் பயனே' என்னும் கருத்துரையால், நூல் நல்கும் பயன்களுள் இன்பமும் ஒன்று என்பது பெறப்படுகிறது. இதனால் கற்பவரை இன்புறுத்தும் இயல்புடையது இலக்கியம் என்ற உண்மை புலனாகின்றது. வள்ளுவர் 'நவில்தொறும் நூல்நயம்' என்று குறிப்பிடுவது இவ்வியல்பையே யாகும். கற்குந்தோறும் கற்குந்தோறும் புத்தம் புதிய நயங்களைக் காண்பதற்கு நிலைக்களனாக இருப்பது இலக்கியம் என்றால், அவ்வாறு புதியபுதிய நயங்களைக் காண்பதனால் கற்பவர் பெறக்கூடிய பயன் இன்பமே என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ? எனவே, நீதிக் கருத்துக்களை அறிவுறுத்துவதோடு, இலக்கியம் இன்புறுத்துவதாகவும் அமைகிறது என்ற கோட்பாடு இக்கருத்துரையின் உள்ளார்ந்த பொருளாக உள்ளதை நாம் உணர்ந்து போற்றக் கடமைப்பட்டவர்களாவோம்.

இலக்கியம் இன்புறுத்துவதோடு அறிவுறுத்தவும் செய்கிறது என்ற இக்கோட்பாடு நம் நாட்டிற்கு மட்டும் உரியதன்று. ஹொரேசு (Horace) என்ற கவிஞர் கி. மு. முதல் நூற்றாண்டில் ரோமாபுரியில் வாழ்ந்தவர். அவர்,

> **கவிதை இருமுகமான நோக்கங்களைக் கொண்டது. அது இன்புறுத்துவதோடு அறிவுறுத்தும் ஆசிரியனாகவும் பயன்படுகிறது......கவிஞன் ஒருவன் சிறந்த அறிவுரையை நல்குவதற்கு முயலுவான்; அல்லது இன்புறுத்துவான்; அல்லது இவ்விரண்டையும் ஒருங்கே செய்வான். இன்புறுத்துவதும் அறிவுறுத்துவதும் கலந்த கவிதையே கற்பவருடைய உள்ளத்தைக் கவரும் ஆற்றல் உடையது.[2]**

என்று அறிவிக்கின்றூர். இக்கருத்து தமிழருடைய இலக்கியக் கோட்பாட்டினை அரண் செய்வதாக அமைந்திருக்கிறது. அழகியல் அனுபவத்தின் இயல்பு நம்மை இன்புறுத்துவதாகும். அதே சமயத்தில் அறிவுறுத்துவது அதனுடைய கடமையாக அமைகிறது. இவ்வாறு இலக்கியம் வழிக்கும் பயனுக்கும் இடையேயுள்ள முரண்பாட்டைக் கரைத்துவிடுகிறது. இதனுல், இன்பமும் அதை அடைவதற்குக் கருவியாக உள்ள நூல் நுதலும் பொருளும் அறத்து வழிப்படுகின்றன. இது இலக்கியத்தில் மட்டும் நிகழ்வது அன்று; மனித வாழ்க்கையிலும் நடைபெற்று வரும் சித்து வித்தையாகும். இக்கருத்தை,

சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல (புறம். 31)

என்று புறநானூற்றுப் பாடல் ஒன்று தெரிவிக்கிறது. இவற்றின் முடிந்த பயனுகக் கருதப்பெறுவது வீடுபேறு. மனிதன் அதை அடைவதற்கும் இலக்கியம் உறுதுணையாகிறது என்பதே பவணந்தி முனிவரின் கருத்துரையாகும். எனவே, இன்பமும் அறமும் வெவ்வேருனவை அல்ல. அவை ஒரு பொருளின் இருவகை இயல்புகளே என்பது தமிழருடைய இலக்கியக் கொள்கையின் மையக் கருத்தாகும்.

இவ்விரு இயல்புகளுள் அறிவுறுத்தும் பண்பு முனைப்பாக உள்ள இலக்கியத்தை நாம் நீதி இலக்கியம் என்று கூறலாம். வள்ளுவர் தந்த வான்மறையாகிய திருக்குறளில் அறிவுறுத்தும் பண்பு முனைப்பாகத் தோன்றுகின்றமையால், அதை நாம் நீதி இலக்கியமாகப் போற்றுகிறோம்.

### தமிழிலக்கியத்துள் திருக்குறள்

பண்டைத் தமிழ் இலக்கியத்தைப் பாட்டும், தொகையும், கீழ்க்கணக்கும் என்று சான்றோர்கள் பாகுபடுத்தியுள்ளனர். "பாட்டினும் தொகையினும் வருமாறு கண்டு கொள்க"[3] என்றும், "பதினெண் கீழ்க்கணக்குள்ளும்"[4] என்றும் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளமை கருதத்தக்கன. நன்னூலிற்கு முதன்முதல் உரையெழுதிய மயிலை நாதர்,

"ஐம்பெருங்காப்பியம், எண்பெருந்தொகை, பத்துப்பாட்டு பதினெண் கீழ்க்கணக்கு என்னும் இவ்விலக்கியங்களுள்"[5] என்று கூறியுள்ளமையும் இக்கருத்தை அரண் செய்கிறது.

உரையாசிரியர்கள் மட்டுமல்லாமல், தமிழ் விடுதூது போன்ற நூல்களின் ஆசிரியர்களும் பழைய தமிழ் நூல்களை மூவகையாகப் பாகுபடுத்திக் கூறுகின்றனர்.

*...................... மூத்தோர்கள்*
*பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும்*
*கேடில் பதினெட்டுக் கீழ்க்கணக்கும்* (தமிழ்விடுதூது 56)

என்னும் பாடற்பகுதி இதற்குப் போதிய சான்றாகும்.

இவற்றால் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற பழைய தமிழ் இலக்கியங்களோடு ஒத்த சிறப்புடையதாகப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் ஒருங்கே வைத்துப் போற்றப் பெற்றமை புலனாகின்றது. மேலும், பதினெண் கீழ்க்கணக்கு என்ற வழக்குச் சற்றேறக் குறைய பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்தே நடைமுறையில் இருந்து வருகிற தென்பதும் தெரியவருகிறது.

'கணக்கு' என்னும் சொல்லிற்கு 'நூல்' என்பது பொருள். அதனாலேயே நூல் பயிற்றும் ஆசிரியர் 'கணக்காயர்' என்று அழைக்கப் பெற்றார். இதனை,

*உணற்கினிய இன்னீர் பிறிதுழிஇல் லென்னும்*
*கிணற்றகத்துத் தேரைபோல் ஆகார்—கணக்கினை*
*முற்றப் பலகாலும் முனியா தினிதோதிக்*
*கற்றலிற் கேட்டலே நன்று.* (பழ. 61)

*கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்*
(நாலடி. 314)

என்னும் இலக்கிய வழக்குகளால் நாம் நன்குணரலாம்.

'கீழ்க்கணக்கு' என்ற சொல்லில் உள்ள 'கீழ்' என்னும் அடை, 'சிறுமை' என்ற பொருளை யுணர்த்துவதாகும். எனவே, அளவில் 'சிறிய நூல்கள்' என்ற கருத்திலேயே 'கீழ்க்கணக்கு' என்ற பெயர் வழங்கப்பட்டிருக்கலாம்.

கீழ்க்கணக்கு நூல்களின் இலக்கணத்தைப் 'பன்னிரு பாட்டியல்' இனிது எடுத்துரைக்கின்றது :

*அடிநிமிர்வு இல்லாச் செய்யுள் தொகுதி*
*அறம் பொருள் இன்பம் அடுக்கி யவ்வகைத்*
*திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்* (பன். மே. 133)

என்னும் நூற்பாவால், 'முழுவதும் ஒரே வகையான யாப்பு நடையுடையதாய் அறம், பொருள், இன்பமாகிய உறுதிப் பொருள்களைத் திறம்பட எடுத்துரைக்கும் செய்யுள் தொகுதி கீழ்க்கணக்கு' என்று கருதப்பெற்றதாகத் தெரிகிறது.

மேலும்,

*அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்*
*பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீரு*
*மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக் கெனவும்*
*வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின்*
*எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே* (பன். 222)

என்று கூறும் இலக்கணத்தால் கீழ்க்கணக்கு நூல்கள் வெண்பா யாப்பினுல் அறம், பொருள், இன்பம் பற்றி ஐம்பது முதல் ஐந்நூறு ஈருகப் பாடப்பெற்றவை என்பது அறியலாகும். ஐம்பது, ஐந்நூறு என்னும் பாட்டின் சிற்றெல்லை பேரெல்லைகளில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்தும் அடங்கா. ஆயினும், அடிநிமிர்தல் இன்றிக் கீழ்ப்பட்ட கணக்கில் வெண்பாவினுல் பாடப் பெற்றமையின் கீழ்க்கணக்கு என்று கொள்ளப்பட்டன. இக்கருத்தே கீழ்க்கணக்கு நூல்களின் உண்மை இயல்பைப் புலப்படுத்துவதாகும்.

தொல்காப்பியர் 'அம்மை' என்று குறிப்பிட்ட வனப்பினுள் இக்கீழ்க்கணக்கின் இலக்கணத்தை உரையாசிரியர்கள் பொருத்திக் காட்டுவர். இதைப்பற்றிய விளக்கத்தை நாம் இந்நூலின் ஒன்பதாவது பக்கத்தில் விரிவாகக் கண்டோம். மேற்கண்ட கருத்துக்களிலிருந்து அறம், பொருள், இன்பம் பற்றி ஐந்தும், அதனிற் குறைந்த அடியுமுள்ள பாட்டுக்களால் வெண்பா யாப்பில் இயற்றப் பெறுவது கீழ்க்கணக்கு என்பது தெளிவாகிறது.

இக்கீழ்க்கணக்கு நூல்களுள் 'முப்பால்' என்ற பெயரால் திருக்குறள் குறிப்பிடப் பெறுகிறது. அறம், பொருள், இன்பம் என்ற மூவகைப் பேறுகளைப்பற்றிய பகுதிகளைத் தனித்தனியே அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பால்களைக்கொண்டு இந் நூல் விளங்குகிறது. இதற்கு ஆசிரியர் 'முப்பால்' என்று பெயரிட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஐம்பத்து மூன்று வெண்பாக்களைக் கொண்ட திருவள்ளுவ மாலையில், பதின்மூன்று இடங்களில் 'முப்பால்' என்ற பெயராலேயே[6] இந்நூல் குறிப்பிடப் பெற்றுள்ளதை நாம் காணலாம். இதனாலும், தெய்வப் புலவர் திருவள்ளுவர் தம் நூலிற்கு 'முப்பால்' என்றே பெயரிட்டிருக்கலாம் என்ற கருத்து உறுதிப்படுகின்றது.

இவ்வாறு கீழ்க்கணக்கு நூல்களுள் திருக்குறளை ஒன்றாகக் கொண்டமைக்கு அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று உறுதிப்பொருள்களைப் பற்றிப் பேசும் இலக்கியமாக அது அமைந்துள்ளமையே காரணமாகும்.

திருக்குறளின் இலக்கிய இயல்புகளை நம்முன்னோர்கள் நன்குணர்ந்துள்ளனர். ஆலங்குடி வங்கனார் என்ற புலவர்,

> வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்குந்
> தெள்ளமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதால் (திரு. மா. 53)

என்று திருக்குறள் நல்கும் இன்பத்தின் இயல்பை எடுத்தியம்பியுள்ளார்.

வள்ளுவர் தந்த முப்பால்நூல் நல்கும் நயத்தைப் போன்று இன்பமளிக்கக் கூடிய பொருள்கள் உலகில் வேறொன்றும் இல்லை. காட்சிக்கு இனிமை அளிக்கும் வானூர் மதியமும் அதற்கு ஒப்பாகாது[7] என்பது மற்றோர் புலவரின் கருத்து.

பண்டைக் காலத்தில் இலக்கியம் பாவடிவில் இயற்றப் பெற்றது. அப்பாக்களை எழுத்து, அசை, சீர், அடி. சொற்பொருள் என்பனவற்றைக் கொண்டு செய்யுளாக யாத்தனர். அவற்றில் அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்னும்

எண்வகை வனப்புக்களும், சொல்லணி, பொருளணி, ஒலியணி என்ற அணிகளும், குறில், அகவல், தூங்கிசை என்னும் வண்ணங்களும் அழகுற அமையுமாறு அருந் தமிழ்ப் புலவர்கள் பாடல் பல இயற்றினர். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு புலவர், மேற்கண்ட பாநலங்களுள் யாதாகிலும் சில பண்புகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குமாறு நூல்களை இயற்றினர். ஆனல், நம்முடைய வள்ளுவரோ பாநலன்கள் அனைத்தும் நிறைந்து விளங்குமாறு முப்பாலை இயற்றியருளினுர் என்பது நெடுங்காலமாகத் தமிழ்ச் சான்றோர்கள் கூறிவரும் கருத் தாகும். திருவள்ளுவ மாலையுள் உள்ள செய்யுளொன்று இக்கருத்தை,

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழக்கில் வனப்பணி வண்ணம்—இழுக்கின்றி
என்றெவர் செய்தன எல்லாம் இயம்பின
இன்றிவர் இன்குறள்வெண் பா (திரு. மா. 45)

என்று போற்றிப் பாராட்டுகிறது.

எழுத்து முதல் வண்ணம் ஈருகச் சொல்லப்பட்ட இவற்றுள் வழுவுதல் இல்லாமல் எக்காலத்தில் எவரால் எவை செய்யப்பட்டன, அவை யெல்லாம் இக்காலத்து இத்திருவள்ளுவராலே செய்யப்பட்ட இவ்வினிய குறள் வெண்பாக்களிற் சொல்லப்பட்டன என்பது இதன் பொருளாகும்.

காலந்தோறும் தோன்றிய தமிழறிஞர்கள் இக்கருத் தில் உண்மை இல்லையென்ருல், திருக்குறளைச் சிறந்த இலக்கியமாகப் போற்றிப் பாராட்டி இருக்கமாட்டார்கள் என்பது உறுதி. ஆகவே, தமிழ் இலக்கண மரபுகளை அடிப்படையாகக் கொண்டு திருக்குறளை ஆராய்ந்த பண்டைக் காலப் புலவர்களுக்கு, அது சிறந்ததோர் இலக்கியமாகவே தோன்றியது என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

இந்நூற்ருண்டின் தொடக்கத்தில், திருவள்ளுவரைப் பற்றி முதன்முதல் சிறிய வடிவில் சிறந்ததோர் ஆராய்ச்சி நூலினைப் பேராசிரியர் தி. செல்வக் கேசவராய முதலியார்

இயற்றியுள்ளார். மரபுவழிவந்த தமிழ் இலக்கியக் கொள்கையின் அடிப்படையில், திருக்குறளை அவர் மதிப்பீடு செய்துள்ளார்.

> நமதாசிரியர் இந்நூலை ஏனைப்பாக்களாற் கூறுது குறட் பாக்களாற் கூறிய எடுத்துக் கொண்டதனுல், சுருங்கச் சொல்லல் — விளங்கவைத்தல் — நவின்ருேர்க்கினிமை — நன் மொழி புணர்த்தல் முதலான அழகுகள் இந்நூலில் இனிதாக அமைவனவாயின.
>
> ஒவ்வோரதிகாரத்தையும் பப்பத்துக் குறட்பாவாகக் கூறு வதனுலும் இந்நூலைக் குறளாற் கூறிய எடுத்துக்கொண்ட தனுலும் எழுகின்ற இடர்ப்பாடுகளன்றி, இந்நூலில் வழூஉச் சொற்புணர்த்தல், மயங்கவைத்தல், வெற்றெனத் தொடுத்தல், சென்று தேய்ந்திறுதல், நின்று பயனின்மை முதலான குற்றங்கள் பலமுறை தேடித்துருவிப் பார்த்த விடத்தும் காணப்படுவதில்லை.[8]

என்பது அவருடைய மதிப்புரையாகும். இக்கருத்துரையும் இலக்கிய இயல்புகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது திருக்குறள் என்ற உண்மையை உணர்த்துகிறது.

## திருக்குறளும் இலக்கிய இயல்புகளும்

மனித வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை அல்லது மனித வாழ்க்கை உணர்த்தும் உண்மைகளைக் கவிஞன் அப்படியே பிறருக்கு எடுத்தியம்புவதில்லை. அவற்றைத் தான் உணர்ந்தவாறு அவன் பிறருக்கு உணர்த்த முயலுகிருன். தான் உணர்ந்தவாறு உணர்த்த முயலுகின்றபொழுது அதற்கு அவன் கலைவடிவம் கொடுக்கின்ருன். அதில் அவனுடைய அனுபவம், உணர்ச்சி, கற்பனை, கலையழகு முதலியவற்றைக் குழைத்துத் தருகின்ருன். அதனுல், அவனுடைய படைப்பு ஏற்றமும் எழிலும் பெற்றுக் கற்பவர் உள்ளத்தைக் கவருந் திறனுடையதாகத் திகழ்கிறது.

### உணர்ச்சியும் கற்பனையும்

திருவள்ளுவர் மனித வாழ்க்கையைப் பல்வேறு கோணங்களில் கூர்ந்து நோக்கியுள்ளார். மனித வாழ்க்கையில் நாள்தோறும் நிகழும் நிகழ்ச்சிகளுள் பல அவ

ருடைய கருத்தைக் கவர்ந்திருக்கின்றன; சில அவருடைய உள்ளத்தை நெகிழச் செய்திருக்கின்றன. உள்ளம் நெகிழ்ந்த போதெல்லாம் அவர் உணர்ச்சிவயப்பட்டவராகத் தோன்றுகிறார். இதைப்போன்றே, மனித வாழ்க்கை உணர்த்தும் உண்மைகளைத் தாம் உணர்ந்தவாறு உலகிற்கு உணர்த்துகின்ற பொழுதும் வள்ளுவரின் உள்ளம் உணர்ச்சிக் கடலினுள் மூழ்கித் திளைக்கின்றது. இந்நிலையில் அவற்றை அவர் உணர்த்தும் முறையே தனிச் சிறப்பு வாய்ந்ததாகவும், நவில்தொறும் நூல்நயம் பயப்பதாகவும் அமைந்துவிடுகிறது.

உலகில் பொருள் இல்லாது வறுமையால் வாடுகின்றவர் பலராக இருப்பதையும், பொருள் உடையார் சிலராக இருப்பதையும் வள்ளுவர் கண்டார். பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளின் ஆற்றலைக் கண்டு அவர் வியப்படைகிறார். பொருளற்றவர்கள் 'வாழ்வில் வளம் பெறுவதற்கு வழியென்ன?' என்பதைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து, உள்ள ஊக்கத்தோடு கடுமையாக உழைப்பதே அதற்குரிய வழியென்றும் அவர் அறிவிக்கிறார். ஆள்வினையுடைமையே வறுமையைப் போக்குவதற்குரிய வழியாக அவர் கருதுகிறார். அன்றைய தொழில்களுள் உழவுத் தொழிலே தலைசிறந்ததாக இருந்தமையால் அதைச் செய்யுமாறு அவர், அனைவரையும் வேண்டுகின்றார். இதற்கு இடையே அவர் வறுமையால் வாடுகின்றவர் இரத்தலைக் காணுகின்றார். இரத்தல் மிகவும் கொடிய செயல் என்பதை அவர் உணர்ந்துள்ளார். அதனால் அவருடைய உள்ளம் நைந்து உருகுகிறது. ஆனால், அதைவிட மிகக் கொடிய செயலை அவர் காண நேர்கிறது. அப்பொழுது அவருடைய இதயத்துடிப்பு நின்றுவிடும் நிலை உண்டாகிறது. அதைச் சொற்களில் அவர் வடித்துத் தருகிறார் :

> இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
> உள்ளதூஉம் இன்றிக் கெடும் (குறள் 1069)

இக்குறளின் பொருளை உணர்ந்து நாம் இக்குறட்பாவைப் படிப்போமானால் வள்ளுவர் பெற்ற அனுபவத்தை நாமும் பெறமுடியும். "இரத்தலின் கொடுமையை நினைத்

தால் உள்ளம் கரைந்து உருகும்; தம்மிடம் உள்ள பொருளே மறைத்து ஒளிப்பவரின் கொடுமையை நினைத்தால் உள்ளம் உருகாது அழிந்தே போய்விடும்'' என்று வள்ளுவர் உணர்த்தும்முறை கற்பவர் உள்ளத்தைக் கவருவதாகும்.

இன்றும் உலகில் இக்காட்சியை நாம் காணுகின்ருேம். ஆனல், நம்மில் பலர் அதைப் பற்றிக் கவலேப்படுவதே இல்லே. மனித இனத்தின் நல்வாழ்வில் நாட்டம் கொண்ட அருளுள்ளம் வாய்ந்த ஒரு சிலரே அக்காட்சியைக் கண்டு மனம் கலங்குகின்றனர். அவர்களேப் போன்றே அன்று வள்ளுவர் மனம் நைந்து உருகினர். தம் உள்ளத் தெழுந்த உணர்ச்சிகளேத் தாம் உணர்ந்தவாறு இக்குறட் பாவின் மூலம் உலகிற்கு அவர் உணர்த்தினர். இவ்வாறு உலகத்து நிகழ்ச்சிகளேத் தாம் உணர்ந்தவாறு கற்பனே கலவாமல் வள்ளுவர் எடுத்துரைத்துள்ள கருத்துக்கள் பல.[9] அவற்றில் பேரீடுபாடு கொண்டிருந்தமையால் அவர் உணர்ச்சிப் பெருக்குடன் சொற்சித்திரங்களாக அவற்றைத் தீட்டியுள்ளார்.

இவ்வாறு உணர்ச்சியோடு கருத்துக்களே எடுத் துரைக்கின்ற பொழுது, பல விடங்களில் தம் உள்ளத்து உணர்ச்சிகளேக் 'கற்பனே' என்ற வண்ணத்தில் அவர் குழைத்தும் தந்துள்ளார். சான்ருகப் பின்வரும் குறளேக் காட்டலாம்:

> வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
> மிச்சில் மிசைவான் புலம். (குறள் 85)

இல்லறத்தை நாளும் நல்லறமாகப் போற்றி வாழு கின்றவன் 'விருந்தினரை முன்னே போற்றி உணவளித்து மிஞ்சிய உணவை உண்டு வாழ்வான். அவனுடைய நிலத்தில் விதையும் விதைக்க வேண்டுமோ?' என்பது வள்ளுவருடைய வினு. ஒருவன் நிலத்தை உழுது, விதை விதைத்து, நீர்ப்பாய்ச்சி, களேயெடுத்துக் கருத்தோடு காத்துவந்தால்தான் அவனுடைய நிலத்தில் பயிர் செழித்து வளரும். இதற்கு மூலகாரணமாக இருப்பது விதைகளே விதைப்பதாகும். வள்ளுவர் விருந்தினரைப் போற்றி வாழு கின்றவன் தன்னுடைய நிலத்தில் 'விதைகளேக் கொண்டு

போய் விதைக்கவேண்டுமோ?' என்ற கேள்வியை எழுப்பி, விதைக்கவேண்டாம்' என்ற பொருளை ஓகார ஒலிநயத்தால் உணர்த்துகிறார்.

'அவ்வாறானால் அவனுடைய நிலம் எவ்வாறு விளையும்?' என்ற ஐயம் நமக்கு உண்டாகலாம். தம் வாழ்நாளில் இல்லறத்தில் சிறந்துவிளங்கும் பல வள்ளல்களை வள்ளுவர் கண்டிருக்கிறார். வருகின்ற விருந்தினரை வரவேற்றுப் போற்றிப் பாராட்டுவதிலேயே அவர்களுடைய உழைப்பும், நேரமும் கழிந்துவிடுவதைக் கண்ட வள்ளுவருக்கு, அவர்களுடைய தொழிலைச் செய்வதற்குக் கூட நேரமில்லாமல் அவர்கள் விருந்தோம்புவதைக் கண்ட வள்ளுவருக்கு, ஓர் உண்மை புலனாயிற்று. விருந்தோம்புகின்றவர் தம்நிலத்தைத் தாங்களே உழுது பயிரிடுவதில்லை. விருந்தினராக வருகின்றவரே நன்றிக் கடனாகக்கருதி விருந்து ஓம்புகின்றவருடைய நிலங்களை உழுது பயிரிடுவதை வள்ளுவர் அறிந்தார். அது அவருக்கு வியப்பையும் விம்மிதத்தையும் ஊட்டியது. அவர் மனக்கண் முன்னால் பயன் கருதாது விருந்தோம்புகின்றவரும், அவர்களுடைய நிலங்களை உழுது பயிரிடுகின்ற விருந்தினரும் மாறிமாறிக் காட்சியளித்தனர். அந்நிலையில் தாம் உணர்ந்த உண்மையைச் சிறிது கலையுணர்வோடு அவர் புனைந்துரைக்கின்றார். அப்புனைந்துரைதான் 'வித்துமிடல்வேண்டுங் கொல்லோ?' என்னும் வினாவாகும். வள்ளுவர் இவ்வுண்மையைக் கற்பனை என்ற திரையால் மறைத்துக் கற்பவருடைய சிந்தனையைத் தூண்டும் வகையில், கலைநயந்தோன்ற விருந்து ஓம்புகின்றவருடைய வாழ்க்கையின் உண்மைநிலையை இக்குறளில் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

தாம் உணர்ந்த கருத்தை உணர்ச்சியோடு புலவன் எடுத்தியம்புவது ஒருமுறை. அதைக் கற்பனை மெருகிட்டுக் கூறுவது மற்றொரு முறை. அவை இரண்டையும் ஒன்றாக இணைத்து இலக்கிய நயம் இனிது புலனாகுமாறு எடுத்தியம்புவது சிறந்த முறையாகும். அம்முறையை இக்குறட்பாவில் மட்டும் அல்லாமல், வேறு பல குறட்பாக்களிலும் வள்ளுவர் பயன்படுத்தியுள்ளதை நாம் காணலாம்.[10]

இத்தகைய இருவகை இயல்புகளும் ஒருங்கே அமைந்த குறட்பாக்கள் காமத்துப்பால் முழுவதிலும் உள்ளன. அவற்றுள் உணர்ச்சியும் கற்பனையும் ஒன்றாக இணைந்து காணப்பெறுகின்றன.

தலைவியைக் கண்டு, அவள் குறிப்பை அறிந்து அவளோடு தலைவன் கூடி இன்புற்றான். அம்மெல்லிய லாளின் நலத்தை எல்லாம் புனைந்துரைத்து அவன் மகிழ் கிறான். அவளுடைய அழகினை மனக்கண்ணால் கண்டு அவன் இன்புறுகிறான். அவளுடைய எழிலுக்கு இணையாக உலகில் எப்பொருளும் இல்லை என்று அவன் நினைக் கின்றான். 'மதிபோன்ற முகம்' என்று சொல்லுவது உண்மை அறியாதார் கூற்று என்று அவனுடைய உள்ளம் நினைக்கிறது. மதிக்கு மறுவுண்டு; தன் காதலியின் முகத் திற்கு அக்குறை கிடையாது என்பது அவனுடைய நம் பிக்கை. அதனால்,

*மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்*
*காதலை; வாழி மதி!* (குறள் 1118)

என்று தலைவன் மதியை எள்ளி நகையாடுகிறான்.

"திங்களே! நீ வாழ்க! இம்மெல்லியலாள் முகத்தைப் போல நான் மகிழுமாறு ஒளிவீச உன்னால் முடியுமானால், நீயும் என்னுடைய காதலுக்கு உரியை யாவாய்! உன்னால் அது முடியாதென்பதை நான் நன்கு அறிவேன். எனவே, உன்னை நான் காதலிக்கப் போவதில்லை!" என்று அவன் மதியை நையாண்டி செய்வது நவில்தொறும் நூல்நயம் பயப்பதாகும்.

மேலும், அதை

*மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்*
*பலர்காணத் தோன்றல் மதி* (குறள் 1119)

என்று அவன் வேண்டுகின்றான்.

"மதியே! மலர் போலும் கண்ணினையுடைய என் காதலியின் முகத்தைப் போன்று பொலிவுற்று விளங்க வேண்டுமானால், பலரும் காணுமாறு தோன்றாதே! எல்லா

ரும் காணுமாறு வெளித் தோன்றுவாயானல் நீ என்னு டைய காதலியின் முகத்திற்கு ஒப்பாகமாட்டாய்! என் காதலி முகம் எனக்கே இன்பம் தரும்; நீ எல்லாருக்கும் ஒரே வகையாகத் தோன்றுவதால், உன் முகம் யான் காத லிக்கும் பெண்ணின் முகத்தைக் காட்டிலும் குறையுடைய ஒன்றே; என் காதலியின் இன்முகத்தைப் போன்ற சிறப் பினையடையவேண்டும் என்ற எண்ணம் இருக்குமானல் நீ எனக்கு மட்டும் உன் அழகைக் காட்டு" என்று தலைவன் கூறுகிருன். இதனல், அவனுடைய உள்ளத்தின் நுட்ப மான உணர்ச்சிகளை நாம் உணரமுடிகிறது. இத்தகைய குறட்பாக்களில் இன்பச்சுவையும் கற்பனை நயமும் இரண் டறக் கலந்துள்ளன. அதனல், கலையழகு பெற்றனவாக இவை விளங்குகின்றன.

## அணிநலன்

தான் உணர்த்த விரும்பும் கருத்துக்களை உவமை வாயிலாகவும், வேறு பிற அணிகளின் உதவியாலும் கற்பவர் உள்ளத்தைக் கவரும் வகையில் புலவன் அழகு படுத்திக் கூறுவது இயற்கை. கருத்துக்களுக்குக் கலை மெருகு கொடுக்கும் இவ்விலக்கியத் திறன் வள்ளுவருடைய திருக்குறளில் மிகுதியாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. உவமையின் பல்வேறு இயல்புகளையும் நுட்பமாக உணர்ந்து, அதைச் செம்மையாக இருநூற்று ஐம்பது குறட்பாக்களில் வள்ளுவர் பயன்படுத்தியுள்ளார். அவற் றுள் எடுத்துக்காட்டு உவமையும், பிறிதுமொழிதலும், தற்குறிப் பேற்றமும் சிறப்பிடம் பெறுகின்றன. உள்ளதை உள்ளபடி கூருமல், தான் அதை உணர்ந்தவாறு கவிஞன் கூறுவதற்கு இவ்வணிகள் உறுதுணையாக உள்ளன.

நட்பின் இயல்புகளை விளக்கும் அதிகாரத்தில்,

> உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
> இடுக்கண் களைவதாம் நட்பு (குறள் 788)

என்ற குறட்பா இடம் பெற்றிருக்கிறது. இதற்கு "ஆடையைப் பறிகொடுத்தவனுடைய கை அவனைக் கேளாமலேயே விரைந்து சென்று, மூடி மறைத்து மானங்

காத்தலைப் போல, நண்பனது துன்பங்களையும் அவன் கேட்கும் முன்னே விரைந்துசென்று போக்குவதே நட்பிற்குச் சிறப்பு" என்பது பொருளாகும்.

'உடுக்கை இழந்தவன் கைபோல' என்ற உவமை நட்பின் திறத்தை நயம்பட எடுத்துரைக்கிறது. ஒரு மனிதன் தான் உடுத்தியிருக்கும் உடை (உடுக்கை) உடலை விட்டு நழுவியபோது, தன் கைகளைப் பார்த்து 'அவ்வுடையைப் பிடித்துச் சரிப்படுத்து' என்று கட்டளையிடுவதில்லை. அவனை அறியாமலேயே கைகள் விரைந்து சென்று, நழுவிய ஆடையைப் பிடித்து இடையில் கட்டி விடுகின்றன. இயல்பூக்கத்தால் நடைபெறுகின்ற செயலென்று நாம் இதைக் குறிப்பிடலாம். இதைப்போன்று, 'நண்பனுக்கு இடையூறு ஏற்பட்டபொழுது அவன் தன்னை வேண்டவேண்டும் என்று எதிர்பாராமல், தானே வலியச் சென்று அவனது இடர்ப்பாட்டைப் போக்கி, உதவி செய்யவேண்டும் என்பதே இவ்வுவமை உணர்த்துகின்ற உண்மையாகும்.

இச்செய்யுளில் வினையுவமம் என்ற உவமையணி அமைந்துள்ளது. இதைப்போன்று கருத்துக்களை நயந் தோன்ற விளக்குவதற்கு வள்ளுவர் உவமையணிகள் பலவற்றைப் பயன்படுத்தியுள்ளார்.[11]

பிறிதுமொழிதல் என்னும் அணியும் திருக்குறளில் பல இடங்களில் கையாளப் பெற்றுள்ளன. புலவன் தான் கருதுகின்ற பொருளை மறைத்து, அதை வேறொரு முறையில் வெளிப்படுத்தினால், அதைப் 'பிறிதுமொழிதல் அணி' என்பர். அதற்கு நேரடியாகக் கருத்தைச் சொல்லாமல் சுற்றிவளைத்துக் கூறுதல் என்பது பொருளாகும். இதன் மூலம் ஆசிரியன் தான் கூறவிரும்பும் கருத்தின் சிறப்பை, அழுத்தம் திருத்தமாக எடுத்துரைக்க முயலுகிறான். இவ்வணி எட்டு இடங்களில் வள்ளுவரால் பயன் படுத்தப் பெற்றிருக்கிறது.

அவற்றுள்,

> பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
> சால மிகுத்துப் பெயின் (குறள் 475)

என்பது ஒன்று.

பஞ்சுபோல் மிக மென்மையானது மயில்தோகை. வண்டியினுடைய அச்சு மிகுந்த வலிமையும் உறுதியும் உடையது. எனினும், அந்த அச்சும் ஒரு குறிப்பிட்ட அளவிற்குத்தான் பாரத்தைச் சுமக்கமுடியும். மிக மென்மையான மயிலிறகைக் கட்டுக்கட்டாகக் கட்டி அளவுக்குமேல் வண்டியில் ஏற்றினல், அச்சுமையைத் தாங்கமுடியாமல் வண்டியின் வலிய அச்சுக்கூட முறிந்து விடும் என்பது இக்குறட்பாவின் கருத்தாகும்.

இதனல், வள்ளுவர் உணர்த்த விரும்புது வலிமை வாய்ந்த ஒருவன் வலிமையற்ற எளிய பலரைப் பகைத்துக் கொள்ளுதல் கூடாது என்பதாகும். அவ்வலிமையற்ற எளிய பகைவர் பலரும் ஒன்ருகச் சேர்ந்தால், அவர்கள் தங்களுடைய வலிய பகைவனை எளிதில் வென்றுவிடுவர் என்பதே இதனுடைய பொருளாகும். இக்குறட்பாவில், உவமானம் மட்டும் இடம்பெற்றிருக்கிறது; உவமேயம் குறிப்பிடப்படவில்லை. புலவன் தான் உணர்த்தக் கருதிய கருத்தைப் பிறிது ஒருபொருளை உவமானமாகக் கூறுவ தன்மூலம் எடுத்துரைப்பது 'பிறிதுமொழிதல் அணி' யாகும். வள்ளுவர் 'வலியறிதல்' என்ற அதிகாரத்தில் இக்குறட்பாவினை அமைத்துள்ளார். அதனல், அரசன் தன்னுடைய ஆற்றலை நன்கு அறிவதோடு, பிறருடைய ஆற்றலையும் நன்குணர்ந்து விழிப்புணர்ச்சியோடு நடந்து கொள்ளவேண்டும் என்பதை அறிவுறுத்துவதே வள்ளு வரின் நோக்கம் என்பது தெரிகிறது. அந்நோக்கத்தை வெளிப்படையாகச் சுட்டிக்காட்டாமல் ஒரு பொருளின் இயல்பைக் கூறி, அதன் மூலம் தம்முடைய கருத்தை அவர் புலப்படுத்துகின்ருர்.

இனி, உவமைகளை அமைக்கமுடியாத இடங்களிலும் தாம் உணர்த்த விரும்பும் பொருளின் சிறப்பை வலியுறுத்த விரும்பும் இடங்களிலும் உருவகம், ஏகதேச உருவகம் என்ற அணிகளை வள்ளுவர் அமைத்துள்ளார். புலவன் தான் உணர்த்த விரும்பும் கருத்தினை நயமுறச் சொல்லு வதற்குரிய கருவி உருவகம். அது செவிக்கு இனிமை பயப்பதோடு, சொல்லாலும் பொருளாலும் கருத்தினை அழகுபடுத்திக் காட்டுகிறது. உவமையையும் பொருளை

யும் வேற்றுமையின்றி ஒன்ருகவே கொண்டு செய்யுள் இயற்றுவது உருவகம் என்னும் அணியாகும். அதன் வகையாகக் கூறப்பெறுவது 'ஏகதேச உருவகம்' என்பதாகும். புலவன் தான் கூறுகின்ற எல்லாப் பொருள்களையும் உருவகப்படுத்தியுரைக்காது, ஒரு பகுதியை மட்டும் உருவகம் செய்து மற்ருெரு பகுதியை உருவகப்படுத்தாமல் விடுவது 'ஏகதேச உருவகம்' என்பர்.

மனிதனுடைய முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள மனிதப் பண்புகள் பல. அவற்றுள் சினம் என்பது ஒன்று. இல்லறத்தில் வாழுகின்றவனிடத்தில் அத்தீய பண்பு இருக்குமாஞல் அவன் வாழ்க்கையில் பெரிதும் இடர்ப்படுவான். அப்பண்பு துறவிகளிடத்தில் இருக்குமாஞல் அவர்கள் அரும்பாடுபட்டுத் தவம் பல செய்துபெற்ற ஆன்மிக ஆற்றல் அடியோடு அழிந்து போய்விடும். இதை வள்ளுவர் அறிவிக்குந்திறன் சொல்நயமும் பொருள் நயமும் ஒருங்கே அமைந்து செஞ்சொல் கவியின்பம் பயக்கிறது.

சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும். (குறள் 306)

"நெருப்பு தன்னைச் சேர்ந்த பொருளை அழிக்கும் இயல்புடையது. சினமாகிய நெருப்பு தன்னைச் சேர்ந்தவரை அழிப்பதோடு நிற்பதில்லை. அவருக்குற்ற துணையாக உள்ள உற்ருர் உறவினராகிய தெப்பத்தையும் சுட்டுப் பொசுக்கிவிடும்" என்பது இப்பாடலின் கருத்தாகும்.

இங்கு ஆசிரியர் சினத்தைச் 'சேர்ந்தாரைக் கொல்லி' என்று உருவகப்படுத்திக் கூறுகிருர். உலகத்தில் சிறப்பித்துப் பேசப்பெறும் நெருப்பு தன்னைச்சார்ந்த பொருள்களையே சுடும். ஆஞல், 'சினம்' என்ற தீ, தன்னைச் சாராதவரையும் சுட்டுப்பொசுக்கும் என்ற உண்மையும் உணர்த்தப் பெறுகிறது. ஒருவனுக்குப் பாதுகாவலாக இருக்கக்கூடியவர்கள் அவனுடைய உற்ருர் உறவினர்கள். அவர்களை வள்ளுவர் 'பாதுகாவலாகிய தெப்பம்' (ஏமப் புணை) என்று உருவகப்படுத்திக் காட்டுகிருர். இதஞல், தீயைக்காட்டிலும் சினம் கொடுமையானது; அழிக்குந் திறன் மிக்கது என்னும் கருத்துத் தெளிவாக உணர்த்தப்

பெறுகிறது. இவையல்லாமல் வேற்றுமையணி, காட்சி யணி, ஐயவணி, ஏதுவணி, தற்குறிப்பேற்றவணி, வஞ்சப் புகழ்ச்சியணி, வேற்றுப்பொருள் வைப்பணி போன்ற பல அணிகளையும் வள்ளுவர் திருக்குறளில் பயன்படுத்தி யுள்ளார்.[12]

## செஞ்சொற் கவியின்பம்

இத்தகைய அணிகளை மட்டும் அல்லாமல் வேறு பல இலக்கியத் திறன்களையும் வள்ளுவர் பயன்படுத்தத் தவற வில்லை. அவற்றுள், ஒரு நீதியை விளக்குமிடத்தில் தாம் வற்புறுத்திக் கூற விரும்பும் மற்றொரு நீதியை உவமான மாக ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ளமை கற்பவர் சிந்தனையைத் தூண்டுவதாகும்.

*அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை*
*ஒழுக்க மிலான்கண் உயர்வு* (குறள் 135)

*இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்*
*வன்மை மடவார்ப் பொறை* (குறள் 153)

*கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை*
*சொல்லா நலத்தது சால்பு* (குறள் 984)

என்பனவற்றைப் போன்ற குறட்பாக்கள் சிலவற்றை இதற்கு நாம் சான்றாகக் காட்டலாம்.

இவ்வாறு வள்ளுவர் பல்வேறு கருத்துக்களை விளக்கு வதற்குப் பலவகையான முறைகளைக் கையாண்டு கற்பவர் உள்ளத்தில் அவற்றை ஆழப்பதிய வைக்கின்றார். அவற் றுடன் சொற்களை எடுத்தாளும் முறையிலும் ஆசிரியர் சில நயமிக்க முறைகளைப் பயன்படுத்தியுள்ளார். ஒரே வொலி திரும்பத் திரும்பக் கேட்குமாறு செய்வது ஒரு முறை. இதைப் பெரிதும் குறிப்பிட்ட ஒரு சொல் ஒரே பொருளில் திரும்பத் திரும்ப வருமாறு சிறந்த முறையில் பொருத்தமான வகையில் வள்ளுவர் அமைத்துப் பாடி யுள்ளதால் நாம் அறிகிறோம்.

*தீயவை தீய பயத்தலால் தீயவை*
*தீயினும் அஞ்சப் படும்* (குறள் 202)

*பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு* (குறள் 350)

இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது (குறள் 1041)

இவ்வாறு ஒரே சொல் திரும்பத்திரும்ப ஒரே பொருளில் வருமாறு பாட்டியற்றினால், அதைச் 'சொற் பின் வருநிலை யணி'ச் செய்யுள் என்பர். இவற்றைப் போன்று ஒலிநயமும் பொருட்சிறப்பும் பயக்கும் குறட் பாக்கள் திருக்குறளில் பல உள்ளன.

மற்றும், ஏறக்குறைய ஒரே வகையான ஒலியுடைய சொற்கள் வெவ்வேறு பொருளை உணர்த்தும் முறையில் வள்ளுவர் இயற்றியுள்ள குறட்பாக்கள் சிலவற்றை இங்கு நாம் குறிப்பிடலாம்.

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு (குறள் 739)

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின் (குறள் 965)

ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின் (குறள் 225)

இத்தகைய குறட்பாக்களில் சொல்விளையாட்டுப் பொருளாழம் மிக்கதாக அமைந்திருக்கிறது. இவ்வாறு இயற்றப் பெறும் செய்யுட்களைச் 'சொற்பொருள் பின் வரு நிலையணி' என்பர். இவ்வணிகளால் தாம் கூறும் கருத்துக்களை ஆசிரியர், கேட்பவர் அல்லது கற்பவர் உள்ளத்தில் ஆழப்பதியுமாறு செய்வதற்கு முயன் றுள்ளதை நாம் காணுகின்றோம்.

### சுவையுணர்வு

இலக்கியம் உணர்ச்சியைத்தூண்டி இன்பம் பயப்பது என்பதை நாம் முன்னர்க் கண்டோம். உணர்ச்சியைத் தூண்டுவதனால் உணர்த்தப் பெறும் சுவைகளைத் தமிழ்ச் சான்றோர் எட்டாக வகைப்படுத்தி யுள்ளனர். அவை,

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை
(தொல். பொருள். 251)

என்ற மெய்ப்பாடுகளால் தோன்றுவனவாகும். கவிதைக்கு

இச்சுவைகள் இன்றியமையாதன. இச்சுவைகளே கற்பவரின் உள்ளத்தைக் கவர்ந்து இன்பம் பயக்கும். இதனுல் தான் வடமொழி இலக்கண நூலார் 'இன்பம் பயக்கும் வகையில் இயலுந்தொடர் இலக்கியம்' என்று சுவைகளைப் போற்றுகின்றனர்.

திருக்குறளில் எண்வகைச் சுவைகளும் ஏற்ற வகையில் இணைந்தும் இழைந்தும் காணப்பெறுகின்றன. நகைச் சுவைக்கு நல்லதோர் எடுத்துக் காட்டாகப் பின் வரும் குறட்பாவைக் கூறலாம்:

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில். (குறள் 1071)

கயவர் என்பவர் வடிவத்தால் முழுவதும் மக்களையே ஒத்திருப்பர். அவர்கள் மக்களை ஒத்திருப்பது போன்ற ஒப்புமை வேறு எவற்றிடமும் யாம் கண்டதில்லை என்பது வள்ளுவர் கருத்து. பிறரால் வெறுத்தொதுக்கத்தக்க இழிந்த பண்புகளைக் கயவர்கள் பெற்றிருக்கின்றனர். அவர்கள் உடல் அமைப்பாலும் உறுப்புக்களின் நலத் தாலும் பிறமக்களைப் போன்றே தோற்றம் அளிக்கின்றனர். ஆனுல், அவர்கள் உள்ளத்து உணர்ச்சியாலும், பண்பு நலனுலும் மக்களிலிருந்து வேறுபட்டவராக விளங்கு கின்றனர். எனவே, அவர்களை மக்கள் என்று சொல்லு வதினும் மாக்கள் என்று கூறுவதே சாலவும் பொருந்தும். மக்கள் என்று கருதுவதற்குரிய மனிதப் பண்புகள் ஒன்றும் அவர்களிடம் இல்லை. உடலால் மனிதர்களைப் போன்று இருந்தாலும் உள்ளவுணர்ச்சிகளால் அவர்கள் மனிதரல்லர். எனவே, நாம் அவர்களை மனிதரென்று சொல்லுவது தவறு என்ற பொருளை வள்ளுவர் குறிப் பாக உணர்த்துகின்ருர்.

அழுகை என்பது அவலச் சுவையாகும். இக்காலத்தில் நாம் இதைச் 'சோகம்' என்று வழங்குகிருேம். ஆற்ருெணுத் துன்பத்தால் ஒருவனுடைய உள்ளமும் உடலும் சோர்ந்து வருந்தும் வருத்தமே இச்சுவைக்குரிய பொருளாகும்.

ஒருவன் தன் குடும்பத்திற்கு உண்டான வறுமைத் துன்பத்தைப் போக்க அல்லும் பகலும் அயராது பாடு

படுகிறுன். தனக்கென்று எத்தகைய இன்பத்தையும் அவன் அடைய முயலுவதில்லை. அவன் படும் அல்லல் களைக் கண்ட ஆசிரியருக்கு அவனிடத்துப் பரிவு உண்டா கிறது.

> இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்
> குற்றம் மறைப்பான் உடம்பு (குறள் 1029)

என்று அவனைக் கண்டு ஆசிரியர் வருந்துகிறுர்.

"தன் குடும்பத்துக்கு நேரக்கூடிய வறுமையாகிய குற்றத்தை வரவொட்டாமல் தடுத்து, அதனுல் நேரும் துன்பங்களையெல்லாம் தாங்கிக் கொள்ளும் ஒருவனுடைய உடம்பு துன்பத்துக்கே இருப்பிடமானதோ?" என்பது ஆசிரியருடைய வினு. இப்பாடலிலுள்ள 'கொல், ஓ' என்னும் சொற்கள் இரக்கக் குறிப்பை உணர்த்துவன வாகும்.

இளிவரல் என்பது இழிவு உணர்ச்சி. வறுமையின் கொடுமையைச் சித்திரிக்கும் 'நல்குரவு' என்ற அதிகாரத் தில் வள்ளுவர் இப்பண்பினைச் சிறப்பாகப் பயன்படுத்தி யுள்ளார். 'நல்ல குடியில் பிறந்தவரிடத்திலும் வறுமை யானது இழிவான சொல் பிறப்பதற்குக் காரணமான சோர்வினை உண்டாக்கிவிடும்' என்ற கருத்தமைய,

> இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
> சொற்பிறக்கும் சோர்வு தரும். (குறள் 1044)

என்று ஆசிரியர் குறிப்பிடுகிறுர்.

இக்குறட்பாவிலுள்ள 'இளிவந்த சொல்' என்ற தொடரின் பொருளை நாம் கூர்ந்து நோக்குவோமானுல், "இழிவான சொல் பிறப்பதால் அக்குடியைச் சேர்ந்தவர் இழிந்தவராகக் கருதப்பெறுவர்" என்ற குறிப்புப்பொருள் அதில் அமைந்திருப்பது புலனுகும்.

மருட்கை என்னும் சுவைக்கு வியப்பு என்பது பொருளாகும். புதியனவற்றையும், பெருமை மிக்கன வற்றையும், மிகச் சிறுமையானவற்றையும், ஒருபொருள் பிறிதொரு பொருளாகத் திரிவதையும் காணுகின்ற

பொழுது மனிதனுக்கு மருட்கை உண்டாகும். இவற்றுள், மிகச் சிறிய பொருள் ஒன்றைக் காண்பதால் உண்டாகும் மருட்கைக்குக் காட்டாகப் பின்வரும் குறட்பாவை நாம் குறிப்பிடலாம் :

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை உள்ளதாங் கேடு. (குறள் 889)

ஒருவனுக்கு உண்டாகும் உட்பகையானது எள்ளின் பிளவு போன்று மிகச் சிறியதாக இருந்தாலும், அது ஒரு குடியை அழிக்கவல்ல ஆற்றல் உடையதாகும் என்பது இதன் கருத்தாகும். எள்ளின் பிளவு மிகமிகச் சிறியது. அத்துணைச்சிறிய அளவிற்கு உட்பகை தோன்றினாலும் அது பேரும் புகழும் வாய்ந்த பெரியதொரு குடும்பத்தையும் அரசையும் அழித்துவிடும் என்ற கருத்து நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது.

அச்சம் என்பது மனிதனிடத்து இயல்பாக உள்ள இயல்பூக்கங்களில் ஒன்று. பேய் பிசாசுகளால் மனிதன் அடைகின்ற அச்சத்தையோ, கொடிய விலங்குகளாலும் கள்வர்களாலும் உண்டாகும் அச்சத்தையோ, கொடுங் கோல் மன்னனால் ஏற்படும் அச்சத்தையோ வள்ளுவர் குறிப்பிடவில்லை. இவை எல்லாவற்றையும்விட மனித இனம் கண்டு நாளும் அஞ்சி நடுங்குகின்ற ஒன்றை அவர் குறிப்பிடுகிறார். அன்றாட வயிற்றுப் பிழைப்பிற்காக அல்லற்பட்டு, ஆற்றாது வறுமையால் வாடிக் கண்ணீர் விட்டுக் கதறியழும் மனிதன் வறுமையைக் கண்டு அஞ்சி யோடுகிறான். ஏன்? அது இறத்தலைக் காட்டிலும் இன்னாதது ; இறப்பு ஒருவனைச் சிறிது நேரத்தில் கொன்றுவிட்டு அமைதியடையச் செய்கிறது. வறுமையோ மனிதனை அணுவணுவாகச் சாகடிக்கிறது. அதனால் அவன் துடிதுடிக்கின்றான் ; செய்வது அறியாது மனம் கலங்கிக் கண்ணீர்விட்டுக் கதறுகிறான்.

இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு. (குறள் 1043)

என்பது வறுமையால் வாடும் ஒரு மனிதனுடைய கூற்றாக அமைக்கப்பட்டுள்ள குறட்பாவாகும்.

"நேற்று என்னைக் கொலை செய்வது போல் வந்து துன்புறுத்திய வறுமையானது இன்றைக்கும் என்னிடம் வந்துசேருமோ? வந்தால் நான் இனி யாது செய்வேன்?" என்பது அம்மனிதனுடைய அச்சமாகும் இக்குறளிலுள்ள 'கொல், ஓ' என்னும் சொற்கள் இரண்டும் அச்சக்குறிப்பைத் தருகின்றன.

பெருமிதம் என்ற மெய்ப்பாட்டின்வழி உண்டாவது வீரச்சுவை. எல்லாரோடும் ஒப்பநில்லாது அவர்களுக்கெல்லாம் பேரெல்லையாக நிற்றலே பெருமிதமாகும். படைச் செருக்கு என்ற அதிகாரத்தில் வீரச்சுவைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகப் பல குறட்பாக்கள் உள்ளன. அஞ்சா நெஞ்சமும் வீரவுணர்வும் கொண்ட போர்வீரர்களுடைய மனநிலையைச் சொற்களில் அவை வடித்துத் தருகின்றன. அவற்றுள்,

> கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
> மெய்வேல் பறியா நகும். (குறள் 774)

என்னும் குறட்பாவை நாம் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

பேராற்றலும் பெருந்திறனும் வாய்ந்த போர்வீரன் ஒருவன், எதிர்த்துவந்த யானையைத் தன் கையில் பிடித்திருந்த ஒரே வேலால் குறிவைத்து அடித்து வீழ்த்தினன். அதனால், கையிலிருந்த வேலையும் அவன் இழந்தான். பகைவரை அழித்து வாகை சூடுவதையே குறிக்கோளாகக் கொண்டிருந்ததால், தன்மேல் பாய்ந்த அம்பையும் அவன் அறிந்தானில்லை. அச்சமயத்தில் மற்றொரு யானை அவனைத் தாக்கப் பாய்ந்து வருவதை அவன் கண்டான். மனச்சோர்வு அடையாமல் தன் மார்பகத்துப் பாய்ந்து கிடந்த அம்பைப் பறித்து அதை யானையின் மீது குறிவைத்து அவன் எய்தான். யானை வீழ்ந்தது. அவன் வெற்றி பெற்றான்.

அவ்வீரனுடைய வெற்றிக்குக் காரணமாக அமைந்தது அவனுடைய அஞ்சா நெஞ்சமேயாகும். 'களிற்றொடு கைவேல் போக்கி வருபவன்' என்பதனால், அவன் தன்னுடைய ஊர்தியாகிய யானையையும் படைக் கருவி

யாகிய வேலையும் இழந்த செய்தியை ஆசிரியர் குறிப்பிடு கிருர். அவன் படையிழந்த பொழுதும் கலங்கா உள்ளத் தோடு வருவதைச் சுட்டுவதன் மூலம் அவனுடைய வீர வுணர்ச்சியை நம் மனக்கண் முன்னுல் கொண்டுவந்து கவிஞர் நிறுத்துகிருர். 'மெய்வேல்' என்ற தொடர் தனக்கு உண்டான இடையூற்றையும் அறியாது போர் செய்தவன் அவ்வீரன் என்பதை அறிவிக்கிறது. 'பறியா' என்பது தாக்குதல் வந்தபோதும் அஞ்சாத அவனுடைய உள்ளவுரத்தை உணர்த்துகிறது.'நகும்' என்ற சொல்லாட்சி யின் மூலம் அந்நிலையிலும் அவன் போரிடுவதற்குப் பின்னிடவில்லை, போர்மேல் ஊக்கம் உடையவனுக அவன் நிற்பதை ஆசிரியர் சொல்லோவியமாகத் தீட்டிக்காட்டு கிருர். இத்தகைய வீரச்சுவை பயக்கும் கருத்தோவி யங்கள் சில இந்நூலில் உள்ளன.

வெகுளி என்பது சீற்றம். வீரத்தின் அடிப்படையிலும் வெகுளி தோன்றுவது உண்டு. தம்மைச் சார்ந்த உற்ருர் உறவினர் முதலியோர்க்கு கேடுண்டாகிறபொழுதும் வெகுளி பிறக்கும். ஒருவனுடைய அறிவும் புகழும் முதலா யினவற்றைக் கொன்றுரைக்கும் பொழுதும் வெகுளி உண்டாகலாம். இவை அல்லாமல் ஒருவனுடைய உடல் உறுப்புக்கள் சிதைக்கப் பெறுகின்ற பொழுதும், அரசன் முதலியோர் துன்புறுத்துகின்ற பொழுதும் ஒருவனுக்குச் சீற்றம் உண்டாவது இயற்கை.

திருவள்ளுவர் இரவலன் ஒருவன் வாயிலாக,

> இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
> கெடுக உலகியற்றி யான் (குறள் 1062)

என்று கடவுளையே சபிக்கின்ருர்.

இறைவனுடைய படைப்பின் நோக்கம் உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் தாம் மேற்கொள்ளுகின்ற முயற்சி யால் மேன்மையடையவேண்டும் என்பதாகும். அவ்வா றல்லாமல் முயற்சியைத் தடுத்து, இழிவை உண்டாக்கும் பிச்சை யெடுப்பதையே தொழிலாகக்கொண்டு உயிர்கள் வாழவேண்டும் என்ற நோக்கத்தோடு இறைவன் உலகைப் படைத்திருக்கமாட்டார். பிச்சையெடுத்து வாழ

நேரிட்டால் உலகப் படைப்பின் நோக்கமே பாழ்பாட்டுப் போய்விடும். ஆனால், உலகில் வறியவர் பலராக இருக்கின்றனர். அவர்களுள் பலர் முயன்று பாடுபட்டுப் பொருள் ஈட்டாமல், இரத்தலையே தொழிலாகக் கொண்டு வாழ்கின்றனர். அவர்களோ தங்களுக்குப் போதிய வாய்ப்பு வசதிகள் இல்லாமையால் இரத்தலைத் தொழிலாகக் கொள்ள நேரிடுகிறது என்று கண்ணீர் வடிக்கின்றனர். அத்தகைய வாழ்க்கையைத்தான் அவர்கள் வாழவேண்டும் என்பது இறைவனின் திருவுள்ளக் குறிப்பாக இருக்குமானால், "அந்த இறைவன் இரவலரைப் போன்று அல்லற்பட்டு ஆற்றாது அழிந்தொழியட்டும்" என்று இறைவனையே ஓர் இரவலன் சபிக்கின்ற முறையில் இக்குறட்பா அமைந்திருக்கிறது. "தன்னைச் சேர்ந்தவர்கள் இத்தகைய கேடுகெட்ட வாழ்க்கைதான் வாழவேண்டுமா?" என்று எண்ணுகின்றபொழுது அந்த இரவலன் உள்ளத்தில் சீற்றம் பொங்கி எழுகிறது. உடனே, இந்த அவலநிலைக்குக் காரணமாக உள்ளவன் இறைவன் என்று அவன் நினைக்கின்றான். எனவே, இறைவனும் அத்துன்பத்தை அனுபவித்து அழியட்டும் என்ற உணர்ச்சிப் பெருக்கில் அவன் சாபமிடுகிறான்.

அறிவும் புகழும் கெட்டு "வறுமையால் வாடித் தவிக்கின்றவர்கள் ஏன் இறந்தொழியக் கூடாது?" என்று வள்ளுவர் சீற்றத்தோடு வினவுகின்ற இடமும் 'வெகுளிக்கு' நல்லதோர் எடுத்துக் காட்டாகும் :

> துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
> உப்பிற்கும் காடிக்கும் கூற்று. (குறள் 1050)

உண்பதற்கு உணவில்லாமலும், இன்பத்தை இழந்தும் வறுமையால் வாடுபவர்—முற்றும் துறக்காமல் (இறக்காமல்) இருப்பது நாட்டிலுள்ள கூழுக்கும் உப்புக்கும் கேடு பயப்பதற்கேயாகும். "பிறப்பின் நலனை அடைய முடியாமலும், கடமையைச் செய்ய முடியாமலும், பிறருக்குச் சுமையாகவும் இருப்பதனால் யாருக்கு என்ன பயன்? அவர்கள் கூழுக்கும் உப்பிற்குமே கூற்றுவனவர்?" என்னும் கருத்து வள்ளுவருடைய சீற்றத்தை நமக்குப் புலப்படுத்துகிறது.

இதுவரை நாம் கண்ட எழுவகைச் சுவைகளும் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் ஆகிய மூவகைப் பால்களிலும் இடம் பெற்றுள்ளன. இனி, எட்டாவதாக நாம் காணப்போகும் மெய்ப்பாடு உவகை என்பதாகும். உவகை என்பது காமம் முதலியவற்றால் உண்டாகும் மன மகிழ்ச்சி. இதனை 'இன்பச் சுவை' என்பர். முப்பாலின் மூன்றாவது பாலாகிய காமத்துப் பாலில் இச்சுவை முதன்மையான இடத்தைப் பெற்றிருக் கிறது. காமத்துப்பாலில் இச்சுவையோடு அவலம், பெரு மிதம், மருட்கை, இளிவரல், அச்சம், நகை போன்ற சுவை களும் இடம்பெற்றுள்ளன.

தலைவனும் தலைவியும் கூடி இன்புற்ற பின்னர், கூடு தலினால் உண்டான இன்பத்தை நினைந்து தலைவன் மகிழ் கின்றான். அவன் அவ்வின்பத்தைச் சிறப்பித்துப் பேசுவ தாகப் 'புணர்ச்சி மகிழ்தல்' என்ற ஓர் அதிகாரத்தையே வள்ளுவர் காமத்துப்பாலில் அமைத்துள்ளார். அவ்வதி காரத்தின் முதல் குறட்பா,

> கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே உள. (குறள் 1101)

என்பதாகும். தலைவியைக் கூடி இன்பம் நுகர்ந்த தலைவன் அவள் ஐம்பொறிகளுக்கும் ஒருங்கே அளித்த இன்பத்தினை எண்ணியெண்ணி வியக்கின்றான். "கண்ணினால் பார்ப் பதும், காதினால் கேட்பதும், நாக்கினால் சுவைப்பதும், மூக்கினால் முகர்வதும், உடலினால் தொட்டு உணர்வதும் ஆகிய ஐம்புல இன்பமும் அழகிய வளையலை அணிந்த பெண்ணிடம்தான் உள்ளன. எல்லாப் பொறிகளுக்கும் ஒருசேர இன்பத்தைக் கொடுக்கக் கூடியவளாக அவள் இருக்கிறாள். ஆகவே, உலகில் உள்ள எல்லாவகையான இன்பப் பொருள்களையும்விட இந்தப் பெண் மிக உயர்ந்தவள்" என்று தலைவி நல்கிய இன்பத்தின் சிறப்பைத் தலைவன் நினைந்து மகிழ்கிறான்.

இவ்வெண்வகைச் சுவைகளுக்கும் திருக்குறளில் பல காட்டுக்களைத் தரமுடியும். நம்முடைய நோக்கம் சிறந்த இலக்கியங்களுள் காணப்பெறுகின்ற சுவை யுணர்வுகள் திருக்குறளிலும் இடம்பெற்றுள்ளன என்

பதைச் சுட்டிக் காட்டுவதேயாகும். சுவைமிக்க கதை நிகழ்ச்சிகளுக்கு நிலைக்களனாக உள்ள காப்பியங்களுள் இச்சுவைகள் பேரளவிற்கு மாறிமாறி இடம்பெறுவதற்கு வாய்ப்பு மிகுதியாக இருக்கிறது. ஆனால், நீதிக் கருத்துக்களை அறிவுறுத்தும் திருக்குறளில் இயன்ற இடமெல்லாம் ஆசிரியர் அச்சுவைகளைக் குழைத்துத் தருகின்றார். அதனால், நீதி இலக்கியமாகிய திருக்குறள் கற்பவர்க்கு இனிமை பயப்பதாக அமைந்திருக்கிறது.

**நவில்தொறும் நூல்நயம்**

திருக்குறளில் ஆசிரியர் எடுத்தியம்பும் பொருளைப் பலமுறையும் துருவித்துருவி ஆராய்ந்து பார்த்தால், ஒவ்வொருமுறையும் புதிதுபுதிதாகச் சிறப்புமிக்க பொருள் நயம் புலப்படும். இதைப் பொருட்செறிவு அல்லது பொருளாழம் என்று கூறுவர். திருக்குறளின் முதல் பாட்டே இதற்கு நல்லதொரு சான்றாகும்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. (குறள் 1)

இக்குறட்பா 'எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன; அதைப் போன்று உலகம் இறைவனை முதலாகத் — தலைவனாகக் — கொண்டிருக்கிறது' என்ற கருத்தை உணர்த்துகிறது.

இக்குறட்பாவை மொழியியல், அணியியல், அறவியல், மெய்ப்பொருளியல், இறையியல், அறிவியல் முதலிய பல்வேறு கலைகளின் கண்கொண்டு அணுகுவோமானால், புத்தம் புதிய கருத்துக்கள் பல இதிலிருந்து கிளைத்தெழும். அவற்றை ஈண்டு விரிப்பின் பெருகும்.

தமிழ் இலக்கியத்துள் திருக்குறளுக்குச் சிறப்பு மிக்கதோர் தனி இடத்தை நம் முன்னோர்கள் கொடுத்துள்ளனர். அதில் அறிவுறுத்தும் கருத்துக்கள் மிகுதியாக இருந்த போதிலும் அதைச் சிறப்புமிக்கதோர் இலக்கியமாகவே அவர்கள் போற்றிவந்துள்ளனர். இந் நூற்றாண்டில் வாழ்ந்த தேசியகவி சுப்பிரமணிய பாரதியார்

கம்பருக்கும் இளங்கோவிற்கும் ஒப்பாகத் திருவள்ளு வரைப் போற்றிப் புகழ்ந்துள்ளார் :

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை!
(பா. கவி. 22 : 2)

இப்பாடலில் கவின்மிகு காப்பியம் இயற்றிய கம் பருக்கும், சிந்தைக்கினிய சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகளுக்கும் இடையில் வள்ளுவரை வைத்துப் பாடியுள்ளமை கருதத்தக்கதாகும். காலவரன்முறைப்படி கூறுவதானால் வள்ளுவர், இளங்கோ, கம்பர் என்று முறைப்படுத்தியிருக்க வேண்டும். அல்லது எதுகை மோனை நயங்கருதிப் பாடியிருந்தால் 'யாமறிந்த புலவரிலே இளங்கோவைப்போல்' என்று அமைத்திருக்க வேண்டும். சிறப்புக்கருதி கம்பனுக்கு முதலிடம் கொடுத்தார் என்று கூறினால், தமிழ்நாடு வான்புகழ் கொள்ளுவதற்கு வள்ளுவனே காரணம் என்பதை,

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு. (பா. கவி. 20 : 7)

என்று குறிப்பிடும் பாரதியார் 'மாறுகொளக் கூறல்' என்ற குற்றத்தைச் செய்தவராகிவிடுவார்.

ஆகவே, மாண்புமிக்க காப்பியங்களைப் படைத்த இரு பெரும் புலவர்களுக்கும் தலைவராகத் திருவள்ளுவர் விளங்குவதை அறிவிக்கவே, அவரை நடுநாயகமாக வைத்துப் பாரதியார் போற்றியிருக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகிறது. இதிலிருந்து திருக்குறளைச் சிறப்புமிக்கதோர் இலக்கியமாகவே பாரதியார் கருதினார் என்பதை நாம் உய்த்துணரலாம். இதை,

திருக்குற ளுறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதியும். (பா. கவி. 24 : 21-22)

என்ற அவருடைய பாடற்பகுதி ஒன்று அறிவிப்பதாலும் நாம் அறியலாம்.

இவற்றினால், திருவள்ளுவ மாலைச் செய்யுட்களைப் பாடிய புலவர்கள் முதற்கொண்டு பாரதியார் வரை வாழ்ந்த தமிழ்ப் பாவலர்கள் அனைவரும் திருக்குறளை

ஒப்புயர்வற்றதோர் இலக்கியமாகவே கருதிப் போற்றி யுள்ளனர் என்பது புலனுகின்றது.

மேனாட்டு அறிஞர்களும் திருக்குறளை ஓர் இலக்கிய மாகவே கருதிப் புகழ்மாலைகள் சூட்டியுள்ளனர். அவற்றுள்,

> குறள் ஓர் இலக்கியக் கருவூலம்; 'கவிதைக்குரல்' என்பதில் ஐயமில்லை; கிரேக்கர்களுக்கு ஹோமரது காப்பியங்கள் எத் தன்மையனவோ, அதைப் போன்று தமிழருக்குச் சொல்நயமும் நீதிக் கருத்துக்களின் சிறப்பும் மிகச் சிறந்த முறையில் அமைந்த இலக்கியம் திருக்குறள்.[18]

என்று சார்லஸ் இ. கவர் பாராட்டியுள்ளமை இங்குக் குறிப் பிடத்தக்கதாகும்.

கிரேக்கத்தின் மாண்புமிக்க கவிஞர் ஹோமர். அவரை உலகப் பெரும் கவிஞர்களுள் ஒருவராக அறிஞர்கள் போற்றுகின்றனர். அவருடைய சிறப்புமிக்க இலக்கியப் படைப்புகளுக்கு நிகரானது திருக்குறள் என்று திருக் குறளின் பல பகுதிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஐரோப்பியராகிய கவர் வாயாரப் போற்றிப் புகழ்ந் துள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும்.

### இலக்கிய உலகில் திருக்குறள்

பண்டைக் காலம் முதற்கொண்டு திருக்குறளை அனைத் துலகச் சார்புடைய இலக்கியமாகவே அறிஞர்கள் கருதி வந்துள்ளனர். இந்திய இலக்கியக் கொள்கைகளை அளவு கோலாகக் கொண்டு ஆராய்ந்தாலும், அண்மைக் காலம் வரை மரபுவழி வந்த மேனாட்டு இலக்கியக் கோட்பாடுகளை உரைகல்லாகக் கொண்டு குறளை ஆராய்ந்தாலும் இலக்கியமாகப் போற்றத்தக்க பொருட் பொலிவும் கவிதைச் சிறப்பும் வாய்ந்ததாகவே திருக்குறள் விளங்கு கிறது.

இந்நூற்றாண்டில் வளர்ச்சியுற்றுள்ள புதுவகையான இலக்கியக் கொள்கைகளின் அடிப்படையில் திருக்குறளை நாம் ஆராய்ந்து பார்க்கின்றபொழுது, அது ஒரு '**நீதி இலக்கிய**'மாகத் தோன்றுகிறது. இலக்கியத்தின் பல் வேறு கிளைகளுள் 'நீதி இலக்கியம்' என்பதும் ஒன்று.

திருக்குறளை 'நீதி இலக்கியம்' என்று சுட்டுவதனுல், அதனுடைய நோக்கையும் போக்கையும், எழிலையும் ஏற்றத்தையும் யாவரும் எளிதில் உணருமாறு நாம் செய்கிருேம்.

முன்னர் நாம் மேற்கொண்ட ஒப்பியல் ஆராய்ச்சியின் பயனுக உலகச் செம்மொழிகளில் உள்ள நீதி இலக்கியத்துள், திருக்குறள் ஒன்றே சிறப்புமிக்கதாகத் திகழ்வதைக் கண்டோம். பிறநாட்டு நீதி நூல்களுள் காணப்பெருத சிறப்பியல்புகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு குறள் விளங்குகிறது. அவற்றுடன் அவ்விலக்கியங்களுள் இடம்பெற்றுள்ள அரிய கருத்துக்களும், இலக்கிய இயல்புகளும், உணர்த்தும் முறைகளும் திருந்திய வடிவில் முழு நிறைவுடன் திருக்குறளில் காணப்படுகின்றன. இவற்ருல், இலக்கிய உலகில் திருக்குறளுக்குத் தனிச் சிறப்பும் தனிமதிப்பும் உண்டாகியிருக்கின்றன. வடிவாலும், உணர்த்தப்பெறும் கருத்துக்களாலும், எடுத்தியம்பும் முறைகளாலும் திருக்குறள் ஒப்புயர்வற்ற நீதி இலக்கியமாகும். அதைப் போன்று மனித இனத்திற்கு வழி காட்டும் ஒளிவிளக்கு உலகில் வேறெந்த மொழிகளிலும் தோன்றவில்லை என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

ஏரியல் (Ariel) என்ற பிரஞ்சு நாட்டு நல்லறிஞர்,

> திருக்குறள் தமிழிலக்கியத்துள் தலைசிறந்த இலக்கியப் படைப்பு; மனித இனத்தின் சிந்தனையில் முகிழ்த்த சிறப்பும் தூய்மையும் வாய்ந்த இலக்கியப் பெட்டகம்.[14]

என்று மொழிந்துள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியதாகும்.

தமிழகத்தில் தோன்றிய வள்ளுவர் மனித இனம் மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்கு வாழ்வியல் இலக்கியமாகத் திருக்குறளை இயற்றியருளினுர். அதனுல், வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது தமிழ்நாடு என்று பாரதியார் அன்று பாடினுர். இன்று திருக்குறளுக்கு ஈடான நீதி இலக்கியத்தை உலகச் செம்மொழிகள் வேருென்றிலும் நம்மால் காணமுடியவில்லை என்பதை நாம் பெருமிதத்தோடு உலகிற்கு உணர்த்தலாம்.

## குறிப்புகள்

1. Abhinava Gupta: Abhinavabharati, p. 10. Re. ed. by K. S. Ramaswami Sastri, Oriental Institute, Baroda, 1956.
2. Horace: Ars Poetica, p. 18. Ed. by H. Rushton Fairclough, Cambridge; Mass; 136.
3. தொல். பொருள். சூ 470; பேரா. உரை.
4. ஷை, சூ 547; பேரா. உரை. மேலும், நச்சி. செய்யுளியல் சூ, 235 இன் உரையைக் காண்க.
5. நன்னூல், சூ. 387, மயிலைநாதர் உரை; உ. வே. சா. பதிப்பு. சென்னை, 1937
6. பார்க்க: திருவள்ளுவ மாலை, 9, 10, 11, 12, 15, 17, 18, 19, 30, 44, 46, 49, 53.
7. திருவள்ளுவமாலை, 46.
8. தி. செல்வக்கேசவராய முதலியார்: திருவள்ளுவர், பக். 40., சென்னை, 1904.
9. பார்க்க: சிறப்பாகக் குறள் 82, 182, 222, 1062.
10. இதன் விரிவை, ‘திருக்குறள் அமைப்பும் முறையும்’ என்ற நூலில் காண்க.
11. சற்றேறக்குறைய முந்நூறு குறட்பாக்களில் உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், எடுத்துக் காட்டுவமை போன்ற அணிகள் அமைந்துள்ளன.
12. இதனைத் ‘திருக்குறள் அணிநலம்’ என்ற நூலில் விரிவாகக் காணலாம்.
13. Gover, E. Charles: The Folk Songs of Southern India, p. 98; S. S. S. P. W., Madras, 1959.
14. Ariel, E.: Kural de Tiruvalluvar, fragment traduits du Tamoul, Journal of Asiatic Society, Vol. VI, p. 172; Calcutta 1848.

# மேற்கோள் நூல்கள்

## 1. தமிழ் நூல்கள்

### (அ) இலக்கணம்

அகப்பொருள் விளக்கம் (நம்பி), கழக வெளியீடு, சென்னை, 1943.

இறையனார் களவியல், கழக வெளியீடு, சென்னை, 1964.

தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1952.

தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1953.

தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, சி. கணேசையர் பதிப்பு, சுன்னாகம், 1948.

தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நச்சினார்க்கினியர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1966.

தொல்காப்பியம், பொருளதிகாரம், பேராசிரியர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1951.

நன்னூல், சங்கர நமச்சிவாயர் உரை, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1934.

பன்னிரு பாட்டியல், கழக வெளியீடு, சென்னை, 1943.

யாப்பருங்கலம், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு, தமிழக அரசு வெளியீடு, சென்னை, 1960.

யாப்பருங்கல விருத்தி, பவானந்தம் பிள்ளை பதிப்பு, சென்னை, 1916.

### (ஆ) இலக்கியம்

அகநானூறு, ராஜகோபாலார்யன் பதிப்பு, கம்பர் புஸ்தகாலயம், மயிலை, 1938,

ஐங்குறுநூறு, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1949.

கம்பராமாயணம், பாலகாண்டம், அண்ணுமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1957.

அயோத்தியா காண்டம் ,, 1959.

யுத்த காண்டம் ,, 1968.

கல்லாடம், மர்ரே ராஜம் வெளியீடு, சென்னை, 1957.

குறுந்தொகை, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1947.

சிலப்பதிகாரம், உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1950.

சிவஞான சித்தியார், சுபக்கம், திருவாவடுதுறை யாதீன வெளியீடு, 1954.

சிவஞான போதம், மாபாடியம், சமாஜப் பதிப்பு, சென்னை, 1936.

சீவக சிந்தாமணி, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1969.

ஞானமிர்தம், அண்ணுமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1954.

தனிப்பாடல் திரட்டு, (ப. ஆ,) கலைச்செல்வி, மீனாட்சி பதிப்பகம். புதுக்கோட்டை, 1960.

தாயுமானவர் பாடல் திரட்டு, தருமையாதீன வெளியீடு, 1965.

திருக்குறள், பரிமேலழகர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1951.

திருக்குறள் உரைவளம், (ப. ஆ.) ச. தண்டபாணி தேசிகர்.
அறத்துப்பால், தருமையாதீனம், 1950.
பொருட்பால், தருமையாதீனம், 1951.
காமத்துப்பால், தருமையாதீனம், 1952.

திருக்குறள் (அறத்துப்பால்), நாகை தண்டபாணிப் பிள்ளை விருத்தியுரை, கழக வெளியீடு, 1956.

திருப்புகழ், திருப்புகழ் அமிர்தம் பிரஸ், சென்னை, 1968.

திருமந்திரம், காசிமட வெளியீடு, 1951.

திருவாசகம், அண்ணுமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1964.

திருவிசைப்பா திருப்பல்லாண்டு, காசிமட வெளியீடு, 1964.

தேவாரம், மயிலை இளமுருகனார் பதிப்பு, சென்னை, 1953.

நற்றிணை, கழக வெளியீடு, சென்னை, 1956.

நாலாயிர திவ்வியப் பிரபந்தம், மயிலை மாதவதாசன் பதிப்பு, சென்னை, 1962.

நீதிநூற் கொத்து, இரண்டு பாகங்கள், கழக வெளியீடு, சென்னை, 1964.

பத்துப்பாட்டு, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1950.

பதிற்றுப்பத்து, அருளம்பலவனார் ஆராய்ச்சிப் பதிப்பு, யாழ்ப்பாணம், 1960.

பதினெண் கீழ்க்கணக்கு (மூலம்), கழக வெளியீடு, சென்னை, 1947.

பதினோராந் திருமுறை, காசிமட வெளியீடு, 1963.

பரிபாடல், உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1956.

பழமொழி, தி. செல்வக் கேசவராய முதலியார் பதிப்பு, சென்னை, 1929.

பாரதியார் கவிதைகள், பழனியப்பா, சென்னை, 1964.

புறப்பொருள் வெண்பாமாலை, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1950.

புறநானூறு, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1950.

பெரிய புராணம், காசிமட வெளியீடு, 1964.

பெருங்கதை, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1935.

பெருந்தொகை, மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு, 1935.

மணிமேகலை, கழக வெளியீடு, சென்னை, 1953.

### (இ) இலக்கிய ஆராய்ச்சி

இராமச்சந்திரன் செட்டியார், C. M., கொங்கு வேளிர், அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1968.

கதிரேசச் செட்டியார், மு., உரைநடைக் கோவை, பழனியப்பா, சென்னை, 1954.

செல்வக் கேசவராய முதலியார், தி., திருவள்ளுவர், சென்னை, 1904.

வரதராசனார், மு., இலக்கியத்திறன், தாயக வெளியீடு, சென்னை, 1959.

### (ஈ) இலக்கிய வரலாறு

இராசமாணிக்கனார், மா.: தமிழ்மொழி இலக்கிய வரலாறு, சென்னை, 1963.

சதாசிவ பண்டாரத்தார், T. V.: தமிழ் இலக்கிய வரலாறு, (கி. பி. 250—கி. பி. 600), அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1957.

வெள்ளைவாரணன், க.: தமிழ் இலக்கிய வரலாறு—தொல்காப்பியம், அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1957.

### (உ) நிகண்டு

சூடாமணி நிகண்டு, ஆறுமுக நாவலர் பதிப்பு, சென்னை, 1966.

சேந்தன் திவாகரம், கழக வெளியீடு, சென்னை, 1959.

பிங்கல நிகண்டு, கழக வெளியீடு, சென்னை, 1968.

(ஊ) மொழி பெயர்ப்பு நூல்கள்

(i) ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்

தேசிக விநாயகம் பிள்ளை : உமர்கயாம் பாடல்கள், பாரி நிலையம், சென்னை, 1951.

ராதாகிருஷ்ணன், S. : இந்தியாவின் இதயவொலி, வி. எஸ். வி. இராகவன் மொழிபெயர்ப்பு, ராதா பதிப்பகம், சென்னை, 1968.

ரெனி வெல்லாக்கும் ஆஸ்டின் வாரனும் : இலக்கியக் கொள்கை, குளோறியா சுந்தரமதியின் தமிழாக்கம், IATR, சென்னை, 1966.

(ii) வடமொழியிலிருந்து தமிழாக்கம்

சிருங்கார சதகம் (பர்த்ருஹரி), மாணிக்கவாசகம் பிள்ளையின் தமிழாக்கம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை, 1925.

சுக்கிர நீதி (சுக்கிராச்சாரியார்), மு. கதிரேசச் செட்டியாரின் தமிழாக்கம், சென்னை, 1926.

நீதி இயல் (பர்த்ருஹரி), கா. ஸ்ரீ. கோபாலாசாரியாரின் தமிழாக்கம், சென்னை, 1902.

நீதி சதகம் (பர்த்ருஹரி), மாணிக்கவாசகம் பிள்ளையின் தமிழாக்கம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை, 1925.

வைராக்கிய சதகம் (பர்த்ருஹரி), ஸ்ரீ சுப்பையா சுவாமிகளின் தமிழாக்கம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை, 1912.

(எ) மலர்கள்

திருவள்ளுவர் நினைவு மலர், மணி. திருநாவுக்கரசு முதலியார் வெளியிட்டது, சென்னை, 1935.

திருவள்ளுவர் திருநாள் மலர், கழக வெளியீடு, சென்னை, 1937.

திருவள்ளுவர் திருநாள் விழா மலர், கழக வெளியீடு, சென்னை, 1968.

## 2. ஆங்கில நூல்கள்

### (அ) இலக்கியத் திறனாய்வு


Abercrombie, L. : The Idea of Great Poetry, London, 1926.

Arnold, Matthew : Essays on Criticism, Vol. I ; Macmillan, London, 1935.

Atkins, J. W. H. : Literary Criticism in Antiquity, 2 Vols; Cambridge 1934, and London, 1952.

Bradley, A. C. : Oxford Lectures on Poetry, Macmillan, London, 1961.

Brink, C. O. : Horace on Poetry, Cambridge, 1963.

Buckley, Vincent : Poetry and Morality, Chatto & Windus, London, 1959.

Chadwick, H. M. and Chadwick, N. K. : The Growth of Literature, Vol. I ; C. U. P. ; London, 1968.

Croce, B. : Aesthetic—As Science of Expression, Tr. Douglas, Ainslie; Macmillan, London, 1949.

Daiches, David : Critical Approaches to Literature, Longmans, London, 1967.

D'Alton, J. F. : Roman Literary Theory and Criticism, Heinemann, London, 1931.

Denniston, J. D. : Greek Literary Criticism, Macmillan, London, 1924.

Eliot, T. S. : On Poetry and Poets, Faber & Faber, London, 1957.

Garrod, H. W. : (1) Poetry and the Criticism, Clarendon Press, Oxford, 1931.

(2) The Profession of Poetry, Clarendon Press, Oxford, 1929.

(3) The Study of Poetry, Clarendon Press, Oxford, 1936.

Gorky, Maxim : Essays of Literary Criticism, Foreign Languages Publishing House, Moscow, 1953.

Harriott, Rosemary : Poetry and Criticism Before Plato, Methuen, London, 1969.

Hough, Graham : An Essay on Criticism, Duckworth, London, 1965.

Korte, Alfred : Hellenistic Poetry, Tr. Jacob Hammer, C. U. P. London, 1929.

Lal, P. : The Concept of an Indian Literature, Writers Workshop, Calcutta, 1969.

Mackenzie, A. S. : The Evolution of Literature, John Murray, London, 1911.

Moulton, R. G. : The Modern Study of Literature, University of Chicago, 1915.

Murray, Gilbert : The Classical Tradition in Poetry, C. U. P., London, 1927.

Pater, William : The Renaissance : Studies in Art and Poetry, Macmillan, London, 1924.

Phyllis, M. Jones, Ed. English Critical Essays, Twentieth Century, C. U. P. : London, 1959.

Poe, Edgar Allan. : Complete Works, Vol. 14 ; Ed. J. A. Harrison, N. Y., 1902.

Pope, G. U. : 'The Poets of the Tamil Land', Tamilian Antiquary, Vol. II ; Madras, 1912.

Pound, Ezra : Literary Essays, Ed. T. S. Eliot, Faber & Faber, London, 1954.

Radhakrishnan, S.: 'Moral Values in Literature', Formative Ideals, Ed. P. K. Venkata Rao, Deccan Publications, Bangalore, 1950.

Read, Herbert: (1) Collected Essays in Literary Criticism, Faber & Faber, London, 1950.

(2) Phases of English Poetry, Hogarth Press, London, 1928.

Richards, I. A.: Principles of Literary Criticism, Routledge & Kegan Paul, London, 1961.

Valery, Paul: The Art of Poetry, Routledge & Kegan Paul, London, 1951.

Whistler, James: Ten O'Clock Lecture-The Religion of Beauty, Ed. Richard Aldington, London, 1950.

Winchester, C. T.: Some Principles of Literary Criticism, Macmillan, London, 1960.

Winstatt, K. William, and Brooks, Cleanth: Literary Criticism—A Short History, Oxford Book Co; Calcutta, 1964.

(ஆ) இலக்கிய வரலாறு

Das Gupta, S. N.: A History of Sanskrit Literature, Vol. I; Classical Period, University of Calcutta, 1962.

Duff, Wight: A Literary History of Rome, Vol. I, Ernest Benn, London, 1953.

Keith, A. B.: A History of Sanskrit Literature, Clarendon Press, Oxford, 1928.

Lesky, A.: A History of Greek Literature, Heinemann, London, 1966.

Murray, Gilbert: A History of Greek Literature, Heinemann, London, 1917.

(இ) கிரேக்க, ரோமானிய இலக்கியங்கள்

Aratus: The Skies and Weather Forecasts, Tr. E. Poste, Macmillan, London, 1880.

Aristophanes: Frogs, Tr. Rogers, Heinemann, London, 1924.

Aristotle : (1) Poetics, Tr. W. Fy Fe and Hamilton, Heinemann, London, 1924.

(2) Rhetoric, Tr. W. Rhys Roberts, Great Books of the Western World, Aristotle II, Ency. Brit ; Chicago, 1952.

Greek Poetry for Every Man, Ed. Lucas, F. L., Dent & Sons, London, 1931.

Hesiod : The Works and Days, Tr. Richmond Lattimore, University of Michigan Press, N. Y., 1959.

Horace : Ars Poetica, Ed. H. Rushton, Fairclough, Cambridge, Mass, 1936.

Lucretius : On the Nature of Things, Tr. D. Alban Winspear, Classics in Translation Series, Vol. II; Wisconsian Press, Madison, 1952.

Latin Poetry, Tr. Tyrrell, R. Y., Macmillan, London, 1898.

Plato : Republic, Tr. Rose, W. H. D., Mentor Book, N. Y., 1956.

Virgil : The Eclogues and Georgics, Tr. Royds, T. F., Dent & Co., London, 1907.

**(ஈ) இந்திய, சீன இலக்கியங்கள்**

Abhinava Gupta : Abhinavabharati, Ed. K. S. Ramaswami Sastri, Oriental Research Institute, Baroda, 1956.

Chinese Classics, Tr. James Legge, Hard & Houghton, Oxford, 1895.

Confucius : (1) Analects, (2) The Great Learning, (3) The Doctrine of the Mean, Tr. James Legge, The Peter Pauper Press, N. Y., 1956.

,, The Great Digest & Unwobbling Pivot, Tr. Ezra Pound, New Directions Books, N. Y., 1951.

Lao-Tzu : The Way of Life, Tr. of the Tao-Te-Ching by R. B. Blackney, Mentor Book, N. Y., 1955.

Mammata : Kavyaprakasha, Tr. Ganganath Jha, The Indian Press, Allahabad, 1925.

Mencius, Tr. James Legge, Clarendon Press, Oxford, 1885.

Naladiar, Tr. G. U. Pope, Clarendon Press, Oxford, 1893.

The Kural or The Maxims of Tiruvalluvar, Tr. V. V. S. Aiyar, Amudha Nilayam, Madras, 1961.

The Sacred Kural, Tr. G. U. Pope, Henry Frowde, London, 1886.

(உ) சமயமும் தத்துவமும்

Besant, Annie: Universal Text-Book of Religion and Morals, 2 Parts; Theosophical Publishing House, Adayar, 1901.

Burnett, J.: Early Greek Philosophy, Heinemann, London, 1930.

Fergusson, J.: Moral Values in Ancient World, Heinemann, London, 1958.

Findlay, J. N.: Hegel, A Re-Examination, Goerge Allen & Unwin, London, 1958.

Hadzsits, G. D.: Lucretius and His Influence, George Harrap, U. S. A., 1935.

Huxley, Julian: Religion Without Revelation, Max Parish, London, 1957.

Kane, P. V.: History of Dharmasastra, Vol. I, II, & III; Bhandarkar Research Institute, Poona, 1930, 1934 & 1941.

Kant, Immanuel: Religion within the Limits of Pure Reason Alone, Tr. T. M. Greene and H. H. Hudson, George Allen & Unwin, Chicago, 1934.

Macdonell, A. A.: 'Vedic Religion', Ency. of Religion and Ethics, Vol. 12; Ed. J. Hastings, London, 1948-56.

Shi-Lien Han, Leonard: The Political Philosophy of Confucianism, George Allen & Unwin, London, 1932.

Waley, Arthur: Three Ways of Thought in Ancient China, Goerge Allen & Unwin, 1939.

Yulan, Fung: A History of Chinese Philosophy, 2 Vols; George Allen & Unwin, London, 1935-37.

Yu-Tang, Lin: (1) The Wisdom of China, Jaico Publishing House, Bombay, 1956.

(2) The Wisdom of Conficius, The Illustrated Modern Library, U. S. A., 1943.

Zimmer, Heinrich: Philosophies of India, Routledge & Kegan Paul, London, 1951.

(உ) பொது நூல்கள்

Caldwell, R.: A Comparative Grammar of Dravidian Languages, University of Madras, 1956.

Gover, E. Charles: The Folk-Songs of Southern India, S. S. S. P. W. S., Madras, 1959.

Yu-Tang, Lin: My Country and My People, Heinemann, London, 1956.

Maine, H. S.: Ancient Law, John Murray, London, 1927.

# பொருட்குறிப்பு அகராதி

